ஸ்ரீ கணேசாயநம:

மஹரிஷி வேதவியாஸரால் செய்யப்பட்ட ஸ்காந்தபுராணத்தில்

அடங்கிய ஸனத்குமார ஸம்ஹிதையில் ஓர் பாகமாகிய



# ஸேதுமஹாத்மியம்.

இஃது

பூர்வம் கடலூர் காலேஜில் ஸம்ஸ்கிருத பண்டிதராகவும்,

இப்பொழுது சென்னை, திருவல்லிக்கேணி, வெஸ்லியன்

மிஷன் ஹைஸ்கூல், முதல் உதவிப்போதகராயுமிருக்கிற

என். ஸ்வாமிநாத சாஸ்திரியால்

எளிய தமிழ் நடையில் ஸம்ஸ்கிருத புராணத்தில்
உள்ளபடி மொழிபெயர்க்கப்பட்டது.

இரண்டாம் பதிப்பு.

சென்னை,

S. சுந்தரேசன் அண்டு பிரதர் கம்பெனியாரால்

பதிப்பிக்கப்பட்டது.

1908.

[இதன் விலை ரூ. 1-0-0] [தபால் சார்ஜ் வேறு]

# முகவுரை.

இந்தப் பரதகண்டத்தில் சகல பாபங்களையும் போக்கி புக்தி முக்திகளை எளிதில் கொடுக்கிற அநேக புண்ணிய க்ஷேத்திரங்களுண்டென்று இதிகாச புராணங்களால் விளங்குகிறது. அந்த க்ஷேத்திரங்களெல்லாவற்றிலும் காசி முதலிய சிலவைகள் தான் தீர்த்தம், மூர்த்தி, க்ஷேத்திரம் என்கிற மூவகை விசேஷங்களாலும் சிறப்புப்பெற்றவை. அவற்றுள்ளும் காசியும் இராமஸேதுவுந்தான் பஞ்ச மகா பாதகங்களுக்கும் பிராயச்சித்தமாக விதிக்கப்பட்டிருக்கின்றன.

இந்த இராமஸேதுவானது மகா பாதக நாசமெனபது லோகப்பிரசித்தம். விசேஷமாய்ப் புத்திரதோஷமுள்ளவர்கள் புத்திராபேட்சையால் ஸேது யாத்திரை செய்வது சாதாரணம். இந்த இராம ஸேதுவின் மகிமையானது சுருதி, ஸ்மிருதி, இதிகாச புராணங்களில் பின் வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

(ஶ்ருதி) (க) " [illegible] "

(இ-ள்) விசாலமாயும் அழியாததுமான இரண்டு சமுத்திரங்களும தாயின் வயிற்றில் குழந்தையின் கால்கள் புரளுவது போல், ஸேதுவின் இருபக்கங்களிலும் புரளுகின்றன. இந்தச் சமுத்திரங்களுக்கு நடுவில் இருக்கிற ஸேதுவைப்பார்க்கிறவர்கள் சம்சாரத்தைக் கடக்கிறார்கள் அதைப்பார்க்காதவர்கள் அந்த சம்சாரத்தை கடக்கிறதில்லை.

(உ) " [illegible] "

(ங) " [illegible] "

இம்மாதிரியாகவே " [illegible] என்று தொடங்கிய பராசரஸ்மிருதி ஆசாரகாண்டம் 24-வது சுலோகத்தில் கலியுகத்தில் சிறந்த தர்ம சாஸ்திரமாகப் புகழ்ந்து சொல்லப்பட்ட பராசரஸ்மிருதி பிராயச்சித்தகாண்டம், ஒன்பதாவது அத்தியாயம் 69, 70 சுலோகங்களாகிய ' [illegible] " என்பதில் பிரஹ்மஹ

த்தி மகா பாதகங்களும் ஸேது தர்சனம் பண்ணி அதில் ஸ்நானம் செய்வதினால் நீங்கிவிடுகின்றன என்று கூறப்பட்டிருக்கிறது.

அப்படியே வால்மீகி ராமாயணத்தில் "[illegible]" என்றும் கூர்ம புராணத்தில் "[illegible]" என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்வளவு மகிமை பொருந்திய ஸேது மாகாத்மியமானது வேதவியாஸ மஹரிஷியினால் ஸம்ஸ்கிருதத்தில் எழுதப்பட்டிருப்பதால், ஸம்ஸ்கிருதம் தெரிந்தவர்களுக்கேயன்றி மற்றவர்களுக்குப் புலப்படாமலும், நிரம்ப வழகிய தேசிகர் என்கிற ஓர் தமிழ் வித்துவானால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுச் செய்யுளில் இருப்பதால், தமிழ் வித்துவான்களைத்தவிர மற்றவர்கள் அறிந்துக்கொள்ளக்கூடாமலும் இருப்பதைக்கண்டு பாலராதி பண்டிதரீகவுள்ள சகலரும் எளிதில் வாசித்து ஸேது மகிமையை அறிந்து சம்சாரத்தைக்கடந்து ஜன்மஸாபல்லியம் பெற்று இஷ்டார்த்த சித்தியை அடையும்பொருட்டு ஸம்ஸ்கிருதத்தில் உள்ளபடி எளிய தமிழ் நடையில் மொழிபெயர்த்து அச்சிட்டிருக்கிறேன். இதில் ஏதேனும் பிழைகளிருப்பின் அவைகளை எனக்கு தயை செய்து அறிவிக்கும் பெரியோர்களுக்கு மிக்க வந்தனமளிக்கச்சித்தமாயிருக்கிறேன்.

இங்ஙனம்,

**என். ஸ்வாமிநாத சாஸ்திரி.**

# விஷயசூசிகை

அத்தியாயம்] விஷயம் [பக்கம்

உ

முதலாவது

# சேது மகிமை உரைத்த

## அத்தியாயம்.

---

விநாயகர் வணக்கம்.

விக்கினங்களாகிற மலைகளைப் பிளக்க வல்லவராயும், விக்கினங்களுக்கெல்லாம் நாயகராயுமிருக்கிற யானைமுகத்தையுடைய விநாயகக் கடவுளானவர் சகல பாபங்களினின்றும் நம்மை விடுவித்து, எப்பொழுதும் எவ்விடத்திலும் காத்து இரட்சிந்தருள்வாராக.

நூல்.

பூர்வகாலத்தில் அஷ்டாங்கயோகாநுஷ்டான முடையவர்களாயும், பிரம ஞானிகளாயும், முமுட்சுக்களாயும், மமதையற்றவர்களாயும், பிரமவிசாரஞ் செய்வதே தொழிலாக வுடையவர்களாயும், தர்மக்ஞர்களாயும், அசூயை ஒழிந்தவர்களாயும், சத்தியமே விரதமாகக் கொண்டவர்களாயும், ஜிதேந்திரியர்களாயும், கோபத்தை வென்றவர்களாயும், பூததயையுள்ளவர்களாயும், சிறந்த பக்தியோடு விஷ்ணுவை ஆராதிக்கிறவர்களாயு மிருக்கிற மஹாத் மாக்களான சௌனகாதி அறுபதினாயிரம் ரிஷிகள் முக்தியைக் கொடுக்கின்ற மஹா புண்ணியமான நைமிசாரணியத்தில் தபசு செய்துகொண்டிருந்தார்கள்; ஒரு நாள் இந்த மஹாத்மாக்கள் தங்களுடைய எண்ணிறந்த சிஷ்யப்பிரசிஷ்யர்களுடனே ஒரு சங்கங்கூடி, மஹா புண்ணியமான கதைகளைப்பேசிக்கொண்டும், முக்தியடையும் உபாயத்தை ஆராய்ந்துகொண்டுமிருந்தார்கள். இந்த சமயத்தில் மஹாவித்துவானும், பௌராணிகோத்தமரும், மஹா முனிவரும், வியாசசிஷ்யருமான சூதர் நைமிசாரணியத்துக்குவர, சௌனகாதி ரிஷீசுவரர்கள் அவருக்கு அர்க்கியபாத்தியாசமனாதிகள் கொடுத்து உபசரித்து சுத்தமான ஓராசனத்திலிருக்கச் செய்தார்கள். அப்படியே யாசனத்தின்மேலிருந்து

அக்கினிபோல் ஜ்வலித்துக்கொண்டிருக்கிற சூதரைப்பார்த்து உல கத்துக்கு உபகாரமாயிருக்கும் பொருட்டு, அதிக இரகசியமான சில விஷயங்களை வினவத்தொடங்கினார்கள். வாரீர், தர்மார்த்த தத்துவங்களை யறிந்த சூதரே! சத்தியவதீசுதரான வியாசரிடத்தி லிருந்து புராணங்களைக்கேட்டு, அவற்றின் அர்த்தசாரங்களை நீர் தெரிந்துகொண்டிருக்கிறபடியால், க்ஷேத்திரங்களிற் சிறந்த புண் ணிய க்ஷேத்திரமெது? தீர்த்தங்களிற் சிறந்த புண்ணிய தீர்த்தமெது? ஜீவாத்மாக்கள் சம்சார சாகரத்தைக்கடந்து எப்படி முத்தி பெறு வார்கள்? ஹரிஹரனிடத்தில் மனிதர்களுக்கெப்படி பக்தியுண்டாம்? காயிகவாசிகமானசிகங்களென்கிற மூன்றுவித கர்மங்களுக்கும் பல சித்தி யெப்படியுண்டாம்? இவைகளையெல்லா மெங்களுக்குத் தயவு கூர்ந்து சொல்லி யருளவேண்டும். குருமார்கள் தங்கள் பிரிய முள்ள சிஷ்யர்களுக்கு இரகசியங்களையெல்லாம் சொல்வது வழக்க மல்லவா? என்று சொல்ல, சூதமுனிவர் தமது குருவாகிய வியாச முனிவரை வணங்கிச் சொல்லத்தொடங்கினார்.

ஓ முனிவர்களே! நீங்கள் நல்ல கேள்வி கேட்டீர்கள். இது ஜகத்துக்கு மிகுதியும் இதஞ்செய்கிற இரகசியம். இதை முன்பு ஒரு வருக்கும் நான் சொன்னதில்லை. நானிப்பொழுது உங்களுக்குச் சொல்லப்போகிறபடியால் நீங்கள் பக்தி சிரத்தையோடு கேட்க வேண்டும்.

க்ஷேத்திரத்திற்சிறந்தது இராமேசுவரம்; தீர்த்தங்களிற் சிறந் தது பரிசுத்தமான இராமசேது. அந்தச்சேதுவைக் கண்டமாத்தி ரத்தில், புண்ணியம் நிறைந்து, ஹரிஹர பக்தியும், மூன்றுவிதமான கர்ம பலசித்தியும், சம்சாரசாகரத்தினின்று முத்தியும் உண்டாகுமென் பதிலையமே கிடையாது. மனிதன் தன்னாயுசு காலத்திலெப்பொழு தாவதொருதடவை பக்தியோடு அந்த இராமசேதுவைத் தரிசித் தால் அவன் அடையும் புண்ணியபலனைச் சொல்கிறேன் கேளுங் கள். அவன் ருத்திரகல்பபரியந்தம் சுகபோகங்களையநுபவித்து மாதுர்வம்சத்தில் கோடிகுலத்துடனும் பிதுர்வம்சத்தில் கோடி குலத்துடனும் மோட்ச சாம்பிராஜ்யத்தை அடைகிறான். பூமி யிலுள்ள மணலை யெண்ணினாலும், ஆகாசத்திலுள்ள நட் சத்திரங்களை யெண்ணினாலும், சேதுவைக்கண்டதினாலுண்டா கும் பலனை ஆதிசேஷனாலுமளவிடமுடியாது. சேதுவானது சர் வதேவ சொரூபியாயிருப்பதினால் அதைத்தரிசித்தவன் பெறும் பலனை யாரால் சொல்லமுடியும். சேதுவைத்தரிசித்தவன் யாகசகல

ங்களைச் செய்த பலனையும், சர்வ தீர்த்தங்களிலும் ஆடினபலனை யும், சமஸ்ததபசுகளைச் செய்த பலனையும் அடைகிறான். யாரை யாவதொருவனைப் பார்த்து நீ சேதுவுக்குப்போ என்று சொல்லு கிறவனுக்கும் மேலே சொல்லிய பலன் கிடைக்குமென்றால் சேது வைப்பற்றியதிகமாகப் பேசுவானேன்? சேது ஸ்நானம் பண்ணு கிறவன் சப்தகோடி குலங்களோடுகூட விஷ்ணுலோகத்துக்குப் போய், அங்கே யிருந்தபடியே முக்தியையடைகிறான். சேதுவை யும், இராமலிங்கத்தையும், கந்தமாதன பருவதத்தையும் தியானஞ் செய்கிறவன் சகல பாபங்களினின்றும் விடுபட்டு, மாதாபிதா வம் சங்களில் இலட்சகோடி குலங்களோடு சிவலோகம் போய், அவ் விடத்தில் மூன்று கல்பம் வசித்து அங்கிருந்தபடியே முக்தியடை வான். • சேது ஸ்நானம் பண்ணுகிறவன் வைதரணி நதியைக்கூடப் பார்ப்பதில்லை. (க) மூஷாவஸ்தை, (உ) வஸாகூபம், (௩) சுவ பட்சம், (௪) மூத்திரபானம், (௫) சல்மல்லிடாரோகணம், (௬) இர க்த போஜனம், (௭) கிருமிபோஜனம், (௮) சுவமாம்சபோஜனம், (௯) அக்கினி ஜ்வாலா பிரவேசனம், (௰) சிலாவிருஷ்டி, (௰க) வன் னிவிருஷ்டி, (௰உ) காலசூத்திரம், (௰௩) க்ஷாரோதகம், (௰௪) உஷ் ணதோயம், (௰௫) அதச்சிரச்சோஷணம், (௰௬) க்ஷாரஸேவனம், (௰௭) பாஷாணயந்திரபீடை, (௰௮) மருப்பிரபதம், (௰௯) புரீஷ லேபனம், (௨0) கிருகசதாரணம், . (௨க) புரீஷபோஜனம், (௨௨) ரேதசுபானம், (௨௩) சந்திதாகனம், (௨௪) அங்காரசையாப் பிர மணம், (௨௫) முசலமர்த்தனம் முதலான நரகங்களை யொருபோ தும்பார்ப்பதில்லை. பஞ்ச மஹாபாதகங்களைச் செய்தவனுகிருந்தா

---

(க) ஈயம் முதலானதை உருக்குகிற பாத்திரத்திற்கு மூஷை என்றுபேர், அதிலிருக்கிறவஸ்து உருகும்படிக்கு நெருப்பிலே காய்ச்சுகிறதுபோலப் பாபி களைப்போட்டுக் காய்ச்சுகிற நரகம். உ) ஊன் தண் நிறைந்தகிணறு. (௩) நாயை விட்டுத் தின்னச்செய்தல். (௪ மூத்திரத்தைக் குடிப்பிக்கிற நரகம். (௫) முள் ளிலவமரத்திலே ஏறுகிற நரகம். (௬) இரத்தத்தைப் புஜிக்கிறது. (௭) புழு வைத்தின்கிறது. (௮) நாய் மாம்சத்தைத்தின்கிறது. (௯) நெருப்புஜ்வாலையிலே பிரவேசிக்கிறது. (௰) கல்மழை. (௰க) நெருப்புமழை. (௰உ) யமபாசத்தால கட்டுகிறது. (௰௩) உப்புஜலம். (௰௪) சுடுநீர். (௰௫) தலை கீழாகதொங்க விட்டு வற்றவடிக்கிறது. (௰௬) உப்பைத்தின்கிறது. (௰௭) கல்செக்கில்போ ட்டு அரைத்து வருத்துகிறது. (௰௮) தண்ணீரில்லாத இடத்தில் தள்ளிவிடு கிறது. (௰௯) மலத்தைப் பூசுகிறது. (௨0) இரம்பத்தால் அறுக்கிறது. (௨க) மலத்தைத்தின்கிறது. (௨௨) விந்துவைக்குடிக்கிறது. (௨௩) தேகமூட்டு களில் நெருப்பிட்டுக் கொளுத்துகிறது. (௨௪) நெருப்புத்தணலால் செய்யப் பட்ட படுக்கையிலே போட்டுப் புரட்டுகிறது. (௨௫) உலக்கையாலடித்து

னும்சேது ஸ்நானம் பண்ணினதினால் அவன்பாபங்களெல்லாம் நீங்கி மாதுர்பிதுர்வம்சங்களில் நூறுகோடி குலங்களோடு விஷ்ணுபதமடைந்து, மூன்று கற்பம்வசித்து அங்கிருந்தே முக்தியடைகிறான். சேது யாத்திரைபோகிறேன் என்று நூறடிதூரம் போனவன் மஹாபாதகனாயிருந்தாலும், பாபங்களெல்லாமொழிந்து, (௨௬) பகுகாஷ்டயந்திரகர்ஷணம், (௨௭) சஸ்திரபேதனம், (௨௮) பதஞேத்பதனம், (௨௯) கதாதண்டநிபீடனம், (௩0) கஜதந்தஹனனம், (௩௧) நாநாபுஜகதம்சனம், (௩௨) தூமபானம், (௩௩) பாசபந்தம், (௩௪) நாநாசூலநிபீடனம், (௩௫) முகக்ஷாரோதகநிஷேசனம், (௩௬) நாசிகாக்ஷாரோதநிஷேசனம், (௩௭) க்ஷாராம்புபானம், (௩௮) தப்தாயசூசிபட்சணம், (௩௯) க்ஷாராம்பு பூர்ணரந்திரபிரவேசனம், (௪0) மேஹபோஜனம், (௪௧) ஸ்நாயுச்சேதனம், (௪௨), ஸ்நாயுதாகனம், (௪௩) அஸ்திபேதனம், (௪௪) சிலேஷ்மாதனம் (௪௫) பித்தபானம், (௪௬) மஹாதிக்த நிஷேவணம், (௪௭) அத்யுஷ்ணதயிலபானம், (௪௮) க்ஷாரோதகபானம், (௪௯) கஷாயோதகபானம் (௫0) தப்தபாஷாணபோசனம், (௫௧) அத்யுஷ்ண வலிகதாஸ்நானம், (௫௨) தசனமர்த்தனம், (௫௩) தப்தாயசயனம், (௫௪) சந்தப்தாம்பு நிஷேவணம், (௫௫) சூசிபிரக்ஷேபணம், (௫௬) சிச்நாயோபாரபந்தனம், (௫௭) விருஷணயோ பாரபந்தனம்,

---

ஜொருக்கிறது. (௨௬) அநேக மரச்செக்கில்வைத்து ஆட்டுகிறது. (௨௭) ஆயுதங்களால் தேகத்தைவெட்டுகிறது. (௨௮) (பந்தடிப்பதுபோல) கீழும்மேலுமெறிகிறது. (௨௯) பெருந்தடியாலடிக்கிறது. (௩0) யானை தந்தத்தால் மோதுகிறது. (௩௧) பலவித பாம்புகளால் கடிக்கச்செய்கிறது. (௩௨) புகையைக்குடிக்கிறது (௩௩) கயிற்றால் கட்டுகிறது. (௩௪) பலவித சூலங்களால் குத்தி வருத்துகிறது (௩௫) முகத்தில் உப்புஜலத்தை வாரியடித்தல். (௩௬) மூக்கில் உப்புஜலத்தை வாரியூற்றுதல். (௩௭) உப்புஜலத்தைக் குடிப்பித்தல். (௩௮) காய்ச்சின ஊசியைத்தின்னச்செய்தல். (௩௯) உப்புஜலம் நிறைந்த குழிகளில் மூழுகச்செய்தல். (௪0) ஆண்குறியைத் தின்னச்செய்தல். (௪௧) நரம்புகளை வெட்டுகிறது. (௪௨) நரம்புகளையெரித்தல். (௪௩) எலும்பை வெட்டுகிறது. (௪௪) கபத்தைத் தின்னச்செய்தல். (௪௫) பித்தத்தை குடிக்கச்செய்தல். (௪௬) மகா கசப்பான வஸ்துக்களைத் தின்னச்செய்தல். (௪௭) அதிகயுஷ்ணமான எண்ணெயைக் குடிக்கச்செய்தல். (௪௮) உப்புஜலத்தைக் குடிக்கச்செய்தல். (௪௯) அமுகின இலைகளின் சாரத்தையுண்ணச்செய்தல். (௫0) சுட்டகல்லைத் தின்னச்செய்தல். (௫௧) சுட்டமணலால் ஸ்நானம் செய்வித்தல். (௫௨) பற்களால் கடிக்கச்செய்வித்தல். (௫௩) காய்ச்சின இரும்பில் படுக்கவைத்தல். (௫௪) கொதித்த ஜலத்தில் மூழுகச்செய்தல். (௫௫) ஊசியின்மேல் இருத்தல். (௫௬) ஆண்குறியில் இரும்புகுண்டுகளைக் கட்டிவிடுதல். (௫௭) விருஷணத்தில் இரும்புகுண்டுகளைக் கட்டிவிடுதல்.

(ருஅ) விருக்ஷாக்கிரபதனம், (ருக) தீக்ஷணதாராஸ்திரசையைமுதலான கோர நரகங்களைப் பார்க்கிறதேயில்லை. சேதுவினுடைய மணல் மத்தியில் படுத்துக்கொள்கிறவன் சரீரத்தில் எவ்வளவு மணல் ஒட்டிக்கொள்கிறதோ அவ்வளவு பிரம்ஹத்தியை யவன் செய்திருந்தாலும், அத்தனை பாதகமும் அவனைவிட்டு விலகிப்போகும். சேது மத்தியிலிருந்து வீசுகிற காற்று எவன்மேல் படுகிறதோ அவன் பதினாயிரம் தடவை சுராபான தோஷம் செய்திருந்தாலும் அதினின்றும் விடுபடுகிறான். எவனொருவன் சேது மத்தியில் க்ஷௌரம் பண்ணிக்கொள்கிறானோ அவன் பதினாயிரந்தடவை குருதல்பகமனம் பண்ணியிருந்தாலும் அந்தப் பாபமும் நிவர்த்தியாகிறது. எவனுடைய எலும்பு சேது மத்தியில் போடப்படுகிறதோ அவன் பதினாயிரம் தடவை சொர்ணத்திருட்டுச் செய்திருந்தாலுமுடனே அந்தப்பாதகம் நீங்கிப்போகிறது. சேதுமத்தியில் ஸ்நானம் பண்ணுகிறவன், மேலேகுறித்த மஹாபாதகர்களோடு சம்பந்தபட்டவனாயிருந்தாலும் அந்தப் பாபங்களினின்றும் முக்தனாகிறான். வழிபறிப்போன், தனக்கென்று பாகம்பண்ணிக்கொள்கிறவன், யதிகளையும், பிராமணர்களையும் தூஷிக்கிறவன், அதிக போஜனம் பண்ணுகிறவன், வேதவிக்கிரயஞ் செய்கிறவன், பிராமணர்களுக்குப்பணந்தருகிறேனென்று வரவழைத்துப்பின் இல்லையென்கிறவன், பிராமணரிடத்திலிருந்து தர்மங்களைத்தெரிந்துகொண்டு பின்பு அவர்களைத்துவேஷிக்கிறவன், பிராமணர்களை அவமதிக்கிறவன், மடுவில் ஜலம்குடிக்கவந்த பசுவை விரட்டுகிறவன், ஆகியபிரமகாதகர்களும், பிரமகாதகதுல்லியர்களும், ஔபாசனத்தைவிட்டவனும், தேவலனுடைய அன்னத்தைச் சாப்பிட்டவனும், சுராபானம் பண்ணுகிற ஸ்திரீயைச்சேருகிறவன், கணிகையின் அன்னபோஜனம் பண்ணினவன், சமாராதனையிற்புசித்தவன், பதிதனுடைய அன்னத்தையுண்டவன் முதலிய சர்வகர்ம அனருகர்களாகிய சுராபானபாதகர்களும், அவர்களுக்குத்துல்லியரானவர்களும், கந்தமூலபலங்கள், கஸ்தூரி, கதம்பப்பொடிகள், பால், சந்தனம், கற்பூரம், பாக்கு, தேன், நெய், தாமபிரம், வெண்கலம், ருத்திராட்சம் இவைகளைத் திருடுகிறவர்களாகிய சொர்ணஸ்தேயிகளும், அவர்களுக்குத் துல்லியரானவர்களும், சகோதரி, நாட்டுப்பெண், தாரஸ்திரீ, சகோதரன் பாரியை, மித்திரபாரியை, குடிக்கிறவேசி, ஈனஜாதி

(ருஅ) மரத்தின் உச்சியிலிருந்து கீழே தள்ளிவிடுதல். (ருக) கூர்மையான ஆயுதங்களிலே படுக்கச்செய்தல்.

யிற்பிறந்த பெண், கைம்பெண், இவர்களை விரும்பிப் புணருகிற வர் முதலிய சர்வகர்மப் பஹிஷ்கிருதர்களான குருதல்பகாமிக ளானவர்களும், அவர்களுக்குத் துல்லியரான பாதகர்களும், மேலே சொன்ன நால்வகைப் பாபிகளோடு கூடியிருக்கிற பாபிகளும் ஆகிய பஞ்ச மஹாபாதகர்களும் சேதுவில் ஒரு ஸ்நானம் பண் ணின மாத்திரத்திலே அப்பாபங்களினின்றும் விடுபட்டு முக்தி யடைகிறார்கள். யாகங்கள் செய்யாமலே சொர்க்கத்தில் கிருதாசீ முதலான தேவஸ்திரீகளின் சம்யோகத்தை யனுபவிக்க விரும்பு கிறவர்களும், சூரியன், அக்கினி முதலான தேவர்களை உபாசிக்கா மலே மங்களம் பெற விரும்புகிறவர்களும், நிலம், பூமி, சொர் ணம், தானியம், தண்டுலம் இவைகளைத் தானஞ்செய்யாமலும், உப வாசம், சாந்திராயணம் முதலான விரதங்களால் சரீரம் வருந்தாம லும் சொர்க்கத்தையடைய விரும்புகிறவர்களும், பாபத்தைப் போக்கி முக்தியை யளிக்கின்ற சேதுவில் ஸ்நானம் பண்ணக்கட வர்கள். சேது ஸ்நானமானது மனசுத்தியையும் முக்தியையு மளிக்கிறதென்றும், தபம், ஜபம், தானம், ஹோமம், யாகம் முதலானவைகளை விடச் சிறந்ததென்றும் புராணங்களில் படிக் கப்படுகிறது. யாதொரு பலாபேட்சையுமில்லாமல் சேதுவில் ஸ்நானம் பண்ணுகிறவனுக்கு மறுஜன்மங்கிடையாது. பிராமணர் களே யிது சத்தியம் சத்தியம்! சம்பத்தைக்கருதி ஸ்நானம்பண்ணு கிறவன் சம்பத்தையும், சுத்தியை விரும்பி ஸ்நானம்பண்ணுகிறவன் சுத்தியையும், சொர்க்கலோகத்தில் அப் சரஸ்திரீகளின் இன்பத்தை யிச்சிக்கிறவன் அவ்வின்பத்தையும், மோட்சத்தை யுத்தேசித்து ஸ்நானம் பண்ணுகிறவன் பிறப்பிறப்பில்லாத மோட்சத்தையும் அடைகிறான். சேது ஸ்நானத்தினால் பாவம் நீங்கிப் புண்ணியமுண் டாகும். பிராம்மணோத்தமர்களே! சேது ஸ்நானமானது சர்வகாம பலப்பிரதமாயும், சமஸ்த விரதங்கள், சமஸ்த யாகங்கள், சமஸ்த போகங்கள், சமஸ்த தீர்த்தங்கள், இவைகளுக்குள்ளே அதிக உத் தமமாகச் சொல்லப்படுகிறது. இந்திரலோகம், பிரமலோகம், விஷ்ணுலோகம், சிவலோகங்களிலுள்ள போகங்களையடைய விரும்பு கிறவன் இராமசேதுவிலொருதரம் பக்தியுடன் ஸ்நானம் பண்ண வேண்டும். ஆயுசு, ஆரோக்கியம், சம்பத்து, ரூபம், குணம், அங்கங் களோடு கூடிய நாலுவேதங்களை முற்று முணர்தல், சமஸ்த சாஸ்

திரங்களின் எல்லை காணல், சமஸ்த மந்திரங்களில் வல்லமைபெறு தல், இவைகளை யபேட்சித்துச் சர்வார்த்தசித்தியைக் கொடுக்கிற சேதுவில் ஸ்நானம் பண்ணினால் அந்தந்தப்பலனை அடைகிறார்கள்! சமுசயமே கிடையாது. சத்தியம், சத்தியம். தரித்திரம், நரகம் இவைகளுக்குப் பயப்படுகிறவன் இந்த இராமசேதுவில் ஸ்நானம் பண்ணட்டும். சிரத்தையுடனாவது சிரத்தையில்லாமலாவது இராம சேதுவில் ஸ்நானம் பண்ணுகிறவன் இகபரங்களில் துன்பமேயு டையமாட்டான். சேதுஸ்நானத்தினால் சகலருக்கும் பாபராசிகள் அழிந்து, புண்ணியராசிகள் சுக்கிலபட்சத்து சந்திரன்போலவும் சமுத்திரத்திலே இரத்தினங்கள் போலவும் விருத்தியாகின்றன. காமதேனு, கற்பகவிருட்சம், சிந்தாமணியிவைகள் இச்சித்தவை களைக் கொடுப்பதுபோல சேதுஸ்நானமும் கருதினவைகளையெல் லாங் கொடுக்கிறது. சேது யாத்திரை செய்யச்சக்தியில்லாத தரித் திரன் யோக்கியரிடம் திரவியயாசகஞ் செய்துகொண்டுபோய் ஸ்நா னஞ் செய்யவேண்டும். அப்படிச் செய்தால் தானங்கொடுத்தவன் வாங்கினவ னிருவருக்கும் பூர்ணமான புண்ணியமுண்டாகும். சேதுயாத்திரை யினிமித்தம் பிராமணர்களிடத்திலாவது, பிராம ணன் கொடாத பட்சத்தில் க்ஷத்திரியனிடத்திலாவது, க்ஷத்திரி யன் கொடாத பட்சத்தில் வைசியனிடத்திலாவது, திரவிய சகாயம் பெறலாம்; வைசியனுங் கொடாத பட்சத்தில் சூத்திரனிடத்திலொ ருபோதும் வாங்கக்கூடாது. ஒருவனுக்கு வஸ்திரம், தனம், தானி யமுதலியவை கொடுத்துச் சேதுவுக்குப் போகும்படி தூண்டுகிற வன் அசுவமேதம் முதலான யாகபலனும், சதுர்வேதபாராயண பலனும், துலா புருஷன் முதலான ஷோடச மஹாதானங்கள் செய்த பலனும் பெற்றுப், பிரமஹத்தியாதி பாப நிவாரணத்தையு மடைகிறான். சந்தேகமே கிடையாது. அதிகமாகச் சொல்லுவா னேன்! சர்வ காமங்களையும் அடைகிறான். மேலே சொல்லிய பொருள்களைப் பெற்றுக்கொண்டு சேது யாத்திரை போகிறவனும் அவனுக்குச் சமானமான பலனை யடைகிறான். சேது யாத்திரைக் காக யாசகம் செய்கிறவனுக்குப் பிரதி கிரகதோஷம் கிடையாது. சேது யாத்திரைக்குப் பணம் தருகிறேனென்று சொல்லிவிட் டுப் பின்பு இல்லை யென்றவனும், சேதுவுக்குப் போகிறேனென்று பணம் வாங்கிக்கொண்டு போகாமலிருக்கிறவனும் பிரமகாதிக ளென்னப்படுகிறார்கள். பணமிருந்துப் லோபகுணத்தினாலே சேது

யாத்திரைக்காக யாசிக்கிறவனை ஸ்தேயி என்று சொல்லுகிறார்கள். எப்படியாவது சேதுவில் ஸ்நானம் பண்ணவேண்டியது. சேது யாத்திரைபோகச் சக்தியில்லாதவன் உத்தம பிராம்மணனுக்குத் தக்ஷிணைகொடுத்துப் போகச் சொல்லவேண்டும். யாசகஞ்செய்து யாகஞ்செய்வதனால் தோஷமுண்டாகாததைப் போலச் சேது யாத்திரைக்காக யாசகம் செய்வதனால் தோஷமில்லாமையால் யாசகஞ் செய்துகொண்டாவது சேது ஸ்நானத்துக்குப் போகவேண்டும். கிருதயுகத்தில் ஞானத்தினால் மோட்சம். திரேதாயுகத்தில் யாகத்தால் மோட்சம். துவாபர கலியுகங்களில் தானத்தால் மோட்சம். இந்த நாலுயுகங்களிலும் சேது ஸ்நானத்தால் மோட்சம்.

---

முதலாவது
அத்தியாயம் முற்றிற்று.

---

## இரண்டாவது
# சேதுவுண்டான விதமும், அங்குள்ள பிரதான தீர்த்தங்களின் பெயரும் உரைத்த
## அத்தியாயம்.

---

சௌனகாதியர் சூதரைப்பார்த்து, மஹானுபாவரே! உத்தம கர்மங்களைச் செய்த இராமன் ஆழமான சமுத்திரத்திலெப்படி சேது கட்டினார்? சேதுரூபமான கந்தமாதன பருவதத்தில் என்னென்ன தீர்த்தங்களிருக்கின்றன? இவைகளைச் சிரத்தையுடைய எங்களுக்குச் சொல்லியருளவேண்டும் என்று கேட்க, பௌராணிகோத்தமரான சூதர் சொல்லுகிறார்.

ரிஷீசுவரர்களே! இராமன்சேதுகட்டின விதத்தையுங்களுக்குச் சொல்லுகிறேன் கேளுங்கள். பூர்வம் இராமமூர்த்தியானவர் தந்தையின் சொற்படி, சீதா இலட்சுமணருடன் தண்டகாரணியம் வந்து பஞ்சவடியில் வாசம் பண்ணுகையில், மாரீசன்செய்த மாயத்தினாலே இராவணன் சீதையைத் தூக்கிக்கொண்டு போய்விட்

டான். பறிகொடுத்த தேவியைத் தேடிக்கொண்டு, மிகுந்த சோக மோகத்தோடு பம்பாநதிக்கரையில் வந்து ஒருவானரத்தைக்கண் டார். அந்த வானரம் நீர் யாரென்ன, தசரதராமன் தன்விருத்தாந் தத்தைச்சொல்லி, நீர்யாரென்றுகேட்க, வானரம் நான் சுக்ரீவன் மந்திரியாகிய அநுமான்; உமது நேசத்தைவிரும்பி உங்களை யவனிடம் அழைத்துக்கொண்டு போகவந்தேன். ஆகையால் நீங் கள் தயவுசெய்து வாருங்கள் என்றுசொல்ல, ஸ்ரீராமனும் அப் படியே ஆகட்டுமென்று சுக்ரீவனிடம்வந்து அக்கினிசாட்சியாக ஸ்நேகம் பண்ணிக்கொண்டு வாலியைச் சங்கரிப்பேனென்று பிர திஞ்ஞைபண்ணினார். சுக்ரீவனும் சீதாதேவியைக்கொண்டுவந்து கொடுக்கிறேனென்று பிரதிஞ்ஞைபண்ணினான். இருவரும் ஒரு வரையொருவர்நம்பி மிகுந்த சந்தோஷத்தோடுகூட ரிசியமூகபரு வதத்தில் வசித்துக்கொண்டிருக்கையில், சுக்ரீவனுக்கு நம்பிக்கை யுண்டாகும்படி துந்துபியின் எலும்பைத்தமது பாதத்தின் அங் குஷ்டத்தால் அநேக யோசனைதூரம் போய்விழும்படி யெற்றி, ஏழுமராமரங்களையுந்துளைக்க, அதுகண்ட வீரனாகிய சுக்ரீவன் சந்தோஷமடைந்து, அதிபராக்கிரமசாலியாகிய உம்மைச்சிநேகனா கப்பெற்றமையால் நான் இந்திராதி தேவர்களுக்கும் பயப்படமாட் டேன். இலங்கேசுவரனாகிய இராவணனைக்கொன்று உமக்குச் சீதையை மீட்டுக்கொடுக்கிறேன் என்றுசொல்லச், சுக்ரீவன் இலட்சுமணனோடுகூட வாலி அரசாண்டுவருகிற கிஷ்கிந்தை வந்துசேர்ந்தார். பிறகு சுக்ரீவன் வாலியைவெளியில் இழுக்க நினைத்துக்கர்ஜிக்க, அந்தக்கர்ஜனையைக்கேட்டுச் சகிக்காமல் வாலி அந்தப்புரம்விட்டு வெளியில் வந்து தம்பியோடு கைகலந்து முஷ்டியாலடிக்கச், சுக்ரீவன் பொறிகலங்கி அடி பொறுக்க மாட்டாமல் மஹா பலசாலியான ராமனிருக்குமிடம் வந்து விழுந்தான். அப்பொழுது நீண்ட புஜங்களையுடைய ஸ்ரீராமர் சுக்ரீவன் கழுத்தில் ஒரு மாலையைக்கட்டி மறுபடியுஞ் சண் டைக் கனுப்பச், சுக்ரீவன் போய் வாலியைக் கர்ஜனையா லழைத்து, தொந்தயுத்தஞ் செய்கையில், ராமன் ஒரு பாணத்தால் வாலியைக் கொன்றார். உடனே சுக்ரீவன் கிஷ்கிந்தைபோய்ச் சேர்ந்து, வரு ஷாகாலம் நீங்கினபின் சீதாதேவியைத் தருவிக்கும்படி தனது வானரசேனைகளைக் கூட்டிக்கொண்டு இராம இலட்சுமணர்களிருக்

ருமிடம் வந்துசேர்ந்து, சீதையைத்தேடும்பொருட்டு வானரங்களை நாலாபக்கங்களிலும் அனுப்பினான். வாயு புத்திரனாகிய அனுமான் இலங்கையில் சீதையைத் தேடிக் கண்டு பிடித்து, அவள் கொடுத்த சூடாமணியைக் கொண்டுவந்து ஸ்ரீராமரிடங் கொடுக்க, அவர் துக்கமும் சந்தோஷமும் அடைந்து, சுக்ரீவன், தம்பி இலட்சுமணன், புத்திசாலியான அனுமான், சாம்பவான், நளன் முதலானவர்களோடு அபிசித்து என்கிற சுப முகூர்த்தத்தில் பயணப்பட்டு, தேசங்களைக்கடந்து, மகேந்திரபர்வதம் வந்து சக்கிரதீர்த்தம் போய்த் தங்கியிருந்தார். அவ்விடத்தில் இராவணனுடைய இளைய சகோதரனாகிய தர்மாத்மாவான விபீஷணன் நான்கு மந்திரிமார்களோடும் வருவது கண்டு, ஸ்ரீராமர் அவனுக்கு நல்வரவு கூறியழைக்கச், சுக்கிரீவன் அன்பனோ, பகைவனோ வென்றையப் பட்டான். ஸ்ரீராமர் விபீஷணனிடத்திலதிக பழக்கமில்லா திருந்தாலும் அவனுடைய செய்கைகளாலும், நடக்கைகளாலும் யோக்கியனென்றறிந்து, அவனுக்குத் தகுந்த மரியாதை செய்து, இராட்சத இராஜ்யத்துக்குத் தலைவனாக முடிசூட்டிச், சுக்கிரீவனைப்போலத் தனக்குமுக்கிய மந்திரியாக்கி, சுக்கிரீவன் முதலானவர்களைப் பார்த்துக் காலோசிதமாகச் சில வசனங்களைச் சொல்லுகிறார்.

ஓ வீரர்களே! நமது சைனியமோ மிகவும் பெரிதாயிருக்கிறது. நீலவர்ணமாயும் அலைகளால் கொந்தளிக்கிறதாயும், துள்ளிக் குதிக்கின்ற மகரமத்சியங்களோடு கூடினதாயும், சங்குகள் முத்துச் சிப்பிகள் நிறைந்ததாயும், ஒரு பக்கத்தில் கொழுந்துவிட்டெரியும் வடவாக்கினியால் வியாபிக்கப்பட்டதாயும், ஒரு புறத்தில் மிகுந்த நுரைகள் பொருந்தியதாயும், அதிக பயங்கரமாயும், பலமான காற்றிலே யிழுக்கப்பட்ட நீலமேகங்களோடு கூடினதாயும், பிரளயகாலமேகத்தைப்போல பேரொலியிடுகிறதாயும், பலமானதாயும், காற்றினாலே பொங்குகிறதாயுமிருக்கிற இந்தச்சமுத்திரமோ தாண்டமுடியாததா யிருக்கிறது. நாமெப்படிச் சைனியங்களோடு மிந்தக்கடலைக் கடந்து போவோம்? நூறுயோசனைதூரம் விசாலத்தகன்று மனதினாலேகூடச்சொல்ல முடியாததாயிருக்கிற இந்தச்சமுத்திரத்தைப் பராக்கிரமசாலிகளான வானரசைனியத்தோடு கூடத்தாண்டிப்போவதற்கென்ன உபாயம் உங்களுக்குத் தோன்றுகிறது? அடடா! எவ்வளவு விக்கினங்களிருக்கின்றன, எப்படிச்

சீதையையடையப்போகிறோம்? மஹாகஷ்டம் வந்துவிட்டதே! நாம் நிர்க்கதியாயிருக்கிறோமே; ஏராளமான நீரையும் பெருங்காற்றையுமுடையதாயும் நிராதாரமாயுமிருக்கிற இந்தச்சமுத்திரத்தை வானர வீரர்கள் தாண்டிப்போகிறதற்கு என்ன உபாயஞ்செய்யலாம்? காட்டிலேவந்து மனையாட்டியை யிழந்தோம்! தந்தையும் இறந்தார்! இவைகளைவிடச் சமுத்திரத்தைத் தாண்டவேண்டியதுக்கம் பெரிதாயிருக்கிறது. என்னஜலம்! என்ன கர்ஜனை! அது கெட்டது. அகஸ்திய மகாமுனிவர் நீ மஹா துஷ்டனை இராவணனைச் சங்கரித்துவிட்டுப் பாப நிவர்த்திக்காகக் கந்தமாதனம் வந்துசேரு, போவென்று சொன்னாரே யது எப்படிப் பொய்யாகும் என்று சொல்லி முடித்தார். அது கேட்ட சுக்ரீவன் முதலானவர்கள் அஞ்சலி கூப்பிக்கொண்டு ஸ்ரீராமரைப்பார்த்து, ஓடங்களாலும், தெப்பங்களாலும் கடலைக் கடப்போமென்று சொல்ல, விபீஷணன் ஸ்ரீராமரைப் பார்த்து, ஏ ராகவா! இந்தச் சமுத்திரமானது உங்கள் மூன்னோர்களாகிய சாகரர்களாலே தோண்டப்பட்டதாகையினால், அந்தக் குலத்திற் பிறந்த உம்முடைய காரியத்தை அது கட்டாயஞ் செய்து முடிக்கும்; ஆகையால் நீர் சமுத்திரத்தைச் சரணமடைவது நல்லது என்றுசொல்ல, இராமர் வானரவீரர்களைச் சமாதானஞ் செய்து, நூறுயோசனை விஸ்தாரமுள்ள பயங்கரமான இந்தச் சமுத்திரத்தைத் தோணிகளாலும், தெப்பங்களாலும் நாமெப்படித் தாண்டுகிறது; தாண்டுவோமென்றாலும் நமக்கு வேண்டிய தோணிகளோ கிடையாது; கப்பலோட்டிகள் போகக்கூடியதான இந்தக் கடலில் நம்மைப்போன்றவர்களெப்படிப்போகக்கூடும்? நமது சேனையோ விஸ்தாரமாயிருக்கிறது. இடையிலே சத்துருக்கள் வந்து கொன்றாலுங் கொல்வார்கள். ஆகையால் ஓடங்களையும், கப்பல்களையுங் கொண்டு கடலைத்தாண்டுகிற உபாயம் எனக்குப் பிடிக்கவில்லை; விபீஷணன் சொன்னவிதந்தான் எனக்குச் சம்மதமாயிருக்கிறது; எனக்கு வழிவிடும்படியாகச் சமுத்திரத்தைச் சரணமடைகிறேன். வழிவிடாமற்போனால், வாயுவைவிட வேகமும், அக்கினியைவிட உக்கிரமுமுடைய மஹாஸ்திரங்களினாலே அதைக் கொளுத்திவிடுகிறேன் என்றுசொல்லி, ஆசமனஞ்செய்து, இலட்சுமணரோடுகூடத் தர்ப்ப சயனத்தில் சமுத்திரத்தைத் தியானித்துப் படுத்துக்கொண்டார்.

அவர் ஆதிசேஷனுடலைப்போலத திரண்டுருண்டிருக்கிற தமது வலது கையைத் தலை அணையாகவைத்துக்கொண்டு, சமுத்திரக் கரையில் விரிக்கப்பட்ட தர்ப்பசயனத்தில் வேதிகையில் அக்கினி போல மூன்றுநாள் படுத்து நியமந்தப்பாமல் சமுத்திரோபாசனை செய்தும், மதங்கொண்ட சமுத்திரராஜன் வாராமையாலே, ஸ்ரீராமர் கோபத்தினாலே கண்கள் சிவந்து இலட்சுமணரைப் பார்த்து, இலட்சுமணா! இதோபார். எனது பாணங்களால் துண்டு துண்டுக ளாகக் கண்டிக்கப்பட்ட மகரங்களாலே இந்தச் சமுத்திரத்தைச் சந்தேகமில்லாமல் தூர்த்துவிடுகிறேன்! சங்கு, சிப்பி மீன் மகரங்களாலே நிறைந்திருக்கிற இந்தக்கடலை அமோகமான பாணங்களைப் பிரயோகஞ் செய்து வற்ற அடித்துவிடுகிறேன்; நான் பொறுமையாயிருப்பதினாலே என்னைச் சக்தியில்லாதவனென் றெண்ணுகிறான்; சீ! இப்பேர்ப்பட்டவனிடத்தில் பொறுமை காட் டலாகாது; நல்ல வார்த்தையினாலிந்தச் சமுத்திரம் வசப்படுகிற தில்லை. அடே இலட்சுமணா! என் வில்லையும், பாம்புக்குச் சமான மான அம்புகளையும் கொண்டுவா, சமுத்திரத்தை வற்ற அடித்து விடுகிறேன். வானரங்களிதன்மேலே தங்களுடைய காலால் நட ந்து போகட்டும். மரியாதைகடந்த இந்தச் சமுத்திரத்துக்கு நாம் மரியாதை காட்டலாகாது. அநேக மாயிரமலைகளாலும், தான வர்களாலும், மகரங்களாலும், முதலைகளாலும் நிறைந்திருக்கிற இந்தச் சமுத்திரத்தை யொரு நொடிக்குள்ளே கலங்க அடிக்கி றேன், என்று சொல்லிக் கோபத்தால் கண்கள் துடிக்க, திரிபுர சம்மாரஞ்செய்த ருத்திரனைப்போல உக்கிரங்கொண்டு, கை யில் வில்லையெடுத்து, நாணேற்றி, உலகங்களெல்லாம் நடுங்கும் படி தீட்சணமான பாணங்களைப் பிரயோகித்தார். அந்தக் கொ டிய பாணங்கள் பதுதுத்திக்குகளிலு மெரிந்துகொண்டு, கொழு த்த தானவர்கள் நிறைந்த சமுத்திரத்துள் புகவே, சமுத்திரராஜன் நடுநடுங்கிப் பயந்து பாதாளத்திலிருந்து அஞ்சலி கூப்பிக்கொண்டு வெளியிலே வந்து, கைவல்யபதகாரணனை ராகவனைச் சரண மடைந்து, காதுக்கினிய சொற்களாலே ஸ்தோத்திரஞ்செய்ய வாரம்பித்தான். ஏ! சீதாபதியான ராகவா! வணங்கினவர் களுக்குச் சுத்தத்தைக்கொடுக்கிற உனது திருவடிக்குநமஸ் காரம். கௌதம பத்தினியாகிய அகலிகைக்குச் சாபவிமோச

னஞ் செய்ததாயும், தேவகணங்களால் வந்தனஞ் செய்யப்பட்டது மான உன்பாத தூளிக்கு நமஸ்காரம். தாடகையுடலைக்கிழித்தவரா யும், இராட்சதக்கூட்டங்களை யொழித்தவராயும், விஸ்வாமித்திரரு டைய யாகத்தையிரட்சித்தவராயும், ருத்திரனுடையவில்லையொடித் தவராயுமிருக்கிற உமக்கு நமஸ்காரம. பக்தர்களுக்கு இஷ்டத் தைக்கொடுக்கிறவரும், தேவர்கள் காரியத்துக்காக அவதரித்த வருமான உமக்கு நமஸ்காரம். நாராயணராயும், ஆதியந்த மற்றவ ராயும், சிவ சொரூபியாயும், அக்ஷரராயும், மோட்சத்தைத் தரு பவராயுமிருக்கிற, இராமா! உம்மை நான் சரணமடைந்தேன். கருணைக்கடலே! யுமது கோபத்தையடக்கி யென் அபராதத்தைப் பொறுத்துக்கொண்டு என்னைக் காத்தருளும் என்றுதுதித்து, இரா கவா! பிரதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசமுதலான பூதங்களை பிரமதேவன் யெந்தச்சுபாவத்தோடு ஆதியில் சிருஷ்டித்தானோ அந்தச்சுபாவம் அவைகளுக்கு மாறுமலே யிருக்கிறது. அதுபோல எனக்கு ஆதிகாலத்திலே யேற்பட்ட ஆழ்ந்திருத்தல் எனக்குச் சுபாவம். மேடாகிற தன்மை விகாரத்தாலுண்டாகலாம். இது வாஸ் தவந்தான். ஆனாலும் லோபத்தாலாவது, காமத்தாலாவது, பயத் தாலாவது, இராகத்தாலாவது நான் என் சுபாவகுணத்தை விடமுடியாது. ஆகையால் உமது சைனியம் போகும் விஷயத்தில் உமக்கு உதவி செய்கிறேன், என்று பிரார்த்தித்த சமுத்திரத் தைப்பார்த்து ஸ்ரீராமர் நான் வானர சைனியங்களோடு இலங்கா புரிக்குப் போகவேண்டும்; நீ வற்றிவழிவிட்டே தீரவேண்டும் என்று கட்டளையிட, சமுத்திரம் கெஞ்சி ஐயா! நான் சொல் வதைக் கவனமாய்க் கேட்டுச் செய்யவேண்டியதைச் செய்யும். உமது சேனைகள் நடந்துபோவதற்கு உம்முடைய உத்தரவின்படி நான் வற்றியிடங்கொடுத்தால் வில்வல்லமையுடைய மற்றவர்க ளும் இப்படியே செய்வார்கள். ஆகையால் உமது சேனை போவ திற்கு வேறு உபாயஞ் சொல்லுகிறேன் கேளும். உம்முடைய சைனியத்தில் நான் என்றொரு வானரமிருக்கிறது. அது விசுவகர் மாவென்கிற துவஷ்டாவின் புத்திரன். சிற்பவேலையிற் கைதேர்ந்த வன். அவன் கையால் தொட்டுவைக்கும் புல்கல் கட்டை முதலிய வற்றை யெல்லாம் நான் சுமந்து கொண்டிருக்கிறேன். அவைகள் உமக்குச் சேதுவாகும். அதன் வழியாய் இராவணனிருக்கிற இல

ங்காபட்டணத்துக்குப்போம், என்று சொல்லிக் கண்ணுக்கு மறைந்து விட்டவுடனே, ஸ்ரீராமன் நளனைப்பார்த்து, ஏ புத்திசாலியான நளனே! நீ சக்தியுள்ளவனாகக் காணப்படுகிறபடியால் சமுத்திரத்தில் சேது கட்டுபார்ப்போம் என்று சொன்னார். அது கேட்ட நளனும், சுவாமீ! நான் விசுவகர்மாவின் ஔரஸபுத்திரன்; இந்த ஆழமான சமுத்திரத்தில் நான் சேதுவை கட்டிமுடிக்கிறேன், என் தந்தையாகிய விசுவகர்மா மந்திரகிரியிலே என் தாயாரைப்பார்த்து உன் குமாரன் சிற்பத்தொழிலில் எனக்குச் சமானமாயிருப்பானென்று வரங்கொடுத்திருக்கிற படியால் நான் என் தந்தையைப்போலச் சமர்த்துள்ளவன். இப்பொழுதே வானரங்களெல்லாம் சேதுவைக் கட்ட யத்தனஞ் செய்யட்டுமென்று சொன்னான். அப்பொழுது ஸ்ரீராமர் உத்தரவின்பேரில்பலமான வானரங்களெல்லாம், மரங்களையும், கொடிகளையும், புற்களையும், மலைகளையும், கொடிமுடிகளையும், கருடனையும் வாயுவையும்போல வேகமாய்க் கொண்டுவந்தார்கள். அவைகளைக்கொண்டு சமுத்திர மத்தியில் பத்துயோசனை விசாலமும், நூறுயோசனை நீளமுமுள்ள சேதுவைக்கட்டி முடித்தான். கேளுங்கள் முனீசுவரர்களே, ஸ்ரீ ராமசந்திரன் விசுவகர்ம்மாவின் புத்திரனை நளனைக்கொண்டு கட்டுவித்த இந்தச் சேதுவைப்பார்த்து பாபிகளெல்லாரும் முக்தர்களாகிறார்கள். இந்தச்சேதுவில் ஸ்நானம் பண்ணுகிறவர்களிடத்தில் ஸ்ரீபரமேசுவரன் எவ்வளவு திருப்தியோடிருப்பாரோ அவ்வளவு திருப்தியாய் விரதம், தானம், ஓமம், தபசு இவைகளைச் செய்கிறவர்களிடத்தில் இருக்கமாட்டார். சூரியப் பிரகாசத்துக் கொப்பான வேறு பிரகாசமில்லா திருப்பதுபோல இந்தச் சேது ஸ்நானத்துக்குச் சமானமான ஸ்நானம் உலகத்தில் கிடையாது. இராமன் இலங்கைக்குப்போக விரும்பி வானரங்களைக்கொண்டு சேதுகட்ட ஆரம்பித்த இடமே சேது மூலமாகும். இதுதானுலகத்தில் தர்ப்பசயனமென்று வழங்கி வருகிறது.

கேளுங்கள் முனீசுவரர்களே! இராமன் சேதுகட்டின விதித்தை யுங்களுக்குச் சொல்லி முடித்தேன். அந்தச்சேதுவில் புண்ணிய தீர்த்தங்கள் கோடி கோடியாக விருக்கின்றன. அவைகளின் கணக்கையும், பெயரையும் சொல்ல ஆதிசேஷனாலும் முடியாது.

ஆனகயால் அவைகளில் பிரதானமான இருபத்தினுலு தீர்த்தங்களை மட்டு முங்களுக்குச் சொல்லுகிறேன். சக்கிரதீர்த்தம், வேதாளவரத தீர்த்தம், பாபவிநாச தீர்த்தம், சீதா தீர்த்தம், மங்கள தீர்த்தம், அமிர்த வாபி, பிரமகுண்டம், அநுமக்குண்டம், அகஸ்திய தீர்த்தம், இராம தீர்த்தம், இலட்சுமண தீர்த்தம், ஜடா தீர்த்தம், இலட்சுமீ தீர்த்தம், அக்கினி தீர்த்தம், சூரியனுக்குப் பொற்கையளித்த சக்கிரதீர்த்தம், சிவ தீர்த்தம், சங்கதீர்த்தம், யமுனை தீர்த்தம், கங்கா தீர்த்தம், கயா தீர்த்தம், கோடி தீர்த்தம், சாத்தியாமிருத தீர்த்தம், மானச தீர்த்தம், தனுக்கோடி தீர்த்தம், இவைகளே முக்கியமான தீர்த்தங்களாம். முனிவர்களே! சேதுமத்தியிலுள்ள முக்கியமான இருபத்து நாலு தீர்த்தங்களின் பெயரையு முங்களுக்குச் சொல்லிவிட்டேன். பாபத்தைப் போக்கிப் புண்ணியத்தைக் கொடுக்கிற இந்த அத்தியாயத்தைப் பக்தியோடு படிப்போரும் கேட்போரும் இவ்வுலகத்தில் இஷ்டார்த்தசித்தியடைந்து பரத்தில் மோட்சத்தை யடைகிருர்கள்.

இரண்டாவது

அத்தியாயம் முற்றிற்று.



மூன்ருவது

## தர்ம்ம புஷ்கரணிக்குச் சக்கிர தீர்த்தமென்று பெயர்வந்த சரித்திர முரைத்த

அத்தியாயம்.

---

சூதமுனிவரே! சேதுவிலிருக்கிறதாகச் சொன்ன இருபத்து நாலு தீர்த்தங்களுள் முதலாவது தீர்த்தத்துக்குச் சக்கிர தீர்த்தமென்று பெயர்வந்த காரணமென்ன? என்று சௌனகாதியர் கேட்கச் சூதர் சொல்லத் தொடங்கினுர்,

கேளுங்கள் பிராமணோத்தமர்களே! நான் பிரதானமென்று சொன்ன இருபத்துநாலு தீர்த்தங்களில் முதலாவதாகச் சொன்ன தீர்த்தம் சர்வலோகப் பிரசித்தமானது.

அந்தத்தீர்த்தத்தை நினைப்பதினாலேயே மறுபிறப்புக்கிடையாது. ஒருதரம் ஸ்நானம் பண்ணுவதினாலும், வாயாலுச்சரிப்பதினாலும் இலட்ச ஜன்மங்களிற் செய்த பாபங்கள் நாசத்தையடைகின்றன. ரிஷீசுவரர்களே! இந்தத்தீர்த்தத்துக்கு ஒப்பாகவாவது உயர்வாகவாவது ஒரு தீர்த்தமுங்கிடையாது. இது நிச்சயம், கங்கை, சரஸ்வதி, ரேவை, பம்பை, கோதாவரி, காளிந்தி, நர்ம்மதை, மணிகர்ணிகை, காவேரி முதலாகப்பூமியிலுள்ள தீர்த்தங்களெல்லாமிந்தத்தீர்த்தத்தின் கோடியிலொரு பங்குக்கு மொப்பாகாது. கேளுங்கள் முனிவர்களே. இந்தத் தீர்த்தத்தைப் பௌராணிகோத்தமர்கள் தர்மதீர்த்தமென்று சொல்லுகிறார்கள். அதற்குச் சக்கிரதீர்த்தமென்று பெயர் வந்தகாரணத்தையிப்பொழுது உங்களுக்குச் சொல்லுகிறேன் கேளுங்கள். சேதுமூலமென்கிற தர்ப்பசயனத்திலேயே மஹா பாதகநாசனமான இந்த சக்கிர தீர்த்தமிருக்கிறது. தெக்ஷிண சமுத்திரக்கரையில் ஆலாசிய க்ஷேத்திரத்துக்கு அதிக தூரமில்லாமலும், புல்லகிராமத்துக்கும் க்ஷீரசரசுக்கும் சமீபத்திலிருக்கிற தர்மபுஷ்கரணிக்கரையில் கிருபாமூர்த்தியும், சத்தியவந்தரும், அகப்புற இந்திரியங்களை யடக்கினவரும், சிற்றின்பத்தை வெறுத்தவரும், சீதோஷ்ண சுகதுக்கங்களை யொப்பக் கருதுகிறவரும், சகல ஜீவாத்மாக்களையும் தன்னுயிர்போல் பாவித்து இதஞ்செய்கிறவரும், விஷ்ணுபக்தருமான காலவரென்கிற ஒரு மஹா ரிஷியானவர் பதினாயிரம் வருஷம் தபசு பண்ணிக்கொண்டிருந்தார். சில வருஷம் உதிர்ந்த சருகுகளை உண்டும், சில வருஷம் ஜலத்தை யருந்தியும், இன்னும் சில வருஷம் காற்றையுண்டும், இப்படியாக ஐயாயிரவருஷம் தேவர்களாலுஞ் செய்ய முடியாத கொடுந்தபசு செய்தார்; இன்னும் ஐயாயிரம் வருஷம், ஆகாரமில்லாமலும், வெளிச்சத்தைப் பாராமலும், மூச்சு விடாமலும், ஆகாரமில்லாமலும், வருஷா காலத்தில் வெளியில் நின்று கொண்டும், பனிகாலத்தில் ஜலத்தில் முழுகியிருந்தும், வெயிற்காலத்தில் பஞ்சாக்கினி மத்தியிலிருந்து கொண்டும், அஷ்டாட்சரத்தை ஜபித்து நாராயணனைத்தியானித்துத் தபசு பண்ணிக்கொண்டிருந்

னார். இவ்விதம் பதினாயிரம் வருஷம் தபசுபண்ணிக் கொண்டிருக் கையில் அவருடைய தபசுக்கு மனமகிழ்ந்து, பக்தர்களுக்கெளியவ ரான ஸ்ரீலெட்சுமீநாராயணர், சத்திரசாமரங்கள் வீச, ஹாரகேயூர, கடக மகுட கௌஸ்துவாதி ஆபரணங்கள் ஜொலிக்க, விஷ்வக்சேனர், சனந்தர் முதலான கிங்கரர்கள் சூழ்ந்துவர, நாரதர் முதலான முனி வர்கள் வீணை வேணு மிருதங்கமுதலிய வாத்தியங்களிலே யவர் புகழைப்பாடிவர, சனகாதி மஹாயோகிகள் இருப்பக்கத்திலும் சே வித்துவர, பொற்பிரம்பேந்திய அநேகக்கட்டியக்காரர்கள் கட்டியங் கூறிவர, அரையில் பீதாம்பரம் பிரகாசிக்க, திருமார்பில் இலட்சுமி விளங்க, ஒருகை தாமரை மலரையசைத்துக்கொண்டிருக்க, மூவுல கையுமோகிக்கச் செய்யும் மந்தகாசம் இலங்க, நீலமேகத்தையொ த்த தமது திருமேனியின் பிரகாசமானது பத்துத்திக்குகளிலும் பரவ, சங்கு சக்கர கதாதாரியாய், கோடி சூரியப்பிரகாசராய், மலர் ந்த தாமரை மலரின் இதழைப்போல அகன்று நீண்ட கண்களையு டையவராய்க், கருடாரூடராய் எதிரில் தோன்றினார். ஸ்ரீவத்ஸம் என்கிற மறுவானது பிரகாசித்துக் கொண்டிருக்கிற திருமார்பினை யுடைய ஜகத்பதியான மஹா விஷ்ணுவைக்கண்டு காலவமுனிவர் மிகுந்த பக்தியோடுகூடத் துதிக்கத்தொடங்கினார்: "சங்கு சக்கரதர ராயும், தேவாதிதேவராயும், நித்தியராயும், சுத்தராயும், சச்சிதா நந்த சொரூபியாயுமிருக்கிற உமக்கு நமஸ்காரம். பக்தருடைய துக் கத்தை நீக்குகிறவராயும், ஹவ்ய கவ்ய சொரூபியாயும், சிருஷ் டிஸ்திதி சங்காரமென்கிற முத்தொழிலையுஞ் செய்யும் மும்மூர் த்தி சொரூபராயும், வியாபகராயும், இலட்சுமிபதியாயும், பரபிரம சொரூபியாயும், சூரிய சந்திரர்களைக் கண்களாக வுடையவராயும், பிரம்மாதி தேவர்களால் வணங்கப்படுகிறவராயு மிருக்கிற உம க்கு வந்தனம், வந்தனம். நாமரூபஜாதி குண கர்மரஹிதராயும், ஒரு தோஷமுமில்லாதவராயும், சமஸ்த சம்சாரபாரத்தை நீக்கு கிறவராயும், அசுரசங்காரியாயும், வேதாந்த வேத்தியராயும், வை குண்டவாசியாயும், பிரமனுக்குத் தந்தையாயும், சத்துக்களின் பாபங்களையும், துக்கங்களையும் விலக்குகிறவராயும், அளவிடப்ப டாத பராக்கிரமத்தையுடையவராயும், வசுதேவ புத்திரராயும், சாரங்கமென்னும் தனுசையுடையவராயும், ஆதிசேஷனாகிய சயனத் தில் படுத்துக்கொண்டிருப்பவராயுமிருக்கிற இலட்சுமீபதியான உம

க்கு அடிக்கடி நமஸ்காரஞ் செய்கிறேன்'' என்று காலவர் காதுக்கினி மையாக ஸ்தோத்திரம் பண்ணினதைக்கேட்டு ஸ்ரீமந்நாராயணரானவர் பரமசந்தோஷமடைந்து காலவமுனிவரைத்தமது நாலுகைகளாலும் ஆலிங்கனம் செய்துகொண்டு மஹா சந்தோஷத்தோடு "காலவமுனிவரே, நீர் செய்த தவத்தாலும், ஸ்தோத்திரத்தாலும், நமஸ்காரத்தாலும், நான் திருப்தியடைந்து உமக்கு வரங்கொடுக்க வந்திருக்கிறேன் வேண்டிய வரங்களைக்கேட்டுக் கொள்ளும்." என்று சொல்லக் காலவர் "நாராயணா! ராமநாதா! பீதாம்பரதரா! ஜகன்மயா! ஜனார்த்தனா! ஜகத்வியாபகா! கோவிந்தா! நரகாந்தகா! உம்மைத் தரிசித்தமாத்திரத்திலேயே நான் கிருதார்த்தனாய் எல்லாருக்கு மேலானவனாய்விட்டேன். பாபிகளுக்கெட்டாதவராயும், பிரமன், ருத்திரன், வேதங்களாலறியப்படாதவராயும், யோகிகள், கர்ம்மடாள் முதலானவர்களாற் காணப்படாதவராயும், நினைத்தமாத்திரத்தில் மஹா பாபிகளுக்கு முத்தியையளிக்கிற பரமாத்மாவான உம்மைத் தரிசிப்பதைவிட வேறு வரமெனக்கென்ன வேண்டும்? உமது பாதாரவிந்தத்தில் அசைவற்ற பக்தி ஒன்றே வேண்டும்" என்று பிரார்த்திக்கப், பகவானும "அப்படியே நிராசையான திடபக்தியுண்டாகக்கடவது. மேலும் என்னையே நம்பி, என்னையே தியானம் பண்ணிக்கொண்டு, என் காரியத்தையே செய்துகொண்டு இந்த ஆச்சிரமத்தில் வாசம்பண்ணிக்கொண்டிரும்; இந்தப் பிராரப்த சரீரமுடிவில் என் சாரூபத்தை யடைவீர். இந்தத் தர்ம புஷ்கரணியானது பாபத்தை யொழித்துப் புண்ணியத்தைக் கொடுக்கத்தக்கது. இதன் கரையில்செய்யப்படுகிற தபசு சித்திபெறக்கூடியது.

பூர்வகாலத்தில் தருமதேவதை யிவ்விடத்தில் வந்து மஹாதேவனைக் குறித்துத் தபசு செய்கையில் ஸ்நானம் பண்ணுகிறதற்காக இந்தத் தீர்த்தத்தை யுண்டாக்கிற்று. அதனலிதற்குத் தரும தீர்த்தமென்று பேராயிற்று. கேளுங்காலவரே! நீரெப்படி யென்னைக் குறித்துத் தபசு செய்தீரோ அதுபோலவே தருமதேவதை சூலபாணியாகிய மஹேசுவரனைக் குறித்துத் தபசுபண்ண, அந்தத்தபசினால் திருப்தியடைந்த மஹாதேவன் தமது காந்தியால் பத்துத் திக்குகளையும் விளங்கச் செய்துகொண்டு பிரத்தியட்சமாக வந்தார். கிருபாநிதியான பரமசிவன் பிரத்தியட்சமானதைக்

கண்ட தருமதேவதை அவரை ஸ்தோத்திரம்பண்ண வாரம்பித்தது. 'ஜகந்நாதராயும், ஈசானராயும்,பிரணவசொரூபியாயும், சகலதேவதா சொரூபியாயும், ஆதி யந்த மத்தியம் அற்றவராயும், ஊர்த்துவரேத ஸாயும், விரூபாட்சராயும், விசுவரூபராயும், சமஸ்த ஜகதாதரரா யும், அநந்தராயும், அஜராயும், அவ்யயராயுமிருக்கிற உம்மை நமஸ் கறிக்கிறேன். வாக்குப்புஷ்டி முதலான பத்துவகைப் புஷ்டிக ளைக் கொடுக்கிறவரென்று யோகிகளால் சொல்லப்படுகிற உம்மை நமஸ்கரிக்கிறேன். லோகங்களுக்கெல்லாம் அதிபதியாயும், வஞ் சிக்கிறவராயும், எங்கும் வியாபகராயும், நீலகண்டராயும், பிரமா முதலாக ஸ்தாவரங்களீறுயுள்ள பசுக்களுக்கெல்லாம் பதியாயும், கல்மஷத்தை நாசம் பண்ணுகிறவராயும், மேகரூபமாய்ச் சதா மழை பொழிகிறவராயும், உலக முடிவு காலத்தில் எல்லாரையும் அழச்செய்கிற ருத்திரராயும், துஷ்டநோய்களை நீக்குகிற கத்ருத்தி ரராயும், சிறந்த ஞானசொரூபராயும், பிநாகமென்கிற வில்லையும், சூலத்தையுங் கைக்கொண்டவராயும், சிற்சொரூபராயும், பரி பூரண குணமுடையவர்களுக்கெல்லாம் தலைவராயும், ஐந்து முகங் களுடையவராயும், சரீரங்களுக்கெல்லாம் அதிபதியாயிருந்தாட்டு விக்கிறவராயும் இருக்கிற உமக்கு வந்தனம், வந்தனம்.' என்றிவ்வி தமாகத் தருமதேவதை ஸ்தோத்திரம் பண்ணினதைக்கேட்டு லோகங்களுக்கெல்லாம் சுகத்தைக்கொடுக்கிற சங்கரன் மிக சந்தோஷமடைந்து 'தருமதேவதையே ! நீ செய்த ஸ்துதிக ளால் நான் திருப்தியடைந்துவிட்டேன் ; உனக்கு வேண்டி யதைக்கேள்' என்று சொல்லத் தருமதேவதை 'பார்வதிநாதா! நான் உமக்கு வாகனமாகவேண்டும் ; அதனால் நான் கிருதார்த்த னாய்விடுவேன். இந்த வரந்தான் எனக்குவேண்டும்' என்று கேட் டுக்கொண்டது. ஈசன் 'உலகங்களாலெப்பொழுதும் பூசிக்கப்பட்ட தருமதேவதையே, நீ யெனக்கு வாகனமாகக்கடவாய் ; என்னைச் சுமக்கத் தக்கசக்தியும் உனக்கு உண்டாகட்டும் ; உன்னைச்சேவிக்கிற வர்களுக்கு என்னிடம் எப்பொழுதும் பக்தியுண்டாகும் ; இதில் சந்தேகமேகிடையாது'' என்று சொல்லத் தருமதேவதையும் அது முதலாக ரிஷபரூபமாய்ப் பரமசிவனுக்கு வாகனமாயிற்று. கேளுங் காலவரே ! மஹாதேவன் அந்த ரிஷபவாகனத்தி லேறிக்கொண்டு, அதைப்பார்த்து 'தட்சிண சமுத்திரக்கரையில் நீ உண்டாக்கின

இந்தத்தீர்த்தத்துக்குத தர்மபுஷ்கரணியென்று உலகத்தில் பெயர் வழங்கும். இதன் கரையில் செய்யப்படுகிற ஜப ஹோம தான வேதார்த்தியயனம் முதலியவையெல்லாம் அனந்த பலனைக்கொடுப்பதாகும்; இதில் சந்தேகப்படவேண்டாம்.' என்று வரங்கொடுத்துக் கைலாசம்போய்ச் சேர்ந்தார். ஆகையால் காலவமுனிவரே! இந்தத் தருமதீர்த்தக்கரையில் உமது கர்ம சரீரம் விடுபடுகிறவரைக்கும் தபசு பண்ணிக்கொண்டிரும். உமக்கு ஏதாவது பயமுண்டானால் அப்பொழுது உடனே யென் சக்கிராயுதத்தையனுப்பி பயத்தை நீக்கி யிரட்சிக்கிறேன். தேகாந்தத்தில் என்னை யடைவீர்" என்று சொல்லிப் பகவான் அந்தர்த்தானமாயினர்.

கேளுங்கள் முனிவர்களே! இப்படி மஹாவிஷ்ணுமறைந்த பின் காலவமுனிவர் அந்தத் தீர்த்தக்கரையில் மஹாவிஷ்ணுவைத் தியானஞ் செய்துகொண்டு, திரிகாலங்களிலும் சாளக்கிராமத்தில் விஷ்ணுவை யாராதனைபண்ணி, விரக்தராய், இந்திரிய நிக்கிரகஞ் செய்து தபசு செய்துகொண்டிருந்தார். இப்படியிருக்க ஒரு காலத்தில் மாக மாசம் சுக்கிலபட்ச ஏகாதசியில் உபவாசம்பண்ணி இராத்திரி கண் விழித்துக்கொண்டு விஷ்ணுவாராதனை பண்ணி, விடிந்தவுடனே துவாதசியில் தர்ம புஷ்கரணியில் ஸ்நானஞ்செய்து, சந்தியாவந்தனாதி நித்திய கர்மங்களை முடித்துக்கொண்டு, துளசி முதலான புஷ்பங்களை யெடுத்துக்கொண்டு, விஷ்ணு பூஜை செய்து ஸ்தோத்திரம் பண்ண ஆரம்பித்தார். "ஸஹஸ்ரசீரிஷராயும், மற்சியம், கூர்மம், வராகம், நரசிங்கம், வாமனம், பரசுராமர், தசரதராமர், பலபத்திரராமர், கிருஷ்ணர், கற்கியென்ற தசாவதாரஞ் செய்த உமக்கு நமஸ்காரம். வசுதேவ புத்திரராயும், ஆதாரமற்றவராயிருந்தாலும் சர்வ பூதங்களுக் காதாரமாயும், பக்தர்களுடைய துக்கங்களை நீக்குகிறவராயும், சர்வஜ்ஞராயும், சர்வகர்த்தராயும், சச்சிதாநந்த சொரூபராயும், அறியப்படாதவராயும், இத்தன்மை யுள்ளவரென்று குறிக்கப்படாதவராயும், ஜனார்த்தனராயுமிருக்கிற உமக்கு நமஸ்காரம்." என்று ஸ்தோத்திரம் பண்ணித் தியானம் பண்ணிக் கொண்டிருந்தார். இந்தச்சமயத்திலொரு துஷ்டனான ராட்சதன் பசியால் வருந்தி வேகமாயோடிவந்து காலவரைப்பிடித்துத்தின்ன யத்தனம் செய்தபோது, காலவர் "நாராயணா, சக்கிரபாணீ, கிருபா சமுத்திரமே, சரணமடைந்தவர்களுக்குக் கதியாயிருப்பவரே! என்

னைக்காப்பாற்றும், காப்பாற்றும். பரமேசா, பரமாநந்தனே, சரணாகதபாலகா, கருணைக்கடலே, இராட்சதனிடத்தில் அகப்பட்டுக்கொண்ட என்னைக் காத்தருளும். இலட்சுமிநாயகனே, வைகுண்டா, கருடத்துவஜா, விஷ்ணுவே, ஹரியே! அரக்கனால் பிடிக்கப்பட்ட என்னை முதலைவாயிலகப்பட்ட கஜேந்திரனைக் காப்பாற்றினதுபோலக் காப்பாற்றியருளும். தாமோதரா, ஜகந்நாதா, ஹிரணியாசுரமர்த்தனா! பிரகலாதனைக் காத்ததுபோலவென்னையுங்காத்தருளவேண்டும்" என்று வாய்விட்டலற, விஷ்ணு தன்பக்தராகிய காலவருடைய பயகாரணத்தையறிந்து, அவரை காத்தருளும் நிமித்தம் அநந்த சூரியாக்கினிகளுக்குச் சமானமாய் விளங்கும் மஹாராட்சச வைரியாகிய சக்கிராயுதத்தை யனுப்பினார். அது, நெருப்புஜ்வாலைகளை வீசிக்கொண்டு பேரிரைச்சலிட்டு, அதிக வேகமாய்த் தீர்ம புஷ்கரணியை நோக்கி வருவதைக்கண்டு அரக்கன் ஓட்டம்பிடித்தான். சக்கிராயுதம் அவனைத்துரத்திப் பிடித்து அவன் தலையை யறுத்துவிட்டது. இப்படி அரக்கன் படவே காலவர் சந்தோஷத்தை யடைந்து சுதரிசனாழ்வாரை ஸ்தோத்திரஞ் செய்யத்தொடங்கினார். "ஜகத்தைக்காக்கும் விஷயத்தில் தீக்ஷைகொண்டு, நாராயணனுடைய கரகமலங்களுக்கு அலங்காரமாய் விளங்குகிற சக்கிராயுதமே! உமக்கு நமஸ்காரம். இராட்சதர்களை யுத்தத்தில் வெல்லவல்லவராயும், பேரொளியுடையவராயும், பக்தர்களுடைய துக்கத்தை நீக்கும் சுபாவமுள்ளவராயுமிருக்கிற உமக்கு நமஸ்காரம். பயத்தினால் நடுங்கிக்கொண்டிருக்கிற என்னைச் சகல பாபங்களினின்றும் விடுவித்து, முத்தியைவிரும்புகிறவர்க்குச் சுபத்தை யருளும்பொருட்டு இந்தத் தருமதீர்த்தத்திலெப்பொழுதும் பிரசன்னராயிருந்தருளும்" என்று ஸ்தோத்திரம் பண்ணச், சக்கிராயுதம் காலவரிடத்தில் நேசமுடையதாய் "காலவ முனிவரே! உத்தமமாயும், புண்ணியமாயுமிருக்கிற இந்தத் தருமதீர்த்தத்தில் லோகங்களுக்கு இதஞ்செய்யும்பொருட்டுச் சதாவாசம் பண்ணிக்கொண்டிருக்கிறேன். நீர் விஷ்ணுபக்தராகையால் கொடிய அரக்கனால் நீர் துன்பப்படுவதையறிந்து, மஹாவிஷ்ணுவானவர் என்னையனுப்ப நான் அதிவேகமாய்வந்து அந்த இராட்சதஅதமனைச் சங்கரித்து உம்மை விடுவித்தேன். நீர் கேட்டுக்கொண்டபடி நானிந்தத் தரும தீர்த்தத்தில் வாசம் பண்ணிக்கொண்டு வருகிறேன்; அதனால் உமக்காவது மற்றவர்களுக்காவது இராட்

சிதரால் துன்பம் வாராது. சமஸ்த பாபங்களையு நிர்மூலஞ்செய்கிற இந்தத் தருமதீர்த்தத்தை முன் காலத்தில் தருமதேவதையுண்டாக்கிற்று. இது தேவீ பட்டணம் வரையில் பரவியிருக்கிறது. இந்தத் தருமதீர்த்தம் முழுவதிலும் நான் வாசம் பண்ணப்போகிற படியால் இதற்குச் சக்கிரதீர்த்தமென்கிற பேர்வரும். இந்தச் சக்கிர தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணுகிறவன் தன்னுடைய புத்திர பௌத்திரர்களோடும் மற்றுமுள்ள வம்சஸ்தர்களோடும் பாபங்களையெல்லாமுந் தறிவிட்டு அந்தத்தில் பரமமான விஷ்ணுபதத்தை யடைவான். கேளும் காலவரே! பிதுர்க்களை யுத்தேசித்து இந்தத் தீர்த்தக் கரையில் பிண்டமிடுகிறவன் சொர்க்கம்போவான்; அவனுடைய பிதுர்க்களும் திருப்தியடைவார்கள்" என்று சொல்லிவிட்டுக் காலவரும் மற்றவர்களும் பார்த்துக் கொண்டிருக்கும்போதே தரும தீர்த்தத்தில் புகுந்து மறைந்துபோயிற்று.

கேளுங்கள் முனிவர்களே! அதுமுதலாகத் தருமதீர்த்தத்துக்குச் சக்கரதீர்த்தமென்று பேர். இந்தத்தீர்த்தத்துக்கு சமானமான தீர்த்தம் இருந்ததுமில்லை; இருக்கப்போகிறதுமில்லை. இதில் ஸ்நானம் பண்ணுகிறவர்கள் மோட்சம் அடைவார்களென்பதி லாக்ஷேபணை கிடையாது. இந்த அத்தியாயத்தைப் பக்தியோடு படிப்போருக்கும் கேட்போருக்கும் சக்கிரதீர்த்த ஸ்நானபலனுண்டாய் இக லோக பரலோக சுகங்களும்உண்டாம். தரும தீர்த்தத்தையும், உக்கிரமான தபசு பண்ணின காலவரையும், இராட்சத சங்காரஞ் செய்த சக்கிராயுதத்தையும், ஒருதரமாவது தியானிக்கிறவன் பாபங்களை அடையவேமாட்டான்.

மூன்றுவது

அத்தியாயம்

முற்றுப் பெற்றது.



## நாலாவது.

# காலவ சத்துருவான ராக்ஷதனுடைய வரலாறு கூறிய அத்தியாயம்.

ஐயா! சூதமுனிவரே! தாங்கள் புராணஞ்சொல்லத் தெரிந்தவருள் சிறந்தவரன்றோ? ஆகையால் விஷ்ணுபக்தியில் சிறந்த மஹாத்மாவான காலவ் மஹாரிஷியைத் துன்பப்படுத்தின இராட்சதன் வரலாற்றை யெங்களுக்கு விவரமாய்ச் சொல்லவேண்டுமென்று கேட்கச் சூதர் சொல்கிறார்.

வாசீர் பிராமணர்களே! அந்த அரக்கன் முனீசுவரர்கள் சாபத்தினாலே இராட்சதனான சரித்திரத்தைச் சொல்லுகிறேன். ஆதரவுடனே கேளுங்கள். பூர்வகாலத்தில் கைலாசகிரிக்கு ஒப்பானதும் பரமேசுவரனுக்குப் பிரியமுள்ளதுமான ஆலாசியமென்கிற மதுரையில் வசிஷ்டர் முதலாக இருபத்திநாலாயிரம் முனிவர்களிருந்தார்கள். அவர்களெல்லாரும் சர்வாங்கமும் விபூதியை உத்தூளனஞ் செய்துகொண்டு, நெற்றியில் திரிபுண்டரமாக வணிந்து, ருத்திராட்சமாலை பூண்டு, பஞ்சாட்சரஜபம் பண்ணிப், பிரமவிசாரஞ் செய்துகொண்டு, ஆலாசியத்தில் விளங்குகிற சந்திரனையணிந்த உமாபதியான சுந்தரேசுவரரை முக்திபெறும் பொருட்டுப் பக்தியுடனே யாராதித்து வந்தார்கள். சிவபக்தர்களான புகழிற்சிறந்த இவர்கள் அங்கே பக்திசெய்து வருங்காலத்தில், ஒருநாள் சிற்றின்பத்தில் மூழ்கிக்கிடந்த விசுவாவசு வென்ற கந்தர்வன் புத்திரனாகிய துர்த்தமன் என்கிற ஒரு பலமுடைய கந்தர்வன் ஒருவன் நிர்வாணமாயிருந்த அநேகமான கந்தர்வ கன்னிகைகளோடு தானும் நிர்வாணியாயிருந்து, சுந்தரேசுவரர் சந்நிதியிலிருக்கிற புஷ்கரணியில் ஜலக்கிரீடை செய்து கொண்டிருந்தான். அந்தருணத்தில், வசிஷ்டர்முதலான ரிஷிகள் மாத்தியாநிகம் முடிக்கக்கருதிக், கோவிலிலிருந்து புஷ்கரணிக்கு வந்தார்கள். அந்த ரிஷிகளைக்கண்டு நிர்வாணிகளான கந்தர்வ கன்னிக்கைகள், திடுக்கிட்டு வெட்கி வஸ்திரங்களால் தங்கள் மானத்தை மூடிக்கொள்ள, நெஞ்சுத்துணிவுள்ள துர்த்தமன் மாத்திரம் வஸ்திர

யில்லாமலே நின்றான். அதுகண்ட வசிஷ்டர் மிகக் கோபங்கொண்டு, நாணமற்ற கந்தர்வனைப்பார்த்து, "அடா துர்த்தமா! நீ யெங்களைக் கண்டபின்பாவது வெட்கமடைந்து வஸ்திரத்தால் மானத்தை மறைத்துக்கொள்ளா திருந்தபடியால் இராட்சதனாக ஜனிக்கக்கடவாய்" என்று சபித்து, அவன் பத்தினிகளைப்பார்த்து "பெண்களே! நீங்கள் எங்களைச் கண்டவுடனே நாணி வஸ்திரமுடுத்துக் கொண்டமையால் உங்களைச் சபிக்காமல்விட்டேன். நீங்கள் சொர்க்கலோகம்போய்ச் சேரலாம்" என்று செலவுகொடுக்க, அப்பொழுது அந்தப்பெண்கள் முனிவர்களாற் சூழப்பட்ட வசிஷ்டரைப் பக்தியுடன் வணங்கி "சுவாமீ பிரமகுமாரா! மஹாநுபாவா! சகல தர்மங்களையுமுணர்ந்த கருணைக் கடலாகிய தாங்கள் எங்கள்பேரில் கோபங்கொள்ளலாகாது: கணவன் தானே பெண்களுக்குச் சிறந்த ஆபரணம்; கணவனில்லாத பெண்டிர்களுக்கு நாலு புத்திரர்களிருந்தாலும் விதவையென்கிற பெயர் வந்துவிடுகிறதே; அது மரணத்துக்குச் சமானந்தானே; ஆகையால் எங்கள் கணவன்பேரில் கருணைகூர்ந்து தமது சீடனை துர்த்தமனை மன்னிக்கவேண்டும்" என்று வேண்டிக்கொண்டார்கள். வசிஷ்டர் கோபந்தணிந்து, பிரசன்னராகி, "அழகிய புருவங்களையுடைய பெண்களே! நான் சொன்னவார்த்தை பொய்போகாது. ஆனால் உங்களுக்கொரு உபாயஞ் சொல்கிறேன்: இவன் பதினறு வருஷம் இராட்சதனாகவிருந்து சாபத்தை அநுபவித்தே தீரவேண்டும். பதினாறும் ஆண்டின்முடிவில் உங்கள் பதியான துர்த்தமன் இராட்சதரூபத்தோடு எதிர்ச்சையாய்ச் சக்கிரதீர்த்தம் போய்ச்சேர்ந்து, அதன் கரையிலிருக்கும் காலவரிஷி என்னுமொரு விஷ்ணுபக்தனை பட்சிக்க விரும்பித்துரத்துவான். அப்பொழுது, மஹாயோகியான காலவரைக்காக்கும் பொருட்டு நாராயணர் தமது சக்கிரத்தையனுப்புவார். அந்தச்சக்கிரமிவன் சிரசை அறுத்துத்தள்ளப்போகிறது. உடனே துர்த்தமன் இராட்சத சொரூபம் நீங்கித் தன் சுயரூபமடைந்து, திவ்யசரீரத்தோடு சொர்க்கம்வந்து உங்களுக்கு மறுபடியும் கணவனாகி, ஆனந்தமளித்து வாழ்ந்திருப்பான்" என்று அவர்களுக்குத் தேறுதல் சொல்லிவிட்டுத் தம்தாசிரமம்போய்ச் சேர்ந்தார். அப்பொழுது பெண்களெல்லோரும் தங்கள் கணவனைக் கட்டியணைத்துக்கொண்டு, துக்கசாகரத்தில் மூழ்கினவர்க

ளாய் வாய்விட்டுக் கதறியழுதார்கள். அப்படி யழுதுக்கொண்டி ருக்கும்பொழுதே துர்த்தமனுக்குத் தெற்றுப்பல்லும், செம்பட்ட மயிரும், பிரமாண்டசரீரமும், செவந்த விசையும் உள்ள இராட் சத சொரூபம் வரக்கண்டு, அப்பெண்கள் பயந்து நடுநடுங்கித் தங் களிருப்பிடமான சொர்க்கம்போய்ச் சேர்ந்தார்கள். இராட்சத ஞன துர்த்தமனும், பார்த்தவர்கள் நடுங்கும்படியான பெரிய சரீ ரமுடையவனும்க் கையிலகப்பட்ட பிராணிகளை யடித்துத் தின்று கொண்டு, நாடுதேசங்களையும், வனங்களையுங் காற்றுப்போலச் சுற்றித் திரிந்துகொண்டிருந்தான். இப்படிச் சஞ்சரிக்கையில் பதினறு வருஷங்களுமுடிய, அவ்வருஷக்கடைசியில் எதிர்ச்சை யாகச் சக்கிரதீர்த்தம் வந்து, அத்தீர்த்தக்கரையில் வசித்துக்கொ ண்டிருந்த காலவமுனிவரைத்தின்ன எண்ணங்கொண்டு, வாயு வேக மனோவேகமாக நடந்து துரத்தினன். அப்பொழுது கால வர் ஸ்ரீமந் நாராயணரைத்துதிக்க, நாராயணமூர்த்தி அரக்கனல் பீடிக்கப்பட்ட முனிவரைக் காக்கும் பொருட்டுத் தமது சக்கர த்தை அனுப்பினர். அது வந்து இராட்சதன் தலையை அறுத்துத் தள்ளிற்று. உடனே கோரரூபம்போய்த் திவ்யசரீரம் பெற்றுப் புஷ்பமாரி பொழிய விமானத்தின்மேலேறி, அஞ்சலிகூப்பிச் சக்கி ரத்தை வணங்கி இன்பமான சிறந்தவசனங்களாலே, "திருமால் கரத்துக் காபரணமாயும், இராட்சதர்களைச் சங்கரிப்பவரும், ஆயி ரம் சூரியனுக்கொப்பாகப் பிரகாசிக்கின்றவருமான உமக்கு நமஸ் காரம். திருமாலுக்குப் பிரியமான சக்கிராழ்வாரே! உமது கருணைத் துளியால் நான் இராட்சத சொரூபம் நீங்கிச் சுயமான திவ்ய ரூபம் அடைந்தேன். என் பெண்டிர்களெல்லாரும் என்னைப் பிரிந் திருப்பதினல் மனம் மெலிந்து வருந்திக்கொண்டிருப்பார்கள். ஆகையால் சொர்க்கத்துக்குப் போகும்படி விடை தந்தருளவேண் டும்; நான் சாகுமட்டும் உம்மை மறவாமல் தியானித்துக்கொண்டி ருப்பேன்; என்மேற் கிருபைகூர்ந்தருளும்" என்று பக்தியுடன் துதி த்தான். சக்கிராழ்வாரும் அவனைப்பார்த்து "ஐயா! நல்லது; அப் படியேயாகட்டும், போய்வாரும்" என்று செலவு கொடுத்தனுப்பிய பின், துர்த்தமன் காலவரிஷியை வணங்கி அவரிடம் விடைபெற்றுக் கொண்டு சொர்க்கலோகம்பொய்ச் சேர்ந்தான். காலவமுனி "விஷ் ணுவினுடைய உத்தம ஆயுதமாகிய சக்கிராழ்வாரே! பெரிய அரக்

களைச் சங்கரித்த உமக்கு நமஸ்காரம் பண்ணுகிறேன். தேவீபட்டணம் வரையில் விசாலித்தகன்றிருக்கிற சகல பாபநாசனமான உத்தம தர்மதீர்த்தத்தில் நீரெப்பொழுதும் வாசம் பண்ணிக்கொண்டு, இதில் ஸ்நானம் பண்ணுகிறவர்களுடைய பாபங்களை நீக்கி அவர்கள் சாசுவிதமான முத்தியை அடையும்படி செய்யத் திருவுளம் பற்றியருளவேண்டும். அன்றியும் இந்தத் தீர்த்தத்துக்குச் சக்கிரதீர்த்தமென்று பெயர் வழங்கச்செய்து, இங்குள்ளமுனிவர்களுக்குப் பூதபிரேதபிசாசங்களாலுண்டாகும் அச்சத்தைப் போக்கியருளவேண்டும்'' என்று வணங்கச், சக்கிராயுதம் அவைகளெல்லாம் அப்படியே நடக்கக்கடவதென்று வரமளித்து, அந்தத் தீர்த்தத்துக்குள் மறைந்தது.

கேளுங்கள் பிராமணோத்தமர்களே! நீங்கள் கேட்டுக்கொண்டபடி, இராட்சதனுற்பத்தியையும், கேட்டவர்களுடைய பாபங்களை நிவர்த்தி செய்கின்ற சக்கிரதீர்த்தமகிமையு முங்களுக்குச் சொன்னேன் என்று சூதர்சொல்ல, ரிஷீசுவரர்கள், மஹா பிராஞ்ஞரும், பௌராணிகோத்தமரும், வியாசர் சிஷருமான சூதமுனிவரே! தர்ப்பசயனம்முதல் தேவீபட்டணம் வரையில் பரவி விசாலித்திருந்த சக்கிர தீர்த்தமானது இப்பொழுது மத்தியில் அறியப்படாமலிருப்பதற்குக் காரணமென்ன? இந்தப்பெரிய சந்தேகத்தைத் தீர்த்தருளவேண்டுமென்று கேட்கச் சூதர் சொல்லுகிறார்.

பூர்வகாலத்தில் மலைகளுக்கெல்லாஞ் சிறகு முளைத்திருந்தபடியினால், அவைகள் தங்களடிவாரத்திலிருந்த குன்றுகளோடும், ஆகாயத்தில் அதிக வேகமாய்ப் பறந்து தங்களுக்கு இஷ்டமான நாடுநகரங்கள், கிராமங்கள், வனங்கள், இவைகளின்பேரி லுட்காருவதினால், அவ்வவ்விடங்களிலுள்ள ஜீவஜந்துக்களும், மரம், செடி, கொடிமுதலானவைகளும், பிராமணர் முதலான ஜாதியார்களும், பாரம் பொறுக்கமாட்டாமல் மண்ணோடு மண்ணாய்மடிய, யாகமுதலான வைதிககர்மங்களெல்லாம் நசிக்கத், தேவர்கள் அன்னாகாரமில்லாமல் தவிக்க, இந்திரன் மிகச்சினந்து வச்சிராயுதத்தைக் கையிலெடுத்துக்கொண்டு, அதிக வேகமாய்ப் புறப்பட்டுப்போய்ப் பருவதங்களைத் துரத்தி யவைகளின் சிறகுகளைத் துணித்துச் சின்னபின்னப்படுத்தினபோது, மலைகளெல்லாம் நிர்க்கதியாய்ப் பயமடைந்து சமுத்திரத்தில் விழுந்து மறைந்துகொண்டன.

அப்பொழுது சிலமலைகளிந்தச் சக்கிரதீர்த்தத்தையும் சமுத்திர மென்று நினைத்து அதில் வந்துவிழுந்தன. ஆகையால் சக்கிர தீர்த்தம் மத்தியில் மறைபட்டுக் காணப்படுகிறது. யார்செய்த புண் ணியத்தினாலோ சக்கிரதீர்த்தத்தி னிருபுறத்திலும் பெரிய மலை கள் விழவில்லை. அதனாலேதான் தர்ப்பசயனத்திலும், தேவீபட்ட ணத்திலும் அத்தீர்த்தம் இரண்டுபட்டதுபோலக் காணப்படுகிறது. இந்தக்காரணத்தினாலே தான் சக்கிரதீர்த்தத்தின் மத்தியபாகம் கண் ணுக்குத் தோன்றாமலிருக்கிறது. கேட்டீர்களோ முனிவர்களே, உங்கள் சந்தேகத்துக்குச் சமாதானஞ் சொல்லிவிட்டேன். இந்த அத்தியாயத்தைப் படிப்போரும், கேட்போரும் புத்திர பௌத் திர களத்திராதிகளுடன் சகலபோகங்களையும் அனுபவித்து அந் தத்தில் முத்தியை அடைவார்களென்பதிற் சந்தேகமேயில்லை.

நாலாவது

அத்தியாயம் முற்றிற்று



ஐந்தாவது

## சக்கிரதீர்த்தத்தில் அலம்புசை விதூமன் இவர்கள் சாப விமோசனம் அடைந்தது கூறிய

அத்தியாயம்.

முனீசுவரர்களே, கேளுங்கள். பாவநிவர்த்தகமாயும் புண்ணி யப்பிரதமாயு மிருக்கிற சக்கிரதீர்த்தமகிமையை உங்களுக்குச் சொன்னேன். இன்னமும் அத்தீர்த்தத்தின் அற்புதமான ஒரு விசேஷஞ்சொல்லுகிறேன். பூர்வகாலத்தில் விதூமன் என்கிற ஒரு வசுவும், அலம்புசை என்கிற ஒரு அப்ஸரஸ்திரீயும், பிரமதே வனுடைய கொடியசாபத்தினாலே மானிட ஜன்மமெடுத்துப், புண் ணியமான இந்தச் சக்கிரதீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணி அந்தச் சாபத்தினின்றும் விடுபட்டார்கள் என்று சூதர்சொல்ல, நைமிசா ரணியவாசிகள், ஐயா! நிகரில்லாத பௌராணிகரான சூதமுனி வரே! நீர் பிராஞ்ஞராயும், வியாசசிஷ்யராயுமிருப்பதால் உமக்குத் தெரியாதது ஒன்றுமிராது. ஆகையால் பிரமதேவன் விதூமனை

யும், அலம்புஷையையும், எந்த அபராதத்துக்காகச் சபித்தார்? அவர்கள் யாரிடத்தில் பிறந்தார்கள்? அவர்களுக்கெப்படிச் சாப விமோசனமாயிற்று? இவைகளைக்கேட்க ஆவலாயிருக்கிற எங்களுக்குச் சவிஸ்தாரமாய்ச் சொல்லவேண்டுமென்று கேட்கச், சூதர் சொல்லுகிறார்.

ஒரு காலத்தில் பெருமைதங்கினவராயும், சுயம்புவாயுமிருக்கிற பிரமதேவர் சத்தியலோகத்தில் தேவதாசிகளின் நாட்டியத்தைப் பார்த்து ஆனந்திக்க விரும்பிக் கானஸமாஜ மொன்று ஏற்படுத்திச் சரஸ்வதி, சாவித்திரி யென்கிற இரண்டு தேவிமார்களிரு புறத்திலும் விளங்கச், சிரஞ்சீவியான ஸனகர், மெய்ஞ்ஞானியான சனற்குமாரர், மஹாத்மாவான நாரதர், இன்னமற்றுமுள்ள ரிஷீசுவரர்களெதிரில் வீற்றிருக்க, அநேகபாயிரம் தேவர்களோடும், ஆதித்தியஞதி நவக்கிரகங்களோடு மிந்திரன் துதிக்கச், சித்த சாத்திய கின்னர கிம்புருஷருப், அஷ்டவசுக்களும் சூழ்ந்திருக்க, அந்தச்சபையி லெழுந்தருளியிருந்தார். மேககர்ஜனைபோல் கம்பீரமாயும், கேட்டவர்கள் மனதுக்கானந்தமாயும் வீணை, புல்லாங்குழல், மிருதங்கம் முதலான வாத்தியங்களொலிக்க, ஆகாய கங்கையின் அலைகளிலெழுந்த துளிகளோடுகூடின மந்தமாருதம் மெத்தென்று வீச, ஊர்வசிமுதலான தேவதாசிகள் முறைப்படி ஆடின சிரமத்தினால் சோர்ந்திருந்தார்கள். அப்பொழுது அழகும் யௌவனமுமுடைய அலம்புஷை யென்னும் தேவதாசியானவள் பார்ப்பவர் மனது மயங்கும்படி சபைநடுவில் நர்த்தனஞ் செய்கையில், அவள் கட்டியிருந்த உள்ளாடை காற்றினால் விலகினபடியால், அவளுடைய தொடைமூலம் யாவருங் காணும்படியிருந்தது. அப்பொழுது பிரமதேவன் முதலான தேவர்கள் வெட்கத்தினால் தங்கள் கண்களை மூடிக்கொண்டார்கள். விதூமன் என்கிற வசுமாத்திரம் காமமீறிச், சரீரத்தில் மயிர்க்குச்செறிய, ஆனந்தத்தினால் கண்கள் மலர, அலம்புஷையின் அவயவங்களை நாணமில்லாமல் பார்த்துக்கொண்டிருந்தான். இவ்விதம் அலம்புஷையினிடத்தில் மோகங்கொண்டதைக் கண்ட பிரமதேவன் விதூமனைப்பார்த்து, "அடா துஷ்டா! இப்படிப்பட்ட துர்ச்செய்கையைச்செய்த நீ பூலோகத்தில் மனிதனாகப் பிறக்கக்கடவாய், இந்தத் தேவதாசியும் உனக்குப் பாரியையாக்கக்கடவள்" என்று சபிக்க, அது கேட்ட

விதூமன் மனதில் துயரமடைந்து, பிரமனை வணங்கிச் "சுவாமீ, பக்தவச்சலா! இந்தக்கடும் சாபத்தை நான் சுமக்கமாட்டேன்! கருணைக்கடலே! என்னைக் காத்தருளவேண்டும்'' என்று கெஞ்சிக் கேட்கச், சரஸ்வதி நாதரான பிரமதேவரும் மனமிரங்கி, "அப்பா விதூமா! நான் கொடுத்த சாபம் வியர்த்தமாகாது, அது நிவர்த்தியாகும் காலம் எல்லை சொல்லுகிறேன். நீயும் அலம்புசையும் பூலோகத்தில் மனிதராகப்பிறந்து சக்கிரவர்த்தியாகி, நெடுங்காலம் இராஜ்ஜியபரிபாலனம் பண்ணி, உன் பத்தினியாகிய அலம்புசையினிடத்தி லுற்பத்தியாகிற நிகரில்லாத புத்திரனுக்குத் தகுந்த வயதில் பட்டங்கட்டியபின் தட்சிணசமுத்திரக்கரையில் புல்லகிறமத்துக் கருகாமையிலிருக்கிற சக்கிரதீர்த்தத்தில் உன் பத்தினியோடுகூட ஸ்நானஞ் செய்கிறபொழுது பாம்புசட்டையுரிப்பதுபோல மானிட சரீரத்தைவிட்டு நீங்களிருவரும் சொர்க்கலோகம வந்து சேர்வீர்கள். சக்கிரதீர்த்தம் தவிர வேறெந்த தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணினாலும் தீராது. சொன்னேன், சொன்னேன்.'' என்று சாபவிமோசன வழி கூறினபின், விதூமன் சந்தோஷமடைந்து பிரமாவிடஞ் செலவுபெற்றுத் தன்னிருபிடத்துக்குப்போய் ஆலோசிக்கலானான். "இப்பொழுது நான் மனிதஜென்மமெடுத்துத் தீரவேண்டும், பூமியில் எந்தத்தாய் தகப்பன் வயிற்றில் பிறப்பேன்'' என்று பலவாறு யோசித்துக், கடைசியில், "கௌசாம்பி நாட்டில் அதிக சூரனும் பாக்கியவானாகவுமிருக்கிற சுதாநீக னென்கிற அரசன், விஷ்ணுவுக்குப் பிரியமான இலட்சிமியைப்போலப் தன்னிடத்தில் நேசமாயிருக்கிற விஷ்ணுமதீ யென்னும் பதிவிரதாசிரோமணியான மனைவியோடு வாழ்ந்து கொண்டிருக்கிறான். நான் என் வினைப்பயனால் அவர்களுக்குப் புத்திரனாகப் பிறப்பேன்'' என்று நிச்சயித்துக்கொண்டு, மாலியவான், புஷ்பதந்தன், பலோற்கடன் என்னும் வேலைக்காரர்களை யழைத்து தனக்கு நேர்ந்த சாபத்தினாலே பூலோகத்தில் சுதாநீகன், விஷ்ணுமதீ யென்கிற தம்பதிகளிருவருக்கும் தான் புத்திரனாயுற்பவிக்க நிச்சயித்திருப்பதையும் சொன்னான். அது கேட்ட விதூமனுடைய வெளிப்பிராணனொத்த வேலைக்காரர்கள் தாரை தாரையாகக் கண்களில் நீர் பெருகத், தங்கள் தலைவனைப்பார்த்து, "ஐயா, உம்மைவிட்டு நாங்கள் மூவரும் பிரிந்திருக்கமாட்டோ மாகையால்,

சதாநீகனுடைய மந்திரியாகிய யுகந்தரன், ரணகளத்தில் முந்திச்செல்கிற விப்பிரதீகனென்கிற சேனுபதி, வல்லபனென்கிற விளையாட்டுத் தோழனை பிராமணன் இம்மூவருக்கும் நாங்கள் புதல்வராய்ப் பிறந்து உமக்கு ஊழியஞ்செய்து வருவோம்" என்று சொன்னார்கள். அது கேட்ட விதூமன், "நீங்களென்னிடத்தில் மிகுதியான நட்புக் கொண்டிருக்கிறீர்களென்பதை நான் நன்றாயறிவேனாயினும் நானுங்களுக்குச் சொல்லப்போகிற இதமான வசனத்தைச் செவிகொடுத்துக் கேளுங்கள். நான்தான் தீவினையால் இழிவான மானிடகுலத்திற் பிறக்கும்படி பிரமசாபம் நேரிட்டிருக்கிறது. நீங்களுமிச் சாபத்துக்குள்ளாகவேண்டிய காரணமென்ன? ஆகையால் ஈனமானிடப் பிறப்பில் ஆசை வையாமல் நான் சாபவிமோசனமாய் வரும் வரையில் என்னைப் பிரிந்திருக்குந்துக்கத்தைச் சகித்துக்கொண்டிருங்கள்" என்று சொல்ல, அம்மூவரும் "ஐயா! இதுவரைக்குமெங்களைப் பாதுகாத்துவந்த தாங்கள் குற்றமற்றவர்களாயும் பக்தி வந்தராயுமிருக்கிற எங்களைக் கைவிடத்துணிந்தீர்கள். தங்களை விட்டுப் பிரிந்திருப்பதைவிட இழிவான மனிதஜன்ம மெடுப்பது நலமாகுமென்று எங்களுக்குத் தோன்றுகிறது. ஆகையாலிப்பொழுது எங்களுக்கு உத்தரவுகொடுத்துக் காக்கவேண்டியதுமது கடமை" என்று அடிக்கடி காலில் விழுந்து பிரார்த்தித்துத் துதிக்க, விதூமனும் அநுமதிகொடுத்து அம்மூவரோடுங்கூடக் கௌசாம்பி நாட்டுக்குப்போக இச்சைகொண்டான். இது இப்படியிருக்கப் பூலோகத்தில் சோமவம்சசிரோமணியாயும், அர்ச்சுனன் போலக் கீர்த்திபெற்றவனுயும், ஜனமேஜயன் புத்திரனுயும், புத்திசாலியாயும், நீதிமானுயும், வாக்குச்சாதுரியமுடையவனுயும், தன்னுயிர் போல மன்னுயிரைப் பாதுகாக்குந் தன்மையுடையவனுயும், இரத கஜதுரகபதாதிகளாகிய நால்வகைச்சேனைகள் நிறைந்தவனுயும், புஜவலியுடையவனுயும், யௌவனமுடையவனுயுமிருக்கிற சதாநீக ராஜன், யுகந்தரனென்கிற மந்திரி, விப்பிரதீகனென்கிற சேனுபதி, வல்லபனென்கிற விளையாட்டுத்தோழனை பிராமணன் இவர்களோடுகூடக் கௌசாம்பி நாட்டில் அரசுபுரிந்து வருகையில், தனக்குப் புத்திரனில்லாதிருப்பதைக் கண்டு பரிதபித்து, யோசனையிற் சிறந்த மந்திரியாகிய யுகந்தரனையழைப்பித்து, எந்த உபாயத்தால் தனக்குப்புத்திரோற்பத்தியாகுமென்று கேட்க, மந்திரியானவன் அர

சனைப்பார்த்து, "ஐயா! சாண்டில்யர் என்கிற ஒரு ரிஷியிருக்கிறார். அவர் மஹா சுத்தர்; அவர் சொன்னவாக்குத் தவறுகிறதில்லை; சத்துருவும் மித்துருவும் அவருக்குச்சமம்; அவர் இந்திரிய நிக்கிர கம் பண்ணி மனதை யடக்கினவர்; எப்பொழுதும் வேத மோதிக் கொண்டிருப்பவர்; பிரமதேஜஸால் அக்கினிபோல ஜொலிப்பவர். அந்த மஹானுபவரிடத்தில் சென்று, அவரை வணங்கி, உமக்குச் சமானமான புத்திரன் தந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்துக் கொள்ளும். அந்த மஹாரிஷி கருணைக்கடலாகையால் உமது மனோ ரதத்தைப் பூர்த்திசெய்வார்; சந்தேகமேயில்லை." என்று ஆலோசனை சொன்னான். அப்பொழுது சதாநீகனுடைய இருகண்களும் சந்தோ ஷத்தால் மலர்ந்தன. அரசன் யுகந்தரனோடு அம்முனிவராச்சிரமத் துக்குச் சென்று அவரைக்கண்டு ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்தான். சாண்டில்யமுனிவர் தம்மை வணங்கின அரசனைப்பாத்தியாதிகளா லு பசரித்து, வாருமையாவென்று அழைத்து, "ஐயா சதாநீகரே! நீர் என்னுச்சிரமத்துக்கு வந்தகாரணமென்ன? உமக்குத் தேவையான தை நான் செய்து கொடுக்கிறேன்" என்று பிரியமாய்ப்பேசினதை மந் திரிகேட்டு "ஐயா மஹாநுபாவா! இவ்வரசன் புத்திரனில்லாமையால் மிக வருத்தப்படுகிறார். பிள்ளையைப் பற்றித்தா னிப்பொழுது சரண மடைந்திருக்கிறார் ஆகையால் சுவாமி, அரசன் மனத்துயரை நீக்கிக் காக்கவேண்டும்" என்று வேண்டிக்கொள்ள, முனிசிரேஷ்டரானவர் அரசனைப்பார்த்து "ஐயா! உமக்குப் புத்திரனுண்டாவான்" என்றாசீர் வதித்து, அவ்வரசனோடும் மந்திரியோடும் கௌசாம்பி நகரத்துக்கு வந்து, அவ்விடம் அரசன் செய்த புத்திரகாமேஷ்டி யாகத்துக்கு ஆசாரியராயிருந்து, அதை முடித்துத் தமதாச்சிரமம் போய்ச்சேர்ந் தார். பிறகு அம்முனிவர் அநுக்கிரகத்தால் அரசனுக்குச் சஹஸ்ரானீக னென்றொருபுத்திரன் ஸ்ரீராமரைப்போல உற்பத்தியானான். கேளுங் கள் முனிவர்களே, விதாமன் சதாநீகன் வயிற்றில் சஹஸ்ரா நீகனு கப்பிறந்தான். அக்காலத்தில் சதாநீகனுடைய மந்திரி, சேனாபதி, விளையாட்டு தோழர்களுக்கும் அவரவர் குலத்துக்குரிய புத்திரர்கள் பிறந்தார்கள். மாலியவான் என்பவன் மந்திரி யுகந்தரனுக்குப் புத்திரனாகப்பிறந்து, யௌகந்தராயணன் என்ற பெயர் வகித்து வள ர்ந்து வந்தான். புஷ்பதந்தன் விப்பிராதீக னென்கிற சேனாபதிக்கு ருமண்வான் என்று பெயர்கொண்ட புத்திரனாகப்பிறந்தான். பலோ

த்கட்ன் வல்லபனென்கிற பரிகாசத்தோழனுக்கு வசந்தன் என்கிற புத்திரனாகப்பிறந்தான். இப்படிப்பிறந்து வளர்ந்துவரும் நாலு புத்திரர்களுக்கும், ஐந்துவயதானபின், அலம்புஷை யானவள் அயோத்திராஜனான கிருதவர்மனுக்கு மிருகாவதி யென்கிற பெண்ணாய்ப்பிறந்தாள். இப்படி ஐந்துபேரும் பூமண்டலத்தில் உதித்து வளர்ந்து வரும்நாளையில், அஹிதம்ஷ்டிரன் என்கிற மஹாபலசாலியான ஒரு கொடிய அசுரன் மிகுந்தமதங்கொண்டு, தன்சேனைகளையும் ஸதாலாசிரசு என்கிற தம்பனையும் அழைத்துக்கொண்டுபோய்த் தேவநகரியான அமராவதியைப் முற்றுகைபோட்டு அதிலுள்ள தேவர்களையெல்லாம் துன்பப்படுத்தினதினால் தேவாசுரர்களுக்கு யுத்தம் நேரிட்டது. அப்பொழுது தேவேந்திரன் சதாநீகனைத் தனக்குதவிவரும்படி கேட்கச், சதாநீகன், தன்புத்திரனுக்கு இளவரசுபட்டம் கட்டிவைத்துவிட்டு, மாதலி கொண்டுவந்த தேரின்மேலேறித் தேவலோகம்போய்க், கையில் வில்லையெடுத்துத் தேவர்கள் பார்த்திருக்கும்படி அசுரர்களைச் சங்கரித்துக், தானும் அந்த இரணகளத்தில் சத்துருக்களாலடிபட்டு மடிந்தான். பிறகு தேவேந்திரன் உத்திரவின்படி மாதலி சதானீகன் சரீரத்தைத் தேரின்மேலேற்றிக்கொண்டு கௌசாம்பி நாட்டுக்குப்போய்ச் சஹஸ்ரானீகனுக்கு நடந்த சமாசாரத்தைத் தெரிவிக்கச், சஹஸ்ரானீகன் மிகத்துயரம்கொண்டு அவர்களோடுகூடத் தன் பிதாவுக்குச்செய்ய வேண்டிய கிரியைகளைச் செய்துமுடித்தான். சதாநீகன் பத்நினியான விஷ்ணுமதி யென்பவள் தன் நாயகனிறந்தவுடனே அநுமரணஞ் செய்தாள். இவ்விதம் சதாநீகனும் அவன் மனைவி விஷ்ணுமதியுமிறந்துபோனபின், சகஸ்ரானீகன் மந்திரிகளின் வேண்டுகோளின்படிச் சிங்காசனமேறிச் செங்கோல் செலுத்தினான். மந்திரி, சேனாபதி விளையாட்டுத் தோழனிவர்களிறந்தபிறகு அவர்களுடைய புத்திரர்களும் தத்தம்பிதாக்களின் உத்தியோகத்தைவகித்துச் சகஸ்ரானீகனுக்குத் தாங்கள் செய்யவேண்டிய ஊழியத்தைச் செய்துவந்தார்கள். இப்படிச் சகஸ்ரானீகன் அரசுசெலுத்தி வருநாளிலொருநாள் தேவேந்திரன் தன்னுடைய நந்தனமென்கிற சிங்காரத்தோட்டத்தில் தான் செய்த ஓர் மஹோற்சவத்துக்குச் சகஸ்ரானீகனை வரவழைத்து உற்சவமுடிந்தவுடன் அந்த ராஜனைப்பார்த்து "ஐயா, அலம்புஷை யென்கிற தேவதாசி பிரமதேவன் சாபத்தால் அயோத்திபரச

னுக்கு மிருகாவதி யென்னும் பெண்ணாய்ப் பிறந்திருக்கிறாள். நீர் பூர்வம் விதூம னென்னும் வசுவாயிருக்கையில், பிரமன்சபையில் நடித்துக்கொண்டிருந்த அலம்புசையின் வஸ்திரம் காற்றினால் விலக, நீர் அதிக மோகத்தோடும் அவளைப்பார்த்து மதிமயங்கி யிருந்த படியால், நீரும் அவளும் மானிடராகிக் கூடிவாழ்ந்து, அவள் வயிற்றிலொரு புத்திரன் பிறந்தபின் அவனுக்குப் பட்டங்கட்டிவைத்துத், தென் சமுத்திரக்கரையிலிருக்கிற சக்கிர தீர்த்தத்தில் மனைவியோடுகூட ஸ்நானம்பண்ணினவுடனே சாபவி மோசனமாகுமென்று பிரமதேவன் சொல்லியிருக்கிறார். ஆகையால் மிருகாவதியென்கிற அலம்புசையானவள் வெகு சீக்கிரத்தில் உமக்கு மனைவியாவாள்" என்று நடக்கப்போகிறகதையைச்சொன்னான். சகஸ்ரானீகனும் இந்திரனிடத்தில் விடைபெற்று மிருகாவதியை விவாகஞ்செய்யவேண்டு மென்கிற ஆவலோடு கௌசாம்பி நாடுநோக்கி வருகையில், திலோத்தமை என்கிற தேவதாசி சிலசமாசாரம் பேச ஆரம்பித்தாள். அப்பொழுது அவனுடைய சித்தமெல்லாம் இந்திரன் சொன்னதைப்பற்றி யாலோசனையிலிருந்ததனால் பேசவந்த திலோத்தமையைக் கவனித்துப் பாராமலே நடந்தான். திலோத்தமை, கோபங்கொண்டு, தன்னையலட்சியஞ்செய்துபோகிற அரசனைப்பார்த்து, "அரசனே, நீர் மிருகாவதியை மனதிலெண்ணிக்கொண்டிருந்தமையால் அல்லவா என்னை யலட்சியம் பண்ணினீர். செல்வமிகுந்த சீமாட்டிகள் அவமானத்தைப் பொறுக்கமாட்டார்களென்பது உமக்குத்தெரியாதா! நீர் எந்த மிருகாவதியை நினைத்துக்கொண்டு என்னை அவமதித்தீரோ, அந்த மிருகாவதி உம்மைவிட்டுப் பதினாலுவருஷம் பிரிந்துபோவாள் பாரும்" என்றுசொல்ல, அரசன், "நான் மிருகாவதியை எவ்வகையிலாவது அடைவேனேயானால் பின் அவளைப்பதினாலுவருஷம் பிரிந்திருப்பது எனக்குப்பெரிதல்ல" என்றுசொல்லி, அந்த மிருகாவதியைநினைத்துக்கொண்டேதன்பட்டணம் போய்ச்சேர்ந்தான். கொஞ்சகாலஞ்சென்றபின், அரசன் காமன்களஞ்சியப் போன்றிருக்கிற மிருகாவதியை மணம்புரிந்து, அழகென்ற விருட்சத்துக்கு அலங்காரமான பூங்கொத்தாயும், காமசமுத்திரத்து அலைகள் போன்றவளாயும் இருக்கிற மிருகாவதியோடுகூடிக் காமலீலைகள் செய்து மகிழ்ந்துவரும் நாளையில், மிருகாவதி கர்ப்பந்தரித்துச், சரீரம் வெளுத்து, அமிர்தத்தில் முழுகி எழுந்த சந்திரகலை

போலவும், கர்பச்சின்னம் நன்றாய்த்தோன்றினபின், உதயமாகுந் தருணத்திலிருக்கிறசந்திரனோடு கூடிய கீழ்த்திசையைப்போலவும் விளங்கினாள். மனைவிகர்ப்பவதியாயிருந்தது கண்டு சந்தோஷமடைந்து, இராஜன் அவள் விரும்பிய வஸ்துக்களை யெல்லாம் அழைப்பித்துக்கொடுத்தான். ஒருநாள் மிருகாவதிக்கு இரத்தவர்ணமான தடாகத்தில் குளித்துவிளையாட விருப்பமுண்டானதைக்கண்டு, அரசன் உடனே யிரத்தம்போன்ற குங்குமஜலத்தினாலேநிறைந்த ஒரு தடாகமுண்டாக்க, அந்தக்குளத்தில்ஸ்நானப் பண்ணி, மலர்ந்த புரசம்பூவைப்போல விளங்குகிற இராஜமகிஷியை மாமிசமென்றெண்ணி, யொருபருந்து கொண்டுபோய், உதயகிரியின்குகையிலிறக்கியது. இராஜபத்தினி மூர்ச்சையாயிருந்து கொஞ்சகாலத்துக்குப்பிற்கு மூர்ச்சைதெளிந்து எழுந்திருந்தபோது, கொடிபோன்ற அவளது சரீரம் நடுங்கியது; இரண்டுகண்களிலிருந்து தாரைதாரையாக நீர் பெருகிற்று. "ஐயோ! பிராணநாதா! நான் உம்மைவிட்டுப் பிரிந்திருக்க என்ன தீவினை செய்தேனோ? இப்பொழுதெனக்கென்னகதி; நானெங்கே போவேன்; உமது முகத்தை யெப்பொழுது பார்ப்பேன்"என்று புலம்பி, உயிரைவிடத்துணிந்து, சிங்கம், யானை யிவைகளினெதிரில் நிற்க, அந்தமிருகங்கள் அவளைமுகர்ந்து கூடப் பார்க்கவில்லை. காலமல்லாத காலத்தில் மரணமெப்படிவரும்? கேட்டவர்கள் உருகும்படி யழுவதைக் கேட்ட மிருகாதிகளிரையெடுக்காமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தன. அந்தச்சமயத்திலொரு ரிஷிகுமாரன் வந்து புலம்பிக் கொண்டிருந்த அவள்பேரில் தயவுகூர்ந்து, தன் ஆச்சிரமத்துக்கு அழைத்துக் கொண்டுபோய்த் தன் பிதாவாகிய ஜமதக்கினி யிடத்தில் சமாசாரத்தைத் தெரிவிக்க, தர்மகுணமுள்ள ஜமதக்கினி முனிவர் அந்தப் பெண்ணைச் சமீபத்தில் அழைத்து, "அம்மா! உன் பிதா கிருதவர்மனைப்போல நான் உன்னைப்பாதுகாத்து வருகிறேன். நீ பயப்படாமலிங்கிரு" என்று தைரியப்படுத்தினார். மிருகாவதியும் அம்முனிவராச்சிரமத்தில் வசித்துக்கொண்டிருந்தாள். கொஞ்சகாலத்துக்குப் பின், பார்வதி சுப்பிரமண்ணியரைப் பெற்றதுபோலச், சௌரியமும், தைரியமுமுள்ள ஒரு புத்திரனைப்பெற்றாள்.* அவள் பிரசவ அறையிலிருந்தபோது, அங்குள்ளரிஷிபத்தினிகளெல்லாரும் மருந்து முதலியகொடுத்துத் தாயைப்போல அவளைப்பாதுகாத்து

வந்தார்கள். அந்தப்பிள்ளை உதயபருவதத்தில் ஜனித்தபடியால் அவனுக்கு உதயனன் என்று பேரிடவேண்டுமென்று ஆகாசவாணி சொல்ல, அப்படியே அந்தப்பிள்ளைக்கு உதயனன் என்று பேரிட்டார்கள். ஜமதக்கினி முனிவர் அக்குழந்தைக்கு சௌளமுதலியன செய்து வித்தியாப்பியாசம் பண்ணிவைத்தார். அவனுக்குப்பாலியம் நீங்கி யௌவனம் வந்தபோது அவன் ஒருநாள் காட்டுக்குப் போகையில், ஒருவேடன் பாம்பொன்றைப் பிடித்துக்கொண்டிருக்கக் கண்டு மனமுருகி, அவ்வேடனைப் பார்த்து "அப்பா! இந்தப்பாம்பைப் பிடித்து வருத்துகிறதினால் உனக்கு என்னலாபம் வரும்? ஆகையால் தயவு செய்து இதைவிட்டு விடு" என்று சொன்னான். அதுகேட்டு வேடன், "ஐயா இந்தப்பாம்பைப் பிடித்துக்கொண்டு, கிராமங்களிலும் பட்டணங்களிலும் போனால், எனக்குப் பிச்சை நிரம்ப அகப்படும்; ஆகையாலிதைவிடமாட்டேன்" என்று, அதைப்பிடித்து ஒரு பெட்டியில் அடைத்து விட்டான். உதயனன் தன் தாயார் தனக்குக் கொடுத்திருந்த தங்கக்காப்பை அந்தப்பண ஆசைகொண்ட வேடனுக்குக் கொடுத்துப் பாம்பை விடுவிக்க, அது உடனே ஒரு மனிதரூபமடைந்து கைகூப்பி வணங்கி யவனோடு சிநேகங்கொண்டு, அவனைப் பாதாளலோகத்துக்கு அழைத்துக்கொண்டு போயிற்று. இப்படி திருதராஷ்டிர குமாரனென கின்னரன் என்னும் பாம்பினால் பாதாளத்துக்குக் கொண்டுபோகப்பட்ட உதயனன் கின்னரன்சகோதரியான லளிதை யென்ற ஒரு அழகிய பெண்ணை மணந்து சுகித்து வாழ்ந்திருந்தான். கொஞ்சகாலங் கழிந்தபின், லளிதை கர்ப்பவதியாகி, நிகரில்லாத பராக்கிரமத்தோடு கூடின ஒரு புத்திரன் பிறந்த வுடனே, லளிதை உதயனனிடத்திலோடிவந்து "பிராணேசா! நான் பூர்வஜன்மத்தில் சுகண்டி என்கிற வித்தியாதரஸ்திரீ; சாபவசத்தால் நாககன்னிகையாகப் பிறந்திருக்கிறேன். எனக்குக் குழந்தை பிறந்தவுடனே சாபந்தீரவேண்டு மாகையால், இந்தப் பிள்ளையையும் வாடாதபூமாலையையும் கோஷவதியென்கிற இந்த வீணையையும் வாங்கிக் கொண்டு என்னை யனுப்பிவிடும்" என்று சொல்ல, அவனுமப்படியே யாகட்டுமென்று அவைகளையெல்லாம் வாங்கிக் கொண்டவுடனே, நாகங்களெல்லாம் பார்த்துக் கொண்டிருக்க அவள் ஆகாசமார்க்கமாகப் போய்விட்டாள். உதயனன் வீணைமுதலியவற்றைக் கைக்கொண்டு, தன்னைவிட்டுப் பிரிந்திருப்பதினால் துக்கித்துக் கொண்

டிருக்குந் தாயாரைப் பார்க்க விரும்பி ஜமதக்கினி ஆச்சிரமம் வந்து சேர்ந்து, அவரால் ஆறுதல் சொல்லப்பட்டிருந்த தாயைக்கண்டு அவளுக்குத் தன்னுடைய சகல விருத்தாந்தங்களையுந் தெரிவிக்க அவள் ஆநந்தபரிபூரிதை யானாள். இங்கே இப்படியிருக்க, உதயனனிடத்தில் காப்பை வாங்கிக்கொண்டு போன வேடன், அந்தக்காப்பை விற்கவிரும்பிக் கௌசாம்பி நகரம் சென்று, அங்கிருந்த ஒரு வியாபாரியிடத்தில் விலைகூற,அந்தவணிகன், காப்பில் வெட்டியிருந்த சஹஸ்ராநீகன் என்ற பேரைப்பார்த்து அவ்வேடனைக் கூட்டிக் கொண்டு அரசனிடம் சென்று, நடந்தவற்றைத் தெரிவித்தான். மிருகாவதியை விட்டுப்பிரிந்து கரைந்துருகிக் கொண்டிருக்கிற சகஸ்ராநீகன், அவளுடைய ஹஸ்த ஸ்பரிசத்தால் அமிர்தம்போலக் குளிர்ந்திருக்கும் கங்கணத்தை மார்பிலணைத்துத் தூக்கித்துப் புலம்பி, அக் காப்பின் வரலாற்றை அந்தவேடனாலே தெரிந்துகொண்டு, தன் பிராண நாயகியான மிருகாவதியைப் பார்க்க ஆவல்கொண்டு, சூரியன் சந்திரன் முதலான கிரகங்களுதயமாகிற உதயாசலத்தை நோக்கி மந்திரிகளோடு புறப்பட்டுப் போகையில், மிருகாவதியைக் காணவேண்டுமென்கிற விருப்பத்தினால் இரவெல்லாந் தூக்கமில்லாமலவன் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தபோது, வசந்தகன் பற்பலகதைகளைச் சொல்லி மனத்துயர் நீக்கிக் கொண்டுவந்தான். இப்படி வழியெல்லாங்கடந்து, யானையுஞ் சிங்கமும் விரோதமில்லாமல் வாழ்ந்திருக்கும்படி சாந்தமாயிருந்த ஜமதக்கினிமுனிவருடைய ஆச்சிரமத்துக்கு வந்து, அந்த முனிவரைச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்த பொழுது, அவரும் அரசனையாசீர்வதித்து, அர்க்கியமுதலியவற்றா லுபசரித்து, “ஐயா! நரநாதனே! இக்குழந்தை மிருகாவதி வயிற்றிற் பிறந்தவன். மஹாபராக்கிரமசாலியான இவன் திக்கு விஜயம்பண்ணி ஸ்ரீராமச் சந்திரனைப்போலக் கீர்த்திவந்தனா யிருப்பான். இவன்பேர் உதயனன். இதோ இருக்கிற இவள்தான் மஹாபதிவிரதையான மிருகாவதி. இவ்விருவரையும் பெற்றுக்கொள், தாமதியாதே.” என்று இதமாயும் தர்மமாயுஞ் சொல்லிமுடித்தார். உடனே சஹஸ்ராநீகன் தன்மனைவியையும் புத்திரனையு மழைத்துக்கொண்டு மந்திரிகளோடுகூடத் தன் இராஜதானியான கௌசாம்பி வந்து, பூர்வம் மஹேந்திரன் தனக்குச் சொல்லியிருந்த வசனங்களை நினைத்துப்பார்த்து, மனித ஜன்மத்தில் வெறுப்புண்டாகிப், புத்திசாலியும், இராஜ்யபரிபாலனஞ்

செய்யத் தக்கவனுமான புத்திரனிடத்தில் இராஜ்யத்தை ஒப்பு வித்துவிட்டு, வசந்தகன், ருமண்வான், யோகந்தராயணன் என்னும் மந்திரிகளையும் தன் பத்தினியையும் அழைத்துக்கொண்டு, சாபநிவாரணஞ்செய்துகொள்ளும் பொருட்டுத், தென் சமுத்திரக் கரையிலிருக்கிற சக்கிரதீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணவிரும்பிக், காற்றுப்போல் பறக்கும் குதிரையின்மேலேறிக்கொண்டு சமுத்திரக்கரை வந்து, சக்கிரதீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணின மாத்திரத்தில், அவ்வைந்து பேர்களும் தமதுசாபம் நீங்கி ஈனமான மனிதசரீரம் போய்த், திவ்யசொரூபிகளாய்ப் பட்டுப்பீதாம்பரமணிந்து, திவ்ய சந்தன புஷ்பங்களைத் தரித்து திவ்யாபரணம் பூண்டு, விலையுயர்ந்த விமானத்திலேறி, தங்கள் சாபந்தீர்ந்த சக்கிரதீர்த்தத்தைப் புகழ்ந்து, சகலரும் பார்த்துக் கொண்டிருக்கச் சொர்க்கலோகம்போய்ச் சேர்ந்தார்கள். முனீசுவரர்களே! கேளுங்கள். அக்காலந்தொடங்கி ஜனங்களெல்லாரும் சக்கிரதீர்த்த மகிமையையறிந்து, எப்பொழுதும் அதில் ஸ்நானம் பண்ணிவருகிறார்கள். இவ்விதமான பிரபாவத்தையுடைய இந்த தீர்த்தத்தில் ஒருவேளையாவது ஸ்நானம் செய்கிறவனுக்குச் சொர்க்கம் நிச்சயமாய்க் கிடைக்கும். நானுங்களுக்குச் சொல்லிவந்த பெரிதான விநூமசரித்திரத்தைப் பக்தியுடன் படிப்போரும் கேட்போரும் தாமிச்சித்தவற்றை யுடனே யடைகிறார்கள்.

ஐந்தாவது
அத்தியாயம் முற்றிற்று.



## ஆறாவது
# மகிஷாசுரன் உற்பத்திகூறிய
## அத்தியாயம்.

வியாசமஹாரிஷியின் சிஷ்யராகியும், பௌராணி கோத்தமராகியுமுள்ள சூதமஹாரிஷியே, உத்தமமான சக்கிரதீர்த்தமானது தேவீபட்டணம் வரைக்கும் பரவியிருப்பதாகக் கூறினீர்களே. அதைப்பற்றிச் சிறிது வினவுகிறோம். சக்கிரதீர்த்தமென்பது, பரவியிருக்கிற தேவீபட்டணமெங்கிருக்கிறது? அதற்கு ஏன் தேவீபட்டண மென்று

பெயர்வந்தது ? ஸ்ரீராமசேதுவின் தொடக்கத்தில் ஸ்நானம் பண்ணுகிற பாபிகளுக்கும், சக்கிர தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணுகிற பாபிகளுக்கும், பலனென்ன ? இதையும் மற்ற விசேஷங்களையும் எங்களுக்குக் கிருபைகூர்ந்து சொல்லியருளவேண்டும் என்று ரிஷிகள்கேட்கச், சூதமுனிவர் எல்லாவிஷயங்களையு முங்களுக்குச் சொல்லுகிறேன் சாவதானமாய்க் கேளுங்களென்று சொல்லத் தொடங்கினார்.

இந்தக்கதையைப் படிப்பவர்களுக்கும், கேட்பவர்களுக்கும் பாபங்களெல்லாம் நாசமாய்விடும். சீதாபதியாகிய இராகவன் கடலின்கண் ஒன்பது நற்களை ஸ்தாபித்துச் சேதுவைக்கட்ட எங்கே ஆரம்பம் செய்தாரோ அதுதான் தேவீபட்டணமென்பது. அது வரைக்குஞ் சக்கிரதீர்த்தம் பரவியிருக்கிறது. இவ்விடத்துக்குத் தேவீபட்டணமென்று பேர்வந்த காரணத்தையு முங்களுக்குச் சொல்லுகிறேன். சிரத்தையோடு கேளுங்கள், முனிசிரேஷ்டர்களே.

பூர்வகாலத்தில் தேவாசுரர்களுக்கு யுத்தம் நடந்தபொழுது தேவர்களாலே தனது புத்திரர்களை யிழியப்பெற்ற திதியென்பவள் மிகுந்த துக்கமடைந்து தன் புத்திரியைப்பார்த்து, " நீ இந்திரிய நிக்கிரகஞ் செய்து தபசுபுரிந்து, தேவேந்திராதியர்களை நாசஞ்செய்யத்தக்க புத்திரனைப் பெறுவதற்குச் சித்தப்பட்டுப்போ" என்று சொன்னாள். தன் தாய் கூறியவசனத்தைக்கேட்ட புத்திரி அப்படியே காட்டுக்குச்சென்று எருமையின் உருவங் கொண்டு பஞ்சாக்கினி மத்தியிலிருந்து கொடுந்தவம் புரிந்தாள். அதனால் உலகமெல்லாம் நடுநடுங்கின. மூன்றுலோகங்களும் மிகுதியும் பயமடைந்தன. இந்திராதி முப்பத்துமுக்கோடி தேவர்களும் மயங்கினார்கள். அப்பொழுது சுபார்சுவன் என்னும் ரிஷியானவர் மனக்கலக்கத்தோடு இவளைப்பார்த்து, "பெண்ணே ! உனது தபசினால் நான் திருப்தியடைந்தேன். உனக்கொரு புத்திரனுதிப்பான். அவன் மகிஷமுகமும் மனிதவுடலு முடையவனாய்த் தேவர்களையும் சொர்க்காதிபதியான தேவேந்திரனையும் வருத்துவான். நீ தபசை நிறுத்திவிடு" என்று சொல்லித் தமதிருப்பிடஞ் சென்றார். பிறகு, மகிஷாசுரன் மகாபராக்கிரமசாலியாய்ப்பிறந்து பௌர்ணிமை

ரில் கடல்விருத்தியாவதுபோல்வளர்ந்துவந்தான். அப்படியவன் ருங்காலத்தில், அசுரர் தலைவனுகிய விப்பிரசித்தியின் புத்திரன் வித்துன்மாலியும், பூலோகத்திலுள்ள மற்ற அசுரசிரேஷ்டர்களும் மகிஷாசுரனுக்குக் கிடைத்த வரமகிமையைக்கேட்டு ஆனந்தமடைந்து, ஒன்றுகக்கூடி யவனிடம்வந்து, "அறிவிற்சிறந்த குழந்தாய், பூர்வமெங்களுக்குச் சொந்தமாயிருந்த சொர்க்கலோக அரசாட்சியைத் தேவர்களெல்லாரும் விஷ்ணுவின் சகாயத்தினுலபகரித்துக்கொண்டார்கள். நீ பராக்கிரமசாலியும், வீரமுடையவனும், பிரமதேவனுல் நல்ல வரங்கள் பெற்றிருப்பவனுமாதலால், தேவர்களோடு புலோமஜை நாதனுன தேவேந்திரனை வென்று எங்கள் அரசாட்சியை மீட்டுக்கொடுக்க வேண்டும்" என்று வேண்டிக்கொண்டார்கள். அதுகேட்ட மகிஷாசுரன், தேவர்களோடு சண்டைசெய்ய நினைத்து அமராவதிக்குப்போய் யுத்தஞ்செய்யத்தொடங்கினன். இந்தச்சண்டை மஹாபயங்கரமாகவும், கேட்டவர்கள் நடுங்கும்படியாகவும், நூறு வருஷம் நடந்தது. கடைசியில் தேவர்களும் தேவேந்திரனும் பயந்து திக்குத்திசைகள்தோறுஞ் சிதறியோடிப் பிரமதேவரிடம் போய்ச்சேர்ந்து முறையிட, அவர் தேவர்களையழைத்துக்கொண்டு லோகநாயகர்களாகிய பரமசிவன், நாராயணனிவர்களிருக்குமிடம் வந்து, அவர்களை வணங்கியனேகமாகத்துதித்து, மகிஷாசுரனது கொடுஞ்செயல்களைச் சொல்லத்தொடங்கினர். "மகிஷாசுரனுனவன் இந்திரன், அக்கினி, யமன், சூரியன், சந்திரன், குபேரன், வருணன், முதலானவர்களுடைய பதவியைக் கவர்ந்துகொண்டு, அவர்களைத் துரத்திவிட்டுத் தானே யவ்வதிகாரத்தைச் செலுத்தி வருகின்றுன். இப்படியே மற்றத்தேவர்களுடைய அதிகாரத்தையும் பறித்துக்கொண்டிருக்கிறுன். இவ்வகையாக மகிஷாசுரனுல் அதிகாரமிழந்து துன்பப்படும் தேவர்கள் எல்லாரும் சொர்க்கத்தைவிட்டுப் பூலோகத்துக்குவந்து மனிதரூபங்கொண்டு மறைந்து சஞ்சரிக்கின்றுர்கள். இந்தச்செய்தியை உமது சந்நிதியின் முன்பு தெரிவிக்கும்பொருட்டாகவே தேவர்களோடு மிங்கேவந்தேன். கருணைகூர்ந்து நீங்கள் அவர்களைக் காத்தருளவேண்டும்." என்று பிரார்த்தித்தார். அது கேட்டவுடன், ஸ்ரீபரமேசுரன், நாராயணன் இவர்களுடைய முகங்கள் கோபத்தினுல் பார்க்கப்பயங்கரமாயின. இப்படியாகக்

கோபங்கொண்ட சிவவிஷ்ணுக்கள், பிரமதேவன், இவர்கள் முகங்களிலும், தேவேந்திரன் முதலான தேவர்களிலுமிருந்து பார்க்கப் பயங்கரமான தேஜசுகள் தனித்தனியே தோன்றின. அந்தத் தேஜசுகளெல்லாமொன்றாகக்கூடி ஓர் அக்கினிமலைபோலக் காணப்பட்டுத் தனது ஜுவாலையாலெங்கும் வியாபித்தது. அப்படிப்பரவிய தேஜோராசியிலிருந்து ஒரு ஸ்திரீசொரூபம் வெளிப்பட்டது. அந்தச்சொரூபத்துக்குச் சிவதேஜசால்முகமும், பிரமதேஜசால் கால்களும், விஷ்ணுதேஜசால் கைகளும், இந்திரதேஜசால் இடுப்பும், யமதேஜசால்ரோமமும், சந்திரதேஜசால் ஸ்தனங்களும், வருணதேஜசால் தொடைமுழுங்கால்களும், பூதேஜசால் நிதம்பமும், சூரிய தேஜசால் கால்விரல்களும், அஷ்டவசுக்களின் தேஜசால்கைவிரல்களும், குபேரதேஜசால் மூக்கும், நவப்பிரஜாபதிகளின் தேஜசால் பல்வரிசைகளும், அக்கினி தேஜசால் கண்களும், சந்தியா தேஜசால் புருவங்களும், வாயுதேஜசால் காதுகளும், மற்ற தேவர்கள் தேஜசால் மற்ற அவயவங்களும் அமைந்தன. அப்பெண் சொரூபம் தேவர்கள் கண்களாற் பார்க்கவும் கிட்ட நெருங்கவும் முடியாமலிருந்தபடியால் துர்க்கையென்று அவளுக்குப் பெயரிட்டார்கள். இப்படித்தோன்றிய தேவியைக்கண்டு, மகிஷாசுரனால் துன்பமடைந்த தேவர்களெல்லாரும் மஹாசந்தோஷமடைந்தார்கள். பிறகு ருத்திராதி தேவர்கள் தத்தம் சூலாதி யாயுதங்களையும், வஸ்திரம், மாலை, சந்தனம், ஆபரணம், இவைகளையும் அவளுக்குக் கொடுக்க, அவ்வாபரணாதிகளால் அலங்காரமாய் விளங்கிய தேவியானவள், பூமியாகாசங்கள் நடுநடுங்கும்படியாக அட்டகாசஞ் செய்ததனால், உலகங்களெல்லாம் நடுநடுங்கின. சிங்கவாகனத்தின்மேலாரோகித்துக்கொண்டு நிற்குமந்தத்தேவியைச் சித்தர், முனிவர், கந்தர்வர் முதலான பேர்களெல்லாரும் பார்த்து, "ஜய, விஜயீபவ" என்று துதித்தார்கள். அப்பொழுது தேவி செய்த சிங்கநாதத்தினால் உலகம் நடுங்கினபொழுது தேவர்களுக்கு விரோதிகளாகிய தைத்தியர்கள் தத்தம் ஆயுதங்களைக் கைக்கொண்டு யுத்தசன்னத்தரானார்கள். மகிஷாசுரனும் சத்தம் வந்ததிசையைப் பிடித்துக்கொண்டு, தனது சைனியங்களுடனாயுதபாணியாய் மகாகோபத்தோடும் வந்து சேர்ந்தான். பூமியும், பாதாளவாசிகளாகிய ஆதிசேஷன் முதலான நாகங்களும் திகில

டையும்படி சிங்காதஞ்செய்துகொண்டு ஆயுதந்தரித்த அநந்த மான கைகள் துலங்கும்படி யிருந்த தேவியை அசுரர்கள் கண்டு தத்தமாயுதங்களையுயரவெடுத்து யுத்தஞ்செய்யச் சித்தமானார்கள். பின்பு சத்துருக்களை வெல்லும் வல்லவனாகிய மகிஷாசுரன் சஸ்திரங்க ளாகியகதை, முசலம், சக்கரம், அஸ்திரங்கள், இவைகளைக்கொண்டு, கணக்கில்லாத ரதகஜதுரகபதாதிகளோடுந் தேவியையெதிர்த்துச் சண்டைசெய்ய ஆரம்பித்தான். அளவில்லாத அசுரசேனாபதிகள் சைனியங்களோடுந் தேவியைச் சூழ்ந்துகொண்டு சஸ்திரவருஷம் வருஷித்தார்கள். அது கண்ட தேவியானவள் தனது வில்லினின்று விடுபடும் அம்புகளினால் அசுரர்களேவிய ஆயுதங்களை விளையாட் டாகக் கண்டதுண்டஞ் செய்துபோக்கி அரக்கருடலையும் சல்லடைக் கண்களாகத்துளைத்து விட்டாள். அப்பொழுது தேவர்களும் தே வியின்சகாயத்தினால் அச்சமற்று அளவில்லாத வாயுதங்களைச் சொரிந்து ராட்சதசேனைகளை நாசப்படுத்தி நிர்மூலமாக்கினார்கள். இவ்வாறு தன்சேனைகள் நாசமடைந்ததைக்கண்ட மகிஷாசுரன், ஆங்காரங்கொண்டு, தனதுவில்லை வளைத்து நாணேறிட்டுப் பாண வருஷம் பொழியத்தொடங்கி, இந்திரன்மேல் பதினாயிரம் பாணங் களும், யமன்பேரில் ஐயாயிரம் பாணங்களும், வருணன்பேரில் எண்ணாயிரம் பாணங்களும், குபேரன்மேலே ஆறாயிரம் பாணங்க ளும், சூரியன், சந்திரன், அக்கினி, வாயு, அஷ்டவசுக்கள், அசு வினிதேவர்கள்முதலான மற்றத்தேவர்கள் பேரில் தனித்தனி பதினாயிரம் பாணங்களும் எய்தான். இவ்வாறு மகிஷாசுரனால் நசுக்கப்பட்ட தேவர்களெல்லாரும் "எங்களைக்காத்தருளும் அம்மா" என்று முறையிட்டுக்கொண்டு தேவியைச் சரணமடைந்தார்கள். அப்பொழுது தேவி தனது சேனைகளாகிய பூதப்பிரேதபிசாசகண ங்களை நோக்கி "அசுரசேனைகளை நாசப்படுத்துங்கள். நான் விசேஷ வரங்கள் பெற்ற மகிஷாசுரனோடு சண்டைசெய்கிறேன்" என்று சொல்லியருளினாள். தேவியால் ஏவப்பட்ட கணங்களால் தனது சேனைநாசமடையக்கண்ட மகிஷாசுரன் கோபங்கொண்டு தனது சேனைகளோடு தேவியுடனெதிர்த்தான். அப்பொழுது, மகிஷாசுர னது மந்திரிகளாகிய மஹாநாதன், சுசக்ஷு, மஹாஹநு, மஹாசண்டன், மஹாபட்சன், மஹோதரன், மஹோத்கடன், பஞ்சாஸியன், பாதகூடன், பதுநேத்திரன், பிரபாதகன், ஏகாட்சன், ஏகபாதன், பதுபாதன், என்

பவர்களும், மற்றுமுள்ள அவனது மந்திரிகளும் சண்டைசெய்ய எண்ணித் தேவீ முன்புவந்து நின்றார்கள். அது கண்டதேவியும் வாயுவேகம் மனோவேகங்களுக்கு மேலான வேகமுள்ள சிங்க வாகனத்தின் மேலேறிப், பிரளயகால மேகம்போல் ஒலிக்கின்ற தனது வில்லை நாணேற்றி வச்சிராயுதத்தை யொத்த பாணங்களைத் தொடுத்தபொழுது, பத்துலட்சம யானைகளும், நூறுலட்சம் குதிரைகளும், நூறுலட்சம் தேர்களும், பதினாயிரலட்சம் பதாதிகளுமடங்கிய சேனைகளையுடைய மஹாஹநு வென்பவன் இறந்தான். இப்படியே பராக்கிரமம்பொருந்திய அளவுபடாத நால்வகைச் சேனைகளுடைய மகிஷாசுரனுடைய மற்ற சேனாபதிகளும் தேவியினது தங்கப்பூண்கட்டப்பட்டு விளங்கா நின்ற அம்புகளால் ஒருஜாமநேரத்துக்குள் மடிந்தொழிந்தார்கள். கேட்டீர்களோ பிராமணோத்தமர்களே! இச்செய்கை மிக ஆச்சரியமாக விருந்தது.

## ஆறாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

ஏழாவது

# மகிஷாசுரவதையும் தேவீபட்டணு வரலாறும் கூறிய

அத்தியாயம்.

---

இப்படியாகத் தேவியினால் தனது சேனைகள் சங்கரிக்கப்பட்டதுகண்டு மகிஷாசுரன் மஹாகோபங்கொண்டு சண்டகோபனைப் பார்த்து "அதிகபராக்கிரமசாலியான சண்டகோபா! துராத்மாவாகிய இந்தப்பெண்ணைச் சண்டைசெய்து சங்கரி" என்றான். வீரனான சண்டகோபனுமப்படியே ஆகட்டுமென்றுகூறி யுத்தகளத்தில் வந்து தேவியின்மீது சரமழைபொழியத், தேவியும், தனது பாணங்களால் சண்டகோபனது தேர், குதிரை, சாரதி, வில்முதலியவற்றை யழித்து, அவனது மார்பிலும் பாணங்களையேவினாள். இப்படித் தேர் குதிரை சாரதி வில்லுமிழந்த சண்டகோபன் வாளாயுதத்தையேந்தித் தேவியிடஞ்சென்று, தேவியினது வாக

னமாகிய சிங்கத்தையும் தேவியினிடதுகையையும் வெட்டினான், தேவியினிடதுபுஜத்தில் பட்ட கத்தியானது ஆயிரந்துண்டுகளாகச் சிதறிப்போயிற்று. தேவீ தனது சூலாயுதத்தினால் சண்டகோபனது மார்பில் தாக்கினதினால் அவனும் பூமியில்விழுந்து மடிந்தான். மஹா வீரனான சண்டகோபன் விழுந்தபொழுது சித்திரபானு வானவன் யானையின்பேரிலேறிவந்து, பெரியமணிகள் கட்டப்பட்டு விளங்குகிற ஓர் கத்தியைத்தேவியின் மேலெறிந்தான். தேவி தனது உங்காரத்தினால் அந்தச் கத்தியை விலக்கித் தனது சூலத்தினாலவனது மாற்பிற்குத்தி விழுத்தினாள். பின்பு கராளன் என்பவன் அதிக வேகமாயோடிவர அவனையுந் தேவி யோர்கைக்குத்தினால் மடித்து, மதோன்மத்தனைக்கதையாலடித்துச் சாய்த்து, பாஸ்கரனை வாளினால் வெட்டி, அந்தகனைச் சக்கிராயுதத்தால் கொன்று யமபுரமனுப்பிவிட்டாள். இப்படியே மகிஷாசுரனுடைய பெருங் காத்திரமுள்ள மந்திரிகளையும் சூலாயுதத்தால் குத்தி யமனுடைய வீட்டுக்கு அதிதிகளாக அனுப்பினாள். இவ்வாறாகத் தன்னுடைய சேனைகள் நாசமானதுகண்ட மகிஷாசுரன் எருமைவடிவங் கொண்டு தேவியின் கணங்களிற் சிலரைத் தன் முகத்தினாலும், சிலரைக்காற்குளம்புகளாலும், சிலரைச் சுவாசத்தினாலும் வதைத்துக் கொன்று தேவியேறிவந்த வாகனமாகிய சிங்கத்தைக் கொல்லும் படிசினங் கொண்டுகர்ஜிக்க, சிங்கமானது உக்கிரங்கொண்டு, தன்பாதத்தினால் பூமியைத்திரமித்துத், தனதுநகங்களால் மகிஷாசுரனது சரீரமுழுதுங்கீறியது. தேவி மஹாசினமுடையவளாய் மகிஷாசுரனைக் கொல்லக்கருதிப் பாசத்தினால் அவனைக்கட்ட, மகிஷரூபத்தை விட்டுச், சிங்கரூபங்கொண்டு கிட்டக், தேவி தனது வாள்கொண்டு வெட்ட, அவன் அவ்வுருவொழிந்து வாளாயுதங்கொண்ட மானிடவுருவுகொண்டு நெருக்கத், தேவி மர்மஸ்தானங்களைப் பிளக்கத் தக்க கூரிய பாணங்களால் முறுக்க, அவன் துதிக்கை தந்தங்களோடுகூடிய யானையுருவெடுத்துத் தேவிவாகனமாகிய சிங்கத்தை யிழுக்க, சிங்கமும் தனது நகங்களால் அவன் துதிக்கையைக் கிழிக்க, அவன் மீளவுந் தனது சுயரூபமெடுத்துக்கொண்டான். துர்க்கையானவள் மதுபானத்தினால் கண்கள் சிவந்து கோபங் கொண்டு சிரிக்க, மகிஷாசுரன் தன் கொம்புகளால் மலைகளைப் பெயர்த்துத் தேவி மீது எறிய, அம்மனும் அவைகளை யம்புகளாற்

பொடிப்பொடியாகச் சிதறவடித்து மகிஷாசுரனைப் பார்த்துச் சொல்லுகிறாள்: "அடே மூடா! நான் மதுபானஞ் செய்யுமளவும் நீ யிறுமாப்புக்கொண்டு திரி; நான் மதுபானம் பண்ணினபிறகு உன்னைக்கொன்று யமலோகஞ் சேர்த்துவிடுகிறேன். தேவகண்டகனான நீ யிறந்தபின் சித்தர், சாத்தியர் முதலான தேவர்கள் தத்தம் பதவியைப்பெற்று க்ஷேமமாக வாழ்ந்திருப்பார்கள்." என்று சொல்லி யவனுடைய மார்பிலொருகுத்துக்க் குத்தினாள். அந்தக் குத்தினால் அலமலந்த மகிஷாசுரன் தென்சமுத்திரக்கரையை நோக்கியோட்டம் பிடித்தான். தேவியும் தன் சிங்கத்தின்மேலேறி யவனைத்துரத்த, மகிஷாசுரன் பத்துயோசனை நீளமான தர்மபுஷ்கரணியில் விழுந்து மறைந்தான். பின்னால் தொடர்ந்துவந்த தேவி மகிஷாசுரனைக்காணாமல் மயங்கும்பொழுது, "ஏ தேவி! உன்கைக்குத்தினால் நொந்த மகிஷாசுரன் இந்தத் தர்மபுஷ்கரணியில் மறைந்து படுத்துக்கொண்டிருக்கிறான், அவனை ஏதாவதொரு உபாயத்தினால் கொன்று முடித்துவிடு" என்று ஒரு அசரீரவாக்குப் பிறந்தது. அதுகேட்டு, மகிஷாசுரனை வதைக்கச் சித்தமாயிருந்த தேவியானவள், தன் வாகனமாகிய சிங்கத்தையழைத்து, "நீ யதிகபராக்கிரமசாலியாகையால் இந்தத் தர்மபுஷ்கரணியிலுள்ள ஜலத்தை ஒருதுளியும் விடாமல் குடித்துவிடு." என்று கட்டளையிடச், சிங்கம் தர்மபுஷ்கரணியில் தூள் பறக்கும்படி யதிலுள்ள நீரைக்குடிக்க, மகிஷாசுரனும் அந்தப்புஷ்கரணியினின்றும் மிகச்சோர்வடைந்தவனாய் வெளிப்பட்டுவரத், தேவி தனது திருவடியால் அவன் தலையை மிதித்து, சூலத்தால் கழுத்திற்குத்தி, மிகுந்த கோபத்தோடும் கத்தியினால் அவனுடைய பெரியதலையைவெட்டி யெறிந்தாள். ஓ பிராமணோத்தமர்களே! இப்படியாக மகிஷாசுரன் தன் மந்திரிகள், சேனைகள், வாகனங்களோடுந் தேவியினாலடிப்பட்டு மடிந்தபின், தேவர்கள், கந்தர்வர்கள், சித்தர்கள், தேவரிஷிகள் முதலானபேர்களும் வந்து துதித்துத் தேவிக்குச் சந்தோஷமுண்டாக்கச்செய்து அவளிடத்தில் உத்தரவு பெற்றுக்கொண்டு தங்கள் தங்களிருப்பிடம் போய்ச்சேர்ந்தார்கள். பிறகு தேவி தெட்சிணசமுத்திரத்தின் வடகரையில் தனது பேரால் ஒரு பட்டணம் நிர்மிக்கத், தேவியின் கட்டளையால் தேவேந்திரன் முதலான தேவர்கள் தர்மபுஷ்கரணியை அமிர்தத்தினால் நிரம்பச்செய்தார்கள். ஓ பிராமணர்களே,

அதனால் தர்மபுஷ்கரணிக்கு அமிர்ததீர்த்தம் என்றும் பேருண்டு. பின்பு தேவியானவள், தன்னால் நிர்மிக்கப்பட்ட அந்தப் பட்டணத்தில், பசுமுதலான சகலபொருள்களும் நிறைந்து, ரோகமில்லாதிருக்கவேண்டுமென்றும், தர்மபுஷ்கரணியில் ஸ்நானம் செய்தபேர்களுக்கு இஷ்டார்த்தசித்தி யுண்டாகும்படியும் வரமளித்துச் சொர்க்கலோகம் போய்ச் சேர்ந்தாள். தேவியினால் உண்டாக்கப்பட்ட அந்தமகிமை சிறந்த பட்டணத்துக்குத் தேவீபட்டணமென்று பேர். முனிவர்களே, அந்தப் பட்டணத்திலிருந்துதான் தர்மசிந்தையுள்ள ஸ்ரீராமர் சுபமுகூர்த்தத்தில் நிலகவிநாயகரைப் பிரார்த்தித்துத், தேவியினுடையஅனுக்ஞைபெற்று, தமது கையால் ஒன்பது கற்களைநட்டுச் சந்தோஷத்தோடும் சேதுகட்ட ஆரம்பித்து, வானரங்களாலே மலைகள், மரங்கள், புற்கள், கட்டைகள் முதலியவைகளைக்காட்டிலிருந்துச்சேகரித்துப், பத்துயோசனையகலமும், நூறுயோசனை நீளமுமுள்ளதான அந்தச்சேதுவைச் சமுத்திரத்தில், இலங்காபுரிவரைக்கும் நளனாலே ஐந்து நாட்களில் கட்டிமுடித்தார். தேவீபட்டணத்துக்குச் சமீபத்திலுள்ள நவபாஷாணமென்கிற சேதுமூலத்தில் மனிதர்கள் பாபநாசமாம்பொருட்டு ஸ்நானஞ்செய்யவேண்டியது. அப்படியே சக்கிரதீர்த்தத்திலும் ஸ்நானஞ்செய்து சேதுவுக்கதிபதியாகிய ஸ்ரீராமரைப் பிரார்த்திக்கவேண்டியது. தேவீபட்டணத்திலிருந்து கட்டப்பட்டசேது மஹாபரிசுத்தமுடையது. இந்தச்சேதுமூலத்துக்குக் கிழக்கு எல்லை தேவீபட்டணம், மேற்கு எல்லை தர்ப்பசயனம். இவ்விரண்டும் பாபங்களை நாசமாக்கும் மகிமையுடையவைகள். மனிதர்கள் எந்த வழியாகச் சேதுவுக்கு வந்தாலும் இந்தச்சேது மூலத்திலும், சக்கிரதீர்த்தத்திலும் ஸ்நானஞ்செய்து, சங்கற்பஞ் செய்துகொண்ட பிறகுதான் சேதுவுக்குப் போகவேண்டும். தேவீபட்டணத்திலும், சக்கிரதீர்த்தத்திலும், தர்ப்ப சயனத்திலும் ஸ்நானஞ் செய்வதனால் சகலபாபங்களும் நாசமாகும். சக்கிரதீர்த்தத்தை மனதினால் நினைத்தமாத்திரத்தில் இலட்சம் ஜன்மங்களிற் செய்த பாபங்களெல்லாம் பஸ்மமாய்ப் பிறப்பற்று முத்திகைகூடுகிறது. சக்கிரதீர்த்தத்துக்குச் சமமான தீர்த்தம் உலகத்திலிருந்ததுமில்லை; இருக்கப்போவதுமில்லை. பூலோகத்திலுள்ள கங்காநதிமுதலான தீர்த்தங்களெல்லாமிந்தச் சக்கிரதீர்த்தத்தின் மகிமையில் பதினாறி

லொருபங்குக்கு மிணையாகாது. முதலில் நவபாஷணமத்தியிலிருக்கிற சமுத்திரத்தில் ஸ்நானஞ்செய்து க்ஷேத்திரபிண்டம் போட்டு, அதேமாதிரியாகச் சக்கிரதீர்த்தத்திலும்செய்து, சேதுவுக்திபதியாகிய ஹரியைத் தன் பாபநிவாரணமாம்பொருட்டுப் பணியவேண்டியது. இப்படியே வேறு வழியாகவருபவர்கள் தர்ப்பசயனத்தில் செய்யவேண்டியது. நளனால் நிர்மிக்கப்பட்டு ஸ்ரீராமசந்திரர் வீற்றிருந்த சிம்பாசனத்தை வணங்குகிறவனுக்கு நரகபயமில்லை. முதலில் ஸ்ரீராமரைத் தியானித்து, "ஸ்ரீராமரது திருவடிகளாற் பரிசுத்தமாக்கப்பட்டத் தூளிகளமைந்ததும் இராவணசங்காரத்துக்குக் காரணமாயும், ஸ்ரீராமசந்திரருடைய துக்க நிவர்த்திக்கு முக்கியமூலமாயும், சீதாதேவியினது மனமாகியதாமரைக்குச் சூரியனைப்போலவுமிருக்கிற சேதுவே! உனக்கு நமஸ்காரம்" என்கிற இந்த மந்திரத்தையுச்சரித்துச் சேதுவைச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, வேதாளத்துக்கு வரங்கொடுத்த பரிசுத்தமான வேதாளதீர்த்தத்துக்குப் போகவேண்டும். இந்தஅத்தியாயத்தைப்படிப்பவர்க்கும், கேட்பவருக்கும், சொர்க்காதிபோகங்களெல்லாம் வெகு எளிதாகக் கிடைக்கும். கைவல்யமும் சித்திப்பதற்குத்தடையேயில்லை.

ஏழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

எட்டாவது

# வேதாளவரத தீர்த்தமகிமையில் சுதரிசனன் வேதாளமான

அத்தியாயம்.

---

இப்படிச்சொல்லிவந்த சூதமுனீந்திரரைச் சௌநகாதிரிஷிகள் நோக்கி, கிருஷ்ணதுவைபாயநருக்கு மாணாக்கரும் சர்வஞ்ஞருமான சூதமுனிவரே! உமதுவாக்கிலிருந்து பிறந்த அமிர்தவருஷத்துக்கு ஒப்பானகதைகளைக் கேட்டும் திருப்தியடையாமல், இன்னமும் உமதுவசனாமிருத பானத்தை விரும்புகிற எங்களுக்கு இன்னமும் சிலகதைகளைச் சொல்லியருளவேண்டும். வேதாளவரததீர்த்தமானது

சக்கிரதீர்த்தத்துக்குத் தட்சிணபாரிசத்தி லிருக்கிறதென்று எங்களுக்கு முன்னமே சொல்லியிருக்கிறீர்கள். அதற்கந்தப் பேர்வந்த காரணமென்ன? அதுஎவ்விதமான மகிமையுடையது? இவைகளையெங்களுக்குக் கருணைபுரியவேண்டுமென்றுவினவ, சூதமுனிவர், ஓரிஷீசுவரர்களே! நீங்கள் நல்ல கேள்விகேட்டீர்கள். இரகசியமும், அற்புதமாயுமிருக்கிற இந்தக்கதையைச் சொல்லுகிறேன். சிரத்தையோடுகேளுங்கள். பாமரர்கள்கூட இந்தக்கதையைக் கேட்டுச்சந்தோஷமடைவார்கள். பூர்வம் ஸ்ரீகைலாசபர்வதந்தில், ஸ்ரீபரமேசுவரரும் பரமேசுவரியும் லீலாவினோதமா யிருந்தகாலத்தில் பரமேசுவரிக்கு இந்தரகசியமான கதைசொல்லப்பட்டது. பூர்வம், சத்தியவந்தரும் பரிசுத்தருமான காலவமஹாரிஷியானவர் பரபிரமத்தைத்தியானம் பண்ணிக்கொண்டு தமது ஆச்சிரமத்தில் தபசுசெய்துகொண்டிருந்தார். அவருக்குக் காந்திமதியென்ற அழகான யௌவனகுமாரத்தி யிருந்தாள். அவள்தன்பிதாவுக்குப் பூஜைக்குப் புஷ்பங்கள்கொண்டுவருதல், வேதிகை சுத்திசெய்தல், சமித்துக் கொண்டுவருதல், முதலான பணிவிடைகளைச் சிரத்தையோடு செய்துவந்தாள். ஒருநாள் அந்தப்பெண் தன்பிதாவின் பூஜைக்குப்புஷ்பங் கொண்டுவருகிறதற்காகக்காட்டில் நெடுந்தூரம் போய்த்தன்குடலையை அழகான புஷ்பங்களால் நிறைத்துக்கொண்டு ஆசிரமத்தை நோக்கிச் சீக்கிரமாய் வரும்போது, சுதரிசனன், சுகர்ணனென்றஇரண்டு வித்தியாதரகுமாரர்கள் விமானத்திற் செல்லுகையில் அவளைக்கண்டார்கள். மூத்தவனான சுதரிசனன், மன்மதன் தேவியாகிய ரதியேஇவ்விதவுருவங்கொண்டு வந்தாளென்று சொல்லும்படியான அந்தப்பெண்ணினது பூர்ணசந்திரன்போன்ற முகத்தைக்கண்டு, ஆனந்தங்கொண்டு, காமத்தால் மயங்கி, அவளை அடிக்கடி பார்த்து, அவளைச்சேரவிரும்பி, விமானத்திலிருந்து கீழிறங்கி, அவளை நெருங்கி, "மஹாரூபலாவணியத்தோடுங் கூடியிருக்கிற நீ யார்? எந்த மஹானுடைய புத்திரி? நிகரில்லாதவுனது சௌந்தரிய வடிவமானது என்னை மயக்குகிறது; ரதிக்கு ஒப்பான வுன்னைப்பார்த்த என்னை மன்மதன்பாணங்களால் வதைக்கிறான்; சுகர்ணன் என்கிற வித்தியாதரசக்கிரவர்த்தியினுடைய அழகிய குமாரன் நான். என்பெயர் சுதரிசனன். பெண்ணே! நீ கருணைசெய்து என்னை மணம்புரிந்து காத்தருளவேண்டும். நீ யென்னைக் கணவனைகப்

பெற்றால் உனது மனோரதங்களெல்லாம் நிறைவேறும்." என்று சொன்னான்.

அது கேட்ட காந்திமதி, நியாயமான மறுமொழி சொல்லுகிறாள்: "ஐயா, வித்தியாதரகுமாரரான சுதரிசனரே! நான் காலவ மஹாரிஷியின் புத்திரி; எனக்கின்னும் கலியாணமாகவில்லை; தந்தையின் பூஜைக்கு வேண்டிய புஷ்பங்களெடுப்பதற்காக இந்தக் காட்டுக்குவந்தேன்; நானிங்கேவந்து ஒரு ஜாமமாய்விட்டது; நானிங்கே தாமதஞ்செய்து விட்டால் தேவதார்ச்சனைக்குக் குறை வரும்; அதனால் தபசிரேஷ்டரான என்பிதா கோபமடைவார்; ஆகையால் நான் சீக்கிரம் போகிறேன். கன்னிகைகளெல்லாரும் பிதாவுக்கு அடங்கியிருக்கவேண்டுமேயல்லாமல் சுதந்தரமாய் நடக்கக்கூடாதல்லவா? நீர் என்னை மணம் புரியவிரும்பினால் என் தந்தையிடம் வந்துகேளும்." என்று சொல்லி, ஆசிரமத்தை நோக்கிச் செல்லப் பிரயாணப்பட்ட காந்திமதியைக் காமத்தால் மதிமயங்கிய வித்தியாதரகுமாரன் கேசத்தைப் பிடித்திழுத்தான். அப்போது காந்திமதியானவள், "ஐயையோ! இந்தத் துஷ்டாத்மாவான வித்தியாதரகுமாரன் என்னைப் பலாத்காரமாய்ப் பிடித்திழுக்கிறானே! ஐயா! பிதாவே! யென்னை யிந்தக்கொடிய துஷ்டனிடத்தினின்றும் காப்பாற்றும்.'' என்று குரறிப்பட்சியைப்போலவாய்விட்டுக் கதறியழுதாள். கந்தமாதனப் பருவதத்தில் வாசம்பண்ணிக் கொண்டிருந்த ரிஷீசுவர்களெல்லாரும் அந்த அழுகுரல் யாதோவென்று அறியும் பொருட்டாகக் காலவமுனிவரை முன்னிட்டுக் கொண்டவ்விடம் வந்தார்கள். அப்பொழுது காலவமஹாரிஷியானவர் கந்தர்வன்கையில் அகப்பட்டுக் கொண்டிருக்கும் தன் குமாரத்தியையும், கந்தர்வனையும் அவன் சமீபத்திலிருக்கிற அவன் தம்பியையும்பார்த்துக் கோபமடைந்து, வித்தியாதரனை நோக்கி, "ஏவித்தியாதரப் பதரே, வேதாளமும் இராட்சதரும் பெண்களைப் பலாத்காரமாய்ப் பிடித்திழுக்குந் தொழிலையுடையவர்கள். அந்தத்தொழிலையே செய்தநீயும் துக்கம் நிறைந்த மனிதஜன்மமெடுத்து, அதேஜன்மத்தில்தானே வேதாள சொரூபம் பெற்று மாம்சம் இரத்தம்முதலானவைகளைப் புசித்து வெகுகாலம் உலகத்தில் திரியக்கடவாய்; உன் செய்கைக்குடன்பட்டிருந்த உன் தம்பியாகிய சுகர்ணன் மனிதனாகவே பிறப்பான். அவன் இத்தொழிலைத்தான் செய்யாததனாலே வேதாள

ஜன்மமவனுக்கு வாராது. அவனுக்கு விக்ஞப்தி கேனதுகன் என்கிற வித்தியாதராதிபதியைக் கண்டபொழுது சாபம் நீங்கும்.” என்று இருவரையும் சபித்துவிட்டுத், தமது புத்திரியை அழைத்துக்கொண்டு ரிஷிகளோடுந் தமதாசிரமம் போய்ச்சேர்ந்தார். பிறகு சுதரிசனன், சுகர்ணனென்ற விருவரும் முனிசாபத்தால் மனம் நொந்து, தாங்கள் செய்யத்தக்க தின்னதென்று தீர்க்காலோசனை செய்துகொண்டு, யமுனதீரத்தில் வாசம் பண்ணிக்கொண்டிருந்த ஆசாரசீலனாகிய கோவிந்தசுவாமி யென்கிற பிராமணன் வயிற்றிற் பிறக்கிறதாக உத்தேசித்துத், தங்களுடைய வித்தியாதரசொரூபத்தைவிட்டு அந்தப்பிராமணன் வயிற்றில், சுதரிசனன், விஜயனென்ற பெயரோடும் இளையவனாகிய சுகர்ணன், அசோகதத்தன் என்ற பெயரோடும், பிறந்து வளர்ந்து வந்தார்கள். அவர்கள் யௌவனதசையடைந்த காலத்தில், யமுனதீரத்தில் மழையில்லாமையினாலே துவாதசவருஷ க்ஷாமமுண்டாகி, தங்கள் நாட்டார் வருந்தப்படுவதைக்கண்ட கோவிந்தசுவாமி யானவர் தமது புத்திரகளத்திரர்களோடும் புறப்பட்டுக் காசியை நோக்கிப் போகையில் பிரயாகையில் தங்கினபொழுது, அவ்விடத்தில் ஒரு ஆலவிருட்சத்தின் கீழ் கபாலமாலை பூண்டு தவஞ்செய்துகொண்டிருந்த முனிவரைக்கண்டு வணங்கினார். அந்த முனிவர் அவரையும், அவரது குமாரர் பத்தினி முதலானவர்களையும், ஆசீர்வதித்துக், கோவிந்தசுவாமியைப் பார்த்து “சீக்கிரத்தில் உன் புத்திரன் விஜயதத்தனுக்கும் உனக்கும் சம்பந்தம் நீங்கிப்போம்” என்றார். அது கேட்ட கோவிந்தசுவாமியானவர் அஸ்தமனமான பின் சந்தியாவந்தனாதி நித்தியகர்மங்களை முடித்துக்கொண்டு, தமது புத்திரர் பத்தினியுடன் வழிவந்த சிரமத்தினாலே யங்குள்ள ஒருபாழுங்கோவிலில் தங்கினார். அவ்விடத்தில் அசோகதத்தனும் அவன்தாயாரும் கீழே வஸ்திரங்களை விரித்துப்படுத்துக்கொண்டு தூங்கிவிட்டார்கள். விஜயதத்தன் வழிநடந்தவருத்தத்தினாலே சோர்ந்து குளிர்சுரம்கண்டு தன் தந்தையைநோக்கித் தன்னை அணைத்துப்படுத்துக் கொள்ளவேண்டினான். அவருமப்படியே செய்தும் குளிர் நீங்காமையால், தன் பிதாவைநோக்கி “தந்தையே, எனக்குக்குளிர்வருத்த மிருக்கிறபடியால், எங்கிருந்தாவது நெருப்புக்கொண்டுவாரும்.” என்று பிரார்த்திக்க, அவரும் அப்படியே

நாலாபக்கமும் போய்ப்பார்த்தும் நெருப்பு அகப்படாமையால் திரும்பிவந்து, "அப்பா! நாலுபக்கங்களில் தேடிப்பார்த்தும் நெருப்பு கிடைக்கவில்லை, இது நடுராத்திரியாகையால் பட்டணத்து ஜனங்கள் கதவடைத்துக்கொண்டு தூங்குவார்கள்; ஆனகையால் நெருப்புக்கிடைக்காது." என்று சொல்ல, விஜயதத்தன் குளிர்பொறுக்கமாட்டாமல் மறுபடியுந் தந்தையை நோக்கி, "நெருப்புக்கொண்டு வாரும்." என்று கெஞ்சி, "குளிர்சுரத்தால் வருத்துகிற என்னைப்பனிக்காற்றும் வருத்துகிறது. நீர் நெருப்பு அகப்படவில்லையென்ற வார்த்தை பொய். அதோ ஜுவாலையால் ஆகாயமளாவும்படி யெரிந்து கொண்டிருக்கிற நெருப்பைப்பாரும்; அதைப் போய்ச் சீக்கிரங்கொண்டு வாரும்; இல்லாவிட்டால் குளிர் தாங்க முடியாது" என்றான். தந்தையானவர் "அப்பா! நான்பொய்சொல்லவில்லை; அதோ ஆகாயமளவும் ஜுவாலை வீசி யெரிகிற இடம் சுடுகாடு; அந்த நெருப்பும் பிணம் சுடுகிறநெருப்பு; அது தொடத்தகாதது; அசுபமானது; தொடுகிறவர்களுக்கு ஆயுசு க்ஷீணித்துப்போம். ஆகையால், அப்பா! உன் ஆயுசு க்ஷீணித்துப்போகாதிருப்பதற்காக நான் அதைக்கொண்டு வரப்பிரியப்படவில்லை" என்று சொன்னார். "அப்பா! அது மயான அக்கினியானாலும், யாகாக்கினியானாலும், எதுவானாலும் கொண்டுவராவிட்டால் நான் குளிராலிறந்து போவேன்." என்று இரக்கமாய்த் தன் புத்திரன் சொல்லியது கேட்ட கோவிந்தசுவாமி யானவர் புத்திரவாஞ்சையால் அந்தச்சிதாக்கினியைக் கொண்டுவரும்படிபோனார். விஜயதத்தனும், பின் தொடர்ந்து சென்று, உஷ்ணத்தினால் கொதித்து வெடித்துக் கொண்டிருக்கிற அஸ்திநிறைந்த சிதையைக்கட்டிக்கொண்டு குளிர்தீர்ந்து சுகமடைந்து, பின் தன் தகப்பனைநோக்கி "வட்டமாயும், செந்தாமரைமலர்போலுமிருக்கிற அது என்ன" என்று கேட்டான். தந்தையானவர், "இது கபாலம்; நெருப்புஜுவாலை வட்டமாயெரிவதனாலும், ஊனீர், மாமிசம், இரத்தம் முதலியவை நிறைந்திருப்பதனாலும் இது உனக்குச்செந்தாமரைப்பூவைப்போலத் தோன்றுகிறது" என்றார். விஜயதத்தன் ஒரு கட்டையினாலே அந்தக்கபாலத்திலடித்தபொழுது ஊன் இரத்தப் முதலியவை அவன் முகத்தில் தெறித்தன. அவன் அதை நாவால் நக்கி ருசிபார்த்தவுடனே தெற்றுப்பல்லும், செம்பட்டை மயிருமுண்டாய் பயங்கர

மூன் பெரிய வேதாளசொரூபமுண்டாகி அட்டகாசம் செய்து நின்ருன். அந்த அட்டகாசத் தொனியினுல் பூமியாகாச மெல்லாம் வெடிபட்டன. பிறகு தன் தந்தையைப் பிடித்திழுத்துக் கொல்லப் போகையில் "அப்பா! இந்த அநியாயஞ் செய்யாதே" என்று ஒரு அசரீரவாக்குப் பிறந்ததைக்கேட்ட வேதாளம் பிதாவைவிட்டு விட்டு, ஆகாசமார்க்கமாகத் தடையின்றி வெகுதூரம் போய், வேதாளங்களுடன் கூடினபோது, வேதாளங்கள் கபாலத்தை யுடைத்து வேதாளரூபம் பெற்றமையாலவனுக்குக் கபாலஸ்போடனென்று பேரிட்டு, அவனைச் சூழ்ந்துபோய் நராஸ்திபூஷணன் என்ற வேதாளராஜனிடம் சேர்த்தன. மஹாபலவானுன அந்த வேதாளராஜனும் அவனைச் சேனுநாயகனுக்கிக்கொண்டான். பின்பு ஒரு காலத்தில் சித்திரசேனனென்ற கந்தர்வராஜன் நராஸ்திபூஷணனை யுத்தத்துக் கழைத்துச் சண்டையிட்டுக் கொன்றுவிட்டான். பிறகு கபாலஸ்போடன் அவன் பதவியடைந்து வேதாளங்களுக கரசனுன். கேளுங்கள் முனீசுவரரே! வித்தியாதர குமாரனுகிய சுதர்சனன் முனிவர் சாபத்தால் மனிதனுய்ப் பிறந்து, பின்பு வேதாளரூபம் பெற்று வேதாளங்களுக் கதிபதியானுன்.

எட்டாவது அத்தியாயம்
முற்றிற்று.

---

ஒன்பதாவது

## வேதாளவரத தீர்த்தத்தில் சுதரிசனன் சாபவிமோசனம் பெற்ற

அத்தியாயம்.

---

முடிந்தபிறகு கோவிந்தசுவாமி யானவர் புத்திர சோகத்தினுல் துக்கப்பட்டுத் தன் பத்தினி புத்திரனேடு கூடிப்புலம்பிக்கொண்டிருக்கையில், சமுத்திரதத்தன் என்னும் ஒரு காசிதேசத்து வியாபாரி அவரைத் தன் வீட்டுக்கழைத்துக்கொண்டுபோய், சமாதானப்படுத்தித் தன் சொத்துக்களுக் கதிகாரியாக்கினுன். அந்தப் பிராமணனும் முனிவர் வசனத்தைநினைத்துத் தன் மூத்தபுத்திரனைப் பார்க்கவேண்டு மென்கிறவிருப்பத்தோடு தன் பத்தினியோடும் அசோ

கதத்தனோடும் அவ்வணிகன்வீட்டில் வசித்துக்கொண்டிருந்தான். அசோகதத்தனென்பவன் அஸ்திர சஸ்திரவித்தையிலும், சாஸ்திரங்களிலும் வல்லவனாய்த், தனக்குச் சமானமில்லாதவனாய் அப்பட்டணத்திற் கீர்த்திபெற்று வாழ்ந்து வந்தான். இப்படியிருக்கையில் பிரதாபமகுடன் என்னும் காசிராஜனிடத்துக்குத் தட்சிணதேசத்திலிருந்து ஒரு மல்லன்வந்தான். அரசன் அந்த மல்லனை ஜயிக்கவிரும்பி, அதற்காகப்பலசாலியாகிய அசோகதத்தனை யேவலாளரால் வரவழைத்து, "அசோகத்தா! பலத்தினால் கருவங்கொண்டிருக்கிற இந்த தட்சிணதேசத்து மல்லனைப்பராக்கிரமசாலியாகிய நீ கொன்று ஜயித்தால், யாதொருசந்தேகமில்லாமல் உனது மனோவிருப்பங்களை யெல்லாம் நிறைவேற்றுகிறேன்" என்றான். அதைக்கேட்ட அசோகதத்தனும் தட்சிணநாட்டு மல்லனோடு போர்செய்து, அவனையடித்துக் கீழே விழுத்தினான். அந்த மல்லன் பொறிகலங்கி, உயிரிழந்து பூமியிற் பிணமாய் விழுந்தான். இப்படித்தேவர்களுக்கும் அசாத்தியமான காரியத்தைச் செய்து முடித்த அசோகதத்தனுக்கு அநேக திரவியமும் கிராமங்களுங் கொடுத்துத் தன் சமீபத்திலே வைத்துக்கொண்டான். அப்படி யிருக்கும்பொழுது ஒரு நாள் காசிராஜன் அசோகதத்தனோடு கூடக் குதிரையிலேறிச், சாயங்காலவேளையில் ஜனசஞ்சாரமில்லாத ஒரு இடத்தில் போய்க்கொண்டிருக்கையில், "ஓ மஹாராஜனே! நான் நிரபராதி. என் சத்துரு அடிக்கடி தூண்டிவிட்டபடியால் நியாயாதிபதி யென்னைக் கழுமரத்திலேற்றினான். கழுவிலேற்றி நாலுநாளாயிற்று. அநியாயம் செய்தவர்களுடைய பிராணனெளிதிற் போவதில்லை. ஓ மஹாராஜனே, நான் தாகத்தினாலே மிக வருந்துகிறேன்." என்ற இரக்கமான வசனத்தைக்கேட்டு, சமீபத்திலிருந்த தைரிய புருஷனான அசோகதத்தனைப் பார்த்து, "அப்பா! நிரபராதியாய்க் கழுவிலேற்றப்பட்டுத் தாகத்தால் தவிக்கிற இந்த ஜீவனுக்கு எவ்வகையிலாவது தண்ணீர் கொடுக்கவேண்டும்." என்று சொல்ல, அசோகத்தன், குடத்தில் தண்ணீரெடுத்துக் கொண்டு, அந்தமனிதனுக்குக் கொடுக்கும் பொருட்டுப் பூதவேதாளங்கள் நிறைந்த மயானத்துக்குப் போனபோது, கழுமரத்தின் கீழே ரதிதேவியையொத்த சௌந்தரிய வதியான ஒரு யௌவனமாதைக்கண்டு, தைரியம் விடாமல், "அழகிய பெண்ணே! நீ யார்?

நிர்ஜனமான மயானத்துக்கு வந்த காரணமென்ன? இந்தக் கழு மரத்தின் கீழிருப்பானேன்?" என்று கேட்டான். அந்தமாது, "ஐயா! எனது பிராணநாதனை யிராஜன் கழுவிலேற்றிவிட்டான்; லோபியானவன் பணத்தை விடாதிருப்பதுபோல இவனும் தன் பிராணனைக்கொஞ்சத்தில் விடாமல் வருத்தப்படுகிறான்; இவனுடன் அநுமரணஞ்செய்ய வந்திருக்கிறேன்; இவன் தாகத்தினால் வருந்தித் தண்ணீர் கொடுவென்பதைக் கேட்க எனக்கு மிகவருத்தமாயிருக்கிறது; கழுமரத்திலேறிக் கழுத்தண்ணுற் திருப்பதினால் என்னால் நீர்கொடுக்க முடியவில்லை." என்று சொன்னதைக்கேட்டுத், தயாசமுத்திரனாகிய அசோகதத்தன் "அம்மா! என் தோளின் மேலேறி யிவனுக்குக் குளிர்ந்த ஜலங்கொடு" என்று சொல்ல, அந்தப்பெண்ணும் அப்படியே சம்மதித்துக், குனிந்து நிற்கும் அவனுடைய தோளின் மேலேறியபின், புதியதான இரத்தஞ் சொட்டுவதைக் கண்ட அசோகதத்தன் "இதென்ன!" என்று அண்ணாந்துபார்க்க, அவள் அந்தப் பிணத்தைத் தின்கிறதைக்கண்டு, அவளுடைய சிலம்பணிந்த காலைப் பிடித்துக்கொண்டான். அந்தப்பெண் விலையுயர்ந்த புதிய பலரத்தினங்களிழைத்த சிலம்பை விட்டு விட்டு அதிவேகமாக ஆகாசமார்க்கத்தில் போய்விட்டாள். அசோகதத்தன் தன் கையிலகப்பட்ட அந்த நூபுரத்தை எடுத்துக் கொண்டு அரசனிடம் போய் மயானத்தில் நடந்ததைச் சொல்லி யந்தப்பாதசரத்தையுங் கொடுத்தான். அது கண்டகாசிராஜன், மற்றவர்களாற்செய்து முடிப்பதற் கருமையான காரியத்தை யிவன் செய்து முடித்தானென்று மகிழ்ந்து தன் குமாரத்தியான மதனலேகை யென்னும்பெண்ணை அசோகதத்தனுக்குக் கொடுத்தான். பிறகொருநாள் இராஜன் அந்த அழகான நூபுரத்தைப் பார்த்து, இதற்கு ஜோடியான மற்றொரு நூபுரத்தை யெப்படிச்சம்பாதிக்கிறதென்று யோசித்துக் கொண்டிருக்கையில், அசோகதத்தன், அது கண்டு, அதைச்சம்பாதிக்கு மார்க்கத்தை யோசித்து, "இது நமக்கு மயானத்தில் கிடைத்தது; மற்றொன்றுசம்பாதிப்பதற்காக அவளை யெவ்விடத்தில் காண்பது" என்று பலவாறு சிந்தித்து, "நாம்மயானத்துக்குப்போய் நரமாமிசம் விற்பனைசெய்வோம்; பூதப்பிரேத பிசாசங்களை மந்திரத்தினாலழைப்போம்; அப்பொழுது அந்தராட்சதியும் வருவாள்; வந்த அவளைப்பிடித்துக்கொண்டு மற்றொருசிலம்பையும் பிடுங்கிக்கொள்வோம்; அனேகமா

பிரம் வேதாளங்களும், பூதங்களும், ராட்சதர்களும் வந்தெதிர்த்தா லும் பலசாலியான நமக்கு இலட்சியமில்லை.” என்று தன் மன தில் தீர்மானஞ்செய்துகொண்டு, மயானம்போய், மாம்சத்தை வைத் துக்கொண்டு, மந்திரத்தினால் பூதப்பிரேத பிசாசகணங்களை யழை த்து, “ நானிங்கே மாம்சவிற்பனை செய்கிறேன். ” என்று இராத்திரி யில் கூவிக்கொண்டிருந்தான். அப்பொழுது இராட்சச, பூதவே தாள,பிசாசகணங்களெல்லாம்,“அடா, நமக்கிஷ்டமான மாமிசத்தை ச்சாப்பிடலாம்”என்றுசந்தோஷத்தோடுவர, அந்தராட்சதியும்அநே க ராட்சசப்பெண்கள் சூழ, மாமிசந்தின்பதற்கு ஆவலோடும் வந் தாள். அவளையே தேடிக்கொண்டிருந்த அசோகதத்தன் அவளைக்க ண்டு,“நாம்முன்புகண்டது இவள்தான்”என்றறிந்து, அவளைநோக்கி, “அம்மா மற்றொருசிலம்பையு மெனக்குத்தரவேண்டும்”என்று கேட் டான். அந்த வித்யுத்கேசியென்ற ராட்சதியும் மனமகிழ்ந்து,“வசூரா! முன்னாலே என்சிலம்பைக் கவர்ந்தவனீயாகையால் மற்றொருசிலம் பையும் பெற்றுக்கொள்” என்று சிலம்பையும், வித்யுத்பிரபை என்கிற தன்பெண்ணையு மவனுக்குக்கொடுத்துத், தன்மருமகனாகிய அவனு க்கு ஒரு சொர்ணதாமரைமலரையுங் கொடுத்தாள். அசோகதத்தன் தன்மாமியாரிடத்தில் செலவுபெற்று அந்தப்பெண்ணையு மழைத் துக்கொண்டு இராஜனிடம்வந்தான். அதுகண்ட இராஜன் அவனு டையதைரிய வீரங்களுக்காகஅவனை மெச்சிக்கொண்டான். பின்பு, அசோகதத்தன் தன் மனைவியாகிய வித்யுத்பிரபையோடு சுகமாக வாழ்ந்து வருகையிலொருநாள் அவளைப்பார்த்து “ பெண்ணே, உன்தாயார் இந்தச் சொர்ணபுஷ்பங் கொடுத்தாளே; அது அவளுக் கெப்படிக்கிடைத்தது? இதுமாதிரியான மலர்கள் எங்கேஅகப்படும்” என்று கேட்டான். வித்யுத்பிரபை யானவள், “பிராணநாதா! கபாலஸ் போட னென்கிற வேதாள சக்கிரவர்த்திக்கு ஒருதிவ்யமான தடாக மிருக்கிறது. அதிலனேகமான சொர்ணதாமரைமலருண்டு. அங்கே உமது மாமியார்ஜலக்கிரீடை செய்யப்போனகாலத்தில் ஒருமலர் கொண்டுவந்தாள்” என்றுசொல்ல, அசோகதத்தன் “அப்படியானால் என்னை அவ்விடத்துக்கு அழைத்துக்கொண்டுபோ” என்று சொ ல்ல, அவள் அப்படியே யிந்தச் சொர்ணதடாகத்தருகிற் கொண்டு போய்விட்டாள். பிறகு அசோகதத்தன் குளத்திலுள்ள சொர்ணம லரைப் பறிக்கத்தொடங்குகையில், அங்கே காவலாயிருந்த வேதா

ஷிகள் மறிக்க, அவன் அவர்களைக் கொல்ல, அதுகேட்ட கபாலஸ் போடன் தன் சேனைகளோடு சண்டைக்குவந்தான். அசோகதத்தன் கபாலஸ்போடனையுங் கொல்லத் தொடங்குகையில், விஜ்ஞப்திகோளதுகன் என்கிற வித்யாதரராஜன் விமானத்தின் மேலேறிவந்து, "அசோகதத்தா! இந்த அநியாயமான காரியத்தைச் செய்யமுயலாதே" என்று கூற, விமானத்தில் பிரகாசித்துக்கொண்டிருந்த வித்தியாதரராஜனைப் பார்த்தமாத்திரத்தில் அசோகதத்தனுக்கு மனிதரூபம்போய், திவ்யாபரண பூஷிதமான வித்யாதரசொரூபம் வரச் சாபமும் நீங்கி, விமானத்திலேறினன். அப்பொழுது விஜ்ஞப்திகோளதுகன் அசோகதத்தனைப் பார்த்து, "அப்பா சுகர்ண! உன்சகோதரனு சுதரிசனன் காலவ மஹாரிஷி புத்திரியைப் பலாத்காரஞ் செய்த பாபத்தினுலே சாபம் பெற்று வேதாளமானுன். நீயுமந்தச் செய்கைக்குடன்பட்டிருந்ததனுலுனக்கும் சாபம் வந்தது. நீ அற்பமான பாபம் செய்தபடியால் என்னைக்காணும்போது உனக்குச் சாப்விமோசனமென்று காலவ மஹாரிஷியானவர் காலஎல்லையிட்டிருந்தார். உன் சகோதரன் சாபத்துக் கெல்லை கூறவில்லை. ஆகையால் சாபம்நீங்கின நீ யென்னுேடுகூடச் சொர்க்கம் வந்துவிடு" என்றுன். சுகர்ணன் அதுகேட்டு வித்தியாதராதிபதியைப் பார்த்து "ஐயா! என்மூத்த சகோதரனை விட்டுவிட்டுச் சகல சுகங்களும் நிறைந்த சொர்க்கத்துக்கு நான் போகமாட்டேன். என்சகோதரனுடைய சாபம் நீங்கும் மார்க்கத்தை நீர் எனக்குச் சொல்லவேண்டும்." என்று கேட்க, வித்தியாதராதிபதி, "நீங்குதற்கரிய சாபத்தை யாரால் நீக்கமுடியும்? ஆனுலும் பூர்வம் பிரமதேவர் சனகாதிகளுக்குச் சொன்ன அதிக ரகசியத்தை யுனக்குச்சொல்லுகிறேன் கேள். சகல தீர்த்தங்களும் நிறைந்த புண்ணியமான தென்சமுத்திரக் கரையில் சக்கிரதீர்த்தத்தின் சமீபத்தில் பார்த்தமாத்திரத்தில் சகல பாபங்களையும் விலக்கத்தக்க பெருமையுள்ள தீர்த்தமொன்றிருக்கிறது. அதில் ஸ்நானஞ் செய்வதினுல் வருகிற புண்ணியபலன் இவ்வளவென்று சொல்லமுடியாது. உன் தமையன் அதில் ஸ்நானம் பண்ணினுல் அவனுக்குக் காலவ மஹாரிஷியின் சாபத்தினுல் வந்த வேதாளரூபம் நீங்கிப்போம்." என்று சொன்னதைச் சுகர்ணன் கேட்டுத், தன் சகோதரனை யழைத்துக்கொண்டு, பிரமதேவரால் சனகாதியர்க்குச் சொல்லியதும், சக்கிரதீர்த்தத்

துக்குத் தென் புறத்திலும் கந்தமாதன பர்வதத்துக்கு வடக்கி லுமுள்ள தீர்த்தத்தருகில் வந்து, சகோதரனைப் பார்த்து, "அண்ணா, காலவ மஹாரிஷியின் கோரமான சாபம் நீங்குவதற்காக இந்த உத்தம தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணும்" என்று சொன்னான். கேளுங்கள் ரிஷீசுவரர்களே! அந்தச் சமையத்தில் அந்தத் தீர்த்தத்தின் நீர்த்துளிகள் காற்றினால் வேதாளத்தின் மேற்பட்ட மாத்திரத்தில் வேதாள சொரூபம் விலகிப் பழைய பிராமணவடிவம் வந்துவிட்டது. பிறகு சங்கற்பஞ் செய்துகொண்டு அந்தத் தீர்த்தத்தில் தனது மானிடத்தன்மை நீங்குவதற்காக ஸ்நானஞ் செய்து எழுந்தமாத்திரத்திலே திவ்வமான வித்தியாதரசொரூபம் வந்துவிட்டது. உடனே திவ்யாபரண பூஷிதனாகித் தேவஸ்திரீகள் தன்னைச் சூழ்ந்துவரத் தன் சகோதரனோடு தேவவிமானத்திலேறி, யந்தத் தீர்த்தத்தைப் புகழ்ந்துகொண்டு, விஞ்ஞப்தி கௌதுக்னை முன்னிட்டுக்கொண்டு சொர்க்கலோகம் போய்ச்சேர்ந்தான். கேளுங்கள் முனிவர்களே! அந்தத் தீர்த்தத்தின் துளிகள் பட்ட மாத்திரத்தில் வேதாளத்துருவம் நீங்கினதினால் அதற்கு வேதாளவரதமென்று பேராயிற்று. அந்தத்தீர்த்தத்தில் எப்பொழுதாவது ஸ்நானம் பண்ணினவர்கள் ஜீவன் முத்தர்களாய் விடுவார்கள். இந்தத் தீர்த்தத்துக்குச் சமானமான தீர்த்தமுங்கிடையாது. இனி மேல் உண்டாகப்போவதுமில்லை. இந்தச் சுபகரமான வேதாள வரததீர்த்தத்தில் சங்கற்ப பூர்வமாய் ஸ்நானம் பண்ணி நியமத்துடன் பிதுர்க்களுக்குப் பிண்டதானஞ் செய்யவேண்டியது. முனிவர்களே! இம்மாதிரியாக அந்தத்தீர்த்தத்தின் வரலாற்றையும், அதன் பெயரின் காரணத்தையு முங்களுக்குச் சொல்லிவிட்டேன்; இந்தச் சரித்திரத்தைக் கேட்டவர்களும், படித்தவர்களும் முத்தராவார்கள்.

## ஒன்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.





பத்தா[illegible]து

## பாபவிநாச தீர்த்த[illegible]

அத்தியா[illegible]

பிராமணோத்தமர்களே ! இந்த வே[illegible]த்தில் ஸ்நானம் பண்ணிவிட்டுக் கந்தமாதன மலைக்குப் போகவேண்டும். இந்தக் கந்தமாதன பர்வதமானது சமுத்திரத்தில் சேது ரூபமாயிருக்கின்றது. இது பிரமலோகத்துக்குப் போகுமார்க்கமாக விசுவகர்த்தாவால் நியமிக்கப்பட்டது. இந்தப் பருவதத்தில் அநந்தமான புஷ்கரணிகளும், நதிகளும், சமுத்திரங்களும், புண்ணியவனங்களும், ஆசிரமங்களும், வேதாரணிய முதலான க்ஷேத்திரங்களும், வசிஷ்டர் முதலான மஹாரிஷிகளும், சித்தர், சாரணர், கின்னரர்களும், பூதேவியோடுகூட ஸ்ரீமஹா விஷ்ணுவும், சாவித்திரி, சரஸ்வதியோடு பிரமதேவரும், விக்நேசுவரரும், சுப்பிரமணியக் கடவுளும், இந்திரன் முதலான தேவர்களும், ஆதித்தியாதி நவகிரகங்களும், அஷ்டவசுக்களும், பிதுர்தேவதைகளும், லோகபாலர்களும், கௌரியோடுகூட ஸ்ரீபரமேசுவரரும், மற்றுமுள்ள தேவகணங்களும், இரவும் பகலும் வசித்துக்கொண்டிருக்கிறார்கள். மஹாபாதககூட்டங்களையெல்லாம் நாசம் பண்ணுகிற இந்தப்பருவதத்தில் கின்னர ஸ்திரீகளெல்லாரு மெப்பொழுதும் விளையாடிக்கொண்டிருக்கிறார்கள். அதன் சிகரத்தில் வாசம்பண்ணுகிற சித்த சாரணஸ்திரீகள் எப்பொழுதும் பார்வதீகாந்தனாகிய பரமசிவனைப் பூஜை பண்ணிக்கொண்டிருக்கிறார்கள். இப்பர்வதத்தைக் கண்டவுடனே மனிதர்களுக்கு ஞானம் உண்டாகிறது. இந்தக் கந்தமாதன பருவதத்தினின்றும் வீசுகிறகாற்று மேலே பட்டமாத்திரத்தில் அநேகம் பிரமஹத்தி பாதகங்களும், போகத்தகாத இடங்களுக்குப் போவதனாலுண்டான பாபங்களும் உடனே நசித்துப்போகின்றன. அந்தக் கந்தமாதன பர்வதம் முன்பு அலைகளாற் பொங்கிக்கொண்டிருக்கிற சமுத்திர மத்தியில் ரிஷீசுவரர்களாலே மாத்திரம் தரிசிக்கத்தக்கதா யிருந்தது. பின் நளன் சேது கட்டினபொழுது சமுத்திரமத்தியி லிருந்த கந்தமாதனமானது யாவருங்கண்டு தரிசிக்கும்படியாயிற்று. அப்படிப்பட்ட

கந்தமாதனத்தைப் பார்த்து, "சமஸ்த தேவர்களுக்கும் வாச ஸ்தானமாயுள்ள புண்ணியபருவதமே! விஷ்ணுவாதி தேவர்களும் கூட உன்னைச் சிரத்தையுடன் வணங்குகிறார்கள். அப்பேர்ப்பட்ட உன்பேரில் நான் கால்வைத்து நடக்கிறேன். நீ யென்மேலே தயவுசெய்து அந்தக்குற்றத்தைப் பொறுத்துக் கொள்ளவேண்டும். உன் உச்சியில் வசிக்கிற சங்கரனை நான் தரிசிக்கும்படிசெய்யவேண்டும்" என்று பிரார்த்தித்துக்கொண்டு, மெதுவாக நடக்கவேண்டும். பிறகு அதனருகிலுள்ள சமுத்திரத்தில் ஸ்நானம் பண்ணிக் கந்தமாதன பர்வதத்தில் கடுகளவாவது பிண்டம் போடவேண்டும். அதனால் அவனது பிதுர்தேவதைகள் கற்பாந்தம் வரையில் திருப்தியடைகிறார்கள். வன்னியிலையளவு பிண்டம் போட்டாலும் சொர்க்கத்திலுள்ள பிதுர்க்கள் மோட்சத்தையும், நரகத்தில் அவஸ்தைப்படுகிற பிதுர்க்கள் சொர்க்கத்தையுமடைகிறார்கள். அந்த மலையின்மேலே லோகபிரசித்தி பெற்றதும், சர்வதீர்த்தோத்தமமுமான பாபநாசமென்கிற ஒரு புண்ணிய தீர்த்தமிருக்கிறது. அதை நினைத்தமாத்திரத்தில் அவனுக்குக் கர்ப்பவாசமே கிடையாது. அந்தத் தீர்த்தத்தில் எவனும் தன் பாபநிவர்த்திக்காக ஸ்நானம் செய்யவேண்டும். ஸ்நானஞ் செய்தவன் தடையில்லாமல் வைகுண்டத்தை யடைகிறான்.

இப்படிச் சொல்லிவந்த சூதமுனிவரைப் பார்த்து ரிஷீசுவரர்கள், வியாசமஹரிஷியிடத்தில் கேட்டுத்தெரிந்த உமக்கு எல்லாந் தெரியுமாகையால் அந்தப் பாபநாசதீர்த்த மகிமையை எங்களுக்குச் சொல்லியருளவேண்டும் என்று வினவ, சூதர் சொல்லத் தொடங்கினர். பிராமணோத்தமர்களே! ஹிமவத்பருவதத்தின் பக்கத்தில் இருக்கிற பிரமாசிரமத்தில் நடந்த புண்ணியகதையைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

பிரமாசிரம மென்னுமிடத்தி லிருக்கிற அநேக விருட்சங்களடர்ந்ததும், பலவகையான செடிகொடிகள் நிறைந்ததும், பலமிருகங்களுக்கு இருப்பிடமானதும், சித்தர், சாரணர்கள் கூடியிருக்கப் பெற்றதும், பூஞ்சோலைகளுள்ளதும், அனேக விரதிகள் வசிக்கப் பெற்றதும், அளவில்லாத தபசிகளால் விளங்கப் பெற்றதும், சூரியன், அக்கினிகளுக்கு ஒப்பான அநந்தமான தபவிரதங்களையுடைய

பிராமணோத்தமர்கள் மிகுந்திருப்பதும், மிதபோஜன முடையவர் களாயும், யோகாநுஷ்டான முள்ளவர்களாயும், வேதாத்தியயன சம்பன்னர்களாயும், வேதமார்க்கந்தவறாதவர்களாயு மிருக்கிற தீட் சிதர்களாற் சூழப்பெற்றதும், தத்தம் வருணாசிரமாநுஷ்டானந் தவறாத பிரமசாரிகள், கிருகஸ்தர், வானப்பிரஸ்தர், சந்நியாசிகள், வாலகில்லியர்கள், பரிசுத்தமான மரீசிபர்கள் முதலிய ரிஷிக்கூட் டங்களால் நிறைந்ததுமான, ஒரு புண்ணிய ஆசிரமமிருந்தது. திருடமதியென்கிற தைரியமுள்ள ஒரு சூத்திரன் பிராமணர்கள் வசிக்கிற அந்த ஆசிரமத்துக்கு வந்து, அந்தப் பிராமணர்களுக்கு ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, அவர்களாலடையத்தக்க மரியா தையைப் பெற்றுக்கொண்டு, யாகயக்ஞங்கள் செய்து பிரமதேஜ ஸால் விளங்குகிற தேவர்களுக்குச் சமானமான அந்த ரிஷிகணங் களைக்கண்டு சந்தோஷங்கொண்டு, அவர்களைப்போலத் தானும் யாகஞ்செய்யவிரும்பி, அந்த ரிஷித்தலைவரிடத்திற்போய், "சுவாமி! கிருபாமூர்த்தியே! நானுமக்குவேண்டிய பணிவிடைகளைச் செய் கிறேன்; நானும் யாகஞ்செய்ய விரும்புகிறேன்; எனக்கு யாகதீட் சை செய்துவைத்துக் காப்பாற்றும்; நான் கீழ்ப்பட்ட சூத்திர ஜாதி; தங்களுக்குச் சிசுருஷை செய்யவந்திருக்கிறேன்; கருணை கூர்ந்தருளும்." என்று பிரார்த்தித்தான்.

அதுகேட்ட ரிஷித்தலைவரும், "அப்பா! ஈனமான சூத்திரஜாதி யிற் பிறந்தவனுக்கு யாகதீட்சை செய்துவைக்கலாகாது. உனக் கிஷ்டமிருந்தால் சிசுருஷைசெய்துகொண்டிரு. கீழ்ச்சாதியானுக் குபதேசஞ் செய்துவைக்கும் ஆசாரியருக்கும் பெரியதோஷம் வரும். புத்திசாலியானவன் சூத்திரனுக்கு யாகம் பண்ணிவைக்கக் கூடாது. வியாகரணம், நாடகம், காவியம், புராணம், இதிகாசம், அலங்காரம் இவைகள் ஒன்றையுஞ் சொல்லிவைக்கக்கூடாது. அப் படி யொருபிராமணன் சூத்திரனுக்குச் சொல்லிவைப்பானானால் அந்தப் பிராமணனைப் பிராமணர்கள் கிராமத்தைவிட்டுத் தூரத்திச் சண்டாளனைப்போல ஒதுக்கிவைக்கவேண்டும். படித்த சூத்திரனை யும் தூரத்தில் தள்ளிவைக்கவேண்டும். ஆகையால் அப்பா! நீ சிரத்தையோடு பிராமணர்களுக்குச் சிசுருஷை செய்வதே தகுந் தது. சூத்திரன் பிராமணருக்குச் சிசுருஷை செய்யவேண்டிய தென்றே மனுவாதிஸ்மிருதிகர்த்தர்களாலும் விதிக்கப்பட்டிருக்

கிறது. உனக்கியல்பாக ஏற்பட்ட கர்மத்தை விடுவது உனக்கு நியாயமல்ல." என்று முனிவர் சொன்னதைக் கேட்ட சூத்திரன், "இப்பொழுது நாமென்ன செய்கிறது? நமக்கு யாகஞ்செய்யவிருப்பமிருக்கிறது. எப்படி ஞானமடையத்தக்கதோ அந்த மார்க்கத்தைத் தேடுவோம்." என்று மனதிலுறுதி செய்துகொண்டு, அவ்வாசிரமத்துக்கு வெகு தூரத்தில் ஒரு ஆசிரமம், தேவாலயம், புண்ணியமடங்கள், புஷ்பத்தோட்டம், தடாகங்கள் முதலானவைகளையுஞ் செய்துமுடித்துக், கந்தமூல பலாதிகளைப்புஜித்து, இந்திரியங்களையடக்கி, ஸ்நான விரதஹோமாநுஷ்டானங்களையுஞ்செய்து, உபவாசஞ்செய்து, வந்த அதிதிகளுக்குப் பூஜைசெய்துகொண்டு, வெகு காலங்கழித்துவந்தான். ஒரு நாள் சத்தியவந்தரும், கர்க்கர்குல சிரேஷ்டருமான சுமதி யென்றொருபிராமணோத்தமர் அந்த ஆசிரமத்துக்கு வந்தார். அப்பொழுது அவன் வாருங்களென்று கூறிநமஸ்கரித்து, கந்தமூலபலாதிகளா லுபசரித்துத் திருப்திசெய்வித்து, யோகக்ஷேமங்களைவிசாரித்து, புண்ணியகதைகளைசொல்ல, அவனை யந்தப்பிராமணரும் ஆசீர்வாதமுதலியகூறி மகிழ்வித்தார். இப்படியே அவர் அடிக்கடி வருவதுவழக்கமாயிற்று. அந்தச் சூத்திரனிடத்தில் விசுவாசமுடையவராதலால் அவன் வார்த்தையைத் தட்டுவதில்லை. இப்படிச் சிநேகத்தினால் வசப்பட்ட பிராமணரைப்பார்த்து, "ஹவ்ய கவ்யவிதிகளும், பிதுர்க்காரியவிதியும், தேவகாரியவிதிகளும், மஹாளயவிதியும், அஷ்டகாசிராத்தவிதியும், இன்னுமற்றுமுள்ள வைதிக கர்மவிதிகளையு மெனக்குபதேசம பண்ணித் தாங்களே யெனக்குக் குருவாயிருந்து நடத்துவிக்க வேண்டும்." என்று பிரார்த்திக்க, அவரும் அப்படியே பிதுர்க்காரியாதிகளையுஞ் செய்வித்தார். இப்படியே வெகுகாலமாகச் சூத்திரனுக்கு வைதிக கிருத்தியங்களைச் செய்வித்துக்கொண்டு அவனாற் போஷிக்கப்பட்டு வந்த பிராமணனைச் சகலபிராமணர்களும் விலக்கி விட்டார்கள். பிறகு அவனிறந்து போக, யமதூதர்கள் அவனை யமலோகங்கொண்டு போய்க் கொடிய நரகங்களில் தள்ள, பல கற்பகாலம் நரகத்தில் அவதிப்பட்டுக், கடைசியில ஸ்தாவரமாகவும், கழுதையாகவும், மலத்தைப்புஜித்து ஜீவிக்கிற பன்றியாகவும், நாயாகவும், காக்கையாகவும், சண்டாளனாகவும், சூத்திரனாகவும், வைசியனாகவும், க்ஷத்திரியனாகவும் பிறந்து, பலசாலிகளால் வதை செய்

யப்பட்டிறந்து, பின்பு பிராமணனாக ஜனித்து, ஏழாவது வயதில் தந்தையால் உபநயனஞ்செய்யப் பெற்றுத், தன் குலாசாரத்தைக் கைவிடாமல் வளர்ந்து வருங்காலத்தி லொருநாள் வனத்துக்குப் போனபோது ஓர் பிரமரட்சசு பிடித்துக்கொண்டது. அதனால், பித்துப்பிடித்தவன்போலச் சில சமயம் அழுகிறதும், ஓடுகிறதும், சுற்றுகிறதும், இடறிவிழுகிறதும், உரக்கச் சிறிக்கிறதும், ஐயோ! ஐயோ! வென்கிறதுமாகி வைதிககிருத்தியங்களை மறந்துவிட்டுத் திரிந்துகொண்டிருந்தான். இப்படியாக இருந்த தன் குமாரனைத் தந்தை கண்டு மெத்தவருந்தி, அவனை யழைத்துக்கொண்டு அகஸ்தியமுனிவராசிரமம் போய், அவரைப்பணிந்து, "சுவாமி! இவன் எனக்கு ஒரேகுமாரன்; பிதுர்க்கிருத்தியஞ்செய்ய இவனைத் தவிர வேறுபுத்திரனில்லை; இவனைப்பிரமரட்சசு பிடித்துக்கொண்டு வருத்துகிறது; அது இவனைவிட்டு விலகவும், இவன் சுகமடையவு முபாயத்தைக் கூறியருளவேண்டும். தேவரீருக்குச் சமானமான தவசிரேஷ்டர் மூன்று லோகங்களிலுமில்லை; சிவபக்தாக்கிரேச ரென்று மஹரிஷிகள் சொல்லுகிறார்கள். உம்மைத்தவிர என் புத்திரனைக் காப்பாற்றுவோர் வேறொருவருமில்லை; தங்களைப்போன்ற சாதுக்கள் தயாசீலர்களாதலால் என் புத்திரனிடங் கிருபை கூர்ந்தருளவேண்டும்." என்று பிரார்த்தித்தான்.

அது கேட்ட கும்பயோனியும் சிறிதுநேரந் தியானத்திலிருந்து, பிராமணனைப்பார்த்து, "ஐயா பிராமணரே! உமது குமாரன் பூர்வஜன்மத்தில் சுமதியென்ற பிராமணன்; ஒரு சூத்திரனுக்கு வேதமந்திரங்களை யுபதேசித்து வைதிக கிருத்தியங்களைச் செய்வித்தபடியால் அநேககோடி கற்பகாலம் நரகத்திற்கிடந்து, பின் ஸ்தாவராதியோனிகளில் ஜனித்து, இப்பொழுது கர்மசேஷத்தால் பிராமணனாய்ப்பிறந்து, யமனாலனுப்பப்பட்ட பிரமரட்சசால் பிடிக்கப்பட்டு அலைகிறான்; அந்தப் பிரமரட்சசு நீங்குமுபாயமொன்று சொல்லுகிறேன் கேளும். தட்சிண சமுத்திரக்கரையில் தேவர்கள் சேவிக்கும்படியான கந்தமாதனபருவதமென்றொரு பரிசுத்தமலை யுண்டு. அதனுச்சியில் சகலபாபங்களையும் போக்குகிற பரிசுத்தமான பாபநாசனமென்ற புண்ணியதீர்த்தம் ஒன்றுண்டு; அது பூதப்ரேதபிசாச பிரமரட்சச வேதாளாதி துர்தேவதைகளாலுண்டாகும் துன்பத்தையும், தீராதரோகங்களையும் நிவர்த்திக்கு மகிமை

யுள்ளது; ஆகையால் உமது குமாரனையழைத்துக்கொண்டு சேது மத்தியிலிருக்கிற அந்தத் தீர்த்தத்தில் ஆசாரத்தோடு மூன்றுநாள் அவனை ஸ்நானம் பண்ணுவித்தால் பிரமராக்ஷசு விலகிப்போம்; இதைத்தவிர வேறு உபாயம் பூலோகத்தில் கிடையாது. ஆகையால், பிராமணரே! தாமதஞ்செய்யாமல் சீக்கிரமாக முக்தியைக்கொடுக்கும் இராமசேதுவுக்குப்போய் உமது புத்திரனை ஸ்நானஞ்செய்வியும், போம்." என்றார். அது கேட்டப் பிராமணன் அகஸ்திய முனிவருக்குத் தண்டாகாரமாக நமஸ்கரித்து, அநுக்ஞை பெற்றுத் தன் குமாரனையழைத்துக்கொண்டு கந்தமாதனம்போய்ச், சங்கற்ப பூர்வமாக பாபநாசன தீர்தத்தில் மூன்றுநாள் ஸ்நானம் பண்ணுவித்துத், தானும் ஸ்நானம்செய்தான். அதில் ஸ்நானஞ்செய்த பிரபாவத்தால் அந்தப் பிராமணபுத்திரன் பிரமரட்சசும் ரோகங்களும் நீங்கி யாரோக்கியமடைந்து, சுந்தரசரீரமுடையவனுய்ச் சகல போகபாக்கியங்களையுமனுபவித்துத் தேகாந்தத்தில் முக்தியடைந்தான். அவனது தந்தையும் பாபநாச தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்த விசேஷத்தினுல் தேகாந்தத்தில் மோட்சபதம் பெற்றான். சுமதியிடத்திலுபதேசம் பெற்ற சூத்திரனும் அநேக காலம் பல பல நரகங்களையனுபவித்து, அநேக ஜனஜன்மங்களெடுத்துக் கடைசியில் கந்தமாதன பருவதத்தில் கழுதையாகப்பிறந்து திரிகையிலொருநாள் தண்ணீர் குடிக்கும்பொருட்டுப் பாபநாசன தீர்த்தத்துக்குவந்து குளித்து நீர்குடித்தது. உடனே கழுதை வடிவம் நீங்கி தேவசொரூபமடைந்து, திவ்ய வஸ்திராபரண கந்த மாலாதி பூஷணலங்கிருதனுய்த் தேவவிமானத்திலேறி, அப்சர ஸ்திரீகள் சாமரைவீசிக் குடைபிடிக்க அமராவதிபோய்ச் சேர்ந்தான்.

கேட்டீர்களோ, முனிவர்களே! இந்தப் பாபநாசன தீர்த்தம் சொர்க்கமோட்சங்களைக் கொடுக்கத்தக்கதும், சகல பாபங்களையும் போக்கத்தக்கதும், பிரம, விஷ்ணு, மகேசுவரன் முதலானவர்களாற் சேவிக்கப்பட்டதுமான மகிமையுடையது. இது பாபங்களை நிவர்த்தி செய்யுந்தன்மையுடையதாகையாலிதற்குப் பாபநாசன தீர்த்தமென்றுபேர். கொடியதான துர்க்காரியங்களைச் செய்த பிராமண

னுக்கும், சூத்திரனுக்கும் மோட்சங்கொடுத்ததான பாபநாசன தீர்த்த ரகசியத்தை யுங்களுக்குச் சொல்லிவிட்டேன்.

பத்தாவது அத்தியாயம்

முற்றிற்று.



## பதினோராவது சீதா தீர்த்த மகிமையில் இந்திரன் பிரம்மஹத்தி நீங்கினகதை உரைத்த அத்தியாயம்.



சூதமுனிவர் சௌனகாதி முனிவர்களைப் பார்த்துச்சொல்லுகிறார். கேட்டீர்களோ, முனிவர்களே! சமஸ்தமான பாபங்களையு நிவர்த்தி செய்கிற பாபநாசன தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணி விட்டுச் சீதாதீர்த்தத்துக்குப்போய், நியமத்தோடு அதில் ஸ்நானஞ் செய்யவேண்டும். இந்தப் பிரமாண்டத்திலிருக்கிற புண்ணிய தீர்த்தங்களெல்லாம் தாங்கள் பரிசுத்தமாவதற்காக இந்தச் சீதா தீர்த்தத்தில் வசித்துக்கொண்டிருக்கின்றன. இப்படியே காசி முதலிய புண்ணிய க்ஷேத்திரங்களும் தங்களுடைய பாப நிவாரணார்த்தமாக இந்தச் சீதாதீர்த்தத்தை யிரவும் பகலும் சேவித்துக் கொண்டிருக்கின்றன. விஷ்ணுவினிடத்தில் பிரியமுள்ள, பஞ்சமஹாபாதகங்களை நாசம்செய்கிற பஞ்சமுகங்களையுடைய பரமசிவனும் அதனிடத்தில் வசிக்கிறார். பூர்வத்தில் இந்திரனிதில் ஸ்நானம் பண்ணி பிரமஹத்தி விமோசனமடைந்தான். இப்படிச்சொல்லி வந்த சூதமுனிவரைச் சௌனகாதிமஹரிஷிகள் பார்த்து ஓ முனி சிரேஷ்டரே! இந்திரனுக்கேன் பிரமஹத்திவந்தது? என்று வினவ, சூதமுனிவர் சொல்லுகிறார். முற்காலத்தில் கபாலாபரண னென்கிற ஒரு இராக்ஷதன் சகல தேவர்களாலும் கொல்ல முடியாத வரம் பெற்றிருந்தான். அவன் ஜயந்தமென்ற பட்டணத்தில் சுவபட்சண னென்றமந்திரியோடு ரத கஜ துரக பதாதிகளாகிய நாறு அக்

குரோணிசேனைகளையுடையவனும் வசித்துக்கொண்டிருந்தான். ஒரு நாள் அவன் சவபட்சணனை நோக்கி, "ஓ மந்திரீ! நீ மந்திர சாஸ்திரத்தில் வல்லவனான படியால் நாம் இந்திரலோகத்துக்குப் போய்த்தேவர்களைச் சண்டையில் ஜயித்து, இந்திரனுடைய அழகான அரண்மனையிற் சைனியத்தோடும் தங்கியிருந்து, அவனுடைய பூஞ்சோலையில் அரம்பாஸ்திரீகளுடன் கேளிவிலாசமாயிருப்போம்." என்றுசொல்லச், சவபக்ஷணன் அப்படியே ஆகட்டுமென்றான். கபாலாபரணன், துர்மேதஸ் என்கிற சூரனை தன் புத்திரனைத் தன் பட்டணத்திலிருத்திவிட்டு, தனது நால்வகைச் சேனைகளையுந் திரட்டிக்கொண்டு, அந்தச் சேனைகள் நடப்பதனாலுண்டாகிய தூளிகளால் ஆறுகளும், சமுத்திரங்களும் வற்றவும், பருவதங்களெல்லாம் பொடிப்பொடியாயிடிந்து உதிரவும், வாத்திய கோஷத்தினாலே பூமியும் ஆகாசமும் எதிரொலியிடவும், குதிரை கனைத்தலாலும், யானை கர்ஜனையாலும், ரதசக்கிரங்களின் சப்தத்தாலும், பதாதிகளுடைய சிங்கநாதத்தாலும் திக்குயானைகளினுடைய காதுகள் செவிடுபடவும், தேவர்களோடு சண்டை செய்வதற்காக அமராவதிபோய்ச் சேர்ந்தான். ராட்சச சேனைகளின் ஆரவாரத்தைத் தேவேந்திரன் முதலான தேவர்கள் கேட்டு அவர்களோடு சண்டை செய்வதற்காக நகரத்தைவிட்டு வெளியில் வர, உலகத்தார் முன்பின் கேட்டறியாத யுத்தம் நடந்தது. அதில் தேவர்கள் ராட்சதர்களையும், ராட்சதர் தேவர்களையுமடித்துக் கொன்றார்கள். பிறகு கபாலாபரணன் இந்திரனோடும், சவபட்சணன் யமனோடும், கைசிகன் வருணனோடும், நதிராட்சன் குபேரனோடும், கபாலாபரணனுடைய சகோதரர்களான மாம்சப்பிரியன், மத்தியசேவி, துநாதிருஷ்டி, பயாபஹன், என்பவர்கள் அசுவினிதேவர்கள், அக்கினிவாயுக்களோடும் எதிர்த்து யுத்தஞ்செய்தார்கள். யமன் தன் காலதண்டத்தினால் சவபட்சணனை யடித்துக்கொன்று அவனோடு கூடிவந்த முப்பது அக்குரோணி சேனைகளையுமடித்தான். வருணன் தன் கைக்கத்தியால் கைசிகன் சிரசைவெட்டினான். குபேரன் குந்தாயுதத்தால் நதிராட்சனைச் சாய்த்தான். அசுவினிதேவர்களும் அக்கினிவாயுக்களும் கபாலாபரணனுடைய சகோதரர்களை யடித்துமடித்தார்கள். இவ்விதம் ஒரு முகூர்த்தத்துக்குள்ளாகத் தன்னுடைய நூறு அக்குரோணிசேனைகளு மடிந்ததைக்கண்டு, கபா

லாபரணன் தன் வில்லைக் கையிலேந்தி இந்திரனைப்பார்த்து, "அடா இந்திரா! ஓடாதே, ஓடாதே" என்றுகூவி தீட்சணமும் வேகமு முடைய ஐந்துபாணங்களால் அவன் தலையிலடித்தான். தேவேந் திரனும் அந்த அம்புகள் தன் மேற்படவொட்டாம லம்புகளால் தூளாய்நொறுக்கி விட்டான். பின் கபாலாபரணன் சூலாயுதத்தை யிந்திரன் மேலெறிய இந்திரன் அதையும் தன் கத்தியினால் துண்டி த்தான். பிறகு கபாலாபரணன் ஐயாயிரம் துலாம்பாரமும், நூறு முழநீளமுமுள்ள இரும்புதண்டத்தினால் இந்திரன் மார்பிலடிக்க, அவன் சோர்ந்து தன் தேரிலே விழுந்து விட்டான். அது கண்ட பிரகஸ்பதிபகவான் மிருதசஞ்சீவினியென்கிற மந்திரத்தினாலிந்திர னைப் பிழைப்பிக்க, இந்திரனெழுந்து ஐராவதத்தின் மேலேறிக் கொண்டு மஹாகோபத்துடன் தன் வச்சிராயுதத்தால் கபாலா பரணனை யவன் தேர்குதிரை சாரதிகளோடுந தூள்தூளாகும்படி யாக அடித்து முடித்தான். கபாலாபரணனிறந்தபின் அவனால் வெகுகாலங் கஷ்டப்பட்ட உலகத்துக்கு க்ஷேமமுண்டாயிற்று. இந்திரனைப் பிரமஹத்தி பிடித்துக்கொண்டது. அந்தப் பிரமஹ த்தியானது கோரரூபத்தோடு பத்துத்திக்குகளும் எதிரொலிக் கும்படியாக பேரொலியிட்டுக்கொண்டு பின்தொடர்ந்தது. என்று சொல்லிவந்த சூதரைச் சௌனகாதிகள் நோக்கி ஐயா! கபாலாபர ணன் இராட்சதன்தானே பிராமணனல்லவே; அவனைக்கொன்றத னால் இந்திரனுக்குப் பிரமஹத்திவந்த காரணமென்ன? என்று கேட் கச், சூதர், முனிவர்களே! ஒரு ஆச்சரியமான இரகசியஞ் சொல் லுகிறேன், கேளுங்கள் என்று சொல்லுகிறார்.

பூர்வகாலத்தில், விந்தியமலைச்சாரலில் தீரிவக்திரன் என்கிற ஒரு இராட்சதனிருந்தான். அவனுக்குச் சகல நற்குணங்களும், பேரழகும் நிறைந்த சுசீலையென்கிற ஒரு மனைவியிருந்தாள். அவள் ஒரு நாள் சர்வாலங்காரத்துடன் மலர்ந்த முகமுடையவளாய் அந்தச்சாரலில் உலாவிவரும்போது, அந்தக் காட்டில் தவம்புரிந்து கொண்டிருந்த வேதாத்தியயன சீலரான சுசியென்ற முனிவரது ஆசிரமத்துக்குச் சமீபமாகவந்தாள். அந்த ரிஷியானவர் அவளைக் கண்டு மதிமயங்கிக், காமன் கணையால்நொந்து, அவளருகில்வந்து,

"அம்மா வாரும்; நீர் யாருடையமனைவி? இந்தப்பயங்கரமான காட்டில் வரவேண்டியகாரணமென்ன? மிகுதியுங் களைப்படைந்திருக்கிறபடியால் நீரிந்த ஆசிரமத்தில் வசித்துக்கொண்டிரும்" என்று சொல்ல, அவள் "சுவாமீ! நான் திரிவக்திரன் என்னும் ராட்சதனுடைய மனைவி; என் பெயர் சுசீலை. நான் புஷ்பம் கொய்ய விருப்பங்கொண்டு இங்கே வந்தேன். எனக்குப் புத்திரனில்லாததைக் கண்டு என்கணவன் சுசி என்னும் முனிவரைப் பிரார்த்தித்துப் புத்திரப்பேறடை யென்று கட்டளையிட்டதனால் நான் தங்களிடம் நாடிவந்தேன். ஆகையால் என்பேரில் கருணைசெய்து எனக்குப் புத்திரபாக்கிய மருளவேண்டும்" என்றாள். சுசியானவர் "பெண்ணே! உன்னிடத்திலெனக்கு விருப்பமுண்டாயிருக்கிறது. என் மனோரதத்தை நிறைவேற்று"என்று கூறி மூன்றுநாள் அழகான அப்பெண்மணியைத் தழுவி "பெண்ணே! உன் வயிற்றில் அதிக வீரனான கபாலாபரணன் என்னும் புத்திரனுதிப்பான். அவன் ஆயிர வருஷம் பிரம்மதேவனை நோக்கித் தவஞ்செய்து, இந்திரனைத்தவிர மற்றெவராலுஞ் சாகாதவரம் பெற்று, வெகுகாலம் ராச்சியபரிபாலனஞ் செய்வான்" என்று வரங்கொடுத்துத் தாம் காசிக்குப் போய் விட்டார். அந்த ரிஷிவாக்கின்படி சுசீலையும் வீரவானான புத்திரனைப்பெற்றாள். அவன் தான் இந்திரனால் கொல்லப்பட்ட கபாலாபரணன். அவன் சுசி யென்னும் பிராமணனுக்குப் பிறந்தவனானதால் அவனைக்கொன்ற இந்திரனுக்குப் பிரமஹத்தி பிடித்தது.

அந்த இந்திரன் எவ்விடத்துக்குப் போனபோதிலும் பிரமஹத்தியுமவனைவிடாமல் பின்தொடர்ந்துபோயிற்று. பிரமஹத்தியால் பின்தொடரப்பட்ட இந்திரன் மிகவும் வருத்தங்கொண்டு, பிரமலோகம் போய்ப் பிரமதேவனைப்பார்த்து, "ஐயா லோகநாதா! தீராத பிரமஹத்தி யென்னைத் தொந்தரவு செய்கிறது; அது தொலையும்வழி யெனக்குச் சொல்லியருளும்" என்று பிரார்த்தித்தான். அது கேட்ட பிரமதேவனு மிந்திரனைப்பார்த்து "அப்பா! கந்தமாதனத்தில் சீதாகுண்டமென்றொரு தீர்த்தமிருக்கின்றது; இதன் கரையில் சதாசிவனை நோக்கி யாகங்கள்செய்து, அந்தத் தீர்த்தத்தில் நீ ஸ்நானம் பண்ணினால் பிரமஹத்தி நீங்கிப் பரிசுத்தனாகிச், சமஸ்தமான துக்கங்களுமொழிந்து, நீ மறுபடியும் சொர்க்க

லோகம் போவாய் ; இந்தச் சீதாதீர்த்தம் சகல பாபங்களையும் நீக்கித், துக்கங்களையொழித்துத், தரித்திரங்களைத் தொலைத்துத், தனதானிய சம்பத்துக்களைக்கொடுத்து, வைகுண்டாதிபதவிகளைத் தந்து, முக்தியிற் சேர்க்கும்படியான மகிமையுடையதாகையால் நீ அவ்விடத்தில் கட்டாயம் யாகஞ்செய்." என்றுசொல்ல, இந்திரன் கந்தமாதனம் வந்து சீதாகுண்டத்தில் ஸ்நானம்செய்து, அதன் கரையில் யாகஞ்செய்து, பிரமஹத்திதோஷம் விலகித், தன் அமராவதி பட்டணத்துக்குப் போய்ச்சேர்ந்தான்.

ரிஷீசுவரர்களே ! கேளுங்கள் ; இவ்வகையான மகிமையை யுடையது சீதாகுண்டம். சீதாதேவியானவள் தன் கற்புடைமையை ஸ்ரீராமருக்கு விளக்கும்பொருட்டு அக்கினிப்பிரவேசஞ் செய்து, சகல தேவர்களும் பார்த்திருக்கும்படி யாதொரு ஊனமுமில்லாமல் வெளிவந்தபிறகு, உலகக்ஷேமத்தின் பொருட்டுத் தன் பேரால் இந்த உத்தமமான தீர்த்தத்தை யுண்டாக்கி, அதில் தான் ஸ்நானம் பண்ணினபடியால் சீதாதீர்த்தமென்று பேர் பெற்றது. இந்தச் சீதாதீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணுகிறவனுக்குச் சகல மனோபீஷ்டங்களும் கைகூடிவருகிறது. கேளுங்கள் முனிவர்களே ! சீதாதீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணிப் பலவகையான தானங்களைச் செய்து, வெகு தட்சணைகொடுத்து, யாகங்களைச் செய்கிறவன் அந்தியத்தில் பரமேசுவர லோகமடைகிறான். இந்தச் சரித்திரத்தைக் கேட்பவரும் படிப்பவரும் இகத்தில் போக போக்கியங்களை யடைந்து, மறுமையிலும் சுகத்தையடைவார்கள்.

## பதினோராவது அத்தியாயம்

முற்றிற்று.



## பன்னிரண்டாவது

# மநோஜவராஜன் மங்களதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து இராஜ்யத்தைப்பெற்ற

### அத்தியாயம்.

---

கேளுங்கள் முனிவர்களே! இந்த மஹாபுண்ணியமான சீதா தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினபிறகு, பக்தியுடன் மங்களதீர்த்தத்துக்குப் போகவேண்டும்; இந்த மங்களதீர்த்தத்தில் மஹாவிஷ்ணுவுக்குப் பிரியமான மஹாலட்சுமி ஸதாவசித்துக்கொண்டிருக்கிறாள். தாரித்திர நிவர்த்தியர்த்தமாக இந்திரன் முதலான தேவர்களெல்லாரும் நித்தியம்வந்துகொண்டிருக்கிறார்கள். இந்தத் தீர்த்தத்தைப்பற்றிய ஒரு புண்ணியகதை சொல்லுகிறேனென்று சூதர் சொல்லத்தொடங்கினார்.

பூர்வகாலத்தில் சந்திரவம்சத்தில் மநோஜவனென்ற ஒரு இராஜன் நாற்கடல் சூழ்ந்த உலகத்தைத் தர்மமாய் அரசாண்டு வருங் காலத்தில், யாகங்களால் தேவர்களையும், அன்னதானத்தால் பிராமணர்களையும், பிரதிவருஷஞ் செய்யும் சிராத்தத்தால் பிதுர் தேவர்களையும் திருப்திசெய்தான். மூன்று வேதங்களையுமோதி யுணர்ந்தான். சாஸ்திரங்களை யர்த்தத்தோடு கற்றுத்தெளிந்தான். தனது பராக்கிரமத்தால் சத்துருக்களை ஜயித்தான். சிவவிஷ்ணுக்களிடத்தில் பக்திசெலுத்திவந்தான். நீதிசாஸ்திரங்களைப் பிரியமுடன் கற்றுக்கொண்டான். உத்தமமான மந்திரங்களை ஜபித்து வந்தான். இவ்வகையாகச் சத்துருக்களில்லாமல் உலகையாண்டு வருகையில், புத்திரர்களையும்சம்பத்தையும் நாசமாக்கும் அகங்காரம் அவன் மனதிலுதித்தது. கேளுங்கள் முனிவர்களே! எவ்விடத்தில் அகங்காரமுண்டாகிறதோ, அவ்விடத்தில் காம குரோத லோப மோக மத மாற்சரியங்களும், பிறரை யிமிசித்தலும் உண்டாகின்றன. இந்தக் குணங்களெவனிடத்திலிருக்கின்றனவோ அவன் தன் புத்திரபௌத்திரர்களோடு சகல சம்பத்துகளையுமிழந்து விடுகிறான். ஆகையால் மநோஜவராஜனுக்குத் தன் பிரஜைகளிடத்தில் வெறுப்புண்டா

யிற்று ; இவ்வகையான வெறுப்பும், அகங்காரமும், பேராசையும், நிறைந்த அந்த அரசனுக்குப் பிராமண கிராமங்களில் வரிதண்ட எண்ணம்பிறந்து, அவர்களிடம் போய், அவர்களுடைய தனதானி யாதிகளையும், சிவவிஷ்ணுவாலய திரவியங்களையும், அப்படியே சிவவிஷ்ணுவாலயங்களுக்கு விடப்பட்ட மானியங்களையும். அநியா யமா யபகரித்துக் கொண்டான். இப்படித் தேவர்களையும், பிராம ணர்களையும் விரோதித்துவந்த அரசனுடைய கர்மவசத்தினால் கௌடதேசாதிபதியாகிய கோலபன் என்ற ராஜன் தனது நால்வ கைச் சேனைகளோடும் வந்தெதிர்த்து, ஆறுமாதம் யுத்தஞ்செய்து, மநோஜவனுடைய கருவத்தையடக்கி, அவனை ஜெயித்து, இராஜ்ஜி யத்தை விட்டுத் துரத்தி, யவனரசையுங் கைப்பற்றிக் கொண்டான். இராஜ்யமிழந்த மநோஜவன் மனம்வருந்திக், தன் புத்திர தார சமே தனுப் * பசியாற்களைத்து, நடக்கச் சக்தியில்லாமல் அடிக்கடி யிடறிவிழுந்து, வண்டுகளும், புலி முதலிய துஷ்டமிருகங்களும், கூட்டானை, காட்டுப்பன்றி, காட்டெருமை, முதலியவைகளும் நிறை ந்த ஒரு பெரியகாட்டில் வந்து, அலைந்து திரிந்துகொண்டிருக்கை யில், அவனுடையகுழந்தை தன் பிதாவையும்மாதாவையும் பார்த்து, "எனக்குப்பசிக்கின்றது அன்னங்கொடுங்கள்." என்று கேட்டது. அது கேட்ட பெறறோர்கள் மனத்துயரந்தாங்கமாட்டாமல் மயக்க மடைந்தார்கள். அரசன் தன் மனைவி சுமித்திரையைப்பார்த்து, "பெண்ணே! குழந்தை அன்னங்கேட்கிறதே; நான் என்னசெய் வேன் ? எங்கேபோவேன் ? அன்னம் கொடாவிட்டால் பசியால் மெலிந்து குழந்தையிறந்துபோமே. இதற்கென்ன உபாயம் ? பெண்ணே ! துர்ப்பாக்கியனான என்னைப் பிரமதேவன் ஏன் படைத் தான் ? துஷ்டகிருத்தியத்தினாலுண்டான இந்த துக்கத்தினின் றும் என்னை யார்விடுவிப்பார்கள் ? நான் பூர்வஜன்மத்தில் சிவ விஷ்ணுக்களையாவது, சூரியன், அக்கினிமுதலிய தேவர்களையாவது ஆராதிக்கவில்லை. அதனாலேதான் எனக்கு அகங்காரம் மேலிட்டுப் பிராமணர் சொத்துக்களையும், தேவாலய சொத்துக்களையும் அபகரித்து அநியாயம் பண்ணினேன். அந்த அநியாயத்தினாலே தான் கோலபன் என்னும் அரசன் என்னை ஜெயித்துக்காட்டில் துரத்திவிட்டான். இந்தக்காட்டில் பணமில்லாமலும், அன்ன மில்லாமலும் வருந்திக்கஷ்டப்படுகிற நான் குழந்தைக்கு எப்படி

அன்னங்கொடுப்பேன்? நான் பூர்வம் பிராமணர்களுக்கு அன்ன தானம் பண்ணினதில்லை; சிவவிஷ்ணு முதலிய தேவாராதனை செய்யவுமில்லை. அக்கினியில் ஹோமம் செய்ததுமில்லை; புண் ணிய தீர்த்தஸ்நானம்பண்ணவுமில்லை. மாதுர் பிதுர் சிராத்தங் களையும், அவர்களைக்குறித்துப் பார்வண சிராத்தம், ஏகோதிஷ் டம் முதலிய கர்மங்களைச் செய்யவுமில்லை. சித்திரைமாசம் சித்திராநட்சத்திரத்தில், பானகம், பலாப்பழம், ருசியான வாழை ப்பழம், குடை, தண்டம், பாதரட்சை, தாம்பூலம், புஷ்பம், கலவை சேர்ந்த சந்தனம் முதலியவற்றைச் சித்திரகுப்தனைத்தி ருப்தி செய்வதற்காக வேதவித்துக்களான பிராமணர்களுக்குத்தா னஞ் செய்யவில்லை. பிரயாணிகளுக்குத் தாபத்தைநீக்கி நிழல் கொ டுப்பதற்கு அரசமரத்தையாவது, ஆலமரத்தையாவது, புளியமரத் தையாவது, மாமரத்தையாவது, வேப்பமரத்தையாவது, விளாமரத் தையாவது, நெல்லிமரத்தையாவது, தென்னைமரத்தையாவது வழியில் வைத்துப் பயிராக்கவில்லை. சிவவிஷ்ணுவாலயங்களில் திருவலகிட்டுச் சுத்தம் செய்யவில்லை. குளம், குட்டை, கிணறு முதலிய வெட்டிவைக்கவில்லை. பூந்தோட்டம், துளசிவனம் இவைகளைப் பயிராக்கிவைக்கவில்லை. சிவாலயம், விஷ்ணுவாலயங் கள் கட்டுவிக்கவில்லை. பிதுர் மாசத்தில் பிதுர்க்களைக் குறித்து மஹாளயசிராத்தம், அஷ்டகாசிராத்தம், நித்தியசிராத்தம், காமிய சிராத்தம், நைமித்திகசிராத்தம் முதலிய செய்தது மில்லை. நிரம்ப தட்சணைகொடுத்து யாகங்கள் செய்யவுமில்லை. மாச உபவாசம், ஏகாதசி உபவாசம் பண்ணினதில்லை. தனுர்மாதத்தில் உஷக்கா லத்திலெழுந்திருந்து சிவ விஷ்ணுவாதி தேவர்களை விதிப்படி பூஜித்து நைவேத்தியம் பண்ணினதில்லை. சிவநாம, விஷ்ணுநாமங் களை நாவானுச்சரித்து, ஜாபாலோபநிஷத்தில் சொல்லப்பட்ட விர ஜாபஸ்ம முதலான ஏழுவித பஸ்மாவைத் தேகத்தில் உத்தூளன மாகவாவது, திரிபுண்டரமாகவாவது தரித்துக்கொள்ளவில்லை; ருத் திராட்சதாரணம் பண்ணிக்கொண்டதுமில்லை; ருத்திரஸூக்தம், புருஷ சூக்தம், பஞ்சாட்சரம், அஷ்டாக்ஷரம், இவைகளை ஜபித் ததுமில்லை. பெண்ணே! மற்றுமுள்ள தர்மங்களையும் யான் செய்த தில்லை. ஆகையாலேதான் நானிப்படிப்பட்ட துக்கத்தையனுப விக்கும்படி நேரிட்டது." என்று சொல்லிப்புலம்பி, வாயுலர்ந்து;

தொண்டைவரண்டு, மூர்ச்சித்துப், பூமியில் தொப்பென்று விழுந்தான். அது கண்ட சுமித்திரையும் தன் நாயகனையணைத்துக்கொண்டு, "சந்திரகுல துரந்தரனான என் பிராணநாதா! சிங்கத்தைக்கண்ட மான்போல நடுங்கி உம்மைப் பின்பற்றிவந்த என்னையும், என் குழந்தையையும் இந்தக்காட்டில் விட்டுவிட்டு நீர் எங்கே போய் விட்டீர்? நீர் இறந்துபோனால் நானும் உம்மோடுகூட அநுமரணஞ் செய்துவந்து விடுவேனேயல்லாமல் நாயகனைவிட்டு ஒருக்ஷணமாகிலுமிங்கே தனித்திருக்கமாட்டேன்" என்று புலம்பித் தன்புதல்வனைப் பார்த்து, "அப்பா! சந்திரகாந்தா! பூமியில் விழுந்திருக்கிற உன் தந்தையைப்பாரு" என்று கூவிச்சொன்னாள். சந்திரகாந்தனும் தன் பிதாவைக்கட்டிக்கொண்டு தேம்பியழுதுகொண்டிருந்தான்.

கேளுங்கள் பிராமணர்களே! அப்பொழுது ஜடாவற்கலை தாரியாயும், பஸ்மோத்தூளித சர்வாங்கராயும், நெற்றியில் திரிபுண்டர மணிந்தவராயும், கழுத்தில் ருத்திராட்சமாலை புனைந்தவராயும், வெளுத்த யக்ஞோபவீதந்தரித்தவராயும், சஜ்ஜனர்களால் விரும்பப் பட்டவராயுமுள்ள பராசரமுனிவர் யதேச்சையாய் அவ்விடத்துக்கு வந்தார். அது கண்டபதிவிரதையான சுமித்திரை தன் குமாரனோடு அவரது திருவடியில் விழுந்துபணிந்தவுடன், பராசரர், சுமித்திரையைப் பார்த்து, "அம்மா நீ துக்கப்படாதே" என்று சமாதானப் படுத்தி, "நீயார்? முன்னாலே விழுந்திருப்பவன் யார்? இந்தக்குழந்தையார்? உண்மையைச் சொல்." என்று கேட்க, பதிவிரதாசிரோமணியான சுமித்திரை சொல்லுகிறாள்: "கேளும் முனிசிரேஷ்டரே! இதோ! கீழே விழுந்திருப்பவர் எனது கணவன்; நான் அவருக்கு மனைவி; சந்திரகாந்தனென்கிற இந்தப்பிள்ளையெங்களுக்குப் பிறந்த குழந்தை; சந்திரகுலத்தில் பிறந்த இந்தராஜன் பேர் மநோஜவன்; இவர் தந்தை விக்கிரமாட்டிய மஹாராஜன்; இவர் சௌரியத்தில் மஹாவிஷ்ணுவுக் கொப்பானவர்; இவருடைய மனைவியாகிய என் பேர் சுமித்திரை. இவரைக்கோலபன் என்பவன் யுத்தத்தில் ஜயித்து இராஜ்ஜியத்தைவிட்டுத் துரத்திவிட்டதனால் நிர்க்கதியாய் என்னையும் புத்திரனையும் அழைத்துக்கொண்டு கொடியமிருகங்கள்டர்ந்த இந்தக்காட்டில் வந்து சேர்ந்து, பசியால் வருந்தின குழந்தை யாகாரம் கேட்டவுடன், ஆகாரங்கொடுக்

கச்சக்தியில்லாமல் மனம் நொந்து மூர்ச்சையாய்க் கீழேவிழுந்து விட்டார்.'' என்று துக்கத்தால் வாய்குளறிச் சொல்லியதைக் கேட்ட சக்தி புத்திரரான பராசரரும் அக்கினிசிகையை ஒத்த சுமித்திரை யைப்பார்த்து ''அம்மா, பயப்படவேண்டாம். உங்களுடைய துக் கங்களெல்லாம் சீக்கிரத்தில் நீங்கிப்போம்; மூர்ச்சையான உன் கணவனுமெழுந்துவிடுவான்'' என்று சொல்லித் திரிலோசனனை ஸ்ரீபரமேசுவரனைத் தியானம் பண்ணி, மந்திரித்துக்கொண்டு, விழுந் துகிடக்கும் அரசனைத் தமது திருக்கரத்தினால் தொட்டமாத்திரத் தில், மநோஜவராஜன் மூர்ச்சை தெளிந்தெழுந்திருந்து, பராசரமுனி வரைப்பணிந்து, சந்தோஷத்தோடு அஞ்சலியஸ்தனாய், ''முனிவரே! உமது பாதாரவிந்த சேவையினால் என்னுடைய மூர்ச்சைதெளிந்து பாவமும் நீங்கியது. உமது தரிசனம் பாபிகளுக்கொருநாளும் கிடைக்காது. சத்துருக்களால் இராஜ்யமிழந்த என்னைக்காத்தருள வேண்டும்'' என்று பிரார்த்திக்க, முனிவர், ''அரசனே! சத்துருவை ஜயிக்க ஒரு உபாயம் சொல்லுகிறேன். மஹா புண்ணியமான ராமசேதுவாகிய கந்தமாதனத்தில் சமஸ்த ஐசுவரியத்தையுங் கொடுப்பதான மங்களதீர்த்த மென்றொருதீர்த்தமிருக்கிறது. ஸ்ரீரா மமூர்த்தியானவர் ஜனங்களுக்கனுகிரகம் செய்வதற்காக லட்சுமி யாகிய சீதாதேவியோடு சதாகாலமும் அவ்விடத்தில் வசித்துக் கொண்டிருக்கிறார். நீ புத்திரபாரியையோடு அவ்விடத்துக்குப் போய், அதில் பக்தியோடு ஸ்நானம் பண்ணி, அதன் கரையில் க்ஷேத்திர சிராத்தாதிகளைச் செய்வாயானால், நீ துன்பத்தைக்கொ டுக்கிற இந்தத் தரித்திரத்தினின்றும் நீங்கிச், சகல ஐசுவரியங்களை யுமடைந்து, பகைவனைவென்று, இராஜ்யத்தையும் பெறுவாய். ஆகையால் உனது மனைவி குமாரர்களோடு சீக்கிரம்புறப்படு; உன க்கு அனுக்கிரகம் செய்யும்படி நானும் வருகிறேன்.'' என்றுகூறி, அர சன் முதலிய மூவரோடும் சேதுவை நோக்கிப் புறப்பட்டு, வனம், வனாந்திரம், நாடு கள்ளர் குடியிருக்கும் கிராமம் முதலியவைகளை யெல்லாங்கடந்து, கந்தமாதனத்திலிருக்கும் மங்களதீர்த்தம் வந்து சேர்ந்து, விதிபூர்வமாகத்தாம் முதலில் ஸ்நானஞ்செய்து, அர சன் முதலானவர்களையும் முறைப்படி ஸ்நானஞ் செய்வித்தார். அரசன் பிதுர்க்களைக் குறித்துச் சிராத்தம் செய்து மூன்றுமாத காலம் ஸ்நானஞ்செய்துகொண்டிருந்தான். அது வரைக்கும் பரா

தீர முனிவருங்கூடவேயிருந்து ஸ்நானம்செய்து, அரசனுக்குச் சமஸ்த துக்கங்களையும் போக்குகிற ஸ்ரீராமர் ஏகாக்ஷரமந்திரத்தையுபதேசித்தார். அரசன் அம்மந்திரத்தை உபதேசமுறைப்படி நாற்பதுநாள் ஜபித்துவர, அந்த மங்களதீர்த்தத்தினின்றும் முனிவரது அனுக்கிரகத்தால் ஒரு பலமான வில்லும், அக்ஷய தூணீரங்களும், தங்கப்பிடிபோட்ட இரண்டுகத்திகளும், கேடகமும், ஒரு குண்டாந்தடியும், ஒரு முசலாயுதமும், மஹாநாதத்தோடுகூடிய ஒரு சங்கமும், சாரதிகுதிரைகொடிகளோடு கூடிய தேரும், அக்கினிபோல் விளங்குகிற தங்கமயமான கவசமும், ஹார கேயூர மகுட கடக முதலிய ஆபரணங்களும், திவ்வியமான ஆயிரம் வஸ்திரங்களும், சொர்ணதாமரையாலாகிய வைஜயந்தியென்கிற ஒரு மாலையும் வெளிவந்ததைக்கண்டு, அரசன் முனிவருக்குத் தெரிவிக்க, முனிவர் அந்த மங்களதீர்த்தத்தினின்றுங் கொஞ்சந் தீர்த்தமெடுத்து அரசனுக்கு மந்திரபூர்வமாக ஸ்நானம்பண்ணிவைத்தார். அரசன் அப்பொழுது மேற்குறித்த ஹார கேயூர மகுட கடகாபரண பூஷிதனாய், வில், வாள், கேடகமுதலிய ஆயுதங்களை யேந்தித் தேரின்மேலேறிக்கொண்டு மத்தியான சூரியனைப்போல யௌவனபுருஷனாய் விளங்கினான். பிறகு அந்த மஹாரிஷியானவர் அரசனுக்கு அங்கம், உபாங்கம், பிரயோகமுறை, மீட்குமுறை முதலியவைகளோடு பிரமாஸ்திரம் முதலானவைகளையுபதேசித்து, ஆசீர்வாதம் பண்ணி அனுப்ப, அரசன் முனிவரைப் பணிந்து, வலம் சூழ்ந்து, உத்திரவு பெற்றுக்கொண்டு, தேரின்மேலேறிப் பத்தினி புத்திரர்களோடு தன்னுடைய பட்டணம்வந்து, கோலபனைச் சண்டைக்கழைக்கும்பொருட்டுச் சங்கத்தொனி செய்தான். அது கேட்டுக் கோலபனும் தன் சேனைகளோடு சண்டைக்கு வெளிப்பட்டு, மூன்று நாள் மனோஜவனோடு சண்டைசெய்து, நாலாம்நாள் மனோஜவன் விடுத்த பிரயாஸ்திரத்தால்சேனைகளோடுமடிந்தான். பின்மனோஜவனும் புத்திரபாரியையோடு நகரத்துட் புகுந்து, அரசாட்சியைக் கைக்கொண்டு உலகமுழுதையும் பரிபாலித்து வந்தான். அப்பொழுது மனோஜவன் அகங்காரம், பரஹிம்சைசெய்தல் முதலிய துர்க்குணங்களற்றவனாய், மன அடக்கத்தோடு ஆயிரவருஷகாலம் தர்மந்தவறாமல் அரசுபுரிந்து, பிறகு உலகவாழ்வை வெறுத்துத் தன் புத்திரனுக்கு

ம்ருடாபிஷேகஞ் செய்து வைத்துவிட்டுத், தன் பத்தினியோடுகூடக் கந்தமாதனத்துக்கு வந்து, மங்களதீர்த்தக்கரையில் சதாசிவனைக் குறித்து வெகுகாலந் தவம்புரிந்து கடைசியில் அந்தத் தீர்த்த மகிமையால் சரீரத்தைவிட்டுச் சிவலோகமடைந்தான். அவன் மனைவியாகிய சுமித்திரையும் தன் கணவனோடுகூட அநுமரணஞ்செய்து அவளுஞ் சிவபதமடைந்தாள்.

கேளுங்கள் முனீசுவரர்களே! இவ்வளவு மகிமையுடையது அந்த மங்களதீர்த்தம். இந்த உத்தமதீர்த்தத்தில் ஸ்நானம் செய்த பலத்தினால் மனோஜவன் தன் பகைவரை வென்று உலகை யாண்டு சிவலோகவாழ்வை யடைந்தான். ஆகையால் ரிஷீசுவரர்களே! பரிசுத்தமாயும், மங்களகரமாயும், மனிதர்களுக்கு எப்பொழுதும் புத்தி முத்திகளைக் கொடுப்பதாயும், பாபராசியாகிய பஞ்சுக்குவியலுக்கு நெருப்பாகவுமிருக்கிற மங்களதீர்த்தத்தில் முத்தி யடையும் பொருட்டு நீங்கள் ஸ்நானம் பண்ணுங்கள்.

பன்னிரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.



## பதின்மூன்றாவது
# அமிர்தவாபி தீர்த்தமகிமையில் அகஸ்தியசகோதரன் முக்தியடைந்த

அத்தியாயம்.



சேளுங்கள் முனிவர்களே! மங்களதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தபிறகு, ஏகாந்தராமநாத மென்கிற க்ஷேத்திரம் போகவேண்டும். அங்கே ஸ்ரீராமர் லோகங்களுக்கு அநுக்கிரகஞ் செய்வதற்காக சீதா லட்சுமண அநுமத்சமேதராய் வானர சைனியங்களோடு எப்பொழுதும் வாசம் பண்ணிக்கொண்டிருக்கிறார். அவ்விடத்தில் அமிர்ததீர்த்தமென்கிற புண்ணிய தீர்த்தமொன்றிருக்கிறது. அதில்

ஸ்நானம் பண்ணினவர்கள் சிவப்பிரசாதத்தால் யமபயம், நரகபயமுமில்லாமல் மோட்சமடைவார்கள். பரமசிவன்கூட ஜனங்களுக்கு முக்தியளிப்பதற்காக அந்தத் தீர்த்தக்கரையிலெப்பொழுதும் வாசமாயிருக்கிறார் என்று சொல்ல, ரிஷீசுவரர்கள், ஐயா! வியாசர் மாணுக்கரான முனிவரே! இதற்கு அமிர்த தீர்த்தமென்று பெயர் வந்த காரணமென்ன? அதன் மகிமை யெப்படிப்பட்டது? உமது வசனமிர்தத்தைத் தெவிட்டாமல் பானம் பண்ண விரும்பும் எங்களுக்குச் சொல்லியருளுமென்று கேட்கச், சூதர், பிராமணோத்தமர்களே! அவைகளை யுங்களுக்குச் சொல்லுகிறேன்; நீங்கள் சாவதானமாய்க் கேளுங்களென்று சொல்லுகிறார்.

பூர்வகாலத்தில், நானாவித ரிஷிகள் நிறையப்பெற்றதும், சித்தசாரண கந்தர்வகின்னரர்களுக்கு வாசஸ்தானமாயும், சிம்மம், வியாக்ரம், வராகம், மகிஷம், கஜம்முதலியமிருகங்கள்உலாவப்பெற்றதும், தமாலம், தாலம், ஹிந்தாலம், சண்பகம், அசோகம் முதலிய விருட்சங்களடர்ந்ததும், அன்னம், குயில், வலியான், சக்கிரவாகம் முதலான பட்சிகள் கூவிக்கொண்டிருப்பதும், தாமரை, நீலோத்பலம், செங்கழுநீர், அல்லி முதலிய புஷ்பங்கள் நிறைந்த தடாகங்கள் சூழ்ந்ததுமான இமயமலைச்சாரலில் சத்தியவந்தராயும், சீலராயும், வாக்குவல்லவராயும், இந்திரிய நிக்கிரகஞ் செய்தவராயும், சிவபக்தராயுமிருந்த அகஸ்திய முனிவரது சகோதரரானவர், திரிகாலமும் சிவார்ச்சனைசெய்து, தமதாசிரமத்துக்கு வந்த அதிதிகளைக் கந்தமூலபலாதிகளாலுபசரித்து, அக்கினிபூஜை, சந்தியாவந்தனம் முதலியவைகளைச் செய்தும், காலந்தவறாமல் காயத்திரி முதலான மஹாமந்திர ஜபஞ்செய்துகொண்டும், மோட்சாபேட்சையுடையவராய்த் தவஞ்செய்துகொண்டிருந்தார்.

அவர் பிராம்ம முகூர்த்தமென்கிற நாலாவது ஜாமத்தில் நித்திரை தெளிந்தெழுந்திருந்து, ஸ்ரீ மஹாவிஷ்ணுவைத் தியானித்து, உஷக்காலத்தில் ஸ்நானஞ்செய்து, சந்தியாவந்தனம் முடித்துக், காயித்திரியை ஜபித்துச், சிவபூஜைசெய்து, வேதமோதி, வைசுதேவம் பண்ணி, காகபலியிட்டு, அதிதி யாராதனைசெய்து, புராணங்களைக் கேட்டுச், சாஸ்திராராய்ச்சிசெய்து, இவ்வகையாக நித்திய கர்மங்களைக் குறைவறச்செய்தும், வருஷந்தோறும் மாதாபிதாக்களுக்குச் சிராத்தஞ்செய்தும், இதர சிராத்தங்களை முறைப்படி செய்தும்

ஆயிரவருஷம் அருந்தவம்புரிந்தும், ஸ்ரீ பரமேசுவரன் பிரத்தியட்ச மாகாமையால், கிரீஷ்மகாலத்தில் பஞ்சாக்கினியிலிருந்துகொண்டு, மௌனமாய் இடதுகால் சுண்டுவிரலால் நின்றுகொண்டு, சலனமற்றுக் கையையுயரவெடுத்து, நிராதாரராய் அதிக கடூரமான தபசு புரிந்தார். அது கண்டு கிருபாநிதியாகிய பரமேசுவரர் மகிழ்ச்சியடைந்து, தமது சரீரகாந்தியால் பத்துத்திக்கும் பிரகாசிக்கும்படி விருஷபவாகனத்தின்மேல் பார்வதீதேவியாரோடுங் காட்சிதந்தருள, முனிவர் அவரைக் கண்டு, வணங்கித்துதிக்கின்றார்:—"பார்வதீகாந்தா! நீலகண்டா! மஹேசுவரா! சிவா! ருத்திரா! மஹாதேவா! சம்போ! விபோ! உமக்கு நமஸ்காரம். ஸ்ரீகண்டா! உமாபதே! சூலீ! பகனென்னும் சூரியனுடைய கண்ணைப் பறித்தகடவுளே; கங்காதரா! விரூபாட்சா! ருத்திரா! உமது கோபத்துக்கு நமஸ்காரம். காலகாலா! காமாரீ! வேதவேத்தியனே! ஜகத்பதியே! சுவாமீ! பசுபதியே! அநந்தமானவிற்கலையுடைய உமக்கு நமஸ்காரம். தட்சயாக நாசகராயும், ஸ்தாயு என்கிற சோரர்களுக்குப் பதியாயும், எஜமானன் வீட்டில் திருடுவதற்குச் சமயம் பார்த்துக் கொண்டிருப்பவரான "நிசேரு" என்பவராயும், வீரர்களுக்குத் தலைவருமாயிருக்கிற உமக்கு நமஸ்காரம். கிருபாசமுத்திரரான மஹாதேவா! உமக்கு அடிக்கடி நமஸ்காரம். திரிலோசனா! தாண்ட முடியாத சம்சார சாகரத்திலிருந்து என்னைக் கரையேற்றும்." என்று தோத்திரம் பண்ணின அகஸ்தியர் சகோதரனைப் பார்த்துப், பரமசிவன் அவர் சந்தோஷிக்கும்படி சொல்லுகிறார்:—"அகஸ்திய சகோதரரே! நீர் முத்தியடையுமுபாயமொன்று சொல்லுகிறேன் கேளும்; சேதுமத்தியிலிருக்கிற கந்தமாதனத்தில் மங்களதீர்த்தத்துக்குச் சமீபத்தில் அமிர்த தீர்த்தமென்கிற ஒரு மஹா தீர்த்தமிருக்கிறது. அங்கேபோய் ஸ்நானஞ் செய்வீரேயானால் நீர் முத்தியடைவீர். அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணுவதைவிட உமக்கு முத்தியடையும் சுலபமான உபாயம் வேறில்லை. அதன் விசேஷத்தைச் சொல்ல என்னாலுமாகாது. நீர் சந்தேகப்பட வேண்டியதில்லை. ஆகையால் சம்சார சாகரத்தைக் கடக்க விரும்பினால் சீக்கிரம் அங்கேபோய்ச்சேரும்" என்று சொல்லி யீசன் அந்தர்த்தானமானவுடனே, அகஸ்தியபிராதாவானவர், சமுத்திரத்திலிருக்கிற சேதுவுக்குப் போய்க், கந்தமாதன பர்வ

த்திலிருக்கிற அமிர்த தீர்த்தத்துக்குச் சிவாக்ஞையின்படி சீக்கிரம் போய்ச் சேர்ந்தார். மஹாபுண்ணியமானதாயும், ஸ்நானம் பண்ணு கிறவர்களுக்கு முத்தியைத்தருவதாயும், ஏகாந்த ராமநாதக்ஷேத்தி ரத்துக்கு அலங்காரமாயுமிருக்கிற அந்தப் புண்ணிய தீர்த்தத்தில் மூன்றுவருஷம் நியமமாய் ஸ்நானஞ்செய்து, நாலாவது வருஷத்தில் சமாதியிலிருந்து, பிராணவாயுவைக் கபாலத்திலேற்றிப், பிரமரந்தி ரத்தின் வழியாய்ப்போக்கி, யிந்தச் சரீரத்தைவிட்டு, முத்தியடைந் தார். சமஸ்த துக்கங்களையும் நீக்குகிற இந்தத் தீர்த்தத்தில் ஸ்நா னஞ்செய்த அவருக்கு அமிர்தத்துவம் வந்ததனால் அதற்கு அமிர்த தீர்த்தம் அல்லது அமிர்தவாவி யென்று பேராயிற்று. ரிஷீசுவரர்களே! கேளுங்கள் ; சோம்பலில்லாமல் மூன்று வருஷகாலம் ஸ்நானம் பண்ணுகிறவர்களுக்கு அமிர்தத்துவம் சித்திக்கின்றது. அந்தத்தீர்த் தத்துக்கு அமிர்தவாவியென்று பெயர்வந்த காரணத்தையும், அதன் பிரபாவத்தையு முங்களுக்குச் சொல்லிவிட்டேன். இன்னமெதைக் கேட்க விரும்புகிறீர்கள் என்று சூதர் வினவ, ரிஷிகள், ஐயா ! அந்த ஸ்தலத்துக்கு ஏகாந்த ராமநாதமென்று பெயர்வந்த காரண மென்ன ? அதை யெங்களுக்குச் சொல்லவேண்டுமென்று கேட்கச், சூதர் சொல்லுகிறார். பூர்வகாலத்தில் வானரங்கள் சமுத்திரத் தில் சேதுகட்டுகையில், தசரதராமரானவர் சுக்ரீவன், விபீஷணன், இலட்சுமணன், யோசனையிற் சிறந்த அநுமானிவர்களோடு இரா வணனைக்கொல்லுமுபாயத்தை யோசித்துக்கொண்டிருந்தார். அப் பொழுது சமுத்திரத்தின் அலைகள் பொங்கிப்பேரொலி செய்ததனா ஞல் ஒருவர் பேசுவதை யொருவரறியக்கூடாதிருந்தது. ஸ்ரீராமர் கோபங்கொண்டு, புருவத்தை நெரித்துச், சமுத்திரத்தையடக்கி, அவர்களோடு ஏகாந்த யோசனை செய்துகொண்டிருந்தபடியால் அந்த ஸ்தலத்துக்கு ஏகாந்த ராமநாதமென்று பேர்வந்தது. ராமர் புருவம் நெரித்தலினால் அடக்கப்பட்ட சமுத்திரமானது அந்த இடங்களில் மாத்திரம் இப்பொழுதுகூட அலையில்லாமலிருக்கிறது. இந்த ஏகாந்த இராமநாதத்துக்கு வந்து, அமிர்தவாபியில் நியமத் துடன் ஸ்நானம் பண்ணி, இராமர் முதலானவர்களைச் சேவிக்கிற அத்துவித ஞானமில்லாத விவேக சூனியர்கள், விரக்திபிறவாதவர் கள், சமாதியிலிருக்கச் சக்தியில்லாதவர்கள், யாகாதிகர்மானுஷ்டா

னஞ் செய்யாதவர்கள் முதலானவர்களுக்கும் அமிர்தத்துவங் கட்டாயங் கிடைக்கிறது.

## பதின்மூன்றும் அத்தியாயம்

முற்றிற்று.

## பதினாலாவது

# பிரமகுண்ட வரலாறும் அதில் பிரமதேவர் சாபந்தீர்ந்ததும் உரைத்த

## அத்தியாயம்

பிராமணோத்தமர்களே! கேளுங்கள் அமிர்தவாபியில் ஸ்நானம்பண்ணி, இராமரைச்சேவித்து, இந்திரியத்தையடக்கிச் சேதுமத்தியிலுள்ள கந்தமானத்திலிருக்கிற பிரமகுண்டமென்கிற தீர்த்தத்தில் ஸ்நானமபண்ணவேண்டும். சகல தரித்திரங்களையும் நீக்கும் ஔஷதமாயும், அநேகமாயிரம் பிரமஹத்தி தோஷங்களைத் தரிசன மாத்திரத்தில் நிவர்த்திசெய்வதாயுமிருக்கிற இந்தத் தீர்த்தத்தைத் தரிசிக்கிறவன் வேறு தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணுவானேன்? யாகாதிகிருத்தியங்கள் செய்வானேன்? தபசுபுரிவானேன்? மஹாதானங்கள் பண்ணுவானேன்? இந்தப் பிரமதீர்த்தத்திலொருதரம் ஸ்நானம் செய்தமாத்திரத்தில் வைகுண்டங்கையில் கிடைக்கின்றது. பிரமகுண்டத்திலுண்டான திருநீற்றைத் தரித்துக்கொள்ளுகிறவனுக்குப் பிரம விஷ்ணுருத்திரர்கள் மூவரும் கைவசமாகிறார்கள். அந்தப் பஸ்மத்தைத் திரிபுண்டரமாகத தரிக்கிறவனுக்குக் கைவல்லியம் நிச்சயமாய்க் கிடைக்கும். அந்த ப்பஸ்மத்தில் ஒரு அணுப்பிரமாணமாவது நெற்றியில் தரிப்பவனுக்கு முத்தி யெளிதில் கிடைக்கிறது. அதை உத்தூளனம் பண்ணிக்கொள்கிறவன் அடையும் புண்ணிய பலமிவ்வளவென்று சொல்லச் சிவனுக்குத்தான் தெரியுமோ தெரியாதோவறியேன். விபூதியைத் தரித்துக்கொள்ளாதவன் இரவுரவ நரகத்தில் சந்திரதாரா கணங்களுள்ளமட்டும் துன்பப்படுகிறான். அதைத் திரிபுண்டரமாக வாவது, உத்தூளனமாகவாவது தரித்துக்கொள்ளாதவனுக்கு ஒருபோதும் சுகமில்லை. இந்த விபூதியை நிந்திக்கிறவனும், இந்த விபூதியை மற்றத் திருநீறுகளுக்குச் சமான

மூர்கவாவது, அல்லது கீழ்ப்பட்டதாகவாவது சொல்லுகிறவனும், இந்தத் திருநீறிருக்கையில் மற்ற நீற்றைத் திரிபுண்டரமாக அணிந்துகொள்கிறவனும், ஒருபொழுது மதைத்தரித்துக்கொள்ளாதவனும் விபசாரி புத்திரனென்று ஊகிக்கவேண்டியது. இந்தத் திருநீற்றைப் பிராமணர்களுக்குக் கொடுக்கிறதானது நாலுகடல் சூழ்ந்த பூமியைத் தானம் பண்ணின பலனுக்குச் சமானமாகிறது. இதில் சந்தேகமே கிடையாது என்று கையைத்தூக்கிக்கொண்டு மூன்றுதரம் சத்தியம் பண்ணுகிறேன். ஆகையால், பிராமணோத்தமர்களே! இந்தப் பரிசுத்தமான விபூதியைத் தரித்துக்கொள்ளுங்கள்.

பூர்வகாலத்தில்சர்வலோகபிதாமகரான பிரமதேவர், கந்தமாதன பர்வதத்துக்குவந்து, சமஸ்ததேவர்களும் பார்த்திருக்கப், பூர்ணதட்சிணைகொடுத்து ஸர்வயாகங்களையுஞ் செய்து சிவசாபத்தினின்றும் விடுபட்டார். ஆகையால் பிராமணர்களே! இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணுகிறவர்கள் சிவசாயுஜ்யமடைவதிலையமே யில்லை என்று சூதர்சொல்ல, ஐயா! புராணார்த்தங்களை யெல்லாம் அறிந்த பிராக்ஞரான சூதமுனிவரே! ஈரேழுபதினாலு லோகத்துக்கும் சிருஷ்டி கர்த்தாவாய்ப் பாரதிபதியான பிரமதேவருக்கு எந்தக் குற்றத்தினாலே எவ்வகையான சாபங்கிடைத்தது? இவைகளை யெங்களுக்கு விபரமாய்ச் சொல்லவேண்டுமென்று கேட்கச், சூதமுனிவர் சொல்லத் தொடங்கினார்.

பூர்வகாலத்தில் பிரமாவும் விஷ்ணுவும், "நானே கர்த்தா; என்னைத்தவிர வேறொருவருமில்லை" என்று தம்மைத்தாமே புகழ்ந்து கலகஞ் செய்தார்கள். அப்பொழுது இவர்களுடைய கருவத்தை யடக்கும் பொருட்டாகவும், தேவர்களுக்கு அறிவுண்டாவதற்காகவும், அவ்விருவருக்கு மத்தியில் புராதனமான சுயஞ்சோதி லிங்கமொன்று தோன்றியது. அது கண்டு, பிரம விஷ்ணுக்களிருவரும் வியப்படைந்து, "இந்த லிங்கம் ஆதியந்தமற்றதாயும், அனேக சூரியர் அக்கினிகளுக்குச் சமானமாயும் விளங்குகிறது; இதனுதியையும் அந்தத்தையும் நமக்குள் எவன் காண்கிறானோ அவனே பெரியவன்; அவனே லோக கர்த்தா; அவனே பிரபு." என்று தேவர்களுக்கு முன்னாலே சபதம் பண்ணிக்கொண்டார்கள். பிறகு பிரமதேவன், "நான் மேலேபோய் இந்தலிங்கத்தைத் தேடிப்பார்த்து வருகிறேன். நீர் அதன் அடியைத் தேடிப்பார்த்துவாரும்" என்று சொல்ல மஹா,

விஷ்ணுவும், "அப்படியே யாகட்டும்." என்றொத்துக்கொண்டார். பிறகு விஷ்ணுவானவர் வராகரூபத்தையும், பிரம தேவன் அன்ன ரூபத்தையு மெடுத்துக்கொண்டு தேடப்புறப்பட்டார்கள். மஹாவிஷ் ணுவானவர் அனேகமாயிரம் வருஷம் கீழுலங்கள் எங்குந்தேடிபார் துத் தன்னிடம் வந்து தேவர்களுக்கெதிரில் லிங்கத்தின் அடியை நான் பார்க்கவில்லையென்று உண்மையைச் சொல்லியிருந்தார். மேலே தேடப்போன பிரமாவானவரும் அவ்விடம் வந்து நான் லிங்கத்தி னுடைய சிரசைக் கண்டேனென்று பொய்சொன்னார். அதுகேட்ட மகேசுவரன் பொய்சொன்ன பிராமாவைப்பார்த்து, "பிரமனே! நீயெனக்கெதிரில் பொய்சொன்னதினால் உனக்கு உலகத்திலெங்கும் எப்பொழுதும் பூசைகிடைக்காதுஎன்று சொல்லி, விஷ்ணுவைப்பார் த்து, "நீர்உண்மை கூறினபடியால் எனக்குச்சமானமான பூஜை உமக் குக் கிடைக்கும். ஆக்ஷேபனையில்லை" என்று சொல்ல, பிரமதேவன் முகம்வாடி, ஸ்ரீ சங்கரனைப்பார்த்து, "கிருபாநிதியான சுவாமி! என் குற்றத்தைப் பொறுத்துக்கொள்ளும்; பெரியோரா யிருப்பவர்கள் குற்றங்களை மன்னிக்கிறது நியாயம். ஆகையால் ஜகதீசனான தேவரீர் நான் செய்த குற்றத்தைப் பொருத்தருளவேண்டும்" என்று பிரார்த் திக்க, மகேசுவரனும் பிரமதேவனைப்பார்த்து, "அப்பா! என் வார் த்தை பொய்யாப்போகாது; உனக்கொரு உபாயஞ் சொல்லுகிறேன். சீக்கிரமாகக் கந்தமாதனத்துக்குப்போய், அவ்விடத்தில் யாகங்களைச் செய்தால் பொய் சொன்னபாபம்உன்னை விட்டு நீங்கும்; அப்பொ ழுது சிரௌதகர்மங்களிலும் ஸ்மார்த்தகர்மங்களிலும் உனக்கு பூஜைநடக்கும்; உனக்குவிக்கிரகத்திலாராதனை கிடைக்கமாட்டாது" என்று சொல்லி அந்தர்த்தானமானார். பிரமதேவன் கந்தமாதனத் துக்கு வந்து, யக்ஞ கர்த்தாவான பரமேசுவரனைக்குறித்து, எண்ணா யிரம் வருஷம் பௌண்டரீக முதலான சகல யாகங்களையுஞ்செய்து முடித்தார். அப்பொழுது சம்புவானவர் திருப்தியடைந்து பிரத்தி யக்ஷமாய், "அப்பா பிரமாவே! நீசெய்த யாகங்களால் பொய்சொ ன்ன குற்றம் போய்விட்டது; ஆனாலும் முன்பு நான் சொன்னபடி சிரௌத ஸ்மார்த்த கர்மங்களில் மாத்திரம் பூஜை கிடைக்குமே யன்றி விக்கிரகத்தில் கிடைக்காது. இந்த யாகஸ்தலத்துக்கு பிரம குண்டமென்று பேர்வழங்கிவரும். பிரமகுண்டமென்கிற இந்தப் புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினவனுக்கு முக்தி யுலகத்

தின் கதவு திறக்கப்பட்டிருக்கும்; பிரமகுண்டத்திலுண்டாகிற விபூ தியை நெற்றியில் தரித்துக்கொள்ளுகிறவன் மாயா கபாடத் தையுடைத்துக் கொண்டு முத்திவாசற்படியிலேறிப்போவான். அந்தப் பிரமகுண்டத்தின் விபூதியை யெவன் தரித்துக் கொள் ளவில்லையோ அவன் தன் சொந்தப் பிதாவுக்குப் பிறந்தவனோ இல்லையோ வென்பது சந்தேகம். பிரமகுண்டத்தின் விபூ தியை நெற்றியில் தரித்துக்கொண்டவன் செய்த பதினாயிரம் பிரமஹத்திதோஷம், பதினாயிரம் சுராபானதோஷம், பதினா யிரம் சொர்ணத்திருட்டு, பதினாயிரம் குருபத்தினிகமனதோஷம், இவர்களோடு சேர்ந்ததனாலுண்டாகிய பதினாயிரம் பாவங்களும், பூத பிரேத பிசாசாதிகளும் உடனே நசித்துவிடும்" என்று சொல்லி மறைந்தருளினார். பிரமதேவன் யாகங்களை நிறைவேற்றி பரமேசுரனி டத்திலிருந்து மனோரதசித்தி பெற்றுச் சத்தியலோகம்போய்ச் சேர் ந்தார். அது முதல் தேவர்களும், ரிஷீசுவரர்களும், சித்த சாரண கின்னரர்களும் அந்த க்ஷேத்திரமகிமையை யுணர்ந்து, அவ்விடத் தில் வெகுகாலம் வாசமாயிருந்து, அநேக யாகங்களைக் கிரமப்படி முடித்துத் தங்கள் தங்களிடத்துக்குப் போனார்கள். ஆகையால் யாகஞ் செய்ய விரும்புவோர்களெல்லாரும் இவ்விடத்திலேயே செய் யவேண்டியது. மனிதர்கள், தேவர்கள், முனிவர்கள் முதலானவர் களால் வணங்கப்பட்டதும், சகலமானசம்சார துக்கங்களை நீக்குகி றதும், சமஸ்தசம்பத்துகளைக் கொடுக்கிறதும், சமஸ்த பாபங்களைப் போக்குகிறதுமாய் விளங்கிக்கொண்டிருக்கிறது இந்தப் பிரம தீர்த் தமானது.

பதினாலாவது அத்தியாயம்.

முற்றிற்று.

---

பதினைந்தாவது

## அநுமத்குண்ட வைபவத்தில் தர்மஸேக ராஜன் புத்திரப் பேறுபெற்ற அத்தியாயம்.

---

மஹா புண்ணியமான இந்தப் பிரமகுண்டத்தில் ஸ்நானம் பண்ணினபிறகு அநுமத்குண்டத்துக்குப் போகவேண்டும். கேளுங்கள்

பிராமணோத்தமர்களே! பூர்வகாலத்தில் இராவணன் முதலான ராட்சதர்களைச் சங்கரித்து ராமர் முதலானவர்கள் கந்தமாதனத்துக்கு வந்தபோது, வாயு புத்திரனான அநுமான் உலகோபகாரார்த்தமாக இந்த உத்தமமான தீர்த்தத்தைத் தன்பேரால் உண்டாக்கினார். இந்தத் தீர்த்தவைபவத்தையறிந்து ருத்திரமூர்த்தி அங்கே வசித்துக்கொண்டிருக்கிறார். இந்தத் தீர்த்தத்துக்குச் சமானமாக வேறுமொரு தீர்த்தமிருந்ததுமில்லை, இருக்கப்போகிறதுமில்லை. அதில் ஸ்நானம் பண்ணின மனிதர்கள் புராதனமான சிவலோகத்தையடைகிறார்கள். மஹா பாபங்களையெல்லாம் நாசம் பண்ணுகிற இந்தத் தீர்த்தத்தை வாயு குமாரனான அநுமான் சர்வலோகோபகாரமாகச் செய்தபொழுது, சகலமான நரகங்களும் சூனியமாயிருந்தன. அந்தத் தீர்த்தமகிமை சங்கரருக்குத் தெரியுமோ தெரியாதோ நானறியேன். கேகயவம்சத்தில் பிறந்தவனான தர்மஸகன் என்கிற அரசன் பூர்வம் பக்தியோடிதில் ஸ்நானஞ் செய்து நூறு புத்திரர்களையடைந்தான் என்று சூதர் சொல்லச் சௌனகாதிகள் அநுமந்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து நூறு பிள்ளைகளைப்பெற்ற தர்மஸகன் கதையைச் சொல்லவேண்டுமென்று கேட்கச் சூதர் சொல்லுகிறார்.

கேளுங்கள் ரிஷிகளே! அந்த அரசனுடைய சரித்திரத்தைச் சுருக்கிச்சொல்லுகிறேன். பூர்வத்தில் தர்மஸகன் என்கிற இராஜன் சத்துருக்களை ஜயித்துத் தர்மத்தையும் நீதியையும் கைக்கொண்டு, மன்னுயிரைத் தன்னுயிர்போலப் பாதுகாத்துவந்தான். அவனுக்குப் பதியையே தெய்வமாகக்கொண்ட நூறு பத்தினிமார்களிருந்தார்கள். இப்படிப் பாதுகாத்து வருங்காலையில் வம்சவிருத்தி செய்வதற்கான ஒரு குழந்தைகூட அவனுக்குப் பிறக்கவில்லை. ஆகையால் அவன் புத்திரோற்பத்தியைக்குறித்து மஹா தானம் செய்தும், தேவர்களையுத்தேசித்து அசுவமேத முதலான யாகங்களைச்செய்தும், துலாபுருஷன் முதலான வெகு தானங்கள் பண்ணியும், பருப்பு, பலவகைக்கனிகள் முதலியவற்றோடு அர்த்தராத்திரிவரைக்கும் வந்தபேர்க்கெல்லாம்தடையில்லாமல் அன்னதானஞ் செய்தும், பிதுர்க்களையுத்தேசித்து சிராத்தங்களைச் செய்தும், புத்திரனையளிக்கும்படியான அநேக மந்திரங்களை யிந்திரியநிக்கிரகமுள்ளவனாய் ஜபி

த்தும், இன்னும் பலவகையான தருமங்களை வெகுகாலம் செய்தும் கிழவனுகிறபரியந்தம் அவனுக்குப்புத்திரசந்தானமில்லாமற்போயிற்று. கிழத்தன்மையடைந்தும் புத்திரப்பேற்றைக்குறித்து விடாமுயற்சிசெய்து வந்ததனுல் அவனது மூத்தபத்தினியிடத்தில் சுசந்திரனென்ற ஒரு அழகானபுத்திரன் பிறந்தான். அந்தக் குழந்தையை மற்றப் பத்தினிமார்களும் வித்தியாசமில்லாமல் பால்முதலானவைகொடுத்து வளர்த்தார்கள். அந்தக் குழந்தையானவன் தன் மாதாபிதாக்களுக்கும், மந்திரிகளுக்கும், நகரத்தாருக்கும் நயனானந்தத்தையும், இதயானந்தத்தையுங் கொடுத்து வளர்ந்துவந்தான். அரசனும் குழந்தையைச் சீராட்டிப் பரமசந்தோஷமடைநதான். ஒரு நாள் குழந்தை தொட்டிலில் தூங்கும்போது அதன் காலில் ஒரு தேள் பலமாய்க்கொட்டிவிட்டது. அநத உபத்திரவம் பொறுக்கமாட்டாமல் குழந்தை கோவென்றழ அதன் தாய்மார்களும் குழந்தையைச்சூழ உட்கார்ந்து கூக்குரலிட்டழுதார்கள். அப்பொழுது மந்திரி பிரதானி புரோகிதர்களோடு சபைநடுவிலுட்கார்ந்திருந்த அரசன் அந்த அழுகுரலைக்கேட்டு ஒரு சேகவனை நோக்கி "அந்த அழுகுரல் யாதென்று விசாரித்து வா" என்றனுப்ப, அவன் அந்தப் புரத்தின் வாசலுக்குப்போய், அங்கிருந்த கிழ அலிகளைப் பார்த்து "இராஜ ஸ்திரீகளேன் அழுகிறுர்கள்? அதை விசாரித்துச்சொல்லுங்கள். சபையிலிருந்து அரசன் என்னை யிதற்காகஅனுப்பினுர்" என்று சொல்ல, அந்த அலிகள் துக்ககாரணத்தை விசாரித்து அவனுக்குச் சொல்ல, சேவகனேடிவந்து அந்தச் சேதியை அரசனுக்குத் தெரிவித்தான். அரசனும் அதிவேகமாயெழுந்து மந்திரி புரோகிதர்களோடு அந்தப்புரம்போய், மந்திரிகளால் விஷவைத்தியர்களையழைப்பித்துச் சிகிச்சைசெய்வித்ததின்பேரில் துன்பம் நீங்கிச் சுகப்பட்ட குழந்தையைச் சீராட்டி மகிழ்ந்து, வைத்தியர்களுக்கு சொர்ணம், இரத்தினம், முத்துமுதலானவைகளை வெகுமானமாகக் கொடுத்து அனுப்பிவிட்டு, அந்தப்புரத்தினின்றும் வெளிப்பட்டுச், சிந்தைத்துயரத்தோடுகூடச் சபையிலிருக்கும் சிங்காதனத்தில் வீற்றிருந்து, அங்கு வந்திருந்த ரித்துவிக்குகள், புரோகிதர்கள், மந்திரிமார் முதலானவர்களைப் பார்த்து நியாயமான இந்த வார்த்தையைச் சொன்னுன்:—"ஐயா பிராமணுேத்தமர்களே! ஏக புத்திரனையுடையவனுயிருப்பது எப்போதுந் துன்பத்தைத்தரும்; ஓரே பிள்

ளையைப் பெற்றிருப்பதைவிடப் புத்திரனேயில்லாதிருப்பது மேன்மையாகும்; ஒரே பிள்ளையையுடையவனுயிருப்பதில் அநேக அபாயங்களிருக்கின்றன; இதையோசித்துத்தான் நான் நூறு மனைவிகளைக் கல்யாணஞ் செய்துகொண்டேன்; எனக்கும் என் பத்தினிகளுக்கும் மிகுதியும் வயதாய்விட்டது; எங்களுடைய பிராணன் அந்த ஒரே பிள்ளையின்பேரிலிருக்கிறது. அது இறந்துபோனால் நாங்களெல்லாரு மிறந்துபோவோ மென்பதில் சந்தேகமில்லை. ஆகையால் என்னுடைய பத்தினிகளில் ஒவ்வொருத்தியும் ஒவ்வொரு குணசாலியான புத்திரனைப் பெறவும், நான் வெகு புத்திரர்களையுடையவனுயிருக்கவும் சாஸ்திரங்களைப்பரியாலோசனை செய்து ஒரு உபாயஞ் சொல்லுங்கள்; அது கடினமாயிருந்தாலும், எளிதாயிருந்தாலும், பலன் கிடைப்பதனால், நான் அதை அநுஷ்டானம் பண்ணுகிறேன்; நீங்கள் சொன்ன கர்மத்தைத் தவறாமல் அனுஷ்டிப்பேனென்பதற்கு நான் செய்திருக்கிற புண்ணியத்தின் மேலாணையிடுகிறேன் என்று" சொல்லப், புரோகிதர்களும் ரித்துவிக்குகளுமொன்ருகக்கூடி யோசனைசெய்து, ஒரு தீர்மானம் பண்ணி, அரசனைப்பார்த்து" மஹாராஜாவே! உமது பத்தினிமார் நூறு பேருக்கும் நூறு புத்திரர் பிறக்கும்படியான உபாயத்தைச் சொல்லுகிறோம் கேளும். தென்சமுத்திர மத்தியில் சேதுரூபமாகக் கந்தமாதனமென்ருெருமலையிருக்கிறது. அது சித்த சாரண கந்தர்வ, தேவ ரிஷிகூட்டங்களால் நிறைந்திருக்கிறது. 'அந்த மலையைத்தொட்டாலும், பார்த்தாலும், மஹா பாதகங்களையெல்லாம் நீக்கித், துக்கங்களைப்போக்கி, நரகதுன்பத்தை ஒழித்துத் தரித்திரத்தைக் கழித்துப், புத்திரனில்லாதபேர்களுக்குப் புத்திரனையளித்து, ஸ்திரீகளில்லாத பேர்களுக்கு ஸ்திரீகளைக்கொடுத்து, சொர்க்ககாமிகளுக்குச் சொர்க்கத்தையும், மோட்சகாமிகளுக்கு மோட்சத்தையும் தருவதான அநுமத்குண்டமென்கிற ஒரு புண்ணிய தீர்த்தமிருக்கிறது; அதில் நீர் ஸ்நானம் பண்ணி, அதன் கரையில் நியமத்தோடு புத்திரகாமேஷ்டியாகஞ் செய்வீரானால், உம்முடைய மனோபீஷ்டப்படி உமது நூறுபாரியைகளில் ஒவ்வொருத்திக்கும் ஒவ்வொரு புத்திரனுக நூறு பிள்ளைகள் பிறக்கும். இதில் சந்தேகப்படாதேயும்."என்று சொன்னதைக் கேட்ட அரசன் பாரியைகள், புரோகிதர், ரித்துவிக்குகள், மந்திரிகள், வே

லைக்காரர்களோடும் யாகத்துக்குவேண்டிய திரவியத்தையெடுத்து க்கொண்டு தென் சமுத்திரத்திலிருக்கிற கந்தமாதனத்தை நோக்கிச்சென்று, அநுமத்குண்டத்துக்கு வந்து, அதில் சைனியத் தோடு ஸ்நானம் பண்ணி, ஒரு மாதம் அதின் கரையில் வசித்திரு ந்து, வசந்தகாலம் வந்தவுடன் சித்திரைமாதத்தில் புத்திரகாமேஷ் டியாகத்தைத் தொடங்கி, ரித்துவிக்குப் புரோகிதர்களைக்கொண்டு செய்துமுடித்து, புரோகிதரால் தன் பத்தினிகளுக்கு ஹோமசே ஷத்தையுண்பித்து, நூறு பத்தினிகளோடும் அநுமத்குண்டத்தில் அவபிருத ஸ்நானஞ்செய்து, ரித்துவிக்குகளுக்கு ஏராளமான திர வியத்தைத் தக்ஷிணையாகக்கொடுத்து, மற்றுமுள்ள பிராமணர்க ளுக்குக் கிராமதானம் பண்ணி, மந்திரி பரிவாரம் பத்தினிசமேத னாய்ச் சந்தோஷத்துடன் திரும்பித் தன் பட்டணம் போய்ச்சேர்ந் தான். சிறிதுகாலஞ் சென்றபிறகு அவனுடைய நூறு பாரியைக ளும் கர்ப்பந்தரித்துப் பத்தாவது மாசத்தில் குணசாலியான நூறு புத்திரர்களைப் பெற்றார்கள். தர்மசகன் ஆனந்தத்தோடு ஸ்நானஞ் செய்து, பரிசுத்தனாய்ச் சங்கற்பஞ் செய்துகொண்டு, ஜாதகர்மத்தை முடித்துக், கோதானம், பூதானம், திலதானம், இரணியதானம் முதலான தானங்களைப் பிராமணர்களுக்குக்கொடுத்துச், சிலகாலம் வாழ்ந்திருந்தான். பிறகு, தன்குமாரர் நூற்றொருவரும் யௌவன தசையையடைந்ததும் தன் ராஜ்யத்தை யவர்களுக்குப் பிரித்துக் கொடுத்துவிட்டுத், தான்பத்தினிகளுடன் கந்தமாதனத்திலிருக்கும் அநுமத்தீர்த்தம் வந்துசேர்ந்து, அதன் கரையில் சிவனை யுத்தேசித் துத் தவம்புரிந்து வெகுகாலமிருந்து, மனவடக்கமுடையவனாய்த் தன் சரீரத்தைவிட்டு வைகுண்டம்போய்ச் சேர்ந்தான். அவன் பத்தினிகளும் அநுமரணம் பண்ணித் தங்கள் நாயகனிருக்குமிடம் போய்ச் சேர்ந்தார்கள். அரசனுடைய ஜேஷ்டபுத்திரனாகிய சுசந்திரன் மாதா பிதாக்களுடைய சரமகிரியைகளைச் செய்து, இராஜ்யத் தத்தையும் நடத்தி, மஹா பராக்கிரமசாலிகளாயிருக்கிற தன் சகோதரர்களோடு, விரோதமில்லாமல் கூடி யிராஜ்யபரிபாலனஞ் செய்துவந்தான். அதேமாதிரியாக மற்ற இராஜகுமாரர்களும் தங்கள் தங்களுக்குக் கிடைத்த இராஜ்யத்தையாண்டுகொண்டு சுக மாய் வாழ்ந்திருந்தார்கள். கேளுங்கள் முனீசுவரர்களே; இந்த அநுமத்குண்டவைபவத்தையும், தர்மசகராஜனுடைய திவ்யசரித்திர

த்தையுமுங்களுக்குச் சொல்லிவிட்டேன். ஆகையால் சமஸ்தமனோ ரதஸித்தியின்பொருட்டு அந்த அநுமத்தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்யவேண்டும். இந்த அத்தியாயத்தைச் சிரத்தையோடு படிப்பவரும், கேட்பவரும் இம்மையில் அளவில்லாத சுகத்தையனுபவித்து, மறுமையில் தேவர்களோடுகூடிக் குலாவி வாழ்ந்திருப்பர்.

பதினைந்தாவது அத்தியாயம்

முற்றிற்று



பதினாறாவது

# அகஸ்திய தீர்த்தவைபவத்தில் சுக்ரீவான் மனோரமையை மணந்த கதையுரைத்த

அத்தியாயம்.

ருத்திரமூர்த்திவாசம் பண்ணிக்கொண்டிருக்கும் அனுமத்தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணிவிட்டுப், பிறகு நியமத்தோடு அகஸ்திய தீர்த்தம் போகவேண்டும். இதைக் கும்பத்தில் பிறந்த, அகஸ்தியர் உண்டாக்கினார். பூர்வம் விந்தியபருவதத்துக்கும் மேருமலைக்குஞ் சண்டைநேரிட, விந்தியமலையானது ஆகாயத்தையளாவி யுயர்ந்து நிற்கப், பிராணிகளெல்லாம் மூச்சுவிடக்கூடாமல் வருந்தத், தேவர்கள் கைலாஸ பருவதம்போய்ப் பரமசிவனுக்குத் தெரிவித்தார்கள். சிவபெருமான் அப்பொழுது பார்வதியை விவாகஞ்செய்யப் பிரயத்னஞ்செய்துகொண்டிருந்த படியால், பார்வதியைத் தனக்குப் பாணிக்கிரகணஞ் செய்து தரும்படியாகக்கேட்டு நிச்சயித்துவர இமயாசலராஜனிடம் வசிஷ்டாதி முனிவர்களையனுப்பி, அகஸ்தியரைப் பார்த்து“ நீர் விந்தியபருவதத்தின் கருவத்தையடக்கும் ”என்று கட்டளையிட, அகஸ்தியர்“ சுவாமி! உமது திருமணக்கோலத்தை யெப்படித் தரிசிப்பேன்? ”என்று விஞ்ஞாபனம் பண்ண, பரமசிவன் அகஸ்தியரைப் பார்த்து அகஸ்தியரே“ பார்வதி கல்யாணகோலத், தை வேதாரணியக்ஷேத்திரத்தில் தரிசிப்பிக்கின்றேன். ஆகையால்

விந்தியாசலத்னதயடக்க நீர் சீக்கிரம் புறப்படும்" என்று சொன்ஞர். அகஸ்தியர் உடனே புறப்பட்டுப்போய் விந்தியத்தை அடக்கித், தமதுகாலால் பூமியைச் சமஞகச்செய்து, தெட்சணதேசங்களில் சுற்றிக் கந்தமாதனம் வந்துசேர்ந்து, அதன் வைபவத்தையறிந்து, அவ்விடத்தில் தமது பேரால் ஒரு புண்ணியதீர்த்தத்தை நிர்மாணம் பண்ணி, லோபாமுத்திரையென்கிற மனைவியாரோடு இன்னமும் வாசம் பண்ணிக்கொண்டிருக்கிருர். அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணித்தீர்த்தபானம் பண்ணிஞல் அவனுக்கு மறு பிறப்பில்லை. இந்தத் தீர்த்தத்துக்குச் சமானமான தீர்த்தம் இந்தலோகத்தில் முச்காலத்திலுமில்லை. இது ஸ்நானம் பண்ணினவர்களுக்குச் சர்வாபீஷ்டமும், மோட்சானந்தமும் கொடுக்கிறது. இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினமகத்துவத்தால் தீர்க்கதமசு என்கிற முனிவருடைய குமாரனை கக்ஷீவான் தானிச்சித்த சுவநயனென்பவனுடைய புத்திரி மனோரமையை மணந்தான். ஓ முனிவர்களே! பாபத்தையழித்துப் புண்ணியத்தைக்கொடுக்கும்படியான அந்தக் கதையை யுங்களுக்குச் சொல்லுகிறேன். சிரத்தையோடு கேளுங்கள்.

தீர்க்கதமசுஎன்கிற பரம தார்மிகரான ஒரு முனிவரிருந்தார். அவருக்குக் கக்ஷீவான் என்கிற புத்திரனொருவனிருந்தான். அவனுக்கு உபநயனமான பிறகு ஜிதேந்திரியனுய்ப் பிரமசாரியாய், உதங்கரென்னும் குருவிடத்தில் நாலுவேதங்களையும், ஆறுசாஸ்திரங்களையும், இதிகாசபுராணங்களையும், உபநிஷத்துகளையும், அறுபது வருஷகாலம் அத்தியயனம் செய்து, குருதட்சணை கொடுத்துவிட்டுத் தன்வீட்டுக்குவரப் பிரியப்பட்டுக் குருவைப்பார்த்து! "சுவாமி, நான் வீட்டுக்குப்போக அநுமதிகொடுத்தருளவேண்டும்; என்னிடத்தில் கருணை கூர்ந்து என்னைக் காப்பாற்றவேண்டும்" என்று பிரார்த்திக்க, உதங்கரும் அவனைப்பார்த்து, "உனக்கு வீட்டுக்குப்போக அனுமதி கொடுக்கிறேன். நீ விவாகஞ்செய்துகொள்ளுகிற உபாயமும் உனக்குச்சொல்லுகிறேன். கேள்:—இராமசேதுவாகிய கந்தமாதனத்துக்குப்போய், ஸர்வாபீஷ்டத்தையுங் கொடுக்கிறதாயும், சகலபாபங்களையும் கெடுக்கிறதாயும், புத்திமுத்திகளையளிப்பதாயுமிருக்கிற அகஸ்திய தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்துகொண்டு, மூன்றுவருஷம் அங்கேயே விரதமநுஷ்டித்துக்கொண்

டிரு. நாலாவது வருஷம் அந்தத்தீர்த்தத்திலிருந்து நாலுதந்தங்களையும், பெரிய சரீரத்தையும், சரத்கால மேகம்போல வெளுத்த் நிறத்தையுமுடைய ஒரு பெரிய யானையானது வெளியில்வரும். அப்பொழுது அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து யானையின்மேலேறிக்கொண்டு சுவநயன் என்கிற அரசனுடைய பட்டணம்போய்ச் சேரு. நாலு தந்தங்களுள்ள யானையின்மே லிரண்டா வதிந்திரனைப்போல் வருகிற உன்னைப்பார்த்து அந்த ராஜரிஷியானவர், தன் கன்னிகையின் விவாகத்தினிமித்தமாக அடைந்திருக்கிற துயரம் நீங்கிச் சந்தோஷமடைவார். இராஜபுத்திரியாகிய மனோரமை யென்பவள், நாலுதந்தங்களும், பெரிய சரீரமும், வெள்ளைநிறமுமுடைய யானையின்மேலேறிக்கொண்டு வருகிற புருஷனையே நான் மணம் புரிவேனென்று சபதஞ் செய்துகொண்டாள். அதுகேட்ட அரசன் மனம் வருந்தியிருக்கையில்ஒருநாள் அவ்விடத்துக்கு நாரத முனிவர் வந்தார். வந்தமுனிவரைக் கண்ட தார்மிகனான அரசன் சந்தோஷத்துடன் எதிர்கொண்டழைத்துவந்து, அர்க்கிய, பாத்திய, ஆசமனீய, ஆசனாதிகள்கொடுத்து, உபசரித்துப் பாதத்தில் வணங்கி, அவரிடத்தில் தன் குமாரத்தி செய்துகொண்டிருக்கும் சபதத்தைச் சொல்லி, ' இவ்விதமான யானை யிவ்வுலகத்திலில்லையே! தேவலோகத்திலல்லவோ உள்ளது. பேதையான என் குமாரத்தி நிறைவேற்றக்கூடாத பிரதிக்ஞை செய்துகொண்டாளேயென்று என் மனம் வருந்துகிறது. பெண்ணுக்கு விவாகஞ் செய்துவையாத தகப்பனுக்கு எப்போதுந் துக்கமே யுண்டாகும்' என்று கூறிய ராஜரிஷியைப் பார்த்து, நாரதமுனிவர், ' ஐயா! வருத்தப்படாதேயும்; பூலோகத்தில் கக்ஷீவான் என்ற பிராமணோத்தமனொருவன் இவ்விதமான வெள்ளை யானையின்மேலேறிக்கொண்டு உமக்குமருமகனாகவருவான்.' என்று சொல்லி யாகாசமார்க்கமாகப் போய்விட்டார். நாரதர் சொல்லியதைக்கேட்ட சுவநயன் என்ற அரசன், இவ்விதமான மாப்பிள்ளையின் வரவுக்கு இரவும் பகலும் எதிர்பார்த்திருக்கிறான். ஆகையால் பாலதபசியாகிய கக்ஷீவானே நீ அகஸ்திய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வதற்காகச் சீக்கிரம்போ. உனக்குச் சர்வ மங்களமும் உண்டாகும் சந்தேகமில்லை." என்று சொன்னார். இவ்விதம் உதங்கரால் அனுக்கிரகிக்கப்பட்ட கக்ஷீவான் குருவினிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, சீக்கிரமாக அகஸ்திய தீர்த்தம் வந்து ஸ்நானம் பண்ணி,

ஒருநாள் க்ஷேத்திரோபவாசஞ் செய்து, மறுநாள் பாரணைபண்ணி இராத்திரியில் அங்கேயே தூங்கினார். இவ்விதம் நியமத்தோடு இருந்துவருகையில் ஒருநாள் குறைய மூன்றுவருஷமாய்விட்டது. மூன்றும் வருஷக் கடைசிநாளில் சாயந்திரம் சந்தியாகிரியை முடித்துக்கொண்டு, அதன் கரையிற்படுத்து நித்திரை செய்யுங்காலத்தில், விடியஜாமத்துக்கு பிரளயகாலத்தில் அலைவீசிக் கொந்தளிக்கும் சமுத்திர கோஷத்துக்கு ஒப்பான ஒரு பேரொலிகேட்டுக் கண் விழித்துப் பார்த்தார். அப்பொழுது மதுராபதியான சுவநயன் என்கிற அரசன் யானை, சிங்கம், வராகம், மகிஷம், ருரு என்கிற மான் முதலிய மிருகங்களை அம்பினாற் கொன்று வேட்டையாடிக்களைத்து, நால்வகைச் சேனைகள், மந்திரிமுதலானவர்களோடு, அகஸ்திய தீர்த்தக்கரையில் வந்து களையாறிக்கொண்டிருந்தான். விடிந்து வெளிச்சமானவுடனே கக்ஷீவான் என்கிற ரிஷியானவர், அகஸ்தியதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சந்தியாவந்தனாதிகளை முடித்துக்கொண்டு அதன் கரையில் ஜபம்பண்ணிக்கொண்டிருந்தார். அந்தச்சமயத்தில் கைலாசமலை இந்த உருக்கொண்டு வந்ததோவென்று நினைக்கும்படியாக நாலு தந்தங்களுடைய ஒரு பெரிய வெள்ளையானையானது அந்தத் தீர்த்தத்தினின்றும் புறப்பட்டுக் கக்ஷீவான்கிட்டவந்து நின்றது. உதங்கர் சொன்ன லட்சணங்களோடு கூடியிருக்கிற அந்த யானையைக்கண்ட கக்ஷீவான், அதன் மேலேறும்படியாக ஸ்நானஞ்செய்து அந்தத்தீர்த்தத்தை நமஸ்கரித்துத் துதித்து, யானையின்மேலேறிச், சுவநயன் பட்டணத்தை நோக்கிப் போகப்புறப்படுகையில், அந்தச சுவநயனென்கிற ராஜாவும், இவன்தான் கக்ஷீவானாக இருக்கவேண்டுமென்று கருதிச் சந்தோஷமடைந்து, அவன் கிட்டவந்து, "ஐயா, பிராமணோத்தமரே! நீர் யாருடைய பிள்ளை? உமதுபேரென்ன? இந்த யானையின் மேலேறிக்கொண்டு எவ்விடம்போகிறீர்?" என்று கேட்டான். அதுகேட்ட கக்ஷீவான், "ஐயா! என் தகப்பனார் தீர்க்கதமசு முனிவர்; என்பேர் கக்ஷீவான் என்று சொல்வார்கள்; நான் சுவநய னென்கிற அரசன் பட்டணத்துக்குப்போய், மனோரமையென்கிற அவன் பெண்ணை மணம்புரிந்து, அவளுடைய பிரதிக்ஞையைப் பூர்த்திசெய்விக்கப்போகிறேன்' என்றார் அமிர்தவருஷம்போன்ற அந்த வசனத்தைக்கேட்டு, ஆனந்தத்தினாற்கண்மலர்ந்து, அவனைப்பார்த்து, "ஐயா! கக்ஷீவானே! நீர் யாருடைய குமாரத்தி மனோரமையை மணம்

புரியப்போகின்றீரோ அந்தச் சுவநயனென்கிற அரசன் நானே. நானி ப்பொழுது கிருதார்த்தனானேன். வாரீர், பாலதாபசரே. நீர் என் பெண்ணை விவாகம்புரிந்து, அவளோடுகூடிக் கிரகஸ்த தர்மங்களைச் செய்து வாழ்ந்துவருவீராக" என்று சொன்னான். அதுகேட்ட கக்ஷீ 'வான் அரசனைப்பார்த்து ஐயா! என் தந்தை வேதாரணியத்தில் தபசு பண்ணிக்கொண்டிருக்கிறார். அவருக்கும் ஒரு பிராமணனைய னுப்பிவையும்" என்று சொல்ல" அரசனப்படியேதன் புரோகிதரான சுதரிசனன் என்கிற பிராமணனை ஏராளமான சேனைகளோடு வேதார ணியத்துக்கு அனுப்பினான். அந்தப் புரோகிதனும் வேதாரணியம் போய், அங்கே ஓராச்சிரமத்தில் வேதாரணியேசுவரரை நோக்கித் தவம்புரியும் தீர்க்கதமசு என்ற முனிவரைக்கண்டு, நமஸ்காரம் செய்து, அவருக்குச் சந்தோஷ முண்டாகும்படியாக "ஐயா! முனி வரே, க்ஷேமமா? தபசு விருத்தியடைந்து வருகிறதா? ஆச்சிரமத்தி லெல்லாரும் சௌக்கியமா? தர்மம் சரிவரநடந்துவருகிறதா" என்று க்ஷேமம் விசாரிக்க, தீர்க்கதமசும் அர்க்கியபாத்தியாதிகளாலுபசரி த்து "ஐயா பிராமணோத்தமா! வேதாரணியேசுவரருடைய கிருபை யினால் எல்லோரும் சௌக்கியம் அசௌக்கியமே கிடையாது. நீர் சௌக்கியமா? சுகமாக வந்தீரோ? நீர் வேதவித்துக்களுக்கெல்லாம் சிரேஷ்டராகிய சுவநயன் என்பவனுடைய புரோகிதர் அல்லவா? அவனைவிட்டுச் சேனைகளோடு என் ஆசிரமத்துக்கு வந்தகாரண மென்ன?" என்று கேட்டார்.

சுதரிசனனும், தேஜசால் விளங்குகிற அம்முனிவரைப் பார்த்து, "ஐயா! தங்கள் கிருபையினால் எல்லாரும் சௌக்கியம்தான். சுவநய ராஜன் சாஷ்டாங்கமாகத் தங்களை நமஸ்கரித்து, வணக்கத்தோடு என் மூலமாகத் தெரிவிப்பது: 'கக்ஷீவான் என்னும் தமது குமாரன் கந்தமாதன பர்வதத்தில் அகஸ்தியதீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணிக் கொண்டிருக்கிறார்; அவருடைய ரூபத்தையும், தர்மாசாரத்தை யும், உத்தமகுலப் பிறப்பையும் யானறிந்து, என் பெண்ணாகிய மனோ ரமையை அவருக்குக்கொடுக்க இச்சிக்கிறேன்; வேட்டையாடவந்த நான் உமது புத்திரனிடத்திலிருக்கிறேன். தமது குமாரனும் தந்தை அனுக்ஞையில்லாமல் விவாகஞ் செய்யமாட்டேனென்று சொல்லு கிறார். ஆகையால் தாங்கள் தயவுசெய்து என் குமாரத்தியை உமது குமாரன் மணம்புரியும்படி அநுக்கிரகஞ் செய்யவேண்டும். இந்தக்கா

ரியத்தை யுத்தேசித்தே என் புரோகிதரைத் தங்களிடம் அனுப்பி யிருக்கிறேன் ' என்று சொல்லி யென்னைத் தங்களிடத்துக்கு அனுப்பினார்" என்று சொல்லி முடித்தவுடனே, தீர்க்கதீமசு, "ஐயா, சுதரிசனரே! அப்படியே யாகட்டும், சுவநயனுக்கு எது இஷ்டமோ அது எனக்கும் இஷ்டந்தான். நானுங் கந்தமாதன பர்வதத்துக்கு வருகிறேன்" என்று சொல்லி, வேதாரணியேசுவரரைப் பக்தியுடன் நமஸ்கரித்துச் சுதரிசனரோடுகூடச் சேதுவைநோக்கிப் புறப்பட்டு, ஆறு நாளில் கந்தமாதனம் வந்து, அகஸ்தியதீர்த்தக் கரையிலிருக்கிற தம் புத்திரனைக்கண்டார். புத்திரனும் தந்தையைக்கண்டு, தன் பெயரைச் சொல்லி நமஸ்காரம் பண்ண, தகப்பன் பிள்ளையைத் தன் மடியிலிருத்திக்கொண்டு, உச்சிமோந்து, அன்போடு கட்டித்தழுவிப் புளகாங்கிதராய் க்ஷேமம் விசாரித்து, "அப்பா, கக்ஷீவானே! எல்லாவேதத்தையும் அத்தியயனஞ்செய்தாயா? இவைகளை யெல்லாமெனக்குச் சொல்லு" என்று வினவ, புத்திரன் எல்லாவற்றையு மன்போடு சொல்லிமுடித்தான்.

## பதினாறுவது அத்தியாயம்

முற்றிற்று

---

## பதினேழாவது

# கக்ஷீவான் மனோரமையை விவாகஞ்செய்த

## அத்தியாயம்

---

முனீசுவரர்களே கேளுங்கள், கக்ஷீவான் தந்தையைப்பார்த்துச் சொல்லுகிறான்: "நான் படித்துக் குருதக்ஷிணைகொடுத்த பிறகு என்னுடைய குருவாகிய உதங்கர் கட்டளையின்படி சுவநயராஜன் புத்திரியை விவாகஞ் செய்யும்பொருட்டு இந்த அகஸ்தியதீர்த்தம் வந்து, அவரது உபதேசப்படி மூன்றுவருஷம் நடந்துகொண்டு வந்தேன். மூன்றும்வருஷக் கடைசியில், சுவநயன் யதிரிச்சையாக வந்து உனக்கு பெண்ணைத்தருகிறேனென்று சொன்னான். நான் அவ

சியம் என் தந்தைக்குத் தெரிவிக்கவேண்டுமென்றதினால் தங்களிட மொரு பிராமணனை யனுப்பிச்சமாசாரந்தெரிவித்தார்" என்றுசொல்லி முடித்தான். இதன் மத்தியில் சுதர்சனன் என்ற புரோகிதன் சுவநய ராஜனிடம்போய்த் தீர்க்கதமசு வந்திருக்கிறாரென்று தெரிவித்தான். அரசன் அதைக்கேட்டுத் தன் புத்திரனோடு பேசிக்கொண்டிருக்கிற தீர்க்கதமசு முனிவரைக்கண்டு, தேவேந்திரன் பிரமாவை வணங்குவதுபோல உலகத்துக்கெல்லாம் க்ஷேமத்தைச் செய்யும்படியான அவர் திருவடிகளில் நமஸ்கரிக்கத் தீர்க்கதமசு அவனைத் தூக்கியெடுத்து ஆசீர்வாதஞ்செய்தார். இச்சமயத்தில் உதங்க முனிவர் இராமசேதுவில்தனுக்கோடியில் ஸ்நானஞ் செய்யவிரும்பி அநேக சிஷ்யர்களோடும் இலட்சக்கணக்கான முனிவர்களோடும் அகஸ்தியதீர்த்தத்துக்கு வரக்கண்ட சுகூீவான் எதிர் கொண்டுபோய்த் தன் குருபாதாரவிந்தத்தில் வணங்க, அவரும் அவனுக்கு ஆசிர்வாதம் பண்ணினார். தீர்க்கதமசு முனிவர் உதங்கரைக்கண்டு ஒருவருக்கொருவர் குசலம் வினவியபின், லோகபிரசித்தர்களாக இருவரும் புண்ணியகதைகளைப் பேசிக்கொண்டிருக்கையில், சுவநய ராஜன் உதங்கரை வணங்கியவரது ஆசீர்வாதம் பெற்றபின்பு சந்தோஷத்தோடு தீர்க்கதமசைப் பார்த்து, "சுவாமி! கல்யாணத்துக்கு யத்தனஞ்செய்யலாமே" என்று சொல்ல 'முனிவரும்,' அப்படியேயாகட்டும்; நாளைய தினம் நல்ல முகூர்த்தத்தில் இந்தக் கந்தமான பருவதத்திலேயே விவாகத்தை நிறைவேற்றுவோம்; ஆகையால் உன் பெண்ணைக் கன்னியா மாடத்தினின்று வரவழை" என்று சொல்ல, அரசனும் தன்கூடாரத்துக்குவந்து விருத்தர்களான அநேகம் அந்தப்புரக்காவலாளிகளையனுப்ப, அவர்களும் வாயுவேகம், மனோவேகமுள்ள குதிரைமேலேறிக் கொண்டு போய் அந்தப்புரத்துக்குச் சமாசார மெல்லாந் தெரிவித்து, அந்தப் புரஸ்திரீகளையும், கன்னிகையையும் அழைத்துக்கொண்டு கந்தமாதனம் வந்துசேர்ந்தார்கள். மறுநாள் சுபமுகூர்த்தத்தில், கோதான முதலான சடங்குகளை விதிப்படி செய்தபின், சுகூீவான் நாலு கொம்புகளையும் பெரிய காத்திரத்தையும் உடைய வெள்ளையானையின்மேல் இரண்டாவது தேவேந்திரனைப்போல ஏறிக்கொண்டு, மனோரமையின் பிரதிக்ஞையை நிறைவேற்றி வைக்கும்படியாக, மங்களாசாசனஞ் செய்துகொண்டுவருகிற அநேகம் பிராமணர்களோடும், தன் பிதா குரு முதலானவர்களோடும், தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்

இற அரசனுடைய கூடாரத்துச்குச்சந்தோஷத்தோடு வருவதைக்க ண்டுவிவாகலோலங்கொண்டிருக்கிறமனோரமையானவள் "நமதுபிரதிக் ஞையின்றுதான்நிறைவேறிற்று" என்றுகளித்திருந்தாள் அப்போது இராஜன்தன் கூடாரவாசலில்உதங்கர்முதலானவர்களோடுவந்த ககூஷீ வானைப் புரோகிதரோடும் எதிர்கொண்டுவந்தான். அப்பொழுது அந் தப்புரத்தாதிகளெல்லாம் ஆலாத்தி சுற்றினார்கள். பிறகு பிராமணர் களோடுகூட இலட்சுமீவிலாசம் பொருந்திய ககூஷீவான் கூடாரத்திற் பிரவேசிக்க, அரசன் மிகுந்த வணக்கத்தோடு தீர்க்கதமசு, உதங்கர், இருவர்க்கும் அர்க்கியபாத்திய முதலியகொடுத்து உபசரித்தான். பிறகு வஸ்திர சாமர தோரணாதிகளால் அலங்கரிக்கப்பட்டிருக்கிற கல்யாண மண்டபத்தில் மாப்பிள்ளையான ககூஷீவான், தீர்க்கதமசு, உத ங்கர் முதலானவர்களும் மற்றுமுள்ள ரிஷிகளும் உட்கார்ந்தார்கள். அரசனும் மந்திரி புரோகிதர்களோடு உட்கார்ந்தான். அப்பொழுது அழகிய கூந்தலையும், கொவ்வைப் பழம்போன்ற இதழையும், பரு த்து உயர்ந்த தனபாரங்களையும், சர்வாங்க லட்சணங்களையுமுடைய மனோரமையை திவ்யவஸ்திராபரணாதிகளால் அலங்காரஞ்செய்து, ஜன கள் நிறைந்த கல்யாண மண்டபத்துக்கு அழைத்துவந்தார்கள். மனோ ரமை தன் கையிலிருக்கிற தாமரை மலர்மாலையைக் ககூஷீவான் கழுத் திலிட, உதங்கமுனிவர்வதூவரர் இருவரையும்திருமணமேடையிலுட் காரச்செய்து, அக்கினி வளர்த்து லாஜஹோமம்முதலான அக்கினிகாரி யங்களையுமுடித்துப், பாணிகிரகணஞ் செய்வித்து விவாககிரியைகளை நிறைவேற்றினார். அப்பொழுது அங்கிருந்த பிராமணர்களெல் லாம் வதூவரர்களுக்கு ஆசீர்வாதஞ் செய்தார்கள். பிறகு அரசன் தன் சம்பந்திகளுக்கும், தன் பந்துஜனங்களுக்கும், மற்றுமுள்ள அதி திகளுக்கும் ஷட்ரசோபேதமாய் விருந்து செய்வித்துத் தாம்பூலாதி கள் கொடுத்து மரியாதைசெய்தான். பிறகு உதங்கர், தீர்க்கத மசு முனிவரிடம் செலவுபெற்றுக்கொண்டு தமதாசிரமம் போனார். மற்றைய பிராமணர்களெல்லாரும் தத்தமிடங்களுக்குப் போனார்கள். வெள்ளையானையும் அகஸ்தியதீர்த்தத்தில் மறைந்துபோயிற்று. தீர்க்க தமசும் தன் குமாரன் மருமகளோடு இஷ்டப்பிரதமான அகஸ்திய தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணிச், சர்வலோகப் பிரசித்தமான அந்தத் தீர்த்தத்தைப் புகழ்ந்து, வேதாரணியத்திலிருக்கும் தமது புண்ணி யாசிரமத்துக்குப்போக எண்ணங்கொண்டு, அரசனிடந்தெரிவிக்க,

அரசனும் சந்தோஷத்தோடு கூடத் தன் குமாரத்திக்கு ஆயிரம்பசுக்கள், ஆயிரம்தாதிமார்கள், ஐந்நூறு கிராமங்கள், இலட்சம்பொன், திவ்யமான பதினாயிரம் வஸ்திரங்கள், நூறு நகைப்பெட்டிகள், ஆயிரம் முத்துமாலைகள், ரத்நமாலைமுதலிய ஆபரணங்கள், இவைகளைச் சீதனமாகக் கொடுக்க, தீர்க்கதமசும் அந்தச் சீதனங்களோடுவதூவரர்களை அழைத்துக்கொண்டு வேதாரணியம் போய்ச்சேர்ந்து, புத்திமுக்திகளையருளும் வேதாரணியேசுவரரைச் சேவித்துக்கொண்டு சுகமாக வாழ்ந்திருந்தார். கக்ஷீவானும் தன் பத்தினியோடு நெடுங்காலம் வாழ்ந்துசுகித்திருந்தான். சுவநயனென்கிறராஜரிஷியும் அகஸ்தியதீர்த்தத்தில் சகல சேனைகளோடும், அந்தப்புர ஸ்திரீகளோடும் ஸ்நானஞ்செய்து தன் பட்டணமாகிய மதுராபுரிபோய்ச் சேர்ந்தான். பிராமணர்களே! அகஸ்தியதீர்த்த மகத்துவத்தால் கக்ஷீவானென்கிற ரிஷி பிறருக்குக் கிடைப்பதற்கருமையான இராஜகுமாரத்தியை விவாகம் செய்துகொண்டார்.

இந்தப் புண்ணியகதையானது வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஐசுவரியம், கீர்த்தி, ஆயுசுமுதலியவற்றை விருத்தி பண்ணுகிற இந்த இதிகாசத்தை யெவ்வகையிலாவது படிக்கவேண்டியது, அல்லது கேட்கவேண்டியது. இந்தப்புராதனமான இதிகாசத்தைப் படிக்கிறவர்களும், கேட்கிறவர்களும் இகபரமிரண்டிலுந் தரித்திரத்தையும், துக்கத்தையும் ஒருபோதும் அடையமாட்டார்கள்.

பதினேழாவது அத்தியாயம்.

முற்றிற்று.



பதினெட்டாவது

# இராமதீர்த்த மகிமையில் தருமபுத்திர மஹாராஜன் பொய்சொன்ன பாவம் நீங்கின

அத்தியாயம்.

---

கேளுங்கள் முனீசுவரர்களே! அகஸ்திய தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணவிட்டுத் தன் பாபம் நீங்கும்படி புண்ணியமான ராமதீர்த்தம்போகவேண்டும். இந்த ராம தீர்த்தக்கரையில் சுவற்பமான தட்

சணை கொடுத்து யாகஞ்செய்தாலும் அது சம்பூரணமான தட்சணை கொடுத்துச் செய்தயாகபலனைக் கொடுக்கும்: அப்படியே அதின்கரையில் செய்யும் அத்தியயனமும் அநந்தபலனைத்தரும். இதன்கரையில் மூர்க்கனுக்கு ஒருபிடி அன்னமிட்டாலும் அதுவும் அநந்த பலனைத்தரும். பாபத்தை நீக்கிப்புண்ணிய பலனைக்கொடுக்கிற இந்த ராமதீர்த்த சரித்திரத்தை யுங்களுக்குச் சொல்லுகிறேன். பூர்வம் அகஸ்தியர் சிஷரான சுதீட்சணனென்ற ஒரு பிராமணோத்தமன் இராமனுடைய சரணாரவிந்தங்களை யிதயத்தில் வைத்து இந்தத் தீர்த்தக்கரையில் மஹாகொரமான தபசுசெய்து வந்தார். தினந்தோறு மிந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணி, இராமாஷ்டாக்ஷர மந்திரத்தை ஐயாயிர உருஜபித்து, பிக்ஷையெடுத்து மிதாகாரபோஜனஞ் செய்து, கோபத்தையும், இந்திரியத்தையும் அடக்கி, வெகுகாலம் தவசு புரிந்தார். இராமசந்திரனைச் சதாதியானம் பண்ணிக்கொண்டிருந்த அந்தமுனிவர் தினந்தோறும் பக்திபூர்மமாக சீதாசமேதரான் ஸ்ரீராமசந்திரனை" ஜானகிகாந்தா! அனுமப்பிரியா! கௌசிக முனிவர் செய்த யாகசம்ரக்ஷணை விஷயத்தில் தீக்ஷைசெய்து கொண்டவரே! உமக்கு நமஸ்காரம். கௌசலை புத்திரனும், விசுவாமித்திரருக்குப் பிரியராயுமிருக்கிற உமக்கு நமஸ்காரம். சிவனுடைய வில்லை முறித்தவரே! தேவர்களாலே துதிக்கப்பட்டவரே! மாரீசாந்தகா! தாடகையின் பிராணனை யபகரித்தவரே! இராஜேந்திரா! உமக்கு நமஸ்காரம்! தசரத குமாரா! ஹரியே! உமக்கு நமஸ்காரம். பரசுராமனை ஜெயித்தவராயும், கரனைத் தொலைத்தவராயும், சுக்கிரீவனுக்கு நாதராயும், வாலியைச் சம்ஹரித்தவராயும், விபீஷணனுடையப் பயத்தையும், துக்கத்தையுந்தீர்த்தவராயும், பாபத்தைப் போக்குகிறவராயும், அகலியையின் துக்கத்தை அகற்றினவராயும், பரதனுக்கு மூத்தசகோதரராயும், சமுத்திரத்தின் கருவத்தை நீக்கினவராயும் அந்தச் சமுத்திரத்தில் சேதுவைக்கட்டினவராயும், அண்டினவர்களைச் சம்சாரத்தினின்று விடுவிப்பவராயும், பிரமசொரூபியாயும், இலட்சுமணனுக்குச் சகோதரராயும், இராட்சதரைச் சங்கரித்து, இராவணனைக்கொன்றவராயும், கோதண்டத்தைக் கையி லேந்தினவராயும், சமஸ்தமான இராட்சதரையும் நாசம்பண்ணினவராயு மிருக்கிற உமக்கு நமஸ்காரம்." என்று ஸ்தோத்திரம் பண்ணி அவரது திருவடியிலேயே சிந்தையைச் செலுத்தி வந்

தார். இப்படித்தியானித்து வருகிற அவருக்கு ஸ்ரீராமரிடத்தில் நிலை யான பக்தியும், ஜீவாத்மாவும், பரமாத்மாவும் ஒன்றென்கிறஅத்வைத ஞானமும், தான் அத்தியயனம் பண்ணியிராதவும் கேட்டிராதவுமான வேதங்களினறிவும், பரகாயப்பிரவேச சாமர்த்தியமும் ஆகாசகமன சக்தியும், அறுபத்து நாலுகலைஞான வுணர்ச்சியும், கேளாத சாஸ்திரங்களைக் குருவில்லாமலறியும் அறிவும், எல்லா உலகங்களிலும் தடையில்லாமல் போகும்படியான வல்லமையும், இந்திரியங்களுக் கெட்டாதவைகளைப் பார்க்குந் தன்மையும், தேவர்களோடு பேசும் சாமர்த்தியமும், எறும்பு முதலான ஜந்துக்களின் பாஷையையறியும் வல்லமையும், இன்னமும் யோகிகளுக்குக்கிடைக்கக்கூடியதான சகலமும் கிடைத்தது.

இவ்வளவு வைபவமுடைய இந்தத்தீர்த்தமானது, மஹாபாதகங்களைப் போக்குகிறது. மஹாசித்திகளைக்கொடுக்கிறது. அபமிருத்தியுவை நீக்குகிறது. புத்தியையும் முக்தியையுந் தருகிறது. மனிதர்களுக்கு நரகதுக்கதை நாசமாக்குகிறது. இராமனிடத்தில் பக்தியைத் தருகிறது. சம்சாரதுக்கத்தை விலக்குகிறது. இப்படிப்பட்ட தீர்த்தக்கரையில் ஸ்ரீராமரானவர் லோகாநுக்கிரகார்த்தமாக ஒரு மஹாலிங்கத்தை ஸ்தாபித்துப் பூசைசெய்தார். இந்த இராம தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணி மஹாலிங்க தரிசனஞ் செய்தவனுக்கு முக்தியே கைகூடிவருகிறதானல் மற்றப்பொருள் கிடைக்கு மென்பதில் ஐயமென்ன ? கேளுங்கள் முனிவர்களே ! பூர்வம் தருமபுத்திரர் இதில் ஸ்நானம் பண்ணிச்சிவதரிசனம்செய்துதான் பொய்சொன்ன தோஷத்தினின்றும் அக்ஷணத்தில் விடுபட்டார் என்றுசொல்ல, முனிவர்கள், ஐயா சூதமுனிவரே ! தர்மபுத்திரர் இந்தப்புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினதனல் நிவர்த்தியான கொடிய பொய்யை யேன் சொன்னர் ? என்றுகேட்கச் சூதர் தர்மபுத்திரர் சண்டையில் வஞ்சனையாகச் சொல்லியதும் இந்தத்தீர்த்தத்தினல் நிவர்த்தியானதுமான பொய் யின்னதென்றுங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

பூர்வகாலத்தில் தர்மபுத்திரன் முதலான பாண்டவர்களும் துரியோதனன் முதலான தார்த்தராஷ்டரர்களும் இராஜ்ய விஷயமாகப் பலமான மனஸ்தாபமடைந்து ஏராளமானசேனைகளோடு குருக்ஷேத்திரம் போய் முன்வைத்த காலைப் பின்வாங்காமல் சண்டை செய்தார்கள், அப்பொழுது கங்காபுத்திரரான பீஷ்மர்பத்துநாள் யுத்தஞ்

செய்து பூமியில் விழுந்து விட்டபின், மஹாபல பராக்கிரமங்களையுடைய துரோணாசாரியார், திருஷ்டத்யும்மனோடு கூட ஐந்துநாள் சண்டைசெய்து, அநேக அஸ்திரசஸ்திரங்களால் பாண்டவசேனையை வதைக்க, திவ்யாஸ்திரங்களையறிந்த சூரனை திருஷ்டத்யும்மனும், சரமாரிபொழிந்து துரோணர் சேனையைச் சின்னாபின்னப்படுத்தினான். துரோணரும் திருஷ்டத்யும்மன் மேல் அம்புமழை சொரிந்தார். துரோணரது பாணவருஷத்தால துன்பமடைந்த பார்த்தனுடைய சைனியங்கள் பத்துத்திக்குகளிலுஞ் சிதறியோடின தினாலே தேராளிகளிற்சிறந்த அர்ஜுனன் துரோணரை யெதிர்க்க, யுத்தவீரர்களான இருவரும் கைகலந்து யுத்தஞ்செய்தார்கள். அதைப்பார்க்கும்படி தேவர்கள் ஆகாயத்தில் கும்பல்கும்பலாகக் கூடினார்கள். துரோணார்ஜுனர்களுடைய யுத்தத்துக்குச்சமானமானசண்டை பூலோகத்தில் கிடையாது. கோபத்தோடு யுத்தஞ்செய்த துரோணார்ஜுனர்களுடைய யுத்தத்துக்கு அந்தச்சண்டையே சமானமாகும். இப்படிச்சண்டை செய்கையில் துரோணர் தன்பிரிய சிஷ்யனை அர்ஜுனனுடைய சாமர்த்தியத்தை மெச்சி, அவனை விட்டுப்பாஞ்சால சேனைக்குள் புகுந்து, அநேகமாயிரம் இராஜர்களையும், அநேகமாயிரம் யானை குதிரைகளையும்நாசம்பண்ண, திருஷ்டத்யும்மன் கோபங்கொண்டு தன் பாணங்களால் துரோணரை யடித்தான். துரோணர் வில்லைக் கையிலேந்தி அதிதீட்சணமான அக்கினி சிகையையொத்த அம்புகளால் அடிக்க, திருஷ்டத்யும்மன் முகந்திரும்பியோட, அதைக்கண்ட பீமசேனன் அவனைத் தன் தேரிலேற்றிக்கொண்டு, துரோணரை ப்பார்த்து, "அதமப்பிராமணர்கள் தங்கள் குலகிருத்தியத்தை விட்டு, அஸ்திராப்பியாசம் பண்ணிக்கொண்டு தயையைவிட்டுச் சண்டை செய்யாமல் போனால் அரசர்கள் சண்டையில் சாகப்போகிறதில்லை. பிராமணர்களுக்கு முக்கிய தர்மம் இதர ஜீவ ஹிம்சைசெய்யக்கூடாதென்று ஸ்மிருதிகளிற் சொல்லப் பட்டிருக்கிறது. குடும்பரட்சணைத்துக்கு ஜீவ ஹிம்சைசெய்கிறது வேடர்தொழில்; நீர்ஒருபிள்ளையைக் காப்பாற்ற வேண்டியதற்காக அநேகம் இராஜர்களைச் சண்டையில் கொல்லுகிறீர். ஓ பிராமணரே! அந்த ஒரு பிள்ளையும் ரணகளத்தில் செத்துக்கிடக்கிறான். அவன் செத்தும் உமக்கு வெட்கமும் துக்கமுமில்லாமலிருக்கிறதே," என்று சொன்னான். அவ்வசனத்தைத் தர்மபுத்திரர் வாக்கால் கேட்டு, உண்மையென்று எண்ணித்,

தன் ஆயுதங்களை யெறிந்து விட்டுத், தமது இரதத்தின் நடுவில் விழுந்து,யோகசித்தியால்பிராயோபவேசம் * செய்தார். இதுசமயமறிந்து திருஷ்டதும்ம்மன் கத்தியை யேந்திக்கொண்டுபோய்அவர் கழுத்தை வெட்ட ஓடிவருகையில்,துரோணர்சிரசினின்றும் ஒருஜோதியானது,கிருஷ்ணன், அர்ஜுனன்,தர்மபுத்திரர், கிருபாசாரியார் முதலானவர்கள் பார்த்திருக்க, மேலே கிளம்பிப்போயிற்று. இப்படி ஜீவன்போய்க்கிடந்த துரோணருடைய சிரசைத்திருஷ்டதும்ம்மன் வெட்டியெறிந்தான். பரத்துவாஜகோத்திரத்தில் பிறந்ததுரோணரிறந்ததுங்கௌரவசேனைகள் பயந்தோடினார்கள். அப்படி யோடுவதைக்கண்ட பாண்டவர்களும் திருஷ்டதும்ம்மன் முதலானவர்களுஞ்சந்தோஷித்தார்கள். சேனைகளோடிவருவதைக்கண்ட அசுவத்தாமன் துர்யோதனனைப் பார்த்து "ஐயா,ஏன் நமதுபடை ஆயுதங்களைவிட்டு ஓடுகிறது"எனயுத்தத்தில் துரோணரிறந்தாரென்றுதான் சொல்லப்பிரியமில்லாமல் 'கிருபாசாரியாரை "நீர் சொல்லும்" என்றேவ, கிருபாசார்யர் அசுவத்தாமனைப்பார்த்து, "அப்பா, அசுவத்தாமா! பராக்கிரமசாலியான உன்பிதா பிரமாஸ்திரத்தால் அநேகம் சத்துருக்களைக்கொன்று யமலோகத்துக்கனுட்பியபோது, கிருஷ்ணரானவர்,துரோணர் ஜயிக்கமுடியாத வீரபராக்கிரம முடையவரென்றுகண்டு, பாண்டவர்களைப்பார்த்து "இவரைஜயிப்பதற்கோருபாயமிருக்கிறது. அதென்னவென்றால் 'துரோணரே, உமதுகுமாரனை அசுவத்தாமன்யுத்தத்திலிப்பொழுதிறந்தான்'என்று நம்பத்தகுந்த சத்தியவந்தனை ஒருவன் சொன்னால் துரோணர்தக்ஷணமே ஆயுதங்களை யெறிந்துவிட்டு ரணகளத்தினின்றுதிரும்பிவிடுவார். 'ஆகையால் தர்மபுத்திரரே! யிந்தப்பொய்வார்த்தையை நீர் சொல்லவேண்டும்: இல்லாமற்போனால் யுத்தவீரனாகிய துரோணரை ஜயிக்கமுடியாது. ஒருவனைத் தர்மயுத்தத்தினாலே ஜயிக்க முடியாமற்போனால் தர்மத்தைவிட்டு அதர்மத்தினாலாவது சத்துருவைஜயிக்கவேண்டும்' என்று சொன்னதைக்கேட்ட பீமசேனன், உன் தந்தையிடத்தில் வந்து 'துரோணரே! அசுவத்தாமனிப்பொழுது இறந்துபோனான்' என்று சொல்லத், துரோணர் அதை நம்பாமல் தர்மபுத்திரரிடம்வந்து , 'தர்மபுத்ரா! என் பிள்ளை சண்டையிலிறந்தானாமே அது உண்மைதானா? நீ சத்தியவாதியல்லவா?' என்று

---

* சாவதற்காகச் சங்கற்ப பூர்வமாகச்சகலத்தையும் வெறுத்து உண்டியை ஒழித்துப்படுத்திருத்தல்.

கேட்க, சத்தியவந்தரான தர்மபுத்திரரும், 'நாமிப்பொழுதென்ன பண்ணுகிறது' என்று மனதிற் சஞ்சலமடைந்து, 'அசுவத்தமா என்கிற யானை பீமனாலடிப்பட்டிறந்து போயிருந்ததினால், அசுவத்தாமன்சண் டையிலிறந்தது' உண்மைதான் என்று கபடமாய்ச் சொன்னதைக் கேட்ட உன்தகப்பனும் ஆயுதங்களையெறிந்து விட்டு யுத்தகளத்தை விட்டுத் திரும்பினார். அது கண்ட தர்மபுத்திரர் 'அசுவத்தாமா இறந் தது என்பதற்கு, அன்னியருடைய யானையென்பது எனதபிப்பிரா யமேயல்லாமல் உமது புத்திரனாகிய அசுவத்தமா என்பதல்ல' என்று சொல்லியுங்கேளாமல், 'நானெறிந்த ஆயுதங்களை மீண்டுமெடுப்ப தில்லை' என்று பிரதிக்ஞை பண்ணியிருப்பதினால், 'நானெறிந்த ஆயுதங்களை யெடுக்கமாட்டேன்' என்று சொல்லிச் சஸ்திரத்தையெ டுக்காமலிருந்துவிட்டார். அப்பொழுது, திருஷ்டதும்மன் தனக்கு மிருத்தியுவென்றறிந்து, இரதமத்தியில் சமாதிகூடிப் படுத்துக் கொண்டிருந்தபோது, அவரது கபாலம் பிளந்து பிராணவாயு மேலேகிளம்பத், திருஷ்டதும்மன் கையில் கத்தியெடுத்து, அவரது குடுமியைக் கையால் பிடித்துக்கொண்டு, பார்த்தனதியர் கொல் லாதே கொல்லாதேயென்று சொல்லியுங் கேளாமல் அவர் சிரசை வெட்டியெறிந்துவிட்டான்" என்று சொன்னார். இப்படித் தகப் பனிறந்ததைக்கேட்ட அசுவத்தாமா வெகு நாழிகையழுது பிறகு கோபமேற்கொண்டு "என் தகப்பன் சஸ்திரங்களைக் கீழேயெறியும் படியாகப் பொய்சொல்லிய தர்மபுத்திரனையும், மற்றைய பாண்ட வர்களையும், நிராயுதராயிருந்த என் தந்தையின் சிகையைப் பிடி த்துக்கொண்டு சிரசைவெட்டின திருஷ்டதும்மனையும், ஒரு நொடி யிற் கொன்றுபோடுறேன்; என் பராக்கிரமத்தைக் கிருஷ்ணனும் பாண்டவரும் பார்க்கட்டும்" என்று பயங்கரமான பிரதிக்ஞைபண் ணிக்கொண்டான். அப்பொழுது சூரியாஸ்தமனமாய்விட்டது. இர ண்டுகட்சி அரசர்களும் தங்கள் தங்கள் கூடாரங்களுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். பிறகு தர்மபுத்திரர், மூன்றுநாள் யுத்தத்தில் கர்ணன் சல்லியன், துரியோதனன் முதலியவர்களைக்கொன்றுஜயித்துச், சண் டையிலிறந்து போனவர்களெல்லாருக்கும் தௌமியர் முதலிய பிரா மணர்களைக்கொண்டு உத்தரக்கிரியைகளைச் செய்துமுடித்துத், தம் பிமார்களோடுகூடித் திருதராஷ்டிரனை வணங்கி, அவருடைய அநுமதி பெற்றுச், சண்டையில் மிகுந்தசேனைகளோடு அஸ்தினாபுரம்

போய்ச்சேர்ந்து, அரண்மனையில் வசித்துக்கொண்டிருந்தார். சில நாள்கழிந்தபின் பட்டணத்து ஜனங்களும், தௌமியாதி ரிஷிகளும் ஒன்றாகக்கூடித் தர்மபுத்திரருக்குப் பட்டாபிஷேகஞ்செய்ய ஆரம்பித்தபோது ஆகாயத்தில் ஒரு அசரீரவாக்கு, "சத்துருக்களுக்கும் வேண்டியவனான தர்மபுத்திரனே!! நீ பட்டாபிஷேகம் செய்துக்கொள்ளாதே. நீ இராஜ்யபாரஞ்செய்வதற்கு அருகனல்ல. ஏனென்றால் பொய்பேசி பிராமணோத்தமனை நிராயுதபாணியாக்கி, வெட்கமில்லாமல் கொன்றாயல்லவா! ஆகையாலிந்தப் பாபம் போகும்படி பிராயசித்தம் பண்ணிக்கொண்டால் அல்லாமல் உனக்கு இராஜ்யபரிபாலனஞ் செய்யும் யோக்கியதையுண்டாகாது. ஆகையால் நீ சீக்கிரத்தில் பிராயசித்தஞ்செய்து கொள்" என்று வெளிப்பட்டதைக்கேட்ட தர்மபுத்திரரும் நடுநடுங்கி, "ஐயோ! மூடத்தனத்தினாலே பேராசைகொண்டு முன்பின் யோசியாமல் அற்பமான ராஜ்யத்துக்காக இப்பேர்ப்பட்ட கொடும் பாபத்தைச் செய்துவிட்டேனே; இந்தப்பாபம் போவதற்கு என்னவழி? நான் எங்கே போவேன்? என்னசெய்வேன்? என்னதானம் பண்ணுவேன்?" என்று புலம்பித்தவித்துக் கொண்டிருக்கும் பொழுது, வியாசமுனிவா அங்கேவந்தார். தர்மபுத்திரர் உடனே யெழுந்திருந்து நமஸ்கரித்து பக்தியுடன் அர்க்கிய பாத்தியாசமனங்கொடுத்துப் பூஜைசெய்து, அஞ்சலிபந்தம் பண்ணிக்கொண்டு, அசரீரிசொல்லியதை யெல்லாம் அவருக்குச்சொன்னார். அதுகேட்டு அந்த மஹாமுனிவர் வெகு நேரந்தியானத்திலிருந்து, தர்மபுத்திரரைப்பார்த்துச் சொல்லுகிறார்:— "அரசனே! நீர் அஞ்சவேண்டாம். பாப நிவிர்த்திக்கு உபாயஞ்சொல்கிறேன்; நீர் அதைக்கேட்டு அனுஷ்டானம் பண்ணும் தக்ஷிண சமுத்திரத்தில் சேதுரூபமாகிய கந்தமாதன மலையொன்றிருக்கிறது; அதில் இராமதீர்த்தமென்கிற மஹாபாதக நாசனமான புண்ணியதீர்த்தமொன்றிருக்கிறது. அதைக்கண்டமாத்திரத்திலே பாபராசிகளெல்லாம் சூரியனைக்கண்ட இருளைப்போல நாசமடையும். இராமனால் நிர்மானம் பண்ணப்பட்டிருக்கிற இராமதீர்த்தத்தைப்பார்த்தவுடனே பிரமஹத்திகூட நீங்கிப்போய்விடுகிறது; இதில் சந்தேகமே யில்லை. மஹாராஜனே! முத்தியளிக்கின்ற அந்தத்தீர்த்தத்துக்குப்போய் ஸ்நானம் பண்ணும்; பிறகு, அதன் கரையில் பசு, பூமி, எள்ளு, வஸ்திரம், தங்கம், வெள்ளி

இவைகளைத் தானம்பண்ணும். நிச்சயமாய் உமது பாபம்நீங்கிவிலகும் நீர்இராஜ்யம் ஆளுகிறதற்கு அருகராய்விடுவீர் "என்று சொல்ல தர்மபுத்திரரும் அந்தக்ஷணமே சகதேவனென்கிற தன்பிள்ளையை இராஜ்யத்தில்வைத்துவிட்டு இதரமான தம்பிகளோடும், தௌமியமுனிவரோடும், பாதசாரியராய் இராமசேதுவை நோக்கிப் புறப்பட்டுக்கொஞ்சநாளில் அவ்விடம் போய்ச்சேர்ந்து, புரோகிதரான தௌமியர் சொல்லியபடி சங்கற்பஞ்செய்துகொண்டு, புண்ணியமான இராமதீர்த்தத்தில் ஸ்நானம்செய்து, ஆசமனம் பண்ணி, ஆத்மசுத்திசெய்துகொண்டு, க்ஷேத்திரபிண்டம் போட்டு, வியாசர் சொன்ன சகலதானங்களும் செய்தார். இப்படியே ஒருமாதகாலம் நிராகாரராய் ஸ்நானம் பண்ணிப் பணத்திலாசையில்லாமல் சகலதானங்களும் செய்துவந்தார். மாசாந்தத்தில் மறுபடி அசரீரவாக்குத் தோன்றி, "யுதிஷ்டிரமஹாராஜனே! நீர் கபடமாய்ப்பொய்சொல்லிப் பூர்வம் ஆசாரியரைக்கொன்றதனால் உண்டாகிய பாபங்களெல்லாம் நீங்கிப்போய்விட்டன; இராஜ்யாருகனாய்விட்டாய்; உன் இராஜதானி போய்ப்பட்டாபிஷேகஞ்செய்துகொண்டு இராஜ்யபரிபாலனம் பண்ணு." என்று சொன்னதைக்கேட்டுத் தருமபுத்திரர் பரிமானந்த பூரிதராய், அசரீரி தோன்றிய திக்கைநோக்கி நமஸ்கரித்து, அஸ்திநாபுரம் போய்ச் சேர்ந்து, பட்டாபிஷேகம் பண்ணிக்கொண்டு இராஜ்யத்தை யாண்டிருந்தார். கேளுங்கள் பிராமணோத்தமர்களே! இவ்விதம் தர்மபுத்திரர் இராம தீர்த்தத்தில் ஸ்நானம்செய்ததனால் சகலபாபங்களும்போய்ப், பரிசுத்தராய் இராஜ்ய பரிபாலனத்துக்கு யோக்கியரானர். இந்தப்படி யிராமதீர்த்தத்தின் அழகான சரித்திரத்தை யுங்களுக்குச் சொல்லிவிட்டேன். இந்தத்தீர்த்தமானது சகலபாபங்களையும் போக்கிப் புக்தி முக்திகளைக் கொடுக்கிறது. இந்த அத்தியாயத்தைப் படிப்பவரும் கேட்பவரும் சகல பாபங்களினின்றும் விடுபட்டுப், பிறருக்குக் கிடைப்பதற்கருமையான கைலாசத்தையடைந்து மறுபிறப்பில்லாமல் வாழ்ந்திருப்பார்கள்.

## பதினெட்டாவது அத்தியாயம்

முற்றிற்று.



பத்தொன்பதாவது

# இலட்சுமண தீர்த்தமகிமையில் பலராம பிரமஹத்தி நீங்கின

அத்தியாயம்.

---

கேளும் முனிவர்களே! தாரகபிரம்மமாகிய ஸ்ரீராமதீர்த்தத்தில் ஸ்நானம் செய்தபின் நியமத்தோடு இலட்சுமணதீர்த்தம் போகவேண்டும். அந்த இலட்சுமணதீர்த்தத்தில் ஸ்நானம்செய்வோர் சகலபாபங்களினின்றும் விடுபட்டு, தரித்திரம் நீங்கி, ஆயுசு ஓங்கி, குணஞ்சிறந்து, கல்விநிறைந்து, புத்திர பௌத்திரர்கள் மிகுந்து, பிறப்பற்ற மோக்ஷசாம்பிராஜ்யத்தையடைந்து வாழ்ந்திருப்பார்கள். அத்தீர்த்தக்கரையில் இலட்சுமண மந்திரத்தை ஜபிப்பவர் சகல வேத சாஸ்திர பண்டிதராகிறார்கள். அந்தக்கரையில் இலட்சுமணர் ஒரு மஹாலிங்க ஸ்தாபனஞ்செய்திருக்கிறார். அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணி இலட்சுமண லிங்கத்தைப் பூஜிப்பவர்கள் இகத்தில் தரித்திர ரோகங்கள் நீங்கி அந்தத்தில் சமுசாரபந்தத்தினின்றும் விடுபடுவார்கள். கேளுங்கள் பிராமணோத்தமர்களே! பூர்வகாலத்தில் ரோகிணி புத்திரரான பலராமர் இந்த இலட்சுமண தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணி இலட்சுமணலிங்கத்தைத் தரிசித்துப் பிரமஹத்தியினின்றும் நீங்கினார் என்று சொன்னதைக் கேட்ட முனிவர்களும், ஓ சூதமுனிவரே! பலராமருக்கு ஏன் பிரமஹத்திவந்தது? அது எப்படி நீங்கிப்போயிற்று? என்று கேட்கச் சூதர் சொல்லுகிறார்.

பூர்வகாத்தில் சேஷனுடைய அவதாரமாகிய பலராமர், கௌரவரும் பாண்டவர்களும் யுத்தத்துக்குச் சித்தமாயிருந்தது கண்டு, பந்துக்கள் மடியப்போவதைப் பார்க்கப் பிரியமில்லாதவராய்த், தமக்குள் ஒரு யுக்தியை யோசித்துத் தீர்மானித்தார். அதாவது "நாம் கௌரவர்களுக்கு உதவிசெய்தால் பாண்டவர்கள் நம்மிடத்தில் கடுங்கோபங் கொள்வார்கள். பாண்டவர்க்குத் துணைசெய்தால் துரியோதனன் கோபமடைவான். நாமிருவருக்கும் பொதுவாயிருக்கவேண்டும். ஆகையால் தீர்த்தயாத்திரை யென்கிற காரணத்தை

முன்னிட்டு நாம் போய்விடுவோம்'' என்றுயோசித்துப், புறப்பட்டுப் போய்ப் பிரயாகமென்கிற, தீர்த்தத்துக்கு வந்து சங்கற்ப பூர்வமாக அதில் ஸ்நானம்பண்ணித், தேவ ரிஷி பிதுர்களுக்குத் தர்ப்பணஞ்செய்து, பின்பு மேற்குமுகமாயோடும் சரஸ்வதி தீர்த்தம், பிரஹூதகம், பிந்துசரஸ், முக்திபிரதமான பிரமதீர்த்தம், கங்கை, யமுனை, சிந்து, சதத்துரு, சுதரிசனம் முதலிய தீர்த்தங்களிலாடி, முனீந்திரர்கள் வசிக்கின்ற நைமிசாரணியம் போய்ச்சேர்ந்தார். அவ்விடத்தில் தீர்க்கசத்திரம் என்ற யாகத்தைச் செய்துகொண்டிருந்த தர்மவந்தர்களாகியும், இந்திரிய நிக்கிரகஞ் செயதவர்களுமாகிய முனிவர்கள் யதுகுலசிரேஷ்டரான பலராமர் வந்ததைக்கண்டு, ஆசனத்தை விட்டெழுந்திருந்து நமஸ்காரம்பண்ணி ஓராசனமளித்து, கந்தமூலாதிகளா லுபசரித்தார்கள். ஹலாயுதரான பலராமர்பிராமணர்களெல்லாரும் தன்னை வணங்கினதையும், வியாச சிஷ்யரான சூதர் தன்னை வணங்காமல் உயர்ந்த ஆசனத்தில் அஞ்சலியஸ்தராயுட்கார்ந்திருப்பதையும் கண்டு, கோபங்கொண்டு, "சங்கிரணஜாதியிற் பிறந்த ஈனனான சூதன் முனிவர்களுக்கு நடுவே உயர்ந்த ஆசனத்தில் வீற்றிருப்பது தகுதியல்ல; மேலுந் தர்மசம்ரக்ஷகனான நம்மைக்கண்டு எழுந்து நமஸ்காரம்பண்ணாமலும், அச்சமில்லாமலும் அலக்ஷியமா யுட்கார்ந்து கொண்டிருக்கிறான். இவன் வியாசரிடத்தில் இதிகாச புராணங்களையு ம்தர்மசாஸ்திரங்களையும் படித்துக்கொண்ட இறுமாப்பினால் நம்மைக்கண்டு எழுந்திராமலுமிருக்கிறான். வியாசர் சிஷரான பயிலராதி ரிஷிகளிப்படி அதர்மத்தைச் செய்யமாட்டார்கள். நாம் துஷ்டர்களை நிக்கிரகம் பண்ணுவதற்காகப் பூலோகத்தில் அவதாரஞ் செய்திருக்கிறோம். ஆகையா லிந்தத் துராத்மாவும், அசேதனனுமாயிருக்கிற சூதனைக்கொன்று விடுவோம்; நமது கையாலடிபட்டிறந்தா லிந்தத் துஷ்டன் பரிசுத்தனாவான்; ஐயமேயில்லை.'' என்று சொல்லிக்கொண்டு, முசலாயுதத்தையும் ஹலாயுதத்தையுமுடைய பலராமர் தன்கையிலிருந்த தர்ப்பைப்புல்லினால் அவன் தலையை அறுத்து எறிந்தார். அது கண்ட முனிவர்களெல்லாரும் ஐயோ கஷ்டமேயென்றழுது பலராமரைப்பார்த்து, "ஏ சங்கருஷணா, நீர் அநியாயஞ் செய்துவிட்டீர்; இந்தச் சூதருக்கு நாங்கள் தீர்க்க சத்திரயாகத்தில் பிரமாசனங்கொடுத்து, அக்ஷயமான ஆயுசுங்கொடுத்திருப்பதை யறியாமல் அவ

ரைக்கொன்று பிரமஹத்தி சம்பாதித்துக் கொண்டீர்; யோகிகளிற் சிறந்த உம்மை யடக்கி ஆள்கிறவனொருவனுமில்லை. ஆனால் நீர்செய்த பிரமஹத்திக்குப் பிராயச்சித்தத்தை விசாரித்து லோகாநுக்கிரகார்த்தஞ் செய்துகொள்ளவேண்டும் வேறு காரணத்துக்காக இல்லை." என்று முனிவர் கூறக்கேட்ட பலராமர் "ஆஸ்திகர்களே! லோகங்களுக்கு அநுஷ்டித்துக் காட்டும் பொருட்டு நான் பிராயசித்தம் பண்ணிக்கொள்ளுகிறேன்; நான் செய்துகொள்ள வேண்டிய பிரயாசித்த மின்னதென்று நீங்களே யோசித்துச்சொல்லுங்கள். நீங்களிந்தச்சூதனுக்குத் தீர்க்கமான ஆயிசுகொடுத்திருப்பதினால், நான் ஜகத்தைச்சிருஷ்டிக்கும்படியான என் சக்தியால் இவனுக்கு மனம் இந்திரிய முயிர் முதலியவற்றைக் கொடுக்கிறேன்." என்று சொல்ல, ரிஷிகள், "பிரபுவே, உம்முடைய அஸ்திர வீரியமும், இவனுடைய சாவும் எங்கள் வாக்கும் பொய்யாகாதபடி செய்தருளவேண்டும்" என்று சொல்லப், பலராமர் "தன்னுத்மாவே தனக்குப் புத்திரனாகிறானென்று வேதங்கள் முறையிடுகிறபடியால் 'இத்தச்சூதனுடைய சரீரத்திலிருந்து ஒரு பிள்ளை பிறந்து, தீர்க்காயிசாயிருந்து, சர்வஞ்ஞனாகி யுங்களுக்குத் தினமும் புராணதிகளைச் சொல்லப்போகிறான்' என்று சொலலி, மறுபடியுமவர்களைப்பார்த்து, "உங்களுக்கு இஷ்டமான பிராயச்சித்தத்தை ச்சொல்லுங்கள். நான் செய்யத்தயராயிருக்கிறேன். நான் செய்த பாபத்துககு நீங்களே பரிகாரஞ்சொல்லுங்கள்." என்று வணக்கமாய்ச்சொன்னார். முனிவர்கள் 'இல்வலன் புததிரனாகிய வல்கலன் என்கிற அசுரன் பருவகாலத்தில் இங்கேவந்து, அஸ்தி, இரத்தம் மாம்ச மூத்திர மலங்களை யிரைத்து எங்களுடைய யாகங்களைக்கெடுக்கிறான். ஆகையால் லோககண்டகனை தானவனை நீர் கொன்றால் எங்களுக்குப் பூஜைபண்ணினதாகும். நீர் ஒருவருஷகாலம் இந்தப்பாரதவருஷத்திலிருக்கிற தீர்த்தங்களிலெல்லாம் நியமத்தோடு ஸ்நானம் பண்ணினால் உமக்குப் பாபசாந்தியுண்டாம்" என்று சொன்னார்கள். அப்போழுது பருவகாலம் வந்தது; ரிஷிகளும யாகத்தைத்தொடங்கினார்கள். அப்போழுது புழுதிகளையும், இரத்தத்தையும், ஊன் தண்ணீரையும, மலத்தையும் மழைசொரிவதுபோல் இரைத்துக்கொண்டு, பெருங்காற்று வீசும்படி நடந்துவந்து, யக்ஞசாலையில் நுழைந்த சூலபாணியாயும் மஹாபல பராக்கிரம முடையவனாயும்,

எரிகிற மலைபோலவும், உருகின தாம்பிரத்தைப்போலவும் தெற்றுப் பல்லும் செம்பட்ட மயிரும் பொருந்திப், பயரங்கமான முகத்தை யுடைய வல்கலாசுரனை பலராமர்பார்த்துச் சத்துருக்களைப் பிளக் கிற முசலத்தையும், அசுரர்களையழிக்கிற கலப்பையாயுதத்தையும், தைத்தியர்களைக் கொல்லும் கதாயுதத்தையும் நினைக்க, உடனே யவைகள் கிட்டவந்தன. அப்பொழுது பலராமர் கலப்பை நுனி யால் ஆகாயத்திலோடுகிற வல்கலாசுரனை வளைத்திழுத்து, கோப ங்கொண்டு முசலத்தால் தலையில் அடித்தார். அவன், மண்டை பிளந்து, இரத்தம் கக்கிக்கொண்டு, சனத்தொனியோடு, வஜ்ஜிராயு தத்தாலடிபட்ட மலையைப்போலப் பூமியில் விழுந்து மடிந்தான். அப்பொழுது ரிஷிகளெல்லாரும் ராமனுக்கு ஆசீர்வாதம் பண்ணித், தேவர்கள் விருத்திரனைக் கொன்ற இந்திரனுக்கு அபிஷேகஞ் செய் ததுபோலப், புண்ணிய தீர்த்தத்தால் அபிஷேகஞ்செய்து, தாம ரைமலரால் கட்டின வைஜந்தி என்கிற மாலையையும், இரண்டு அழ கான வஸ்திரங்களையும், ஆபரணங்களையுங் கொடுத்தார்கள். அவை களால் அலங்கரிக்கப்பட்ட பலராமர் புஷ்பித்த விருக்ஷங்களோடு கூடின கயிலாச மலையைப்போல விளங்கினார். பிறகு முனிவர்களி டம் விடைபெற்றுக்கொண்டு ஒருவருஷம் நியமத்தோடு தீர்த்த யாத்திரைசெய்து வருஷமுடிவில் தன் பட்டணம்போக யத்தனஞ் செய்கையில், கறுத்துமெலிந்த ஒரு நிழல் பின் தொடரக்கண்டார். அப்பொழுது ஆகாயத்திலொரு அற்புதமான வாக்குத்தோன்றி, “ மஹா பாகுவான பலபத்திரா! நீ செய்த தீர்த்தயாத்திரையினால் உன் பிரமஹத்தி முழுமையுந் தொலையவில்லை.” என்று சொன்ன தைக்கேட்டு, “ஒருவருஷம தீர்த்தயாத்திரை செய்தும் பிரமஹத்தி போகவில்லையாமே; என்னசெய்வோம்.” என்று மனநொந்து, நை மிசாரணியம் வந்து சேர்ந்து, முனிவர்களுக்குத் தான் கேட்டு வந்த ஆகாசவாணியையும், தன்னை நிழல்போலத் தொடர்ந்த பிர மஹத்தியையும் தெரிவிக்க, முனீசுவரர்கள் “ ஐயா! உமக்குப் பிரம ஹத்தி முழுதும் நீங்காமலிருக்குமானால் கந்தமாதன பருவதத்தி லிருக்கிற மஹாதுக்கத்தையும், கொடியரோகங்களையும் போக்குகிற இலட்சுமண தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணி அங்கிருக்கும் லிங்க த்தைத் தரிசனம் செய்தால் உமக்குப் பிரமஹத்திதோஷம் முற்று மொழிந்து போமென்பதி லாக்ஷேபணை யில்லை.” என்று சொன்னார்

கள், அது கேட்ட பலராமநும் கந்தமாதனம்போய் இலட்சுமணு தீர்த்தத்தில் சங்கற்ப பூர்வமாக ஸ்நானம்பண்ணிப்பிராமணர்களு க்குப் பசு, பூமி, தனம், தானியம் முதலியவைகளைத் தானம்பண்ணி ஞர். அப்பொழுது ஆகாசத்திலொரு அசரீரவாக்குத் தோன்றி! "ஏ ஹலாயுதா! உம்முடைய பிரமஹத்தி யிப்பொழுது முற்றுமொ ழிந்து போயிற்று. சந்தேகப்படாதேயும். நீர் உம்முடைய பட்ட ணத்துக்குச் சுகமாகப் போய்ச்சேரும்." என்று சொல்லக்கேட்ட பலராமரும் அந்தத்தீர்த்தத்தைப்புகழ்ந்து, அங்கிருக்குந் தீர்த்தங் களிலெல்லாம், ஸ்நானம் செய்து, தனுக்கோடிக்குப்போய் அவ்விடத் திலும் ஸ்நானம் பண்ணி இராமநாதரைத் தரிசனஞ் செய்து, சகல பாவங்களும் நீங்கித் தன் பட்டணமான துவாரகைக்கு வந்துசேர் ந்தார். கேளுங்கள் முனிவர்களே! இந்தப்படி பிரமஹத்தியாதிபாவ ங்களை நீக்குகிறதும், பவித்திரமாயும், நிர்மலமாயுமிருக்கிற இலட்சு மண தீர்த்தத்தின் மகிமையையுங்களுக்குச் சொல்லிவிட்டேன். இந்த அத்தியாயத்தைப் படிப்போரும், கேட்போரும் பிறப்பிற்ற முத்தி பதத்தை யடைகிறார்கள்.

பத்தொன்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## இருபதாவது

# ஜடாதீர்த்த வைபவம் உரைத்த

## அத்தியாயம்.

---

கேளுங்கள் முனீசுவரர்களே! பிரமஹத்தியைப் போக்குகிற இலக்ஷ்மண தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினபின் சித்தசுத்திபெறு வதற்காக ஜடாதீர்த்தம் போய்ச்சேர வேண்டும். பிறப்பிறப்பு, நரைதிரைகளால் நிறைந்த சமுசாரத்தில் கிடந்துழலுகிற மனிதர் களின் அஞ்ஞானத்தை நீக்க ஜடாதீர்த்தத்தைத் தவிர வேறொன்று மில்லை. உலகத்தில் மோட்சத்தை யடையவேண்டிச் சித்தசுத்தி பெற இச்சிக்கிற சிலர் வேதாந்தத்தை வாயினால் மட்டும் படிக்கிறார்

களை ஒழிய அநுபவத்துக்குக் கொண்டுவருகிறதில்லை. பூர்வபட்ச மென்கிற பெரியமுதலைகள் உலாவிக்கொண்டிருக்கிறதும், சித்தாந்த மென்கிற மீன்கள் துள்ளிவிளையாடுகிறதுமான வேதாந்த சமுத்திர த்தில் அஞ்ஞானத்தினால் மூழ்கிக்கிடக்கிறார்கள். சித்தசுத்திக்காக வேதாந்தத்தைப் படிப்பவர்கள் படித்தபின் வீண்வாதம் பண்ணிக் கலகஞ் செய்கிறார்கள். வேதாந்த சாஸ்திரத்தில் மனதுக்கு மயக்க முண்டாகுமிடங்கள் அநேகமாயிருப்பதினாலே எளிதில் சித்திசுத்தி கிடைப்பதில்லை. ஆகையால் முனிவர்களே! வேதாந்த சாஸ்திரத் தைச் சித்தசுத்திக்காக கொள்கிறதில்லை. உங்களுக்குச் சித்தசுத்தி சுலபமாய்க்கிடைக்க வேண்டுமானால் ஜடாதீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணுங்கள். பூர்வகாலத்தில் சகலரும் அஞ்ஞானம் நீங்கி ஞான த்தை யடையும்படி சாட்சாத் பரமசிவனே கந்தமாதன பருவதத் தில் இந்தத் தீர்த்தத்தை யுண்டாக்கினார். தார்மிகரான இராமர் இராவண சம்ஹாரஞ் செய்தபின், இந்தத்தீர்த்தத்தில் தம்முடைய ஜடை யை அலம்பிக் கொண்டதினால் இதற்கு ஜடாதீர்த்தமென்று பேர் வந்தது. அறுபதினாயிர வருஷம் கங்காநதியில் ஸ்நானம்பண்ணின பலனானது, பிரகஸ்பதி சிம்மராசியிலிருக்கிற காலத்தில் கோதாவரி நதியில் ஒரு ஸ்நானம்பண்ணினதினால் கிடைக்கிறது; அப்படிக் கோதாவரியிற் செய்கிற ஆயிரம் ஸ்நானபலன் ஜடாதீர்த்தத்தைக் கண்ட மாத்திரத்திலுண்டாகிறது. அந்த ஜடாதீர்த்தத்தில் ஸ்நா னம் பண்ணுகிறவர்களுக்கு அந்தக்கரணசுத்தியுண்டாய் அஞ் ஞானமொழிந்து, ஞானேதயமாகி முக்திசித்தித்து, அகண்ட சச் சிதானந்த பூரணத்துவங் கைகூடுகிறது. இந்த விஷயத்தில் வியாச ருக்கும் அவரது குமாரராகிய சுகருக்கும் நடந்த சம்வாதமான புராதன இதிகாச மொன்றிருக்கிறது.

பூர்வகாலத்தில் சுகரானவர் முனிசிரேஷ்டராயும், தன்னை யறிந்தவராயும், விஷ்ணுசொரூபியாகியும், பரம்பரா தர்மங்களை யறிந்தவராயும், சகல சாஸ்திர நிபுணராகியுமிருக்கிற வியாசரைச் சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து, "சர்வஞ்ஞரான என்பிதாவே! அந் தக்கரணசுத்தியுண்டாய், அஞ்ஞானம நீங்கி, ஞானேதயமாகி, அந் தத்தில் சாசுவதமான முக்தி எனக்குக் கைகூடும்படியான ஒரு உபாயத்தை என்னிடத்தில் அன்புகூர்ந்து சொல்லியருளவேண் டும். தங்களிடத்தில் நான் வேதாந்தமும், இதிகாச புராணமும்

முற்றிலுங் கற்றுணர்ந்தும் எனக்கு மனத்தெளிவுண்டாகவில்லை. ஆகையால் மனச்சுத்தி யுண்டாகும்படியான ஒரு இரகசியத்தை யெனக்குபதேசிக்க வேண்டும்.'' என்று கேட்க வியாசர் சொல்லு கிறார்.

“ஏ சுகா! உன்னுடைய அவித்தையாகிய முடிச்சை அவிழ்க்கிறதும், புத்திசுத்தியைக் கொடுக்கிறதும், ஜனனமுதலிய பயத்தை நீக்குகிறதுமான இரகசியத்தைச் சொல்லுகிறேன். இராமசேதுவி லிருக்கிற புண்ணியமான கந்தமாதன பருவதத்தில் பாபத்தைப் போக்கும் ஜடாதீர்த்த மொன்றிருக்கிறது. அதில் தசரதராமன் தன்னுடைய ஜடையை அலம்பிவிட்டு, ‘இதில் ஸ்நானம் பண்ணுகிறவர்களுக்கு யாகம், யக்ஞம், உபவாசம், தானம், ஜபங்கள் செய்யாமலே அந்தக்கரணசுத்தி யுண்டாகட்டும்; இதில் ஸ்நானம் பண்ணுவதனா லுண்டாகிற பலமானது சகல தானங்களையும் பண்ணுகிறதா லுண்டாகிற பலனுக்குச் சமானமாகட்டும்’ என்று வரங்கொடுத்திருக்கிறார். இந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணுகிறவன் சகல துக்கங்களையுந்தாண்டி, மஹானாப் புண்ணிய லோகங்களை யடைகிறான். அப்பா சுகனே! அந்தக்கரணசுத்தியை விரும்பினால் ஜடாதீர்த்த ஸ்நானத்தைத் தவிர வேறு ஜபவிரதாதி உபாயங்களில்லை. ஐசுவரியம், கீர்த்தி, ஆயுசு விருத்திகளைக் கொடுக்கிற சர்வலோகப் பிரசித்தமான இந்த ஜடாதீர்த்தமானது பரிசுத்தமானவைகளுக் கெல்லாம் பரிசுத்தமானதும், மங்களங்களுக் கெல்லாம் மங்களமானதும், சர்வபாபங்களையும் நீக்குகிறதுமான தீர்த்தம். அப்பா முற்காலத்தில் வருணகுமாரராகிய பிருகு வென்பவர் தன் தந்தையைப் பார்த்து, ‘பிதாவே' சித்திசுத்தயை யடையுமுபாயத்தைப் யெனக்குச் சொல்ல வேண்டும், என்று கேட்க, வருணனும் ‘அப்பா பிருகுவே! இராமசேதுவாகிய கந்தமாதனத்திலிருக்கிற ஜடாதீர்த்தத்தில் ஸ்நானம் செய்த மாத்திரத்தில் சித்தசுத்தி கட்டாயமுண்டாகும்’ என்று சொல்லப் பிறகு தகப்பனார் சொன்னபடி கந்தமாதனத்திற்கு வந்து ஜடாதீர்த்தத்தில் ஸ்நானம் செய்து சித்தசுத்தியை யடைந்து, அஞ்ஞானக் கூட்டங்கள் விலகி, அத்துவைதஞானம் பிறந்து, அகண்ட சச்சிதாநந்த சொரூபியானான். அப்பா சுகனே! சங்கராம்சமான தூர்வாசரும், விஷ்ணு அம்சமான தத்தாத்திரேயரும், இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணி, அந்தக்கரண சுத்தியடைந்து பிரமா

நந்தர்களாய் விட்டார்கள். "அதிக சுத்தமாயும், சர்வ பாபநிவர்த்தகமாயும், புண்ணியமாயுமிருக்கிற ஜடாதீர்த்தத்தில் அஞ்ஞான ஒழிவை விரும்புகிறவன் ஸ்நானஞ் செய்யவேண்டும். ஆகையால் புத்திசாலியானசுகனே! மனசுத்தியைக் கொடுக்கிற ஜடாதீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணு" என்று பிதாவான வியாசர் சொல்லச், சுகமுனிவர் மஹாபுண்ணியமான கந்தமாதனபருவதம் போய்ச் சங்கற்பஞ் செய்துகொண்டு சித்தசுத்தியை அடைந்து, ஸ்வசொரூபமான பரமாநந்த ரூபியாய் விட்டார்.

கேளுங்கள் பிராமணோத்தமர்களே! மனச்சுத்தியை யடைய விரும்புகிறவர்கள் பக்தியுடனே கூட இந்த ஜடாதீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணட்டும் ஐயோ! காமதேனுவுக்குச் சமானமான ஜடாதீர்த்தமிருக்க அதைவிட்டு ஈனமான மற்ற தீர்த்தங்களை ஜனங்கள் அஞ்ஞானத்தினால் ஆசைப்படுகிறார்களே! இந்த ஜடாதீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினதினாலேயே புத்திகாமன் புத்தியையும், முக்திகாமன் முக்தியையும் அடைகிறான். பிராமணர்களே! இது உண்மையே. வேதாத்தியயனஞ் செய்வதாலும், யாகம் பண்ணுவதாலும், தானம் பண்ணுவதாலும், தபம் பண்ணுவதாலும், விரதம் செய்வதாலும், உபவாசம் பண்ணுவதாலும், ஜபம் பண்ணுவதாலும், யோகாப்பியாசம் பண்ணுவதாலும் மனிதர்களுக்கு மனச்சுத்தி யுண்டாகலாம்; இவைகளொன்று மில்லாமலே இந்தத் தீர்த்தத்தில் கேவலஸ்நானம் பண்ணுவதினாலேயே பிராமணர்களுக்கு மனச்சுத்தி யுண்டாகிறது. ஜடாதீர்த்தமகிமையை யென்னால் சொல்லமுடியாது. அதன் மகிமையைப் பிரம விஷ்ணு ருத்திரர்களே யறிவார்கள். ஜடாதீர்த்தத்துக்குச் சமானமான தீர்த்தம் இருந்ததுமில்லை இருக்கப்போகிறதுமில்லை. ஜடாதீர்த்தக் கரையில் போடுகிற பிண்டமானது கயாசிராத்தத்துக்குச் சமானமாகிறது. இதில் ஐயமேகிடையாது. ஜடாதீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணுகிறவன் பாபங்களையும், தரித்திரத்தையும், நரகத்தையுமடைகிறதில்லை. கேளுங்கள் பிராமணோத்தமர்களே! இவ்விதமான ஜடாதீர்த்தமகிமையை உங்களுக்குச்சொல்லிவிட்டேன். இந்த அத்தியாயத்தை நியமமாய்ப் படிப்பவரும்கேட்பவரும், பாபங்களையுதறிவிட்டு, விஷ்ணுபதத்தை யடைகிறார்கள்.

## இருபதாவது அத்தியாயம்.

முற்றிற்று.

# இருபத்தோராவது யுதிஷ்டிரர் இலக்ஷ்மீ தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணி ஐசுவரியம் பெற்றகதையுரைத்த அத்தியாயம்.

---

கேளுங்கள் முனிவர்களே! சர்வபாதகநாசனமான ஜடாதீர்த்தத்தில் ஸ்நாநம் பண்ணிப் பரிசுத்தனாய் இலட்சுமீதீர்த்தம் போகவேண்டும். எவனெவன் எந்தெந்த ஆசையோடு இதில் ஸ்நானம் பண்ணுகிறானோ அவனவன் அந்தந்த ஆசையில் சித்திபெறுகிறான். மகா தரித்திரத்தையும், மகா துக்கத்தையும் போக்குகிறதும், தனதானிய சமிருத்தியைக் கொடுப்பதுமான இந்தத்தீர்த்தத்தில் இந்திரப்பிரஸ்தத்தில் அரசாட்சி செய்துகொண்டிருந்த தர்ம புத்திரர் ஸ்ரீகிருஷ்ணனுடைய வசனத்தின்படி ஸ்நானம்பண்ணி மகத்தான ஐசுவரியத்தை யடைந்தார் என, ரிஷிகள் அதெப்படி யென்று வினவச் சூதமுனிவர் சொல்லுகிறார்.

பூர்வம் திருதராஷ்டிரனுடைய வசனத்தின்படி மஹாபல பராக்கிரமசாலியான பாண்டவர்கள் இந்திரபிரஸ்தத்தில் வாசம்பண்ணிக்கொண்டிருந்தபொது ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியவர்களைப் பார்க்கவந்தார். அது கண்ட பாண்டவர்கள் வெகு பிரியத்தோடும் அவரை அரண்மனைக் கழைத்துக்கொண்டுபோகக் கிருஷ்ணர் அந்த உத்தமமான பட்டணத்தில் கொஞ்சகாலம் விசித்துக் கொண்டிருந்தார். ஒரு நாள் யுதிஷ்டிரர் வசுதேவபுத்திரனாகிய ஜகத்ரட்சகனான கமலக்கண்ணனைப் பூசைசெய்து, "மஹா பிராக்ஞனான கிருஷ்ணா! எந்தத்தர்மத்தைச்செய்து மனிதர்கள் மகத்தான ஐசுவரியத்தையடைகிறார்களோ அந்தத்தர்மத்தை யெனக்குச் சொல்லியருளும்." என்று பிரார்த்திக்க, கிருஷ்ணர் சொல்லுகிறார். "மஹா பாகனான தர்மபுத்திரரே! கந்த மாதனத்தில் ஐசுவரியத்தைக்கொடுக்கிற இலட்சுமீதீர்த்தமென்றொரு தீர்த்தமிருக்கிறது. நீர் அதில் ஸ்நானம்பண்ணினால் ஐசுவரியத்தையும், தனதானியசமிருத்தியையும் அடைவீர். தேவர்கள் அதில்

ஸ்நானம் பண்ணின புண்ணியத்தினால் மஹாபல பராக்கிரமசாலிக ளான இராட்சதர்களை ஜயித்தார்கள். அந்ததீர்த்தத்தில் ஸ்நா னம் பண்ணுகிறவர்களுக்கு ஐசுவரியமும், தர்மமும் உண்டாகும். இதில் சந்தேகப்படாதேயும். தபசுகளாலும் யாகங்களாலும், தானங்களாலும், ஆசீர்வாதங்களாலு மெப்படி ஐசுவரியத்தைப் பெறுகிறார்களோ அதுபோல இலட்சுமீ தீர்த்த ஸ்நானத்தினாலே சமஸ்தபாபங்களும், ரோகங்களும், விக்கினங்களும் நீங்கி உலகை மெல்லாம் பரவுகிற கீர்த்தியை அடைகிறார்கள் இதில் சந்தேகமே யில்லை கேளுந் தர்மபுத்திரரே! இந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினதினால் குபேர புத்திரனாகிய நளகூபரன் அப்ஸரஸ்களுக் கெல்லாம் சிரேஷ்டமான ரம்பா ஸ்திரீயை அடைந்தான். அப் படியே அவன் தந்தையாகிய குபேரனும் இதில் ஸ்நானம் பண்ணிப் பதும்ம் முதலான நவநிதிகளுக்குத் தலைவனானான். ஆகையால் என் அத்தை புத்திரனாகிய யுதிஷ்டிர மாஹாராஜனே! நீர் பீமசேனன் முதலாகிய தம்பிமார்களோடும் சிவப்பிரதமான இலக்ஷுமீ தீர்த்தத் தில் ஸ்நானம் பண்ணும். நீர் ஐசுவரியத்தை யடைவீர்; சத்துரு ஜயம் பெறுவீர். இதில் சந்தேகபடாதேயும்.'' என்று கிருஷ்ணர் சொல்லத், தர்மபுத்திரர் தமபிமார்களோடு சீக்கிரமாய்க் கந்தமாத னம் போய் நியமத்தோடு சம்பத்தைக்கொடுக்கிற இலட்சுமீ தீர்த்தத் தில் ஒரு மாதம் ஸ்நானம் பண்ணிக், கோதானம், பூதானம், சொர் ணதானம் முதலான தானங்களைச் செய்து, இந்திரப் பிரஸ்தத்துக் குப் போய் இராஜசூய யாகம் செய்ய விரும்பி ஸ்ரீகிருஷ்ணருக்கு ஆள் அனுப்பினார். உடனே ஸ்ரீகிருஷ்ணர் சத்தியபாமையோடு அதிக வேகமான நாலு குதிரைகள் பூட்டின தேர்மேலேறிக்கொண்டு வெகு துரிதமாய் இந்திரப்பிரஸ்தம் வந்து சேர்ந்தார். அதுகண்டு தர்மபுத்திரரும் தான் இராஜசூயத்துக்கு யத்தனம் பண்ணினதைத் தெரிவிக்கக், கிருஷ்ணனும் "அப்படியே செய்யலாம்'' என்று அநு மதி கொடுத்து, ''அத்தானே! இதமான ஒரு வசனஞ் சொல்லுகி றேன்'' என்று சொல்லுகிறார்:—" கேளும்; இந்த ராஜசூயமென் கிறயாகம் எல்லாராஜர்களாலும் செய்துமுடிக்கக்கூடாத தாயிருக் கிறது. அநேகமாயிரம் இரத கஜ துரக பதாதிகளோடு கூடின அர சன்தானிந்தயாகத்தைச் செய்துமுடிக்கலாமே யொழிய மற்றவர் களால் முடியாது. இந்த யாகம பண்ணுகிறதற்கு முன்னாலேயிருக்கு

விஜயஞ்செய்து, சகல ராஜர்களையும் ஜயித்து, அவர்கள் கொடுக்கிற கப்பத்தைக் கொண்டு யாகத்தைச் செய்து முடிக்கவேண்டும். உம்க்கு உபாயஞ் சொல்லுகிறேனே யல்லாமல் உம்மைப் பயமுறுத்தினதாக நினைக்க வேண்டாம். முதலில் திக்குவிஜயத்துக்கு ஆரம்பஞ் செய்யும்." என்று யுக்தியோடு கூடின வார்த்தையைக் கண்ணன் மொழிய யுதிஷ்டிரரும் தேவகீ புத்திரரான கிருஷ்ணனைப் புகழ்ந்து, தன் தம்பிமார்களை அழைத்து, "மஹாபாகுவான பீமா! மஹாவீரியவானான தனஞ்செயா! சத்துருசங்காரத்தில் தீக்ஷித்துக்கொண்டிருக்கிற அழகிய நகுலசகாதேவர்களே! கேளுங்கள். நான் உத்தமமான பெரிய இராஜ சூயயாகத்தைச் செய்ய விருப்பங்கொண்டிருக்கிறேன். அந்தயாகமோ சகல ராஜர்களையும் ஜெயித்த பின்பு தான் செய்ய வேண்டியிருக்கிறது. ஆகையால் நீங்கள் நாலுபேரும் சைனியங்களை யழைத்துக்கொண்டு நாலுதிக்குகளிலும்போய் இராஜர்களை ஜயித்துத் திரவியம் சம்பாதித்துக்கொண்டு வாருங்கள். நீங்கள் கொண்டு வருகிற திரவியத்தினாலேதான் நான் யாகஞ் செய்யவேண்டும்." என்று சொல்லப், பீமன் முதலாகிய தம்பிமார்கள் நால்வரும் மலர்ந்த முகமுடையவர்களாய்ப் பட்டணத்தைவிட்டுப் புறப்பட்டு நாலுதிக்குகளிலுஞ் சென்று கிருஷ்ண சகாயத்தாலே அங்கிருந்த அரசர்களை ஜயித்து அவர்களைத் தங்கள் வசமாக்கிக்கொண்டு, அவர்கள் கொடுத்த ஏராளமான திரவியத்தை யெடுத்துக்கொண்டு சீக்கிரமாய் இந்திரபிரஸ்தம்வந்து சேர்ந்தார்கள். மஹாபலபராக்கிரமசாலியான பீமன் நூறுசுமை சொர்ணத்தையும், வீரனாகிய அர்ஜுனன் ஆயிரம்சுமை சொர்ணத்தையும், பராக்கிரமசாலியான நகுலன் நூறுசுமை சொர்ணத்தையும், சகாதேவன் விபீஷணர் கொடுத்த பதினாலு பொற்பனைமரங்களையும் தக்ஷிண தேசத்தரசர்கள் கொடுத்த அளவில்லாத திரவியங்களையுங் கொண்டுவந்தார்கள். இவ்விதம் தம்பிமார்கள் கொண்டுவந்த அளவுபடாத திரவியத்தாலும், ஸ்ரீகிருஷ்ணர் கொடுத்த இலட்சங்கோடி சொர்ணத்தினாலும், அவருடைய அநுக்கிரகத்தால் யாகத்தைப் பூர்த்தி செய்து, பிராமணர்களுக்கு யதேஷ்டமாய்த் திரவியங்கொடுத்து அன்னதானம், பூதானம், கோதானம், வஸ்திரதானம், பூஷணதானம் முதலியவற்றையுங் கொடுத்தார். யாசகர்கள் விரும்பினதற்கு மேல் இரண்டு பங்குதிரவியம் கொடுத்தபடியால், இவ்வளவு திரவியம் செலவழிந்

தது. இவ்வளவு பொக்கிஷத்தில் மிஞ்சியிருக்கிறதென்று ஒருவரு மறியக் கூடாமலிருந்தது. யாசகர்கள் கொண்டுபோகிற திரவியத் தைப்பார்த்த ஜனங்கள் அரசன் எல்லாத்திரவியத்தையும் கொடுத்துவிட்டாரென்று சொன்னார்கள். பிறகு அவர்களே பொக்கிஷத்தில் அளவில்லாத இரத்தினங்களும் சொர்ணமு மிருக்கக்கண்டு, அரசன் யாசகர்களுக்குக் கொடுத்தது கொஞ்சந்தானென்றார்கள். இவ்விதம் தர்மபுத்திரர் இராஜ சூயயாகத்தைமுடித்து ஏராளமான திரவியத்தையுடையவராய்த் தம்பிமார்களோடு இந்திரப்பிரஸ்தத்தில் சுகமாக வாழ்ந்துகொண்டிருந்தார். கேட்டீரோ முனிவர்களே! இலட்சுமீ தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணின மகத்துவத்தினால் தர்ம புத்திரர் இவ்வளவு ஐசுவரியத்தையடைந்தார். இந்தத் தீர்த்த வைபவத்தை நானென்னென்று சொல்வேன்! இந்தத் தீர்த்தமானது மஹாபுண்ணியகரமாயும், மஹாதரித்திரநாசனமாயும், தனதானியப் பிரதமாயும், மஹாபாதகநாசனமாயும், மஹாநரக ஸம்ஹாரியாயும் மஹாதுக்க நிவாரணமாயும், மஹாகடனை யொழிப்பதாயும், களத்திர புத்திரர்களைக் கொடுப்பதாயும், துர்ச்சொப்பன நாசனமாயும், சர்வாபீஷ்டப்பிரதமாயும் உள்ளது. இந்தத்தீர்த்தத்துக்குச் சமமான தீர்த்த மிருந்ததுமில்லை; இனி இருக்கப்போவது மில்லை. இந்த அத்தியாயத்தைப் படிப்பவரும் கேட்பவரும் இகத்தில் தனதானிய சமிருத்தியையும் போகங்களையும், அந்தத்தில் முக்தியையும் அடைவார்களென்பதில் சந்தேகமேயில்லை.

## இருபத்தோராவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## இருபத்திரண்டாவது

# அக்கினிதீர்த்த மஹிமையால் துஷ்பண்ணியன் பிசாசத்துவம்ஒழிந்த

## அத்தியாயம்.

---

கேளுங்கள் பிராமணோத்தமர்களே! ஸமஸ்த ஐசுவரிய காரணமாயும், மங்களகரமாயு மிருக்கிற இலட்சுமீ தீர்த்தத்தில் ஸ்நானம்

பண்ணிவிட்டு, அக்கினிதீர்த்தம் போய்ச் சேரவேண்டும். இந்த அக்கினி தீர்த்தமானது மஹாபாதகங்களை யழித்துப்புண்ணியத்தை செழிக்கச் செய்கிறது. இது தீர்த்தங்களுக்குள்ளே உத்தமமானது, சர்வாபீஷ்டங்களையுங் கைகூடச் செய்கிறது. இந்தத்தீர்த்தத்தில் பாப நிவர்த்தியாகிப் பரிசுத்தம்பெறும்பொருட்டு எல்லாரும் ஸ்நானஞ் செய்யவேண்டு மென்று சூதர் சொல்ல,முனிவர்கள் சூதரைப்பார்த்து "ஐயா முனீசுவரரே! இந்தத் தீர்த்தத்துக்கு அக்கினி தீர்த்தமென் றேன் பெயர்வந்தது? அது எங்கே யிருக்கிறது? அது எப்படிப்பட்ட மகிமையுடையது? இவைகளை யெல்லா மெங்களுக்கு விஸ்தாரமாய்ச் சொல்லியருளவேண்டும்" என்று கேட்கச் சூதர் சொல்லுகின்றார்.

முனிவர்களே! நீங்கள் நேர்த்தியான கேள்வி கேட்டீர்கள். சொல்லுகிறேன் கேளுங்கள். பூர்வகாலத்தில் இரகுகுலத்தில் தசரதனுக்குப் புத்திரனாக அவதரித்த மஹாபலபராக்கிரமசாலியும் சத்தியகாமருமான ஸ்ரீராமர், இராவணனைப பரிவாரங்களுடன் சங்கரித்து, இலங்கையில் விபீஷணனுக்குப் பட்டங்கட்டி வைத்து விட்டுச், சித்த சாரணகந்தர்வர் முதலான தேவர்களும், அப்சரஸ்திரீகளும், முனிவர் கணங்களும் ஸ்தோத்திரஞ்செய்ய, இந்திராதி தேவர்களும், முனிவர்களும், பிதுர்த்தேவர்களும், விபீஷணனும், சமஸ்தமான வானர வீரர்களும் படைசூழ்ந்துவர, தமக்கும் சீதைக்கும் சுத்தியுண்டாகும் பொருட்டுத தீர்த்த ஸ்நானஞ்செய்ய விரும்பி, விளையாட்டாகக் கையில் வில்லை யேந்திச் சேதுமார்க்கமாய்ச், சீதா இலட்சுமண சமேதராகக், கந்தமாதன பர்வதம்வந்து சேர்ந்தார். பிறகு சீதை பரிசுத்தமாரும்பொருட்டு இலட்சுமீ தீர்த்தக்கரையில் நின்றுகொண்டு, தேவர்கள், ரிஷிகள், பிதுர்க்கள் பார்த்துக்கொண்டிருக்க, அக்கினி தேவனை வருகவென்றழைத்தார். உடனே அக்கினி பகவானும், காளீ, கராளீ, மனோஜவா, சுலோகிதா, சுதூம்ரவர்ணை, உக்கிரை, பிரதீப்தை யென்கிற ஏழுநாக்குகளாலும், பத்து திக்குகளையும், ஆகாசத்தையும், சமுத்திர ஜலத்தையும் நக்கிக்கொண்டு, சிவந்த கண்களோடும், மஞ்சள் வர்ணத்தோடும், மஞ்சள் வர்ணமான வஸ்திரத்தோடும் கையில் வில்லையேந்திக்கொண்டு இலட்சுமீ தீர்த்தத்துக் கருகாமையில் தோன்றித், தமது திருவிளையாட்டால் மானிட சொரூபங்கொண்ட ஸ்ரீராமச்சந்திரனைப்

பார்த்துச், சீதாதேவியின் சுத்திவிஷயமாய் அழகான சில வார்த்தைகள் சொல்லுகிறுர். "இராட்சதர்களைச் சங்கரித்த மஹாபாகுவான ஸ்ரீராமா! இந்த ஜானகியினுடைய பதிவிரதாதர்மத்தினுலே தான் நீர் இராவண சம்ஹாரம் பண்ணினது; இது சத்தியம், சத்தியம், சத்தியம். இதில் சந்தேகமேகிடையாது. லோகமாதாவாகிய இந்த இலட்சுமீ தேவியானவள் நீர் தேவனுயிருக்கும்போது தேவ சரீர முடையவளாகவும், மனிதனுயவதரிக்குங் காலங்களில் மனித சொரூபம் உடையவளாகியும் உமக்குச் சகாயமாயிருக்கிறுள். ஆகையால் தேவதேவனை ஜனர்த்தனை! என் வார்த்தையில் நம்பிக்கை வைத்து இந்தச் சீதாதேவியை அங்கீகாரம் பண்ணிக்கொள்ளும்.'' என்று சொல்ல, அதுகேட்டுத் தேவர்களும், மஹரிஷிகளும், வித்தியாதரர்களும், கந்தர்வர்களும், மானிடர்களும், பன்னகர்களும், மற்று முள்ளவர்களும் ஸ்ரீராமனையும், ஜனகபுத்திரியாகிய சீதையையும் அடிக்கடி புகழ, ஸ்ரீராமர் அக்கினி தேவன் வாக்கின்படிச் சீதாதேவியை அங்கீகாரம் பண்ணிக்கொண்டார். கேளுங்கள் பிராமணேத்தமர்களே! ஸ்ரீராமர் சீதையின் சுத்திக்காக அழைத்த அக்கினி தேவன் இலட்சுமீ தீர்த்தத்துக்குச் சமீபத்தில் சமுத்திரத்தினின்றுந் தோன்றின அவ்விடமே அக்கினி தீர்த்தமென்னப்படும். இந்தத்தீர்த்தத்தில் பக்தியுடன் ஸ்நானம் பண்ணி, உபவாசமிருந்து, வேத வித்துக்களான பிராமணர்களுக்குப் போஜனஞ் செய்து வைத்து, அவர்களுக்கு வஸ்திரம், தனம், பூமி, அலங்கரிக்கப்பட்ட கன்னிகைகளையுங் கொடுத்தால், சமஸ்த பாபங்களினின்றும் விடுபட்டு விஷ்ணுசாயுஜ்யத்தைப் பெறுவார்கள். இந்த அக்கினி தீர்த்தக்கரையில் அன்னதானஞ் செய்கிறது மிகவும் உத்தமம். இந்தத் தீர்த்தத்துக்குச் சமானமான தீர்த்தம் இருந்தது மில்லை; இருக்கப்போகிறது மில்லை. இந்ததீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினதினுல் மஹாபாதகனை துஷ்பண்ணியன் கூடக் கோரமான பிசாசசொரூபத்தை விட்டுத் திவ்யசொரூபத்தை யடைந்தான்.

பூர்வகாலத்தில் பாடலீபுரமென்கிற நகரத்தில் பசுமான் என்னுமொரு வணிகனிருந்தான். அவன் தர்மசீலன்; பிராமணவிசுவாசமுடையவன். அவன் இடைவிடாமல் கிருஷித்தொழிலைச் செய்துகொண்டும், பசுக்களைக்காப்பாற்றிக் கொண்டும், கடைத்தெருவில் பொன் முதலிய பொருள்களைத் தருமமாய் விற்பனை செய்துகொண்

டும், பதிவிரதா சிரோமணிகளான மூன்று மனைவிமார்களோடு கூடி வாழ்ந்து கொண்டிருந்தான். இப்படி வாழ்ந்துவருங்காலத்தில் அவனுடைய மனைவிமார் மூவரில் மூத்தவள் வம்சத்தை விருத்திபண்ணுகிற சுபண்ணியன், புண்ணியவான், சாருபண்ணியன், என்கிற மூன்று புத்திரர்களைப் பெற்றாள். இரண்டாவது மனைவி சுகோசன், பதுகோசன் என்கிற இரண்டு குமாரர்களைப் பெற்றாள். மூன்றாம் மனைவிக்கு மஹாபண்ணியன், மஹாகோசன், துஷ்பண்ணியன் என்கிற மூன்று புதல்வர்கள் பிறந்தார்கள். இவ்விதம் பசுமானுக்கு எட்டுக் குமாரர்கள் பிறந்து, நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து, தாய்தந்தையர் களிக்கும்படியாகத் தெருவில் விளையாடி, ஐந்து வயது ஆகும் காலத்தில், தகப்பனும் தன் குலத்தொழிலான பயிரிடுதல், பசுக்காத்தல் வியாபாரஞ்செய்தல் முதலிய தொழில்களைக் கிரமப்படி கற்றுக்கொடுக்க, அவர்களுள் மூத்தவர்களாகிய ஏழுபேர்கள் மாத்திரம் தந்தை சொற்கேட்டு அவனிஷ்டப்படியே நடந்து வந்தார்கள். எட்டாவது புத்திரனாகிய துஷ்பண்ணியன் தெருவில் விளையாடும் பருவம் முதற்கொண்டு துன்மார்க்கத்தி லாசை கொண்டு, தகப்பன் வார்த்தையைக் கேளாமலும், அயல் வீட்டுக் குழந்தைகளைப் பிடித்துத்துன்பப் படுத்திக்கொண்டும் வந்தான். இப்படித் துஷ்டத்தனம் செய்துவருகிற புத்திரனைப் பைத்தியகாரனென்று பசுமான் உபேட்சை செய்து வந்தான். எட்டுப்பிள்ளைகளும் இளமைப்பருவம் கடந்து யௌவன பருவமடைந்தார்கள். கொழுத்து மதங்கொண்ட துஷ்பண்ணியன் அந்தப்பட்டணத்தி லிருக்கிற குழந்தைகளை ஒருவருமறியாமல் பிடித்துக் கழுத்தைமுறித்துக் குளம், கிணறு, நதிகளில் எறிந்து விடுவது வழக்கம். அப்படி யிறந்துபோன குழந்தைகளைப் பெற்றவர்கள் பட்டணம் முற்றிலுந் தேடிக்காணாமல் மனம் வருந்திப்போவதும், பிறகு அந்தச்சவங்கள் தண்ணீர்மேல் மிதக்கக்கண்டு எடுத்துக்கொண்டு வந்து செய்யவேண்டிய கர்மங்களைச் செய்வதும் வழக்கமாயிற்று. இப்படியே தினந்தோறும் துஷ்பண்ணியன் பிள்ளைகளைக்கொன்று வருதலால் அவ்வூரில் பிரஜாவிருத்தியில்லாமல் ஊர் பாழாயிற்று. பிறகு பிரஜைகளெல்லாரு மொன்றாய்க்கூடி யிராஜனிடம்போய் இந்தச்சமாசாரத்தைத் தெரிவித்தார்கள். அரசன் கேட்டு நகரத்துக்காவலாளிகளை அழைத்து, “ இவ்வூரில் குழந்தைகளிறந்துபோகிறதற்குக் காரணம்

கண்டுபிடியுங்கள்" என்று கட்டளையிட, அவர்கள் "அப்படியே யாக ட்டும்" என்றுசொல்லி மூலைக்குமூலை பதுங்கியிருந்து ஆராய்ந்து பார்த்தும் முடியாமல் இராஜனிடம் வந்து பயத்தோடு, "சுவாமீ! பட்டணத்தி லிருந்துகொண்டு குழந்தைகளைக் கொல்லுகிறவனை யெங்களால் பார்க்கமுடியவில்லை.'' என்று தெரிவித்துக்கொண்டார்கள். அப்பொழுது பட்டணத்திலிருந்த ஜனங்களெல்லாந் திரண்டொன்ருய்க்கூடி யிராஜனிடத்துக்கு மறுபடியும் வந்து குழந்தைகள் சாவதைப்பற்றி முறையிட்டார்கள். தனக்கு அதன் காரணம் தெரியாதபடியால் அரசன் மௌனமாயிருந்து விட்டான். இப்படியிருக்கையில் ஒரு நாள் துஷ்பண்ணியன், ஐந்து குழந்தைகளைக் கபடமாகத் தாமரைப்பூப்பறிப்பதற் கென்றழைத்துக் கொண்டு வந்து, அவர்கள் கோவென்றலறவும் பலாத்காரமாயிழுத்துக் கழுத்தளவு தண்ணீரில் அமிழ்த்தி, அவர்களிறந்து போனார்களென்று நினைத்துக்கொண்டு, வீட்டுக்குப்போய் விட்டான். அந்தக்குழந்தைகளின் தாய் தந்தையர்கள் பட்டணம் முழுமையும் குழந்தைகளைத் தேடிக்கொண்டு திரிந்தார்கள். தண்ணீரில் அமிழ்த்தப்பட்ட குழந்தைகள் தெய்வசகாயத்தால் சாகாமல் பிழைத்து மெல்ல மெல்லக் கரையேறி, பட்டணத்துக்குப்போகச் சக்தி யில்லாமல் ஈரத்தலையோடு அவ்விடத்தில் திரிந்துகொண்டிருக்கையில், தங்களுடைய பந்துக்கள் . தங்கள் பேரைச்சொல்லி உரக்கக்கூப்பிடுவதைக் கேட்டு "ஏன்"என்று கேட்டார்கள். அந்த மறுமொழிகேட்ட பெற்றோர்கள் குளக்கரைக்கு வந்து, உயிரோடிருக்கும் பிள்ளைகளைக் கண்டு, மிகச் சந்தோஷங்கொண்டு, இதென்னவென்று கேட்கக் குழந்தைகள் துஷ்பண்ணியனுடைய கெட்ட செய்கைகளைத் தெரிவித்தார்கள். இந்தச் சமாசாரம் பட்டணம் முழுவதும் பரவ நகரத்திலுள்ள ஜனங்களெல்லோரும் ஒன்ருகச்சேர்ந்து, இராஜனிடத்துக்கு வந்து, மேலே சொல்லிய ஐந்து குழந்தைகள் சொன்னதைத் தெரிவிக்க, அரசன், பகுமான் என்கிற வணிகனைக் கூப்பிட்டுப் பட்டணத்து ஜனங்கள் கேட்டுக்கொண்டிருக்க, "பகுமானே! அநேக பிரஜைகள் நிறைந்த இந்தப்பட்டணத்தை உன் புத்திரனை துஷ்பண்ணியன் சூனியமாகச்செய்து விட்டான். பாரும்: துஷ்டனுன உமது புத்திரனாலே ஜலத்துக்குள் அமிழ்த்திவிடப்பட்ட இந்த ஐந்து குழந்தைகளும் தெய்வானுகூலத்தினுலே பிழைத்து வந்திருக்கிறார்கள்.

நீர் தர்மசாலியாயிருப்பதினாலே இதற்கென்ன செய்கிற தென்று உம்மையே கேட்கிறேன்." என்று சொல்ல, தர்மத்தை யறிந்த பசுமான் அரசனைப்பார்த்து, "மஹாராஜாவே! இந்தப்பட்டணத்துக் குழந்தைகளை யொன்றில்லாமல் கொன்ற இநதப்பாபியைக் கொலை செய்வதே தகுதி; இநதவிஷயத்தில் என்னைக் கேட்கவேண்டிய தொன்றுமில்லை; இக்கொடிய பாபத்தைச்செய்த இவன் என் புத்திரனாகமாட்டான். இந்தத் துராத்மாவைக் கொல்லுவதை விட வேறு பரிகாரங்கிடையாது. இது உண்மையே." என்று சொல்லப், பட்டணத்தாரெல்லாரும் அதுகேட்டுச் சந்தோஷப்பட்டு, அரசனைப்பார்த்து, "ஐயா! இந்தத் துஷ்டனைக் கொல்லவேண்டாம், ஊரைவிட்டுத் துரத்திவிட்டால் போதும்" என்றார்கள். இராஜன் துஷ்பண்ணியனை அழைப்பித்து "அடாதுராத்மாவே, நீ இந்தத் தேசத்தைவிட்டு இப்பொழுதே ஓடிப்போய்விடு. இங்கேயிருந்தால கொலையுண்டுசாவாய்." என்று பயமுறுத்தித், தூதர்களைக்கொண்டு பட்டணத்துக்கு வெளியில் துரத்திவிட்டான். துஷ்பண்ணியன் நாட்டைவிட்டு ரிஷி கணங்கள் நிறைந்திருக்கும் ஒரு காட்டுக்கு வந்து, அவ்விடத்திலும் ஒரு ரிஷி குமாரனைத் தண்ணீர்க்குள் அமிழ்த்திவிட்டான். செத்துப்போய்த் தண்ணீர்மேல் மிதந்துகொண்டிருந்த அந்த ரிஷி புத்திரனை, விளையாடும் நிமித்தமாக அவ்விடம் வந்த ரிஷி குமாரர்கள் கண்டு, மனம் வருந்தி, அந்தக் குழந்தையின் தந்தையாகிய உக்கிரசிரவஸு என்கிற ரிஷிக்குத் தெரிவிக்க, அவர் தமது தபோமகிமையால் அது துஷ்பண்ணியனுடைய செய்கை யென்று அறிந்து, அவனைப் பார்த்து "அடா துஷ்டா, நீ என்னுடைய குழந்தையைத் தண்ணீரில் தள்ளிக் கொன்றபடியால் நீயும் தண்ணீரிலேயே விழுந்து சாகக்கடவாய். செத்தபின் நெடுங்காலம் பிசாசாக அலைந்து திரியக்கடவாய்." என்று சபித்தபின், துஷ்பண்ணியன் மெத்தவும் சித்தம் நொந்து அந்தக் காட்டைவிட்டுச் சிங்கம் முதலிய கொடிய துஷ்டமிருகங்கள் நிறைந்த வேறொரு காட்டுக்கு வந்தான். அப்பொழுது புழுதிகளை வாரி யிறைத்துக்கொண்டும், மரங்களை முறித்து விழுத்திக்கொண்டும், பேரிடி முழக்கத்தோடு பெருங்காற்றும் மழையுங் கலந்தடித்தது. துஷ்பண்ணியன் காற்று மழையால் மிகுந்த வருத்தமடைந்து, இன்னது செய்வதென்று தெரியாமல் தயங்கித்திரியும்போது, செத்து உலர்ந்துபோயிருக்கிற

ஒருயானையின் பெரிய உடலைக்கண்டு, அதன் வாயின்வழியாக வயிற்றினுள்ளே புகுந்துகொண்டான். அவன் புகுந்தவுடனே மழை வலுத்துப் பெருமழை பொழிந்து, வெள்ளம்பெருகி நதியாயோட, அந்த யானையின் வயிறு தண்ணீரால் நிரம்பிச் சரீரம் உதித்துத், துவாரங்க ளடைபட்டு, வெள்ளத்தில் மிதந்துகொண்டிருந்தது. யானையின் வயிற்றுக்குள் நுழைந்துகொண்டிருந்த துஷ்டன் வெளியில் வர வழியிலையாமல் யானையின் வயிற்றினுள்ளே தவித்துக் கொண்டிருக்கையில் மழை வெள்ளம் அதிகவேகமாக யானையை இழுத்துக்கொண்டுபோய்ச் சமுத்திரத்தில் சேர்த்துவிட்டது. துஷ்பண்ணியன் ஜலத்தில் முழுகி இறந்து, பிசாசாகப்பிறந்து, பசிதாகங்களால் வருந்தி, ஒருவரும் போகக்கூடாத ஒரு காட்டில்புகுந்து, கடூரமான வெய்யில் காலங்களிலெல்லாம் கோவென்றலறிக்கொண்டு துக்கத்தையே யனுபவித்து ஆயிரங்கோடி கற்பங்கள் சுற்றித் திரிந்துகொண்டிருந்து, பிறகு காடு, மலை, வனம், வனாந்திரங்களெல்லா மலைந்து திரிந்து கஷ்டப்பட்டுக் கடைசியாகத் தண்டகாரணியத்துக்குவந்து, புண்ணியமான அகஸ்தியர் ஆச்சிரமத்துக்குச் சமீபத்தில் வந்து சஞ்சரித்துக்கொண்டிருக்கையில், அங்கேயிருந்து தபசுபண்ணிக்கொண்டிருக்கும் முனிவர்களைப்பார்த்து, "ஓரிஷீசுவரர்களே! நான் சொல்லும் வார்த்தைகளைத் தயவுசெய்து கேளுங்கள்; நீங்களெல்லோரும் பூதங்களினிடத்தில் கருணை கூர்ந்து இதஞ்செய்கிறவர்களல்லவா? துக்கத்தால் வருந்திக்கொண்டிருக்கிற என்னிடத்தில் கிருபை கூர்ந்து அநுக்கிரகம் பண்ணுங்கள். நான் பூர்வம் பாடலீபுரத்தில் துஷ்பண்ணியனென்கிற வணிகனுகப்பிறந்து அநேகங் குழந்தைகளைக்கொன்று அரசனால் நாட்டைவிட்டுத் துரத்தப்பட்டுக் காட்டுக்குப்போய், அங்கும் ஒருரிஷி புத்திரனை நீரில் அமிழ்த்திக் கொன்றேன். அந்த ரிஷீசுவரர் கோபங்கொண்டு, என்னை ஜலத்திலேயேயிறந்து பின் பிசாசாகி யலையும்படி சபித்தார். அந்தச் சாபத்தினால் நான் பிசாசாகி தண்ணீரில்லாதகாட்டிலே அநேக கற்பகாலங்களாக வெகுகஷ்டங்களை யனுபவித்துக் கொண்டுவருகிறேன். இனிமேல் பசிதாபங்களை யென்னால் பொறுக்கமுடியாது. ஆகையால் என் பிசாசத்தன்மை யொழியும்படி யென்மேற் கருணை கூர்ந்து காத்தருளவேண்டும்." என்று பெருங்கூச்சலிட்டுச் சொல்ல, அதுகேட்ட ரிஷிகளும் லோபாமுத்திரைக்கு நாயகராகிய

அகஸ்தியரிடம் போய், "சுவாமீ! இந்தப் பிசாசுக்குப் பிராயச்சித்தமென்ன? இப்படிப்பட்ட பாபிகளைக் காப்பாற்றும் விஷயத்தில் நீர் அதிக சமர்த்தரல்லவோ?" என்று சொல்ல, கும்பசம்பவரும் கிருபைகூர்ந்து, தமது பிரியசிஷ்யனாகிய சுதீக்ஷணனை அழைத்து, "அப்பா சுதீக்ஷ்ணா, நீ சீக்கிரமாகக் கந்தமாதனம்போய்ச் சேர்ந்து இந்தப்பிசாசின் சாபநிவிர்த்திக்காகச் சங்கற்ப பூர்வமாகச் சமஸ்த பாபவிநாசனமான அக்கினிதீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணு. அதனால் இந்தப்பிசாசுக்குப் பிசாசத்துவம் நீங்கித் திவ்யசொரூபம் வந்துவிடும். இந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணுவதைவிட வேறுவகையான பிராயச்சித்தமெனக்குத் தோன்றவில்லை. ஆகையால் இந்தப் பிசாசின்பேரில் கிருபைவைத்து இதைக்காப்பாற்றிவிடு." என்று சொல்ல, சுதீட்சணன், கந்தமாதனம்போய், அங்கிருக்கும் அக்கினிதீர்த்தத்தில் பிசாசுக்காகச் சங்கற்பஞ்செய்துகொண்டு, அதில் மூன்று நாள் நியமமாய் ஸ்நானம்பண்ணி, இராமநாதர் முதலானவர்களைச் சேவித்துக் கையில் தீர்த்தமெடுத்துக்கொண்டு, ஆச்சிரமத்துக்குத் திரும்பிவந்து, அந்தத் தீர்த்தத்தால் பிசாசின்மேல் புரோக்ஷித்த உடனே, அதற்குப் பிசாசத்துவம் நீங்கி, அது திவ்வியசரீரமடைந்து சுதீக்ஷனன், அகஸ்தியர், மற்றுமுள்ள ரிஷீசுவரர்களையும் அடிக்கடி நமஸ்கரித்து, அவர்களிடத்தில் செலவுபெற்றுக்கொண்டு, விமானத்தின்மேலேறித், தேவஸ்திரீகள் சூழ அதிக சந்தோஷத்துடன் தேவலோகம்போய்ச் சேர்ந்தது. கேளுங்கள் பிராமணோத்தமர்களே! இப்படியாக அக்கினிதீர்த்த வைபவத்தை யுங்களுக்குச் சொல்லிவிட்டேன். இந்தப் பிசாசமோக்ஷணமென்கிற அத்தியாயத்தைப் படிப்பவரும் கேட்பவரும் சமஸ்தபாபங்களாலும் விடுபட்டு, இகத்தில் மஹாபோகங்களை யனுபவித்துப் பரத்தில் பரமசுகத்தை யடைவார்கள்.

## இருபத்திரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.



# இருபத்துமூன்றாவது

# சூரியன் பொற்கையடைந்த சக்கிர தீர்த்தமகிமையுரைத்த



அத்தியாயம்.

---

கேளுங்கள் பிராமணோத்தமர்களே! சகலமான பாபங்களையும் நாசம்பண்ணுகிற அக்கினிதீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணிவிட்டுச் சுத்தாத்மாவாகிச் சக்கிரதீர்த்தம் போகவேண்டும். எந்தெந்த விருப்பத்தோடு இந்தச் சக்கிரதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தாலும் அந்தந்த விருப்பம் கைகூடிவருகிறது.

பூர்வத்தில் அஹிர்புத்நியன் என்கிற மஹாரிஷியானவர் கந்தமாதன பர்வதத்தில் சுதரிசனாழ்வாரை யுபாசித்துக்கடுந்தபசுசெய்து கொண்டு வந்தார். அப்பொழுது கொடிய இராட்சதர்கள் அவருடைய தபசுக்கு விக்கினங்களை யுண்டாக்கி யவரையுந் துன்பப்படுத்தி வந்தார்கள். சுதர்சனமென்கிற விஷ்ணுசக்கரம் தன் பக்தனை யிரட்சிக்கும்படி வந்து அவரைத் துன்பப்படுத்திக் கொண்டுவந்த இராட்சதர்களை விளையாட்டாகச் சங்கரித்து, அந்தப் பக்தனுடைய பிரார்த்தனையின்படி அவன் செய்த தீர்த்தத்திற் பிரசன்னராயிருக்கிறபடியால் அந்தத் தீர்த்தத்துக்குச் சக்கிரதீர்த்தமென்று பேர் வந்தது. அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணுகிறவர்களுக்குச் சக்கிராயுதத்தின் அநுக்கிரகத்தால் இராட்சதர் பிசாசுமுதலானவர்களாலுண்டாகும் பீடை கிடையவேகிடையாது. இந்தப் புண்ணியமான தீர்த்தத்தில் அறுபட்ட கையையுடைய சூரியன் ஸ்நானம் பண்ணித் தங்கமயமான கையை யடைந்தான் என்று சொல்லச், சௌனகாதி ரிஷீசுவரர்கள், ஐயா! சூதமுனிவரே! சூரியனுக்குக் கையறுபடவேண்டிய காரணமென்ன? அவனுக்குத் தங்கக்கை யெப்படிவந்தது? அதையெங்களுக்குச் சொல்லவேண்டுமென்று கேட்கச் சூதர்சொல்லுகிறார்.

பூர்வகாலத்தில் தைத்தியரால் துன்பமடைந்த தேவர்கள் எல்லாரும், நாமென்னசெய்வோமென்றேங்கி, ஒன்றாய்க்கூடிப் பிரகஸ்

பதியோடு ஆலோசனை செய்து, இந்திரனை முன்னிட்டுக்கொண்டு பிரமலோகம்போய், பிரமாவைக்கண்டு பக்தியுடன் ஸ்துதிசெய்து, சுவாமி, "சரஸ்வதிகாந்தா! பலத்தால் மதங்கொண்ட தானவர்கள் எப்பொழுது மெங்களைத் துன்பப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். அந்தத்துன்பந் தீருவதற்கொரு உபாயஞ் சொல்லியருளவேண்டும். இதற்காகவே நாங்கள் புறப்பட்டு வந்திருக்கிறோம்." என்று விக்ஞாபனம்செய்ய, அதுகேட்ட பிரமதேவன் மனமிரங்கி, அவர்களைப் பார்த்து, "தேவர்களே! நீங்கள் பயப்படாதீர்கள். நான் உபாயஞ் சொல்லுகிறேன். தத்துவதரிசிகளான முனிவர்களைக் கொண்டு அசுரர்களைச் சங்கரிக்கும்பொருட்டு மாஹேசுவரம் என்கிற மஹா யாகத்தை மந்திரதந்திர லோபங்களில்லாமல் கந்தமாதனத்தில் ஆரம்பித்துமுடியுங்கள். இந்த யாகத்தை வேறிடங்களில் செய்யத்தொடங்கினால் துராத்மாக்களான அசுரர்கள் விக்கினஞ்செய்து யாகத்தைக் கெடுத்துவிடுவார்கள். கந்தமாதனத்திலிருக்கிற சக்கிரதீர்த்தத்தில் அஹிர்புத்னியர் என்கிற மஹாரிஷியின் பிரார்த்தனையின்படி சக்கிராயுதம் வசித்துக்கொண்டிருப்பதால் அங்கே இடையூறுண்டாகாது. ஆகையால் அங்கேயே அந்தயக்ஞத்தையாரம்பித்து முடியுங்கள்" என்று சொல்ல, அதுகேட்ட இந்திராதிதேவர்கள், பிரகஸ்பதியை முன்னிட்டுக்கொண்டு கந்தமாதனம்போய், அஹிர்புத்னியர் என்கிற மஹாத்மாவைக்கண்டு வணங்கி, அவரது ஆச்சிரமத்துக்குச் சமீபத்தில் யக்ஞசாலையை நிர்மாணம்பண்ணி, யாககர்மங்களில் கைதேர்ந்த தபோதனர்களைக் கொண்டு, அசுரசங்காரார்த்தம் யாகததை யாரம்பித்தார்கள். அநத யாகத்தில் பிரகஸ்பதி ஹோதாவாகவும், இந்திர குமாரனாகிய ஜயந்தன் மைத்திராவருணனாகவும், எட்டாவது வசு அச்சாவாகனாகவும், சக்திபுத்திரராகிய பராசரர் சிராவயனாகவும், அஷ்டவக்கிரமஹாரிஷியானவர் அத்துவர்யுவாகவும், விசுவாமித்திரமஹாரிஷியானவர் பிரதி பிரஸ்தாதாவாகவும், வருணன் நேஷ்டாவாகவும், குபேரன் உன்னேதாவாகவும், சூரியன் பிரமாவாகவும், பிராமணோத்தமரான வசிஷ்டர் பிராம்மணாச்சம்ஸிவாகவும், சுனச்சேபன் ஆக்கினீத்ரன் ஆகவும், அக்கினி போதாவாகவும், வாயு உத்காதாவாகவும், யமதர்மராஜாவானவர் பிரஸ்தோதாவாகவும், அகஸ்தியமஹாமுனி பிரதிகர்த்தாவாகவும், விசுவாமித்திரருடைய குமாரன் மதுச்சந்தன் சுப்பிரமணியராகவும், வியாசபுத்திரரான சுகரிஷி உபஸ்ரஷ்டாவாகவுமிருந்து எஜமானனாகிய தேவராஜனுக்கு

விதிப்படி தீக்ஷை செய்வித்து, யாகத்தையாரம்பிக்க, மஹாபிரபாவத்தையுடைய சுதரிசனத்தின் மகிமையினாலே அசுரர்களுக்கு இடைவெளி யகப்படாமையால், யாகம் இடையூறில்லாமல் நிறைவேறியது. அத்துவர்யுவானவர் அவசரப்படாமல் கர்மங்களையெல்லாம் முடித்து மந்திரத்தை யுச்சரித்துக்கொடுத்த புரோடாசத்தை அக்கினிதேவன் பட்சித்து ஜ்வலித்தான். ஹோமசேஷமான அவிசை அத்துவரியவானவர் பிரியத்தோடும் ஹோதர்முதலானவர்களுக்குப பிரித்துக் கொடுக்கையில், பிரமாவாகவிருந்த சூரியன், தன்பாகமான பிராசித்திரமென்கிற அதிக உக்கிரமுள்ள புரோடாசத்தை யிரண்டுகைகளாலும் வாங்கினன். வாங்கினவுடனே யவனுடைய இரண்டுகைகளும் ரித்துவிக்குகளுக்கு முன்னாலே யறுந்துவிழுந்தன. அப்பொழுது சூரியன் இதென்ன வென்று நடுநடுங்கி, முகம்வாடி ரித்துவிக்குகளைப் பார்த்து, "நீங்களெல்லாரும் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே பிராசித்திரம் என்கிற இந்தப் புரோடாசம் என் கைகளை யறுத்துவிட்டது. ஆகையால் நீங்ளெல்லாரு மொன்றாகக் கூடி யென்கைகளிரண்டும் மீண்டுமுண்டாகும்படி செய்யுங்கள்; அப்படிச் செய்யாவிட்டால் இந்த யாகத்தை யழித்துவிடுவேன்." என்று சொன்னதைக் கேட்டு எல்லாரும் யோசனை செய்துக்கொண்டிருக்கும்போது, அஷ்டாவக்கிர மஹாரிஷியானவர் ரித்துவிக்குகளைப்பார்த்து, "பிராமணோத்தமர்களே! நான் சொல்லும் வார்த்தையைச் சாவதானமாய்க் கேளுங்கள். நூறு விஷ்ணுக்களும், கோடி பிரமாக்களும் பிறந்திறந்துபோனதை நான் பார்த்திருக்கிறேன். லோகேசுவரனென்கிற பிரமா பட்டத்திலிருக்கையில் சாமளாபுரத்திலிருந்த ஹரிஹரனென்ற பிராமணன், காட்டிலிருந்த ஒரு வேடன் விளையாட்டுக்காக ஒரு குறியை இலட்சியம்வைத்து அம்புஎய்துகொண்டிருக்கும்பொழுது, இடையிலே போனபடியால், அம்புபட்டு அவனுடைய இரண்டு கால்களும் அறுந்து கீழேவிழுந்தன. அப்பொழுது ரிஷிகளினுடைய ஏவுதலால் அந்தப் பிராமணன் கந்தமாதனம்வந்து இந்த முனி தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணிக் கால்களை மறுபடியும் அடைந்தான். இந்தத் தீர்த்தத்துக்கு அப்பொழுது முனிதீர்த்தமென்று பெயர்வந்தது. இப்போது இது சக்கிராயுத சான்னியத்தத்தால் சக்கிரதீர்த்தமென்று வழங்கப்பட்டு வருகிறது. உங்களுக்குப் பிரியமிருந்தால் கையறுந்த சூரியனிதில் ஸ்நானம்

பண்ணட்டும்." என்று சொல்ல, ரிஷிகளெல்லாரும் சந்தோஷமடைந்து சூரியனைப்பார்த்து, "ஐயா! அஷ்டாவக்கிரர் சொன்னபடி யிந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணும்," என்று சொல்லச், சூரியன் அப்படியே சக்கிரதீர்த்தத்தில் பக்தியுடன் ஸ்நானம் பண்ணியெழுந்திருந்தவுடனே தனக்கிரண்டு தங்கக்கைகளுண்டாயிருக்கக் கண்டான். சமஸ்தமானரித்துவிக்குகளும் அதைக் கண்டு சந்தோஷப்பட்டு யாகத்தைமுடிக்க, இந்திராதி தேவர்களும் அசுரர்களைக்கொன்று சுகமடைய்ச் சொர்க்கம்போய்ச் சேர்ந்தார்கள். ஆகையால் பிராம்மணோத்தமர்களே! கேளுங்கள்! குருடர், செவிடர், ஊமைகள், முடவன், சப்பாணி, மற்றுமுள்ள அங்கஹீனர்கள், கைகால்முதலிய அங்கங்களறுபட்டவர்கள், இவர்களெல்லாரும் தங்களுடைய அங்கங்களைப் பெறுவதற்காகச் சர்வாபீஷ்டங்களையுங் கொடுக்கிற இந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணவேண்டும். கேளுங்கள் முனீசுவரர்களே யிவ்விதமான மகிமையுடையது இந்தச் சக்கிரதீர்த்தம். இந்த அத்தியாயத்தைப் படிப்போரும் கேட்போரும் அங்கஹீனர்களாயிருந்தால் அவ்வங்கபூர்த்தியையடைவார்கள். மோட்சகாமிகளாயிருந்தால் மோட்சத்தையடைவார்கள்.

இருபத்துமூன்றுவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## இருபத்துநாலாவது

# சிவதீர்த்தத்தில் பைரவர் பிரம்மஹத்தி நிவர்த்திபெற்ற

## அத்தியாயம்.

---

கேளுங்கள் முனிவர்களே! நான் இப்பொழுது சொன்ன சக்கிரதீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணிவிட்டுச் சிவதீர்த்தம் போய்ச்சேரவேண்டும். சிவதீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணின மாத்திரத்தில் மஹாபாதகங்களும் அவற்றுக்குடந்தையாயிருந்த பாதகங்களும் நசித்துப் போகின்றன. காலபைரவர் இந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணிப்

பிரம்மஹத்தியினின்றும் விடுபட்டாரென்று சொல்ல, ரிஷீசுவரர்கள், ஐயா சூதமுனிவரே! காலபைரவருக்குப் பிரம்மஹத்தி ஏன் வந்தது? அதை யெங்களுக்குச் சொல்லியருளவேண்டும் என்று கேட்கச் சூதர் சொல்லுகிறார்.

முனீசுவரர்களே! கேட்டமாத்திரத்தில் பாபங்களைப் போக்கி முக்தியைக் கொடுக்கும்படியான ஒரு பூர்வசரித்திரம் சொல்லுகிறேன்கேளுங்கள். முற்காலத்தில் பிரமாவானவர், "நானே ஜகத்துக்குக்கர்த்தா, வேறொருவனுங் கிடையாது; உலகநிக்கிரகானுக்கிரக சக்தி யெனக்கேயுண்டு; எனக்குமேலான தேவனும், ஒப்பான தேவனுங் கிடையவேகிடையாது." என்று தேவர்களுக்கு முன்னாலேயகங்காரத்தோடு சொன்னார். அதுகேட்ட நாராயணரும் புன்சிரிப்புக்கொண்டு, "அப்பா பிரமதேவனே! இப்படி அகங்காரத்தாலே ஏன்பிதற்றுகிறாய்? இனிமேலிப்படிப்பட்ட வார்த்தை சொல்வது உனக்குத்தகாது; யக்ஞசொரூபியும், பிரபுவுமாயிருக்கிற நாராயணனாகிய நானே ஜகத்துக்குக் கர்த்தா; நானில்லாமல் போனால் இந்த உலகங்கள் ஜீவியாமற்போம்; என்னுடைய அநுக்கிரகத்தாலல்லவோ ஸ்தாவரஜங்கம சொரூபமாயிருக்கிற இந்த ஜகத்தை நீ சிருஷ்டித்தாய், அப்பா" என்று சொன்னார். இப்படிப் பிரம விஷ்ணுக்கள் தேவர்களுக்கு முன்னால் கலகம் பண்ணிக்கொண்டிருந்தபோது நாலுவேதங்களும் உருவங்கொண்டுவந்து அவர்களைப்பார்த்து, "விஷ்ணுவே! நீரும் ஜகத்கர்த்தா அல்ல; பிரமாவே, நீரும் ஜகத்துக்குக் கர்த்தா அல்ல; பராத்பரனையும், விபுவாயுமிருக்கிற ஈசுவரனே ஜகத்துக்குக்கர்த்தா; இந்தஸ்தாவரஜங்கம சொரூபமான ஜகம் அவனுடைய மாயாசக்தியினாலேதான் உண்டாக்கப்பட்டிருக்கிறது. சத்தியஞானானந்த ரூபராயும், சகல தேவர்களாலும் வணங்கப்பட்டவராயுமிருக்கிற ஸாம்பமூர்த்தியே ஜகத்தைச் சிருஷ்டித்துக், காத்து, அழிக்கும் வல்லமையுடைவர். அவரே ஜகத்துக்கு நாதன்." என்று சத்தியமான பொருளையெடுத்துரைக்கப், பிரம விஷ்ணுக்கள் இருவரும் "பார்வதியாலணையப்பட்டவரும், சொரூபமுடையவரும் பிரமதாதிகணங்களால் சூழப்பட்டவருமான சம்புவானவர், ஸர்வசங்கமற்றதும், சொரூபமில்லாமையுமான இலட்சணங்களையுடைய பரபிரமமாவதெப்படி?" என்று ஆக்ஷேபஞ்செய்ய, அரூபியான பிரணவம் சொரூபங்கொண்டுவந்து, "இந்த மஹாதேவனனவர்

தனக்கு வேறான சொரூபமுள்ள பார்வதியோடுகலந்திருக்கவில்லை. தமது ஸ்வசொரூபமான பார்வதியோடுகூடியிருக்கிறார், இந்தச் சம்புவானவர் ஸ்வயம்ப்ரகாசராயும், நிரஞ்சனராயும், 'விசுவாதிகோ ருத்திரோமஹார்ஷி:' என்ற சுருதியினால் விசுவாதிகனென்று பேர்பெற்றவராயுமிருக்கிறார். இவர் சர்வாத்மா; சர்வகர்த்தா; சுதந்தரர்; ஸர்வபாஸகர். பிரமாவே! இவர்தான் சிருஷ்டி காலத்திலே இராஜோகுணத்தால் சிருஷ்டிக்கும்படி உம்மையேவுகிறார்; விஷ்ணுவே, இவர்தான் சத்துவகுணத்தினாலே யுலகத்தைப் பரிபாலனஞ்செய்யும்படி உம்மைத் தூண்டுகிறார்! சங்கார காலத்தில் காலருத்திரனென்னும் மூர்த்தியை உலகைச்சங்கரிக்கும்படி தமோகுணத்தாலேவுகிறார்; ஆகையால் விஷ்ணுவே உமக்கும், பிரமாவுக்கும் சுவதந்திரம் கிடையாது. சம்புவான பரமசிவனுக்கே சர்வசுதந்திரமுமுண்டு. பிரமவிஷ்ணுக்களே! மஹேசுவரன் சர்வலோககர்த்தனென்றும், சுவதந்தரனென்றும் ஏன் அறியாமற்போனீர்கள்? உமாதேவியும் சங்கரனுக்கு வேறில்லாதவள். பரமேசுவரனுடைய ஆனந்த சொரூபியான உமாதேவியானவள் அவருக்கு வேறாகாதவள். ஆகையால், பிரமவிஷ்ணுக்களே! விசுவாதிகராயும், சுதந்தரராயும், நிர்விகற்பராயுமிருக்கிற சங்கரமூர்த்தியே சகல தேவர்களாலும், உங்களாலும், வணங்கத்தக்கவர். அந்தச் சங்கரனுக்குக் கர்த்தாவும், மேலானவரும், ஒப்பானவரும், எவ்வுலகங்களிலும் கிடையாது. ஆகையால், பிரம விஷ்ணுக்களே! நீங்கள் வீணாக மோகமடைந்து மயங்காதீர்கள்." என்று சொல்லியும், அவர்கள் மாயையால் மயங்கியிருந்தபடியால் அவர்களுக்கு அஞ்ஞானம் விலகவில்லை. இப்படியிருக்கையில், ஆகாசமத்தியில் அளவில்லாத சூரியர்களுடைய ஒளியைப்போல ஒரு ஜோதி காணப்பட்டது. அது பூமி ஆகாசங்களையெல்லாம் வியாபித்து எங்கும் நிறைந்திருந்தது. அந்த ஜோதியைப் பிரமதேவன் தனது தபோபலத்தால் பெற்ற ஐந்தாவது முகத்தாலே பார்க்கப்பார்க்க அந்த முகமானது கோபத்தினாலே பிரளயகால வடவாமுகாக்கினிபோல ஜொலித்தது. அந்த ஜோதியும் நீலலோகித சொரூபமான புருஷனைக் கண்ட பிரமதேவன், "ஓ மஹாதேவரே, நீர் என்னுடைய லலாட ஸ்தானத்திலிருந்து பிறந்த ருத்திரனென்கிறபிள்ளையல்லவா? நான் உம்மையறிவேன்." என்று கருவங்கொண்டு சொல்ல, மஹேசுவரனுக்குக் கோபமுண்

டாய்த் தமது அம்சமான காலபைரவரையனுப்ப, அவர் சூலு டங்க, கதாதரராய்ப், பிரமாவோடு வெகு காலஞ் சண்டைசெய்து, அவருடைய வெளுத்துக் கருவித்து மேல்நோக்கியிருக்கிற ஐந் தாம் சிரசைப்பார்த்துக் கோபங்கொண்டு, அந்தத் தலையைக் கொய்துவிட்டதனால் பிரம்மதேவரிறந்துபோனார். பிறகு பரமசிவப் பிரசாதத்தால் உயிர்பெற்ற சதுர்முகன் சந்திரசேகரராயும், வாசுகி முதலான அஷ்டநாகங்களை யாபரணமாகப் பூண்டவராயும், பார் வதீ சமேதராயுமிருக்கிற சங்கரனாகிய பரமாத்மாவைக்கண்டு, அவ ருடைய பிரசாதத்தால் ஞானமடைந்து, "சந்திர சூடா! கிரீசா! கருணைக்கடலே! என்னிடத்தில் தயவுகூர்ந்து என் அபராதத்தை யும் இறுமாப்பையும் பொறுத்துக்கொண்டு என்னை ரட்சித்தரு ளும்." என்று அடிக்கடி ஸ்தோத்திரம் செய்து, திருவடிகளில் விழு ந்து நமஸ்கரிக்க, உமாபதியான சந்திரசேகரரும், தம்முடைய அம் சத்திலுண்டான பிரமதேவனைப் பார்த்து, "அப்பா! பயப்படாதே" என்று அபயங்கொடுத்துக், காலபைரவரைப்பார்த்து, "இந்த ஸநா தனனாகிய பிரமதேவன் எல்லாராலும் பூஜிக்கத்தக்கவன். உன்னாலறு பட்டுக்கிடக்குமிவனுடைய கபாலத்தைக் கையிலேந்திக்கொண்டு, உலகத்தாருக்குச் சன்மார்க்கத்தை விளக்கும்பொருட்டும், நீ செய்த பிரம்மஹத்தி நிவர்த்திக்காகப்பிக்ஷையெடுத்துத்திரிந்துகொண்டிரு" என்றுசொல்லி பிரமஹத்தியைப் பயங்கரமான வடவானலத்துக் கொப்பான பெண்வடிவாகச் செய்தனுப்பி, அவனைப்பார்த்து, "நீ எல் லாத் தீர்த்தங்களிலும் ஸ்நானம்பண்ணிக்கொண்டு காசிக்குப்போ; அங்கே போனவுடனே முக்கால்பங்கு பிரமஹத்தி நீங்கிப்போம்; மிச்சமாயிருக்கிற பிரமஹத்தி நீங்க உபாயஞ் சொல்லுகிறேன். தென் சமுத்திரக்கரையிலிருக்கிற கந்தமாதனத்தில் சமஸ்த பிராணிகளுக் கும் உபகாரமாய் என்னால் ஏற்படுத்தப்பட்டு விளங்கா நின்ற மஹா புண்ணியமான சிவதீர்த்தத்தில் பக்தியுடனே ஸ்நானம் பண்ணினமாத் திரத்தில் பிரம்மஹத்தி முற்றும் தொலைந்துபோமென்பதில் ஐயமே கிடையாது." என்று சொல்லிமறைந்து கைலாசம்போய்ச் சேர்ந் தார். பின்பு பைரவரும் சிவாக்கினையின்படி பிரமகபாலத்தைக் கையி லேந்திக்கொண்டு, தேவ, தானவ, யட்சர் முதலானவர்களுடைய லோகங்களிலே சஞ்சாரம் பண்ணுகையில் பிரம்மஹத்தி பின் தொடர்ந்து போயிற்று. பைரவர் அங்கங்குள்ள புண்ணிய தீர்த்தங்

களில் ஸ்நானம்பண்ணித் தேவாலயதரிசனஞ்செய்து கடைசியாகக் காசிக்கு வந்தவுடனே முக்கால் பங்குப் பிரம்மஹத்தி நீங்கி, மிச்சமான பிரம்மஹத்தி தொடரச், சிவாக்ஞையின்படிக்குக் கந்தமாதனம் போய்ச்சேர்ந்து, மஹத்தரமான சிவதீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினவுடனே எல்லாப் பிரம்மஹத்தியும் நீங்கிப்போய்விட்டது. இந்தச் சமயத்தில் சம்புவானவர் பிரசன்னராயெதிரில் தோன்றிப், பைரவரைப்பார்த்து, "அப்பா பைரவா! இந்தச் சிவதீர்த்த ஸ்நானமகிமையால் உனக்குப் பிரம்மஹத்தி தோஷம் முற்றுந்தொலைந்துபோய்விட்டது. இதிலாக்ஷேபனையேகிடையாது. இந்தப் பிரமகபாலத்தைக் காசியிலெவ்விடத்திலாவது ஸ்தாபித்துவை" என்றுசொல்லியுடனே அந்தர்த்தானமாய்விட்ட, பைரவர் பிரம்மஹத்தி நீங்கிக் காசிக்குப்போய் அங்கே ஓரிடத்தில் பிரமகபாலத்தை ஸ்தாபனம் பண்ணினர். அவ்விடத்துக்குக் கபாலதீர்த்தமென்று பேர் வழங்கி வருகின்றது.

கேளுங்கள் முனிவர்களே! மஹாதுக்கத்தைப் போக்கடிக்கிறதும், மஹாபாதகத்தை நீக்குகிறதும், நரகக்கிலேசத்தையொழிக்கிறதும், சொர்க்கத்தை அளிக்கிறதும், மோட்சத்தைத் தருகிறதும், புண்ணியமானதுமான சிவதீர்த்த வைபவத்தை யுங்களுக்குச் சொல்லிவிட்டேன். இந்த அத்தியாயத்தைப் படிக்கிறவன் துக்க சாகரத்தினின்றுங் கரையேறுவான். இதிலையமேயில்லை.

## இருபத்து நாலாவது அத்தியாயம்

முற்றிற்று.

# இருபத்தைந்தாவது

# சங்கதீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணி வத்ஸநாபமுனிவர் செய்நன்றிமறந்த பாபநிவர்த்தியடைந்த

## அத்தியாயம்.

---

ரிஷீசுவரர்களே! சிவதீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணின பின்பு பாபநிவர்த்திக்காகச் சங்கதீர்த்தம் போகவேண்டும். அங்கே ஸ்நானம்பண்ணின மாத்திரத்திலே கிருதக்நனும் அஞ்ஞானத்தினாலே மாதாபிதாக்களையும், குருவையும் வெட்கமில்லாமல் அவமதித்த துராத்மாக்களும் பாபங்களினின்றும் விடுபட்டுச் சுத்தியடைகிறார்கள். பூர்வகாலத்தில் சங்கர் என்ற மஹாரிஷியானவர் விஷ்ணுவைக் குறித்துத் தவஞ்செய்துகொண்டுவருகையில் ஸ்நானம்பண்ணுவதற்காக உண்டாக்கினபடியால், இதற்குச் சங்கதீர்த்தமென்று பேர்வந்தது. இதுவிஷயமாக, கேட்டவுடனே முக்திதரும்படியான ஒரு கதை சொல்லுகிறேன் கேளுங்கள்.

சத்தியவாக்கியராயும், நல்லொழுக்கமுடையவராயும், வாக்குச் சாதுரியமுடையவராயும், சர்வபூதங்களிடத்திலும் தயவுள்ளவராயும், சத்துருவையும் மித்துருவையும் சமமாகப் பாவிக்கிறவராயும், அகப்புற இந்திரியங்களை யடக்கினவராயும், பரபிரம்மத்தினிடத்தில் பக்தியுடையவராயுமான வத்ஸநாபர் என்னும் மஹாமுனி தமது ஆசிரமத்தில் ஒரு இடத்தில் பரமாணு அளவுகூட அசையாமல் இருந்த இடத்திலிருந்து அநேக மாயிரம் வருஷம் தபசுசெய்து வருகையில், அவர்மேல் புற்று வளர்ந்து அவரை மறைத்துவிட்டது. அதைக்கூட அவரறியாமல் தபசுசெய்துவர, இந்திரன் மேகங்களையேவி ஏழுநாள் மழைபொழியச்செய்தும், அதையும் கவனியாமல் கண்களைமூடிக்கொண்டு தவஞ்செய்துவந்தார். அப்படிச் சகிக்க முடியாதகுளிர் காற்றோடு மழை பெய்கையில் காதுகள் செவிடுபடும்படியான பேரொலியோடும் ஓரிடி அந்தப் புற்றின்மேல் விழுந்து அதையிடித்துத் தகர்த்துவிட்டது. அதையுங் கவனியாமல் வத்ஸ

நாபர் தபசு செய்கையில் தர்ம தேவதையின் மனதில் மிகுந்த கிருபையுண்டாகி, "மழைகொட்டிக்கொண்டிருக்கிறபொழுதுகூட வத்ஸநாபர் தபசு கலையாமலிருக்கிறார். இது மெத்த ஆச்சரியம்! ஆகையால் மழைகுளிரைப் பொறுக்கும்படியான கடினதோலினையுடைய பெரிய மகிஷரூபங்கொண்டு, இவர்மேல் மழைஜலம் விழுந்து, தொந்தரவு உண்டாகாதபடி யிவர்சரீரத்தை மறைத்துக்கொண்டிருந்து இவரைக்காக்கவேண்டும்" என்று தீர்மானித்து அவரை அப்படியே காத்துக்கொண்டுவந்தது. ஏழாநாள் கடைசியில் மழை நிற்க, மகிஷரூபங்கொண்டிருந்த தர்மதேவதையும் சற்று அப்பாலேவிலகியிருந்தது. அப்பொழுது வத்ஸநாபர் தபசுகலைந்து, கண்விழித்துப் பார்த்து, "மழைகொட்டிக்கொண்டிருக்கும்பொழுது நாம் தபசு பண்ணிக்கொண்டிருந்தாற்போலிருக்கிறது. பூமியும், திசைகளும், மலைகளும், வனங்களும், தோட்டங்களும மழைஜலத்தில் மிதந்து கொண்டிருக்கின்றன. இந்த மழையில் நம்மை யாரோ காப்பாற்றியிருக்கிறார்கள். இல்லாவிட்டால் இந்தப் பெருமழையில் நாம் உயிர்பிழைத்திருப்பது துர்லபம்." என்று யோசனைசெய்து நாலு புறத்திலும் பார்க்க, தமக்கெதிரில் சொஞ்சதூரத்தில் கறுத்த பெரியசரீரத்தையுடைய ஒரு எருமை நிற்கக்கண்டு, "திரியக்குச் சாதிகளிடத்திலும் தர்மகுணம் காணப்படுவது ஆச்சரியம். இந்த எருமையானது என்னை பெருமழையினின்றுங் காப்பாற்றினபடியால் இது தீர்க்காயுசாயிருக்கவேண்டும்." என்று மனதுக்குள்ளாக ஆசீர்வாதம் சொல்லிவிட்டு மறுபடியும் தபசுக்கு ஆரம்பித்துவிட்டார். அதைக்கண்ட தருமதேவதை சரீரத்தில் ரோமம் சிலிர்க்கும்படி பரமானந்தமடைந்தது. தபசு செய்யத் தொடங்கின ரிஷிக்கு முன்போலப் பிரமத்தினிடத்தில் மனலயம் பெற்றிருக்கவில்லை. அதுகண்ட ரிஷியானவர் மனவருத்தமடைந்து, யோசிக்கத்தொடங்கினர். "மனதும் களங்கமடைந்தால் அல்லாமல் சஞ்சலமடையாது. பாபமில்லாமல் மனதுக்குச் சஞ்சலமுண்டாகாது. நமக்கோ பாபலேசமுங்கிடையாது. மனதோ சஞ்சலப்படுகிறது. தோஷத்துக்குக் காரணமோ தெரியவில்லை. என்னசெய்யலாம்? அடடா! நம்மைப் பெருமழையினின்றுங் காப்பாற்றின இந்த உத்தமமான மகிஷத்தைப் பூசைசெய்யாமலிருந்துவிட்டோமே! அந்தச் செய்நன்றி மறந்த தோஷத்தினலேதான் நமது மனஞ்சலிக்கின்றது.

நான் மஹாமூடனாய்விட்டேன். துராத்மாவான என்னைச் சுடவே ண்டும். நன்றி மறப்பது பெரிய தோஷமாயிற்றே! அதற்குப் பிரா யச்சித்தமும் கிடையாதே! அவனுக்குப்புண்ணியலோகங்களும், பந்துக்களுங் கிடையாதே! நன்றி மறந்தவனுக்கும், நம்பிக்கைத் துரோகஞ்செய்தவனுக்கும், தாய் தகப்பனைக் காப்பாற்றாமல் துரத்தி னவனுக்கும், குருதெட்சணை கொடாதவனுக்கும், மரணத்தைவிட வேறு பிராயச்சித்தங்கிடையாதென்று தர்மக்ஞர் சொல்லுகிறார் களே! ஆகையால் நான் பிராணனைவிட்டுப் பிராயச்சித்தம் பண்ணி க்கொள்ளுகிறேன்." என்று தீர்மானம் பண்ணிக்கொண்டு, தமது பிராணனைத் திரணமாகமதித்து, ஆசையொழிந்து மேருசிகரத்தி லேறி யதிலிருந்து கீழேவிழுயத்தனம் பண்ணினார். அப்பொழுது தரும தேவதை மகிஷரூபத்தைவிட்டுத்தன் சுயரூபத்தோடு அவரு க்கெதிரில்வந்து நின்று, "மஹாபிராக்ஞராகிய வத்ஸநாபரே! அவச ரப்படாதேயும். நீர் வெகுநாள் வாழ்ந்திருக்கக்கடவீர். நீர் பிரா ணனைவிட முயன்றதைக்கண்டு எனக்கு நிரம்பத்திருப்தியாய்விட் டது. தர்மாநுஷ்டானத்தில் உமக்குச் சமானமானவன் உலகத்தில் கிடையாது. செய்நன்றி கொன்றவனுக்கு மரணமே பிராயச்சித்த மாக விதிக்கப்பட்டிருந்தாலும், நீர் தருமசீலரானபடியால் உமக்கு வேறொரு பிராயச்சித்தஞ்சொல்லுகிறேன் கேளும். கந்தமாதன பருவதத்தில் சங்கதீர்த்த மென்றொரு தீர்த்தமிருக்கிறது. நீர் பக்தி யுடனே யந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் உம்முடைய பாபம் ஒழிந்து, என்னைவிடப் பரிசுத்தனாவதுமன்றிச் சித்தசுத்தி யையும் மெய்ஞ்ஞானத்தையும் பெற்றுச், சாசுவித பதத்தையடை வீர். ரிஷீசுவரரே! நான் தருமதேவதை; நான் சொல்வதெல் லாம் உண்மையென்று நம்பும்." என்றுகூற, வத்ஸநாபரும் சங்க தீர்த்தத்துக்குப்போக விரும்பிக் கந்தமாதனம்போய்ச் சேர்ந்து சங் கதீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினவுடனே பாபங்களெல்லாம் நீங்கி, மனம் நிர்மலமாய்விட்டது. வெகுகாலங்கழிந்தபின்பு அந்த ரிஷீசு வரர் பிரமத்துவத்தை யடைந்துவிட்டார்.

கேளுங்கள், ரிஷீசுவரர்களே! சங்கதீர்த்தம் இப்படிப்பட்ட மகிமையுடையது. அந்தத்தீர்த்த மகிமையை யென்னசொல்வேன்! நன்றி மறத்தலாகிய கொடியபாவமே யிந்தத்தீர்த்ததில் ஸ்நானம் பண்ணினதால் போகுமானால் வேறெந்தப் பாவந்தான் போகமாட்

டாது ? இந்த அத்தியாயத்தைப் படித்தவன் " கிருதக்நதை " என்கிற பாவத்தைச் செய்திருந்தாலும், அந்தத் தோஷம் விலகி மனச்சுத்தியடைந்து சத்தியலோகம்போய்ப் பிரமதேவனுடன் கூட மோட்சமடைவான்.

இருபத்தைந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## இருபத்தாறுவது

## யமுனை கங்கை கயை என்கிற தீர்த்தங்களிலே ஸ்நானம் பண்ணின திலே ஞானசுருதியென்ற இராஜன் ஞானம் பெற்ற

அத்தியாயம்.

---

கேளுங்கள் பிராம்மணோத்தமர்களே ! சங்கதீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினபிறகு யமுனை, கங்கை, கயையென்கிற தீர்த்தங்களில் ஸ்நானம் பண்ணவேண்டும். இந்த மூன்று தீர்த்தங்களும் மஹாபாதகங்களைப் போக்குபவைகளாயும், சர்வலோகப் பிரசித்தமாயுமுள்ளன. சமஸ்தவிக்கினங்களை நீக்குகிறதும், சமஸ்தரோகங்களைப் போக்குகிறதும், அஞ்ஞானத்தை நீக்கி மெய்ஞ்ஞானத்தைக் கொடுக்கிறதுமான இந்த மஹாபுண்ணிய தீர்த்தங்களில் பூர்வகாலத்தில் ஞானசுருதி என்னும் மஹா ராஜாவானவர் ஸ்நானம்பண்ணிரைக்குவர் என்ற ஒரு பிராம்மணோத்தமரிடத்திலிருந்து ஞானத்தைப் பெற்றுக்கொண்டார் என்று சூதர்சொல்ல, பிராமணோத்தமர்களும் ஸர்வார்த்த தத்துவஞ்ஞரும் வியாச சிஷ்யருமான சூதரே! யமுனை, கங்கை, கயை என்கிற தீர்த்தங்கள் கந்தமாதனத்திலெப்படி வந்தன ? ஞானசுருதி என்ற மஹா ராஜாவானவர் அந்த மூன்று தீர்

த்தங்களிலும் ஸ்தானம்பண்ணி ரைக்குவரிடத்திலிருந்து எப்படி ஞானம் பெற்றார்? இவைகளையெங்களுக்குச் சொல்லியருளவேண்டும் என்று கேட்க, சூதர் சொல்லுகிறார்.

பூர்வகாலத்தில் ரைக்குவர் என்ற மஹாரிஷியானவர் கந்தமாதனத்தில் வெகு கடுமையான தபசுசெய்து வந்ததனால் அவருக்கு ஆயுசு வளர்ந்துகொண்டு வந்தது. இந்த மஹாரிஷியானவர் பிறப்பிலேயே முடவராயிருந்தபடியால், கந்தமாதனங்களிலுள்ள தீர்த்தங்களுக்கு யுக்வ என்ற ஒரு வண்டியில் ஏறிக்கொண்டுபோய் ஸ்நானம் பண்ணுவது வழக்கம். ஆகையால் வைதிகர்கள் இவரை ஸம்யுக்வா என்றழைப்பார்கள். இந்த முனிவர் வேனிற்காலத்தில் பஞ்சாக்கினி மத்தியிலிருந்துகொண்டும், வருஷாகாலத்தில் கழுத்தளவு தண்ணீரிலிருந்துகொண்டும், கொடுந்தவசு செய்தபடியால் சரீரமிளைத்துப்போய்ச் சிரங்குகள் உண்டாயின. சிரங்கு தினவெடுப்பதனால் இரவும் பகலும் சொறிந்துகொண்டிருந்தும் தபசை விடாமல் உறுதியாயிருந்தார். இப்படியிருக்கையில் ஒரு நாள் அவருக்கு யமுனை, கங்கை, கயை என்ற தீர்த்தங்களில் ஸ்நானம் பண்ணவேண்டுமென்ற நினைவு பிறந்தது. "நாம் முடவனாயிருக்கிறபடியால் இந்த ஸ்நானங்கள் கிடைக்கமாட்டாது; வண்டியிலேறி வெகுதூரம் போகவும் முடியாது; ஆனால் இந்தத்தீர்த்தங்களில் ஸ்நானம் பண்ணித்தீரவேண்டும்; இதற்கென்ன செய்யலாம்?." என்று யோசித்துப் பின்பு, "ஒருவருக்குங் கிடைக்காத பெருந்தபசு நமக்கிருக்கிறபடியால், அந்தத் தீர்த்தங்களை யிவ்விடத்திற்கு அழைத்துவிடுவோம்." என்றெண்ணி இந்திரியங்களையடக்கிக், கண்களைமூடிக்கொண்டு கிழக்குத்திசைநோக்கியிருந்து மூன்றுதரம் ஆசமனஞ்செய்துவிட்டுக் கொஞ்சநேரம் தியானத்திலிருந்தார். அவருடைய மந்திரபிரபாவத்தால் யமுனை, கங்கை, கயை என்ற மூன்று நதிகளும் பாதாளத்திலிருந்து பூமியைக்கிழித்துக்கொண்டு மனிதவுருவத்தோடு ரிஷீசுவரருக்கெதிரில் வந்து, அதிக சந்தோஷத்தோடுகூட "ஐயா! ஸம்யுகவர் என்கிற ரைக்குவ மஹாரிஷியே! நீர் தயவுசெய்து தபசைவிட்டெழுந்திரும்; உமது மந்திரசக்தியால் இழுக்கப்பட்ட நாங்கள் மூவரும் இதோ வந்திருக்கிறோம். தாங்களுக்கு நாங்கள் செய்யவேண்டியதைச் சொல்லியருளு" மென்றுவேண்ட, ரிஷீசுவரர் கண்ணைவிழித்து, எதிரில் நிற்கும் மூவரையும் பார்த்து, அவர்களை விதிப்படி பூஜித்து,

"யமுனாதேவி, கங்காதேவி, கயாதேவி, நானுங்களை நமஸ்கரிக்கிறேன். நீங்கள் இந்தக் கந்தமாதனத்தில் என்னிமித்தம் சதாவாசம் பண்ணிக்கொண்டிருக்கவேண்டும். நீங்கள் பாதாளத்திலிருந்து பூமியைக் கிழித்துக்கொண்டு தோன்றின இடங்கள் அந்தந்தத் தீர்த்தங்களாயிருக்கவேண்டும்." என்று பிரார்த்திக்க, அவர்களும் "அப்படியே யாகக்கடவது" என்று வரந்தந்து அந்தர்த்தானமானார்கள். கேளுங்கள் முனிவர்களே! எந்தத் துவாரங்களின் வழியாய் அந்தத் தீர்த்தங்கள் பாதாளத்திலிருந்து வந்தனவோ அந்த இடங்களை அந்தந்தத் தீர்த்தங்களாக ஜனங்கள் சொல்லிக்கொண்டு வருகிறார்கள். இந்தப்படியாக ரைக்குவ மஹாரிஷியின் மந்திரமஹிமையால் யமுனை, கங்கை, கயை என்கிற மூன்று தீர்த்தங்களும் கந்தமாதனம் வந்துசேர்ந்தன. ரைக்குவர் தமது மந்திரபிரபாவத்தால் கந்தமாதனத்துக்கு வந்த அந்த மூன்று தீர்த்தங்களிலும் ஸ்நானம் பண்ணிக்கொண்டு சுகமாகக் காலங்கழித்துக்கொண்டுவந்தார்.

இப்படியிருக்கையில், புத்திரனென்கிற இராஜரிஷியின் பௌத்திரனும், ஞானசுதன் என்பவனுடைய புத்திரனுமான ஞானசுருதி என்கிற மஹாராஜனானவன் மஹா தர்மிஷ்டனாயிருந்துகொண்டு, அதிதிகளெல்லாருக்கும் சிரத்தையுடனே அன்னபானாதிகள் கொடுத்து உபசரித்தபடியால் சிரத்தாதயன் என்றும், பசித்துவந்த அதிதிகள் சாப்பிடும்படியான பதார்த்தங்கள் திருப்தியாய்ச்சமைத்துச் 'சமைத்துப் பகுவாயிருந்தபடியால் பகுபாக்கியன் என்றும் பெயர்பெற்று அதிதிகளிடத்தில் பட்சமுடையவனாய், நாடுநகரங்கள், காடுகள், கிராமங்கள், நாற்சந்திகள், இராஜபாட்டைகள் முதலான இடங்களிலெல்லாம் பருப்பு, கறிகளோடுகூடிய அன்னத்தை பூஜைக்காகச் சமைத்து, அவ்வவ்விடங்களில் அதிதிகள்வந்து போஜனமுண்ணும்படி தண்டோராப் போடுவித்தான். இவன் இப்படி மஹாதாதாவாயிருந்தபடியால் இவனுடைய குணங்கள் எல்லா உலகங்களிலும் பரவின. தேவரிஷிகளெல்லாரும் அவனுடைய அநுக்கிரகத்தை விரும்பி, அன்னப்பட்சிபோல வடிவுகொண்டு கிரீஷ்மரிது இராக்காலத்தில் வரிசை வரிசையாய், ஆகாசமார்க்கமாய் வந்து, உப்பரிகையின் ஜன்னலில் உட்கார்ந்திருந்த அரசன் சிரசுக்குமேலாகப் பறந்துபோனார்கள். இப்படி அன்னப்பட்சிகள் பறந்துபோய்க்கொண்டிருக்கும்போது பின்னாலேயிருந்த அன்னமானது முன்னாடிப்போகிற

அன்னத்தைக்கூப்பிட்டு, அரசனும் கேட்கும்படியாய், "அடா! முந்திச்செல்லுகிற பல்லாட்சா! இதோ முன்னாலே உட்கார்ந்துகொண்டிருக்கிற பூஜ்யனாகிய ஞானசுருதி யிராஜனைப் பாராமல் குருடனைப் போலப்போகிறாயே! இவருடைய அழியாத மகிமையானது பிரமலோகபரியந்தம் வியாபித்து அநேகமாயிரம் சூரியர்களைப்போல ஜொலித்து விளங்கிக்கொண்டிருக்கிறதே. இவரைத்தாண்டி நீ போவாயானால் அவருடைய தேஜஸானது உன்னைக் கொளுத்திவிடும்." என்று பரிகாசமாகச்சொல்ல, முன்சென்ற அன்னமானது, "அடே! நீ வெகு புத்திமான், உன் புத்திசாலித்தனத்தை வித்துவான்களே சிலாகிக்கவேண்டும்; தூர்த்தனையும் அற்பனையுமிருக்கிற இவனை வெகு சிலாக்கியமாகப் பேசுகிறாயே! இவன் துருத்தியைப்போலவும் மிருகங்களைப் போலவும் ஜீவச்சவமாயிருக்கிறவன் அல்லவா? இவன் தர்மத்தின் எந்த மூலையைக்கண்டான்? இவனும் தத்துவஞானியான ரைக்குவ மஹாரிஷியா? அவருடைய தேஜசு அல்லவோ தேவர்களாலும் சகிக்கமுடியாது. கேவலம் ஜந்துவாயிருக்கிற இவனுக்கு என்ன மகிமையிருக்கிறது? பூமியிலிருக்கிற மணலையும், ஆகாசத்திலிருக்கிற நட்சத்திரங்களையும் எண்ணினாலும் எண்ணலாம்; ரைக்குவருடைய புண்ணியராசிகளை யெண்ணமுடியாது. அந்த ரிஷியினிடத்திலிருக்கிறதுபோலச் சில நச்வரதர்மங்களிந்த இராஜனிடத்திலிருந்தாலும், ரைக்குவரிடத்தில் அநச்வரமான பிரமஞானமிருக்கிறது. அதனாலேயவருக்குப் பெருமையுண்டு. இந்த இராஜனிடத்தில் பிரமஞானமில்லாமலிருக்கையில் யோகீசுவரர்களுக்கு வருகிற பெருமை இவனுக்கெப்படிவரும்? ஆகையாலிந்த அதமனாகிய துராத்மாவைப்புகழ்வதைவிட்டு மஹாத்மாவாகிய ரைக்குவரைப்புகழு. ரைக்குவர் பங்குவாயிருந்தாலும் தான் ஸ்நானம் பண்ணுவதற்காகத் தம்முடைய மந்திரசக்தியால் யமுனை, கங்கை, கயை என்கிற மூன்று தீர்த்தங்களையும் தமதாசிரமத்துக்குச் சமீபத்தில் வரவழைத்துவிட்டார் பார்த்தாயா? அந்தப் பிரமஞானியின் தர்மத்தில் மூன்று லோகத்தில் இருப்பவருடைய தர்மங்களெல்லாம் அடங்கிப்போகின்றனவேயல்லாமல், மூவுலகத்திலு முள்ளவர்களுடைய தர்மத்தில் ரைக்குவர் தர்மம் அடங்கினதல்ல." என்று சொல்லி ஓய்ந்ததும், ஹம்ஸங்களான தேவரிஷிகளெல்லாரும் பிரமலோகம்போய்ச் சேர்ந்தார்கள். அது கேட்ட ஞானசுருதி மஹாராஜாவும் ரைக்குவரே உயர்

வுக்கு எல்லையாயிருக்கிறுரென்பதைத் தெரிந்துகொண்டு, சூதாட்டத்தில் தோற்றவன்போல முகவாட்டம்கொண்டு, அடிக்கடி பெருமூச்செறிந்து, யோசிக்கிருன்: "அன்னமானது அவரைச் சிலாகித்து என்னையிழிவாகப் பேசிற்று. ஓ! ஓ! பட்சிகளும் சிலாகிக்கத் தக்க ரைக்குவர் மஹத்துவமே மஹத்துவம்! நானிப்பொழுதே பிராஜ்யத்தையும் சமுசாரத்தையும்விட்டு ரைக்குவரைச் சரணம் புகுவேன். கிருபாநிதியான அவரும் சரணுகதனை எனக்குப் பிரமஞானேபதேசம் பண்ணுவார்." என்று சிந்தித்துக்கொண்டு நித்திரையில்லாமல் இரவெல்லாம் கண்விழித்திருந்து, விடியற்காலையில் வந்தியர்கள் பாடினவுடனே படுக்கையைவிட்டெழுந்திருந்து சாரதியைச் சீக்கிரமாக அழைத்து, "தேர்ப்பாகனே! நீ வேகமானதேரில் ஏறிச் சீக்கிரமாய்ப்போய், மஹரிஷிகளின் புண்ணியாசிரமங்களிலும், காடுகளிலும், நிர்ஜனமான இடங்களிலும், தீர்த்தக்கரைகளிலும், நதிக்கரைகளிலும், மணல்மேடுகளிலும், ரிஷிகள் வசிக்கும்படியான மற்ற இடங்களிலும்போய் ஸர்வ தர்மங்களுக்கு மிருப்பிடமாயும், பிரமஞானியாயும், வண்டியிலேயே போய்க்கொண்டிருக்கிற பங்குவான ரைக்குவ மஹாமுனிவரைத் தேடிப்பார்த்துச் சீக்கிரம்வா." என்று கட்டளையிட்டான். தேர்ப்பாகன் அப்படியே வேகமானதேரிலேறி மலைக்குகைகளிலும், ரிஷிகள் ஆசிரமங்களிலும், மற்றுமுள்ள இடங்களிலும், தேடிக்கடைசியாக மஹரிஷிகள் நிறைந்திருக்கிற கந்தமாதனத்துக்கு வேகமாய்ப் போய், அங்கே தேடிவருகையில் ஓரிடத்தில் வண்டியின்கீழே படுத்துச் சொறிந்துகொண்டு அகண்டசச்சிதானந்த பிரம்மதியானத்திலிருந்த ஓர் ரிஷியைக்கண்டு இவர்தான் தன் அரசன் சொன்ன ரைக்குவர் என்றெண்ணி, அவர் கிட்டநெருங்கி வணக்கத்தோடும் வணங்கி, "சுவாமி! தேவரீர் தாமோ ரைக்குவ மஹரிஷி?" என்று, பிரச்னம் பண்ண, அவர் "நான் தான் ரைக்குவன்" என்று உத்தரங்கொடுக்கச், சாரதியும் அநேகமான இங்கிதங்களினுலே அவருக்குக் குடும்பசம்ரக்ஷணத்துக்காகப் பொருளாசையிருப்பதையறிந்து, அவரிடமுத்தரவு பெற்றுக்கொண்டு திரும்பிவந்து அரசனிடத்தில் தெரிவித்தான். பின்பு ஞானசுருதி மஹாராஜனும் அறுநூறு பசுக்களையும், யதேஷ்டமான பொருளையும், கோவேறுகழுதை பூட்டின ஒரு தேரையுங்கொண்டு வந்து ரைக்குவரைக்கண்டு வணங்கி,

"முனிவரே! நான் கொண்டு வந்த அறுநூறு பசுக்களையும், தேரை யும், திரவியத்தையும் தேவரீர் ஏற்றுக்கொண்டு எனக்கு அத்து வைத பிரமஞானோபதேசஞ்செய்து, என்னைக் காத்தருளவேண்டும்." என்று சொல்ல, ரைக்துவர் ஆசையோடும் பரபரப்போடும், "மஹா ராஜனே! நீ கொண்டுவந்த பசுவும், பணமும், இரதமும், நீயே வைத்துக்கொள். வெகு கற்பகாலமாய்ச் சீவித்திருக்கிற எனக்கு இந்த அற்பமான பணம்போதுமா? நீ இதைப்போல நூறுமடங்கு கொடுத்தாலும் என்குடும்பசம்ரட்சணைக்குப் போதாதே. ஆகை யால் நீ கொண்டுவந்த சொத்து எனக்குப்போதாது." என்று சொல்ல, "சுவாமீ! தாங்கள் உபதேசம் பண்ணப்போகிற பிரம ஞானத்துக்கு இது கிரயம் அல்ல. நான் கொண்டுவந்ததை நீர் பெற்றுக்கொண்டாலும் பெற்றுக்கொள்ளாவிட்டாலும் எனக்கு அத்வைதஞானோபதேசஞ்செய்து என்னைக் காக்கவேண்டும்." என்று பிரார்த்திக்க, ரைக்துவர் "சமுசார ஒழிவும், பிராரப்த கர்ம நாசமும் எவனுக்கிருக்கிறதோ அவன் தான் அத்துவைதஞானோப தேசம் பெறத்தக்கவன். உனக்குச் சமுசார வெறுப்புண்டா யிருந்தாலும் பிராரப்தகர்மம் நசிக்கவில்லை. பிராரப்தகர்மம் அநு போகத்தாலன்றித் தீராது. அது தீராதவரையில் ஜன்மம் எடுத்தே தீரவேண்டும். நீ யென்னைச் சரணமடைந்தபடியினால் அந்தப் பிராரப்த நாசமுண்டாகும் வழியைச் சொல்லுகிறேன். சாவதான மாய்க்கேளு. இதோ சர்வாபீஷ்டத்தைக் கொடுக்கிறதும், முமூட் சுக்களுக்குச் சர்வ பிராரப்தத்தை நீக்கும்படியானதுமான கங்காதீர் த்தம், யமுனாதீர்த்தம் கயாதீர்த்தமென்கிற மூன்று தீர்த்தங்களிருக் கின்றன. இதில் சீக்கிரம் ஸ்நானம் பண்ணு, உடனே பிராரப்த கர்மநாசமுண்டாகிச் சித்த சுத்தியுண்டாம். இதிலாக்ஷேபனை யில்லை. அதன் பின் உனக்கு ஞானோபதேசம் பண்ணுகிறேன்." என்று சொல்ல, அரசனும் சந்தோஷத்தால் முகமலரப் பரபர வென்று தீர்த்தங்களில் ஸ்நானம் பண்ணிச் சித்தசுத்தியடைந்தான். உடனே ரைக்துவரைக் குருவாகக்கொண்டு பக்கத்திலுட்கார, ரைக் குவரும் இராஜனிடத்தில் கிருபைகூர்ந்து முனிவர்களுக்குந் துர்லப மான அத்வைதஞானத்தை உபதேசித்தார். இப்படி பிரமசொரூ பரான ரைக்துவரது பிரசாதத்தால் பிரமஞானம் பெற்று, பிரமரூபத் தையறிந்து அனுபவித்துக்கொண்டுவந்த அரசனுக்குக்கட, குட்டி,

குஸுமல முதலான பதார்த்தமயமான மாயாப்பிரபஞ்சந் தோன் றாமல், எங்கும் கேவல பிரமாகாரமாகவேயிருந்தது. இந்தப் பிரகா ரம் ஞானசுருதி மஹாராஜாவானவர் அந்த மூன்று தீர்த்தங்களிலும் ஸ்நானம் பண்ணின மகிமையினாலே யோகிகளுக்கும் கிட்டாத பிரம ஞானத்தையடைந்தார். இது மஹா ஆச்சரியம்!

கேட்டீர்களா முனிவர்களே! இந்த மூன்று தீர்த்தங்களினு டைய பிரபாவத்தை யுங்களுக்குச் சொல்லிவிட்டேன். இந்த மூன்று தீர்த்தங்களின் மகிமையைத் தியானம் பண்ணிக்கொண்டு, இந்த அத்தியாயத்தைப் படிப்பவர்கள் இருண்ட அஞ்ஞானத்தை யுடைத்து எறிந்துவிட்டுப் பிரமஞானத்தையடையப் பாத்திராகி றார்கள்.

## இருபத்தாறாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## இருபத்தேழாவது

# கோடிதீர்த்தத்தில் ஸ்ரீகிருஷ்ணன் மாதுலனாகிய கஞ்சனைக்கொன்ற பாபநிவர்த்தி அடைந்த

## அத்தியாயம்.

---

கேளுங்கள் முனிவர்களே! யமுனை, கங்கை, கயை என்கிற மூன்று தீர்த்தங்களில் ஸ்நானம்பண்ணினபின் விதிப்படி ஸ்நானம் செய்வதற்காக கோடிதீர்த்தம் போகவேண்டும். இந்தத் தீர்த்த மானது சமஸ்த லோகப்பிரசித்தியானதும், நினைத்தமாத்திரத்தில் சகல பாபங்களையும் மஹாபாதகங்களையும் போக்குகிறதும், மஹா விக்கினங்களை விலக்குகிறதும், துர்ச்சொற்பனங்களை நாசம்பண்ணு கிறதும், சமஸ்த சம்பத்துக்களைக் கொடுப்பதும, மஹாசாந்தியைத் தருவதுமான மஹா புண்ணியதீர்த்தம்.

பூர்வகாலத்தில் ஸ்ரீராமமூர்த்தியானவர் இராவணனைச் சங்கரித்ததனாலுண்டான பிரமஹத்தி நிவர்த்திக்காகக் கந்தமாதனத்தில் ஒரு சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து, அதற்கு அபிஷேகஞ் செய்ய நல்லஜலம் அகப்படாமையால், புதிய ஜலத்தினால் அபிஷேகம்பண்ணுகிறதென்று நிச்சயம்பண்ணிக்கொண்டு, கங்கையைத் தியானித்துத் தமது வில்லின் நுனியால் பூமியைப்பிளக்க, அந்த வில்லின் நுனிபாதாளம்வரைக்கும் பதிந்தது. பிறகு அந்த வில்லையெடுத்தவுடனே, அந்தவழியினால் பாதாளகங்கை வெளியில் வந்தது. அதனாலே யந்தத்தீர்த்தத்துக்குக் கோடிதீர்த்தமென்று பேருண்டாயிற்று. ஸ்ரீராமர் அந்தத்தீர்த்தத்தினாலே தாம் பிரதிஷ்டை செய்த சிவலிங்கத்துக்கு அபிஷேகஞ்செய்து முடித்தார். கந்தமாதனத்தில் எந்தெந்தத் தீர்த்தங்களுண்டோ அந்தத் தீர்த்தங்களிலெல்லாம் ஸ்நானம்பண்ணின பிறகு அநேக ஜன்மங்களில் செய்யப்பட்டு அஸ்தியிலொட்டிக் கொண்டிருக்கிற பாபசேஷ நிவர்த்திக்காகக் கோடிதீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணவேண்டும். ஸ்நானம் பண்ணினால் நிச்சயமாகவே எல்லாப் பாபங்களும் நிவர்த்தியாய் விடும். ஆனால் இந்தத்தீர்த்தத்தில் முதலில் ஒருவன் ஸ்நானம் பண்ணிவிட்டால் வேறு தீர்த்தங்களில் ஸ்நானம் செய்யவேண்டிய அவசியமில்லையென்று சூதர்சொல்ல, முனிவர்கள் ஸர்வக்ஞரும், வியாஸசிஷ்யருமான சூதரே! நீர் சொல்லிவந்த விஷயத்தில் எங்களுக்குண்டான பெரியசந்தேகத்தை நிவர்த்தியாக்கவேண்டும். கோடிதீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினவனுக்கு வேறு தீர்த்தங்களில் ஸ்நானம்பண்ணவேண்டுவதில்லை, என்றால் அவன் தர்மதீர்த்தமுதலான தீர்த்தங்களில் ஏன் ஸ்நானம்பண்ணவேண்டும்? அந்தத்தீர்த்தங்களை யெல்லாந்தாண்டிக்கொண்டுபோய்க் கோடிதீர்த்தத்திலேயே யேன் ஸ்நானம்பண்ணக்கூடாது? இந்தச் சமுசயத்தை நிவர்த்தியாக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறோம் என்று வினவச் சூதர், முனீசுவரர்களே, நீங்கள் கேட்டது இரகசியமான நல்ல கேள்வி. பூர்வத்தில் பரமேசுவரர் இந்த இரகசியத்தை நாரதமுனிவர்க்குச் சொல்லியிருக்கிறார். அதை நானுங்களுக்குச் சொல்லுகிறேன்; சிரத்தையோடு கேளுங்கள்.

“ எதிர்ச்சையாகவாவது, தீர்த்தயாத்திரை செய்யவேண்டுமென்கிற எண்ணத்தோடாவது புறப்பட்டுப்போகிற மனிதன்மார்க்

ஸமுத்திரத்தில் தீர்த்தங்களையாவது, தேவாலயங்களையாவது கண்டா ரினும், கேட்டாயினும் அவற்றை அஞ்ஞானத்தினால் அலட்சியஞ் செய்து சேவிக்காமல் போனால் அவனுக்குண்டான பாபத்துக்குப் பிராயச்சித்தங் கிடையவே கிடையாது ” என்று மஹரிஷிகளெல்லா ரும் சொல்லியிருக்கிறார்கள். ஆகையால் சேதுவுக்குப்போகிற மனி தன் சக்கிரதீர்த்தம் முதலிய தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்யாமல் போனால் தீர்த்தாதிக்கிரம தோஷம் வருவதனால், அவன் பிராமண ணர்களால்பஞ்சமனைப்போலச் சர்வகர்மங்களிலும் விலக்கப்படத் தகுந்தவன். ஆகையால் சக்கிரதீர்த்த முதலான தீர்த்தங்களில் ஸ்நானம்பண்ணின பிறகுதான் பாபசேஷ நிவர்த்திக்காகக் கோடி தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணிப் பாபங்களைப்போக்கிக் கொண்ட வுடனே, கந்தமாதனத்தில் தங்காமல் அவ்விடத்தைவிட்டுப் புறப் படவேண்டியது. ஸ்ரீராமர்கூடப் பூர்வகாலத்தில் கோடிதீர்த்த ஜல த்தைக்கொண்டு சிவலிங்கத்துக் கபிஷேகம்பண்ணித் தானுமதில ஸ்நானஞ்செய்து பிரமஹத்தியில் நின்றும் விடுபட்டவுடனே தம்பி முதலானவர்களோடு புஷ்பகவிமானத்திலேறி, வானரச்சேனைகள் சூழ அயோத்திமாநகரம் போய்ச்சேர்ந்தார். ஆகையால் கோடி தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணிப் பாபநிவர்த்தியான வுடனே தசரத ராமர் புறப்பட்டுப்போன மாதிரியாக உடனே புறப்பட்டுப் போய் விடவேண்டியது. இந்தத் தீர்த்தத்தில் பாதாளகங்கை கூடச்சதா வாசம்பண்ணிக் கொண்டிருக்கிறாள். தாரகபிரம்மமாகிய ஸ்ரீராம மூர்த்திகூட இந்தத் தீர்த்தத்தில் பிரியத்தோடு ஸ்நானம்பண்ணினார். ஸ்ரீகிருஷ்ணமூர்த்திகூட லோகாநுக்கிரகார்த்தமாக இந்தத் தீர்த் தத்தில் ஸ்நானம்பண்ணித் தன் மாமனாகிய கம்ஸனைக்கொன்ற பாபத்தைப் போக்கிக்கொண்டார். அப்படிப்பட்ட இந்தக் கோடி தீர்த்தத்தின் மகிமை எவரால் சொல்லமுடியும்? என்று சூதர் சொல்ல ரிஷிகள் சூதரைப்பார்த்து யதுகுலத்தில் பிறந்த சாக்ஷாத் கிருஷ்ண பரமாத்மாவானவர் மாமனாகிய கம்ஸனைக் கொல்லவேண் டியகாரணமென்னவென்று வினவச் சூதர் சொல்லத்தொடங் கினார்.

யதுகுலத்தில் சூர புத்திரனாகிய வசுதேவரென்பவர் தேவகனு டைய பெண்ணாகிய தேவகியைக் கல்யாணம்பண்ணிக்கொண்டு ரத த்தின்மேலேறிக் கம்ஸன் சாரதியாகவிருந்து தேர் செலுத்தத் தன்

ஊருக்குப்போகையில், ஓர் அசரீரிவாக்குத் தோன்றி "ஏ கம்ஸா! உன்சகோதரியின் வயிற்றில் பிறக்கப்போகிற எட்டாவது புத்திரன் உன்னை நிச்சயமாகவே கொல்லுவான்." என்று சொல்லிற்று. அது கேட்ட கம்ஸன் கத்தியைக் கையிலேந்திக் கொண்டு தன்சகோதரியை வெட்டப்போகையில், வசுதேவர் கம்ஸனைப் பார்த்து, "மைத்துனா! உன் சகோதரிக்குப் பிறக்கிற பிள்ளைகளையெல்லாம் உன்கையில் ஒப்புவித்து விடுகிறேன். ஆகையால் இவளைக்குறித்து நீ பயப்பட வேண்டியதில்லை. உன் சகோதரியைக் கொல்லவேண்டாம்." என்று சொல்லக் கம்ஸன் அதுகேட்டுத் தேவகியைக்கொல்லாமல் அவளை யும் மாப்பிள்ளையையும் தன்னகரத்துக்கு அழைத்துக்கொண்டு போய் அவ்விருவர் காலிலும் விலங்குபோட்டுச் சிறைச்சாலையி லடைத்து வைத்தான். வெகுகாலஞ் சென்றபின் தேவகி வயிற்றில் பிறந்த ஆறு பிள்ளைகளையும் வசுதேவர் தான் சொன்ன வாக்குத் தவறாமல் கம்ஸனிடத்தில் கொடுக்க, அவனும் இரக்கமில்லாமல் அந்தக்குழந்தைகளைக் கொன்றுவிட்டான். பிறகு தேவகியின் ஏழாவது கர்ப்பத்தில் ஆதிசேஷன் ஜனிக்க, மஹாவிஷ்ணுவினுக் கினையால் மாயாதேவி அந்தப்புத்திரனைக் கொண்டுபோய் நந்த கோபன் மனைவி ரோகிணியிடம் விட்டுவிட்டுத் தேவகியின் கர்ப்பம் கலைந்துபோயிற்றென்று பிரசித்தப்படுத்தினாள். பின்சாக்ஷாத மஹாவிஷ்ணுவே தேவகியின் கர்ப்பத்தில் வந்து பத்துமாதங்கள் சென்றபிறகு கிருஷ்ணனென்கிற பெயரோடு அவதாரஞ்செய்தார். சங்கு, சக்கரம், கதை, கட்கம் இவைகளை நாலுகைகளிலுமேந்திக் கொண்டு சிரசில் கிரீடந்தரித்து, மார்பில் வனமாலையணிந்து, தாய் தந்தையருடைய சோகத்தை நீக்கப் பிறந்த குழந்தையைக்கண்டு "வசுதேவர் துதிக்கின்றார். சுவாமீ! நீரேஜகம்; நீர்தான் ஜகத்துக் கதிபதி; நீரே ஜகத்துக்குக் காரணமானவர்; உம்மிடத்திலேதான் ஜகமிருக்கிறது; நீர்தான் சத்துவம், ரஜஸ், தமசென்கிற முக்குண வடிவான பிரகிருதி; பிரமாண்டமாகிய ஸ்தூல சரீரத்துக்கு அபி மானியாகிய விராட புருஷன்; நீர்ஸ்வயம்பிரகாசர்; நீர்தான் ஸம் ராட்; எல்லாம் நீரே. ஸமஸ்தபிராணிகளுக்கும் ஆதாரமாயும் அளவிடப்படாத மகிமையுடையவராயும், சங்கு சக்கர சார்ங்க கதா தாரியாயும், மானிடவேஷந்தரித்த ஸ்ரீமந்நாராயணராயுமிருக்கிற உம க்கு நமஸ்காரம், நமஸ்காரம்." என்று துதித்த வசுதேவரையும் தன்

தாண்டியும் பார்த்து "நீங்கள் பயப்படவேண்டாம். நான், கம்ஸனைக் கொன்றுவிடுகிறேன். நேற்று நந்தகோபன் மனைவியான யசோதை சர்வலோகங்களையும் மயக்குகிற என் மாயாசொரூபியான ஒரு பெண்ணைப் பெற்றிருக்கிறாள். என்னைக்கொண்டு போய் யசோதையின் பிரசவ அறையில் விட்டுவிட்டு, அந்தப் பெண்குழந்தையைத் தேவகியின் பிரசவ அறையில் கொண்டுவந்து வைத்துவிடும்." என்று சொல்ல, வசுதேவரப்படியே செய்ய, அந்தப் பெண்குழந்தை தேவகி தேவியின் பிரசவ அறையிலிருந்து அழுத இளங்குரலைக் கேட்டுக் கம்ஸன் மனக்கலக்கமடைந்து, பிரசவ அறையில் புகுந்து, அந்தப் பெண்ணைக் கையிலெடுத்து வெட்கமும், இரக்கமுமில்லாமல் கல்லிலறைந்து கொல்லும்போது அந்த மாயைப்பெண்ணானவள் அவன்கையைத் திமிறிக்கொண்டு, ஆயுதமணிந்த எட்டுப் புஜங்களுடன் தோன்றிக் கம்ஸனை அழைத்துக் கோபத்துடனே, "அடா துஷ்டா! அடா மூடா! துர்ப்புத்தியே! உன் உயிரைவாங்குகிறவன் எங்கேயோ வளர்ந்துவருகிறான், அவனை சீக்கிரம் தேடிப்பிடி." என்று சொல்லிவிட்டு ஆகாசத்திற்கிளம்பி, மனிதர்கள் செய்யும் பூஜையை யேற்றுப் பலனளிக்கின்ற தன் ஸ்வயரூபங்கொண்டு தேவலோகம்போய்விட்டாள். மாயாப்பெண்ணின் வசனங்கேட்ட கம்ஸன் மிக வியாகுலங்கொண்டு தன்னைக்கொல்லப் பிறந்த பிள்ளையையும், மற்றுமுள்ள குழந்தைகளையுங் கொல்வதற்காகப் பூதனை முதலானவர்களை யனுப்பினான். அவர்கள் நந்தகோகுலம் வந்து சேர்ந்து ஸ்ரீகிருஷ்ணனால் உயிரிழந்து யமலோகம் போனார்கள். பிறகு ராமகிருஷ்ணர்களிருவரும் கோகுலத்தில் பாலலீலைகள் செய்தும், இடையர்களைப்போலத்தளிர் மலர்களை யணிந்து, புள்ளாங்குழலூதியும், கன்றுகளையும், பசுக்களையும் மேய்த்தும் காலத்தைக் கழித்துச் சுகமாக வளர்ந்து வந்தார்கள். ஒரு நாள் கம்ஸன் அக்ரூரனை யழைத்து நந்தகோகுலம்போய் ராமகிருஷ்ணர்களைச் சீக்கிரமாக அழைத்து வரும்படி அனுப்பினான். அவரும் அப்படியே கோகுலத்திலிருந்த ராமகிருஷ்ணர்களை யழைத்துக்கொண்டுவந்து, திவ்யதோரணாதிகளால் அலங்கரிக்கப்பட்ட மதுராபுரி வந்துசேர்ந்து, கம்ஸனைக் கண்டு சமாசாரந் தெரிவித்துத் தன் வீடுபோய்ச் சேர்ந்தார். மறுநாள் மத்தியான வேளையில் ராமகிருஷ்ணர்கள் தமக்கு இஷ்டமான இடைப்பிள்ளைகளோடு, அகழ், மதில், கோபுரம், உப்பரிகைகள்

முதலியவற்றால் விளங்குகிற மதுராபுரியின் வீதியில் அந்நகரத்துப் பருவப்பெண்கள் துதிப்பதைக் கேட்டுக்கொண்டுபோய், வில்சாலையை யடைந்தார்கள். அங்கே பலமான நாணோடு கூடியிருக்கிற ஒரு பெரிய வில்லைக்கண்டு, அதைக் காத்துக்கொண்டிருந்த காவலாட்களை விலக்கிவிட்டு, அதிக சுலபமாக வில்லையெடுத்து நாணேற்றும்படி அதை வளைக்க, அது நடுவில் பிளந்ததனாலுண்டான தொனியைக் கேட்டு ஓடிவந்த காவலாளர்களை, ஒடிந்துபோன வில்துண்டுகளை யிருவரும் பேருக்கொன்றாக எடுத்துக்கொண்டு அடித்துக்கொன்றார்கள். பின் அரண்மனைவாயிலிற் கட்டியிருந்த குவலயாபீட மென்கிற யானையைக்கொன்று, அதனிரண்டு கொம்புகளையும் பிடுங்கிப் பேருக்கொன்றாகத் தோளிலே சாத்திக்கொண்டு சபாமண்டபத்துக்குப் போனார்கள். அங்கே சாணூரன், முஷ்டிகன் முதலான மல்லர்களைக் கொன்று யமலோகஞ் சேர்த்துவிட்டு, பின்பு பெரிய மஞ்சத்தின்மேலுட்கார்ந்திருந்த கம்ஸனிடம்போய், அற்பமிருகத்தைக் கண்ட சிங்கக்குட்டிகளைப்போல அவனையலட்சியஞ் செய்து நின்றார்கள். அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணர் மஞ்சத்தின்மேலுட்கார்ந்திருந்த கம்ஸனைக் காலைப்பிடித்திழுத்து ஆகாயத்தில் தூக்கி அவனுயிர் போம்படி சுழற்றிக் கீழே யெறிந்துவிட்டார். பலராமர் கம்ஸனுடைய எட்டுச்சகோதரர்களையும் முஷ்டியாலடித்துக் கொன்று ஹதம் பண்ணினார். இவ்விதம் ஸ்ரீகிருஷ்ணர் கம்ஸனைக் கொன்று, தன் தாய் தந்தைகளைச் சிறையினின்றும் விடுவித்து, எல்லோரையும் சமாதானப்படுத்திக் கம்ஸன் செய்த இம்சை பொறுக்கமாட்டாமல் ஓடிப்போயிருந்த பந்துவர்க்கங்களைத் திரும்பவும் மதுரைக்கு வரவழைத்து, உக்கிரசேன மஹாராஜாவுக்குப் பட்டங்கட்டிவைத்தார். தம்மாதாபிதாக்களுக்குச் செய்த துன்பத்தைச் சகிக்கமாட்டாமல் தேவபிராமண கண்டகனை கம்ஸனைக் கொன்று ஜயம்பெற்றிருந்த ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியை ஒரு நாள் நாரதாதி முனீசுவரர்கள் பார்க்கவர அம்முனிவர்களைக் கண்ணன் பார்த்து, "பிராம்மணோத்தமர்களே! மஹாபாபியான என்மாமனைக் கொன்றுவிட்டேன்; மாமனைக் கொல்வது தோஷமென்று சாஸ்திரந்தெரிந்த பெரியோர்கள் சொல்லுகிறார்கள்; ஆகையால் என் பாபநிவர்த்திக்காக நீங்கள் பிராயச்சித்தம் விதிக்கவேண்டும்" என்றார். நாரதமஹாமுனிவர் பக்திவிநயத்தோடுகூட மதுரமாகச் சொல்

னுகிருர்.— "சுவாமி ! நித்திய சுத்தராயும், முக்தராயும், சகலமு மறிந்தவராயும், சச்சிதானந்த சொரூபராயும், பரமாத்மாவும் ஸநா தனராயுமிருக்கிற உமக்குப் புண்ணியபாபம் கிடையாது ; லோக சிக்ஷார்த்தம் உமக்குப் பிராயச்சித்தஞ் செய்துகொள்ளவேண்டு மென்கிற விதியில்லை யானாலும், உலகத்தாருக்கு உபதேசிக்கும் பொருட்டாக நீர் பிராயச்சித்தஞ் செய்துகொள்ள வேண்டியதாகை யால் மஹாபுண்ணியமான கந்தமாதனபருவதத்தில் முன்காலத்தில் ஸ்ரீராமர் இராமநாதனென்கிற ஒரு சிவலிங்கத்தை ஸ்தாபித்து, அதற்கு அபிஷேகம் பண்ணும் நிமித்தம் தமதுவில்லின் நுனியால் பூமியைப் பிளந்து உண்டாக்கின கோடிதீர்த்த மென்கிற ஒரு தீர்த் தம் இருக்கிறது. உம்முடைய பூர்வாவதாரமாகிய ஸ்ரீராமர் தாம் ஸ்வயமாகவே பிரம்மஹத்தி நிவர்த்திக்காக உண்டாக்கின தீர்த்த மாகையால் நீர் இந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினுல் மாது லனைக் கொன்றபாபம் உம்மை விட்டு உடனே விலகிப்போம். இந்தக் கோடிதீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினுல் பிரம்மஹத்தியாதி பாபங்கள் நீங்கி, ஆயுராரோக்கியம்பெற்றுச் சொர்க்காதிபோகங் களையடைந்து, மோட்ச சாம்பிராஜ்ஜியத்தையும் கைக்கொள் வார்கள்." என்று நாரதர் சொன்னவசனத்தைக்கேட்ட ஸ்ரீகிருஷ்ணர் முனிவர்களுக்கு விடைகொடுத் தனுப்பிவிட்டுச் சேதுயாத் திரையை உத்தேசித்துப் புறப்பட்டுக் கொஞ்சநாள்களில் கோடி தீர்த்தம்வந்து, அதில் சங்கற்ப பூர்வமாக ஸ்நானம் பண்ணி அநேக தானங்களைக்கொடுத்து மாதுல வதத்தாலுண்டான தோஷத் தினின்றும் விடுபட்டு, ஸ்ரீராமநாதனையும் சேவித்துத் தமது மதுராபுரி பட்டணம்வந்து சேர்ந்தார்.

கேட்டீர்களோ முனிவர்களே ! கோடிதீர்த்தம் இப்படிப்பட்ட மகிமையுடையது. இதற்குச் சமானமான தீர்த்தம் உலகத்தில் ஒன்றும் கிடையாது. இதில் ஸ்நானம் பண்ணினுல் பிரம்ம விஷ்ணு ருத்திரர்களாகிய மும்மூர்த்திகளும், இதரமான தேவர்களும் திருப்தியடைகிருர்களென்பதில் சந்தேகமேயில்லை. இந்தப் புண் ணியமான அத்தியாயத்தைப் படிப்பவரும் கேட்பவரும் பிரம்ம ஹத்தியாதி பாபங்களினின்றும் விடுபடுவார்கள் என்பது நிச்சயம்.

## இருபத்தேழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

# இருபத்தெட்டாவது

# ஸாத்யாமிருத தீர்த்தத்தில் புரூரவச்சக்கரவர்த்தி தும்புருசாபம் நீங்கி ஊர்வசியை அடைந்த சரித்திரங்கூறிய

## அத்தியாயம்

---

கேளுங்கள் முனீசுவரர்களே! மஹா புண்ணியமான கோடி தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணியபின் இந்திரியங்களையடக்கிக்கொண்டு சாத்தியாமிருத தீர்த்தம் போகவேண்டும். இந்த ஸாத்தியாமிருத தீர்த்தமானது சமஸ்த பாபங்களையும்போக்கி, சகல துக்கங்களையும்நீக்கி, புண்ணியத்தைத்தந்து, சர்வாபீஷ்டங்களையும் பூர்த்தி பண்ணுகிற தீர்த்தம். இதில் பக்தியோடு ஸ்நானம் பண்ணுகிறதனால் அடைகிறபலனைத் தபசினாலும், பிரமசரியத்தினாலும், யாகங்களாலும், தானங்களாலும் ஒருவன் அடையமாட்டான். இந்தச் சுபமான சாத்தியாமிருத ஜலம் எவனுடைய சரீரத்தில் படுகிறதோ அவனுடைய சரீரத்திலிருக்கிற பாபம் உடனே விலகிப்போம். அகமருஷண ஜபஞ் செய்துகொண்டு ஸாத்தியாமிருதத்தில் ஸ்நானம் பண்ணுகிறவன் சமஸ்த பாபங்களையும் இவ்விடத்தில் உதறிவிட்டு விஷ்ணுலோகம்போய் அங்கே சிறந்து வாழ்ந்திருப்பான். பாலியத்தில் பாபங்களைச் செய்துவிட்டு அந்திய காலத்தில் பச்சாத்தாபமுண்டாகிச் சாத்தியாமிருத தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணுகிறவன் சமஸ்த பாபங்களினின்றும் முக்தனாய்விடுகிறானென்பதில் ஐயமே கிடையாது. சாத்தியாமிருதத்தில் ஸ்நானம் பண்ணுகிற பாபிகள் அநேக துக்கங்கள் நிறைந்த கொடிய நரகங்களைப் பார்ப்பதேயில்லை. சாத்தியாமிருத தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணுகிறவர்களுக்கு உண்டாகும் நல்லகதியானது யாகங்களாலும், வேதங்களாலும், புண்ணியகருமங்களாலும் உண்டாகமாட்டாது.

ஒருவனுடைய எலும்பு சாத்தியாமிருத தீர்த்தத்தில் எவ்வளவு காலங் கிடக்கிறதோ அதுவரைக்கும் அவன் சிவலோகத்தில் மிகச்சிறப்பாக வாழ்ந்திருக்கிறான். ஸாத்தியாமிருத தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணுகிறவன் உதயகாலத்தில் சூரியனானவன் இருட் கூட்டங்களைச் சிதறவடித்துகொண்டு புறப்படுவதுபோலச், சகல பாபங்களையும் உடைத்துக்கொண்டு பிரகாசிப்பதுந்தவிரச் சகல மனோரதங்களையும் அடைகிறான். கேளுங்கள் முனிவர்களே! இந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணிப் புரூரவசக்கிரவர்த்தியானவர் தும்புருசாபத்தால் உண்டான ஊர்வசி பிரிவினை நீங்கிச் சுகத்தைய டைந்தார். என்று சூதர் சொல்ல, முனிவர்கள் சூதரைப்பார்த்து ஐயா! மஹானுபாவா! நரனாகிய புரூரவசக்கிரவர்த்திக்குத் தேவஸ் திரீயான ஊர்வசி சங்கமம் எப்படி கிடைத்தது? எந்தக்காரணத்தி னால் தும்புரு சாபம் நேரிட்டது? இவைகளை யெங்களுக்குச் சவிஸ் தாரமாகச் சொல்லியருளவேண்டுமென்று கேட்கச் சூதர் சொல்ல த்தொடங்கினார்.

பூர்வகாலத்தில் இந்திரனுக்குச் சமானமான பராக்கிரமமும் குபேரனுக்குச் சமானமான ஐசுவரியம் பொருந்திய புரூரவசக் கிரவர்த்தி அநேகயாகங்களைச் செய்தும், தானங்களைக்கொடுத்தும் தர்மமாய் ராஜ்ஜியபரிபாலனஞ் செய்துகொண்டு வருங்காலத்தில் மித்திராவருணருடைய சாபத்தால் பூமியில் அவதாரம் பண்ணின ஊர்வசியானவள் இராஜநகரத்துக்கடுத்த பூந்தோட்டத்தில் வீணை யை வைத்துக்கொண்டு குயிலைப்போலக் காதுக்கினிமையாகப் பாடிக்கொண்டிருந்தாள். அந்தச் சமயத்தில் அரசன் உத்தியான வனம்போகப் பிரியப்பட்டு குதிரையின்மேலேறி யௌவனமாதர் சூழ்ந்துவர உத்தியானவனம்போய், பிடிக்குள் அடங்கும்படியான, சிறிய இடையினையுடைய அந்த ஊர்வசியைக்கண்டு, மோகங் கொண்டு, "பெண்ணே யெனக்கு மனைவியாகவருக" என்று நயமா கக்கேட்டான். அந்த ஊர்வசியும், அரசன்மேல் மோகங்கொண்டு "சுவாமி இராஜேந்திரா! நீர் கேட்டபடியே யாகட்டும்; எனக் கொரு சபதம் பண்ணிக்கொடுத்தால் உம்மிடத்தில் சந்தோஷமாக வசித்திருப்பேன்." என்று சொல்ல, அரசனும், "நல்ல புரு வத்தையுடைய பெண்ணே! நீ கேட்டபடியே சபதஞ்செய்து

தருகிறேன்.'' என்று சொன்னான். ஊர்வசி மனமகிழ்ந்து, “ஐயா! எனக்குப் பிள்ளையாக இருக்கிற இரண்டு செம்மறியாட்டுக் குட்டிகளைக் காப்பாற்றவேண்டும். எனக்கெதிரில், நீர் நிர்வாணமாக இருக்கக்கூடாது. எனக்கு எச்சிலைக்கொடுக்கப்படாது. நான் நெய் ஒன்றையே புஜித்துக்கொண்டிருப்பேன். இவைகளுக்கு நீருடன்பட்டால் நானும்மிடத்தில் வாழ்ந்து கொண்டிருப்பேன்.' என்று சொல்ல, அரசன், “அப்படியே நல்லது” என்றுசொல்லித் தன் வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோய், அளகையில் சில காலமும், சைத்திரவனத்தில் சிலகாலமும், தாமரை மலர்களால் நிறைந்தசரஸ்வதி தீர்த்தத்தில் சிலகாலமுமாக அறுபத்தொரு வருஷம் அவளோடு கூடிச்சுகித்துவந்தான். ஊர்வசியும் தினந்தோறும் அரசனிடத்தில் ஆசைபொங்க மகிழ்ந்து தேவலோக சுகத்தைக்கூட மறந்திருந்தாள். இப்படி யிருக்கையில், ஊர்வசியில்லாமல் தேவலோகம் பாழாய்ப் போய் விட்டமையால் அவளைக் கொண்டுவரவேண்டுமென்று விசுவாசு என்கிற கந்தருவன் பூலோகம் வந்து, ஊர்வசிக்கு அரசன் செய்து கொடுத்த சபதத்தையறிந்து, இராக்காலத்தில் கந்தர்வர்களோடு ஊர்வசியின் படுக்கைகிட்ட வந்து ஒரு செம்மறியாட்டைத் தூக்கிக்கொண்டு ஆகாசமார்க்கமாகப் போனான். அப்போது அந்த ஆடு கத்தின சப்தங் கேட்ட ஊர்வசி, “என்னுடைய பிள்ளையை யாரோகொண்டுபோகிறானே! அந்தப் பிள்ளையை விடுவிக்கவேண்டும்; நான் அனாதையாய்விட்டேன், யாரைச் சரணமடைவேன்” என்று புலம்பி மூர்ச்சையாய் விழுந்தாள். அரசன் அவள் புலம்பினதைக் கேட்டும் “நாமிப்பொழுது போனால் அவளுக்குமுன் நக்னனாய்க் காணப்படுவோமே” என்று நினைத்துப் போகாமலிருந்துவிட்டான். பின்பு கந்தருவர்கள் மற்றொரு ஆட்டையும் பிடித்துக்கொண்டு போனார்கள். அந்த ஆடும் உரக்க சப்தம்பண்ண, அதுகேட்ட ஊர்வசியும், “ஐயோ! என்பிள்ளையைத்திருடர்கள் தூக்கிக்கொண்டு போகிறார்களே, கேள்வி முறையில்லையா! நான் எந்தப் புருஷனைச் சரணமடைவேன்?” என்று வாய்விட்டலற, அரசனும் அவள் சொன்ன வார்த்தை பொறுக்காமல், எவ்விடத்திலு மிருட்டாயிருப்பதால் பாதகமில்லையென்று கையில் கத்தியையெடுத்துக் கொண்டு, ‘அடா துஷ்டா! எங்கடாபோகிறாய்” என்று கந்தர்வர்களைத்

தூக்கிக்கொண்டுபோனான். அந்தச் சமயத்தில் கந்தர்வர்களுடைய ஏவுதலால் ஒரு மின்னல் மின்னிற்று. அந்த மின்னலொளியால், அரசன் நக்னமாயிருப்பது ஊர்வசி கண்களுக்குத் தோன்ற, அவள் அரசன் சபதந்தவறினானென்று அந்தக்ஷணமே மறைந்துபோனாள். கந்தர்வர்களும் ஆடுகளைவிட்டுவிட்டு ஓடிப்போனார்கள். இராஜன் ஆடுகளைப் பிடித்துக்கொண்டு சந்தோஷத்தோடு தன் படுக்கை அறைக்குவந்து, விசாலமான கண்களையுடைய ஊர்வசியைக் காணாமல் மனமேங்கி, பைத்தியக்காரனைப்போல நக்னமாகவே வெளிக்கிளம்பி, உலகமெல்லாஞ் சுற்றிக் கடைசியில் குருக்ஷேத்திரம்போய், அங்கொரு தாமரைத்தடாகத்திலே நாலு அப்ஸரஸ் திரீகளோடு ஜலக்கிரீடை பண்ணிக்கொண்டிருந்த ஊர்வசியைக் கண்டு, "ஏ! ஜயமுடையவளே! கடினசித்தமுடையவளே! நில்லு நில்லு" என்று அடிக்கடி சொல்லிப் புலம்பி நின்றான். அது கேட்ட ஊர்வசி, "பாபமற்ற மஹாராஜனே! துக்கப்படவேண்டாம். உம்மால் நான் கர்ப்பவதியாயிருக்கிறேன். உமக்கு மஹா தர்மவானான ஒரு புத்திரன் பிறப்பான்; இவ்வருஷக் கடைசியிலிங்கே வாரும்; அப்பொழுது ஓரிரவுமுடிய உம்மோடு கூடியிருப்பேன்' என்று சொல்ல, அரசனும் வெகுசந்தோஷத்தோடு தன் பட்டணம் போய்ச் சேர்ந்தான். பிறகு ஊர்வசி தன்னோடுகூடவிருந்த தோழிமார்களைப்பார்த்து, "சகிமார்களே மன்மதன்போன்ற சுந்தரவடிவுள்ள இந்த அரசனிடத்தில் தான் நான் மோகக்கடலில் முழுகினவளாய் மயங்கி இதுவரைக்கும் கூடிவாழ்ந்திருந்தேன்." என்று சொல்ல, தோழிமார்களும், "நல்லகாரியம் பண்ணினாய், நல்லகாரியம் பண்ணினாய். இந்தச் சுந்தரனோடு நாங்கள் சதா கூடியிருக்கப் பிரியப்படுவோமே" என்றார்கள். ஒரு வருஷம் சென்றபின் இராஜன் ஊர்வசி சொன்னபடியே யந்தக் குளக்கரைக்கு வந்தான் ஊர்வசியும் வெகு சந்தோஷத்துடனே தான் பெற்ற ஆயுஸ் என்ற குமார இரத்தினத்தைக்கொடுத்துத் தான் சொன்னபடியே ஓரிரவு முழுவதும் அரசனோடுகூடிக்கலந்திருந்து, ஐந்து புத்திரர்களைப் பெறும்படியான கர்ப்பந்தரித்து, மஹா சந்தோஷத்தையுடையவளாய், அரசனைப்பார்த்து, "மஹாராஜனே என்னிடத்திலிருக்கிற பிரியத்தினாலே கந்தர்வர்கள் நீர் கேட்ட வரங்கொடுப்பார்கள்" என்று சொல்ல இராஜன் கந்தர்வர்களைப் பார்த்து, "மஹானு

பூாவர்களே! எனக்குச் சம்பூர்ணமான ஐசுவரியமிருக்கிறது ; நான் சத்துருக்களெல்லாரையும் ஜயித்திருக்கிறேன் ; ஊர்வசியோடுகூடி ஒரே லோகத்தில் வசிப்பதைவிட நான் விரும்பக்கூடிய வரம் வேறொன்றுமில்லை ; ஆகையால் அந்த ஊர்வசியோடு எப்பொழுதுங் கூடி வாழ்ந்திருக்க எனக்கு வரங்கொடுக்கவேண்டும" என்று கேட்கக், கந்தர்வர்களுமதிகச் சந்தோஷங்கொண்டு, ஒரு அக்கினி ஸ்தாலியை யரசனிடங்கொடுத்து, "மஹாராஜனே நீர் வேதமார்க்கத்தின்படி நடப்பவராகையால்தக்ஷிணாக்கினி, காருகபத்தியம், ஆகவனீயமென்கிற மூவகையான அக்கினிகளை வளர்த்து யாகஞ்செய்வீரேயானால் நீர் ஊர்வசியோடுகூடி ஒரே யிடத்தில் வாழும்படியான பாக்கியம் பெறுவீர்." என்று சொல்லி மறைந்துபோனார்கள். இராஜன் அக்கினிஸ்தாலியை வாங்கிக்கொண்டு, "அடடா! மோசம் போனேனே! மூடனானேனே! ஊர்வசியைப் பெற்றுக்கொள்ளாமலிந்த ஸ்தாலியை வாங்கிக்கொண்டதனால் என்ன பிரயோசனம?" என்று பரிதபித்து, அந்த ஸ்தாலியைக் காட்டிலேயே வைத்துவிட்டு, ஊர்போய் சேர்ந்தான். நடுராத்திரியில் விழித்துக்கொண்டு, "ஐயோ! ஊர்வசியோடு ஒரே இடத்தில் வசிப்பதற்காகக் கந்தர்வர்கள் ஸ்தாலி கொடுத்தார்களே, அதைக்கூட வீட்டுக்குக் கொண்டு வராமல் காட்டில்வைத்து வந்துவிட்டேனே! அந்த இடத்துக்குப் போய் ஸ்தாலியை எடுத்துக்கொண்டு வருவோம்" என்று எழுந்திருந்து காட்டுக்குவந்து தான் வைத்தவிடத்தில் ஸ்தாலியைக் காணமல், ஒரு அரசமரத்தின் மத்தியில் வன்னிமரம் முளைத்திருப்பதைக்கண்டு "ஐயோ! நானிங்கேதானே ஸ்தாலியை வைத்து இருந்தேன். வன்னிமுளைத்த அரசமரம் வீட்டுக்குக் கொண்டு போய் அரணிசெய்து, அதிலிருந்து அக்கினி உண்டுபண்ணி ஆராதனை செய்துவருவோம்" என்று தீர்மானஞ்செய்து, அரசமரத்தையெடுத்துக்கொண்டு ஊருக்குவந்து, அரணி செய்யத்தொடங்கிக், காயத்திரியை ஜபித்து, அந்தக் காயத்திரியில் எத்தனை அட்சரங்களிருக்கின்றனவோ அவ்வளவு அங்குலம் (இருபத்தினாலு) பிரமாணம் அரணிசெய்து. கடைந்த மூன்று அக்கினிகளையும் வளர்த்து ஊர்வசி லோகத்தில் வாழ்ந்திருக்கிற பலனை உத்தேசித்து வேதவிதிப்படி ஓமம் பண்ணி, அதேமாதிரி யின்னம் அநேக யாகங்களையுஞ்

செய்து கந்தர்வலோகமபோய் அங்கே ஊர்வசியுடனே கூடி வெகு காலம் வாழ்ந்திருந்தான். இப்படியிருக்கையில் ஒரு நாள் தேவேந்திரன் சகலமான தேவர்களுடனே கூட அப்ஸரஸ்திரீகளின் நாட்டியம பார்த்துக்கொண்டிருக்கையில் புரூரவனும் அந்த நாட்டியம் பார்க்கும்படி தேவசபைக்கு வந்தான். அப்ஸரஸ்திரீகள் முறைப்படி நடனம் பண்ணிவந்தார்கள். பின்பு ஊர்வசி முறைப்படி வந்து நடித்தாள் நாட்டியம், அபிநய முதலானவைகளில் தனக்குச் சமானமில்லையென்று கர்வங்கொண்டிருந்த அழகில் சிறந்தவளான அந்த ஊர்வசி புரூரவனைக்கண்டு சிரிக்க, அவனும் அவளைப் பார்த்துச் சிரித்தான். நாட்டியாசாரியரான தும்புருவானவர், அவர்கள் சிரித்ததைக் கண்டு கோபங்கொண்டு, அவர்களைப் பார்த்து அநேக தேவர்கள் கூடியிருக்க இந்தச் சபையில் நீங்களிருவரும் காரணமில்லாமல் சிரித்தபடியால் இந்த க்ஷணத்திலேயே நீங்களிருவரும் பிரிந்து போவீர்களென்று சாபங்கொடுத்தார். இப்படியென்று சாபம் பெற்ற புரூரவன் மஹா துக்கங்கொண்டு, இந்திரன் பாதத்தில் விழுந்து, “ சுவாமி! ஊர்வசியைப் பிரியாமல் கூடிவாழ்வதற்காக நான் அநேக யாகங்களைச் செய்து இவ்விடத்திற்கு வந்தேன் இப்பொழுது நான் அவளைப் பிரிந்திருக்கும்படி சாபம் வந்துவிட்டதே! இந்தத் துக்கத்தை நான் எப்படிச் சகிப்பேன். என்னைக் காத்தருளவேண்டும் ” என்று கெஞ்சிக் கேட்க, புரூரவனைப் பார்த்து, “ ஐயா! அரசனே! நீ பயப்படவேண்டாம்; உம்முடைய சாபந்தொலைவதற்கு மார்க்கங்காட்டுகிறேன். தென்சமுத்திரக்கரையில் விளங்காநின்ற புண்ணியமாகிய கந்தமாதன பருவதத்தில் சமஸ்த தேவர்களாலும், சித்தசாரணகின்னரர்களாலும், ஸனகாதி மஹா யோகிகளாலும் ஸேவிக்கப்பட்டதாயும் ஸ்நானம் பண்ணுகிறவர்களுக்குப் புத்திமுத்திகளைக் கொடுப்பதாயும், சகல சாபங்களையும் நிவர்த்திசெய்வதாயுமுள்ள சாத்தியாமிருத தீர்த்தமென்று ஒன்றிருக்கிறது நீர் சீக்கிரமாய்ப்போய் அதில் ஸ்நானம்பண்ணும். ஸ்நானம்பண்ணினால் நீர் மறுபடியும் ஊர்வசியோடுகூடி வாழ்ந்திருக்கும் வாழ்வுண்டாய் என்லோகத்தில் நீங்காமல் வசித்துக்கொண்டிருப்பீர் ; இதில் சந்தேகமில்லை. இதில் ஸ்நானம் பண்ணுகிறவர்களெல்லாருக்கும் அமிருதமென்கிற மோட்சம் சத்தியமாய்க் கைகூடிவருவதாய் இருப்பதினாலே அதற்கு ஸாத்தியாமிருதமெ

ன்று பேர்வந்தது" என்று தேவேந்திரன் சொல்லப், புரூரவன் அதிக சந்தோஷமடைந்து, உடனே புறப்பட்டு ஸாத்தியாமிருத மஹாதீர்த்தமிருக்கிற இடத்திற்குவந்து, அதில் ஸ்நானம் பண்ணின வுடனே சாபம்நீங்கி, ஊர்வசியோடுகூட விமானத்திலேறி, அமராவதி போய்ச்சேர்ந்து, தேவலோகத்திலே தேவனைப்போல ஊர்வசியுடனே கூடி மறுபடியும் வாழ்ந்திருந்தான்.

கேட்டீர்களோ முனிவர்களே! ஸாத்தியாமிருத தீர்த்தத்தினு டைய உத்தமமான வைபவத்தைப் பூர்வத்தில் பிரமதேவன் ஸந காதிகளுக்குச் சொன்னபடியே சிரத்தையோடு விஸ்தாரமாயுங்க ளுக்குச் சொல்லிவிட்டேன். இந்த மஹாபாதகநாசனமான தீர்த் தத்தில் காமியார்த்தமாக ஸ்நானம்பண்ணுகிறவன் தான் கொண்டி ருக்த மனோரதபூர்த்தியையும், நிஷ்காமமாய் ஸ்நானம் பண்ணுகிற வன் மோக்ஷத்தையும் அடைகிறான். புண்ணியமான இந்த அத்தியா யத்தைப் படிப்பவரும், கேட்பவரும் வைகுண்ட பதத்தையடைந்து சுகமாக வாழ்ந்திருப்பார்கள்.

## இருபத்தெட்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## இருபத்தொன்பதாவது

# மானசதீர்த்தம் அல்லது சர்வதீர்த்த வரலாறு உரைத்த

## அத்தியாயம்.

---

கேளுங்கள் ரிஷீசுவரர்களே! புரூரவசக்கிரவர்த்தியினுடைய சாபந்தீர்த்த ஸாத்தியாமிருத தீர்த்தத்திலே ஸ்நானம் பண்ணிவிட்டு பாதகத்தை நாசம்பண்ணுகிறதும், மஹா புண்ணியமானதுமான ஸர்வதீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினவன் மஹாபாதகங்களைச் செய்தவனானாலும், ஸர்வபாதகங்களைச் செய்தவனானாலும், உடனே சுத்தியடைகிறான். இந்த ஸர்வதீர்த்தத்திலொருவன் ஸ்நானம்

பண்ணுதவரையில் அவன் சரீரத்தைவிட்டுப் பாபம நீங்காமலிருக்கிறது. இந்த ஸர்வதீர்த்தத்தில் ஸ்நானம பண்ணவேண்டுமென்று பயணப்படுகிற பாபியைக்கண்டு, அவன் சரீரத்திலிருக்கிற பாபங்கள் ஐயோ நாம் நசித்துப்போவோமேயென்று நடுங்குகின்றன. இந்த ஸர்வதீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணுகிறவரையிலேதான் மனிதர்கள் கர்ப்பவாசமுதலான துக்கங்களுக்குள்ளாகிறார்கள். மஹாயாகங்களைச்செய்வதாலும், தீர்த்தயாத்திரை செய்வதாலும், காயத்திரிமுதலிய மஹாமந்திரங்களை நியமமாகச் செபிப்பதாலும், நாலுவேதங்களையும் பக்தி பூர்வமாக நாள்தோறும் பாராயணம் பண்ணுவதாலும் பக்தியுடனே சிவவிஷ்ணுக்களைப் பூஜைசெய்வதாலும், ஏகாதசி, முதலான திதிகளில் உபவாசம்பண்ணுவதாலும், என்னபலனுண்டாகுமோ அந்தப்பலன்களையெல்லாம் இந்த ஸர்வதீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணுவதால் அடைகிறான் என்று சூதர் சொல்ல, முனிவர்கள் ஐயா! சூதரே! இந்தத்தீர்த்தத்துக்கு ஸர்வதீர்த்தமென்று பேர்வந்த காரணமென்ன? இதை யெங்களுக்கு விஸ்தாரமாய்ச் சொல்லவேண்டுமென்று கேட்கச், சூதர் சொல்லத்தொடங்கினார்.

பூர்வகாலத்தில் பிருகுவம்சத்தில் பிறந்த ஸுசரிதர் என்று ஒரு ரிஷியிருந்தார். அவர் பிறவிக்குருடராயும், கிழவராயுமிருந்ததால், தீர்த்தயாத்திரை செய்யமுடியாமலிருந்தும் ஸர்வதீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்யவிருப்பங்கொண்டு, தெட்சணசமுத்திரத்திலிருக்கிற கந்தமாதனம்போய்ச் சேர்ந்து இந்திரியநிக்கிரகம்பண்ணித்திரிகாலஸ்நானஞ்செய்து, விபூதியை உத்தூளனமாகவும், திரிபுண்டரமாகவும் தரித்துக்கொண்டு, ஜாபாலோபநிஷதம் சொன்னபடி உருத்திராட்சமாலை யணிந்து, அதிதிகளைப்பூசித்துச், சிலகாலம் வாயுபட்சணஞ்செய்தும், சிலகாலம் உபவாசமிருந்தும், சிலகாலம் தலபட்சணம் பண்ணியும், முப்பொழுதும் சிவாராதனை செய்தும் குளிர்காலத்தில் ஜலமத்தியிலிருந்தும், கிரீஷ்மகாலத்தில் பஞ்சாக்னி மத்தியிலிருந்தும், வருஷகாலத்தில் வெறும் வெளியிலிருந்தும், பரமசிவனைக்குறித்துப் பத்துவருஷகாலம், சந்திரனைமுடியிலணிந்தவராயும், சூலபாணியாயும், பார்வதியைப் பாதிசரீரத்திலுடையவராயும், கோடிசூரியனுக்குச்சமானமான தமது தேகப்

பிர்காசத்தினாலே பத்துத்திக்குகளையும் விளங்கச்செய்தவராயும், விபூதியினால் வெளுத்திருக்கிற ஸர்வாங்கமுடையவராயும், ஜடை முடிதரித்தவராயும், அனந்தாதி மஹாநாகங்களை யாபரணங்களாக அணிந்தவராயுமிருக்கிற சங்கரமூர்த்தியானவர் அவருடைய தவ சுக்குச் சந்தோஷமடைந்து பூதகணங்கள் சூழ ரிஷபாரூடராய் சுசரிதருக்குப் பிரத்தியட்சமாகித், தம்மைத்தரிசிக்கும்படி அவரு க்குக்கண்களைக்கொடுத்தார். உடனே யந்தப்பிராமணரும் பரமாத் மாவைக்கண்டு ஆனந்தபரவசராய் ஸ்தோத்திரம்பண்ண ஆரம்பித் தார்.—"மஹாதேவா! மஹேசா! சங்கரா! தூர்ஜடி! திரிபுராதகனே! அந்தகாந்தகா! காமாந்தகா! உமாகாந்தா! அமலா! சம்சாரவைத் தியா! பூதபாலகா! ஏ, சிவா! நாகமஹிதா! பிரம்மாதிதேவர்களால் பூஜிக்கப்பட்டவனே! வாழி வாழி. திரியம்பகா! பக்தரக்ஷணதீக்ஷி தா! வியோமகேசா! கருணாமூர்த்தி! நீலகண்டா! சமுசாரமோ சகா! மஹேசுவரா! பரமானந்தவிக்கிரகா! கங்காதரா! விசுவேசு வரா! சுகத்தையளிப்பவனே! வாழி வாழி. சம்புவாயும், வாசு தேவராயும் (எங்கு நிறைந்தவராயும், ஸ்வயம்பிரகாசராயும்) சர்வ ராயும், உக்கிரராயும், பர்க்கராயும், கைலாசபதியாயுமிருக்கிற உமக்கு நமஸ்காரம், நமஸ்காரம். கருணைக்கடலே என்னுடைய நடத்தை யை யோசியாமல் என்னைக் கிருபாகடாட்சத்தினாலே பார்த்துக்காத் தருளவேண்டும்" என்று துதித்த ஸுசரிதரைப்பார்த்துக் கருணை க்கடலான உமாபதியானவர், "ஐயா! ரிஷியே! உமக்குவேண்டியவரத் தைக்கேட்டுக்கொள்ளும். உமக்கு வரங்கொடுப்பதற்காக நானுமது புண்ணியாச்சிரமத்துக்கு வந்திருக்கிறேன்" என்று சொன்னார். அப் பொழுது ஸுசரிதரும் பகவானைப்பார்த்துச், "சந்திரசேகரா! நீர் என்னிடத்தில் பிரசன்னராயிருந்தால் எனக்கு வேண்டிய ஒருவரம் கேட்டுக்கொள்ளுகிறேன். ஜரையினாலே என் தேகமெல்லாம் நரைத் துப்போயிருக்கிறபடியால் ஒரு இடத்துக்கும்போக முடியவில்லை. ஆனாலும் ஸர்வதீர்த்தங்களிலும் ஸ்நானம்பண்ண வேண்டுமென் கிற ஆசையிருக்கிறது. ஆகையால் ஸர்வதீர்த்தங்களிலும் ஸ்நா னம்பண்ணின பலனையடையத்தக்கதான் ஓர் உபாயமெனக்குச் சொல்லி யருளவேண்டும்" என்று பிரார்த்திக்க, மஹாதேவர், "இராமசேதுவினால் பரிசுத்தமான இந்தக்கந்தமாதனத்தில் ஸர்வ தீர்த்தங்களையும் வரவழைத்துவிடுகிறேன்" என்று சொல்லி, அந்த

முனிவருக்குச் சந்தோஷப் விருப்பபடியாகச் சகல தீர்த்தங்களையும் அந்தமாதனத்தில் வரவழைத்து முனிவரைப்பார்த்து,"ஸர்வதீர்த்தங்களும் வந்திருப்பதினாலே யிந்தத்தீர்த்தத்துக்கு ஸர்வதீர்த்தமென்றும், இதில் எல்லாத்தீர்த்தங்களையும் என்மனசினாலே வரவழைத்த படியால் இதற்கு மானஸதீர்த்தமென்றும் பேராகும். ஆகையால் முனீசுவரரே! மஹா பாதககூட்டங்களுக்குக் காட்டுத்தீயாயும், காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் ரோகமாகிய இவைகளை நாசப்படுத்துவதாயும், வேதாந்த ஞானமில்லாமலே மோக்ஷத்துக்கு ஏதுவாயும், ஜன்மம், மிருத்தியு முதலான முதலைகள் நிறைந்த சம்சாரசாகரத்துக்கு ஓடமாயும், கும்பீபாகமுதலான நரகாக்கினிகளை அவிப்பதாயுமிருக்கிற இந்த ஸர்வதீர்த்தத்தில் நீர் ஸ்நானம் பண்ணினால் இகத்தில்போக போக்கியங்களையடைந்து பரத்திலே முத்தியை அடைவீர்" என்றுசொல்ல, அம்முனிவர் மஹாதேவர் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணி யெழுந்திருந்தபோது அவருடைய சரீரத்தில் ஜரையாலுண்டான நரைகளெல்லாம் மாறிப்போய்,அழகுள்ளயௌவன புருஷனானவுடனே, ஸுசரிதரும் மற்றுமுண்டான ரிஷீசுவரர்களும் அந்தத்தீர்த்தத்தைக் கொண்டாடினார்கள். அப்பொழுது மஹாதேவன் ஸுசரிதரைப் பார்த்துப் "பிராம்மணோத்தமா! நீர் பூமியிலுள்ள வேறு பலதீர்த்தங்களில் ஸ்நானம் செய்யவேண்டியதில்லை. இந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணிக்கொண்டு, முக்தியைக் கொடுக்கும்படியான என்னைத் தியானஞ்செய்து இதன்கரையில் வசித்துவந்தால் அந்தத்திலே என்னுடைய பதவியை அடைவீர் என்பதில் ஆட்சேபனையேயில்லை. இந்தத்தீர்த்தத்தில் எவர்கள் ஸ்நானம்பண்ணினாலும் என்பதவியை அடைவார்கள்" என்று சொல்லி அந்தர்த்தானமடைந்துவிட்டார். பிறகு ஸுசரித மஹாரிஷியும் அநேககாலம் அந்தத்தீர்த்தத்தில நியமப்படி ஸ்நானம்பண்ணியதன்கரையில வசித்திருந்து தேகாந்தத்தில் ஸர்வபந்தங்களினின்றும் விடுபட்டுச் சிவஸாயுஜ்யம் அடைந்தார்.

கேளுங்கள் முனீசுவரர்களே! ஸர்வதீர்த்தத்தின் வரலாற்றையுங்களுக்குச் சொல்லிவிட்டேன். இந்த அத்தியாயத்தைப்

படிப்பவரும், கேட்பவரும் சகல பாபங்களினின்றும் விடுபடுகிறார்கள்.

## இருபத்தொன்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## முப்பதாவது

# தனுக்கோடி வைபவம் உரைத்த

## அத்தியாயம்.

---

ரிஷீசுவர்களே ! பரிசுத்தமான சர்வ தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணிவிட்டுப், பிரமஹத்தியாதி பாதகங்களை நாசம் பண்ணுகிற தனுக்கோடி தீர்த்தத்துக்குப் போகவேண்டும். இந்தத் தனுக்கோடியை ஸ்மரித்த மாத்திரத்திலே மனிதன் முக்தனாவானென்பதில் சமுசயமேயில்லை. தனுக்கோடியைக் கண்ணால் பார்க்கிறவர்களும், அதில் ஸ்நானம் பண்ணுகிறவர்களும், அதை வாயாலுச்சரிக்கிறவர்களும், (1) தாமிசிரம், (2) அந்த தாமிசிரம், (3) ரௌரவம், (4) மஹா ரௌரவம், (5) கும்பீபாகம் (6) காலசூத்தி

---

(1) இருட்டுள்ள ; (2) கும்மிருட்டுள்ள ; (3) பயங்கரமான ; (4) மகா பயங்கரமான ; (5) குயவன் சட்டிப்பானைகளை சூளையில் சுடுகிறது போல் பாவிகளைச் சுடுவிக்கிற ; (6) பாதகிகளைக் கட்டி இழுக்கிறதற்கு வேண்டிய கறுப்புக்கயிறுள்ள ; (7) பட்டாக்கத்திகள் நிறைந்த: (8) பாவிகள் பட்சிக்கிறதற்கு வேண்டிய புழுக்களுள்ள ; 9) பாதாளக் கிணறுள்ள ; (10) கடிக்கிற; (11) முள்ளிலவை மரங்களுள்ள ; (12) அலைமோதிக்கொண்டிருக்கிற ; (13) போகும் வழியில் வைதரணி என்னும் நதியோடுங்கூடிய ; (14) மூச்சு விடாமல் தடுக்கிற ; (15) நாசப்படுத்துகிற ; (16 குடிப்பதற்குவேண்டியலாலை (கடைவாய் வழியாய் வழிகிற எச்சில்) நிறைந்த ; (17) அலைகளில்லாத ; (18) தின்பதற்கு வேண்டிய நாய்மாம்ஸமுள்ள ; (19) வஜ்ரப்பொடிகளுள்ள ; (20) தள்ளிவிடுவதற்குவேண்டிய உப்புச்சேறு நிறைந்த ; (21) பாவிகளைத் தின்பதற்கு வேண்டிய இராக்ஷஸக் கூட்டங்களையுடைய ; (22) சூல நுனிகளால் துன்பப்படுத்துகிற ; (23) பாம்புகளைத் தின்னச் செய்கிற ; (24) திரும்பச் செய்கிற ; (25) பார்வையை மறைக்கிற ; (26) ஊசிமுனையுள்ள; (27) குடிக்கிறதற்கு வேண்டிய நாறின இரத்தமுள்ள ; (28) விஷஜ்வாலையால் துன்பப்படுத்துகிற ;

ரம், (7) அசிபத்திரவனம், (8) கிருமிபட்சம், (9) அந்தக்கூபம், (10) ஸந்தம்ஸம், (11) சல்மலி, (12) ஸூர்மி, (13) வைதரணி, (14) பிராணரோதம், (15) விசஸநம், (16) லாலாபட்சம் (17) அவீசி, (18) ஸாரமேயாதனம், (19) வஜ்ரகணகம், (20) க்ஷாரகர்த்தம பாதனம், (21) ரக்ஷோகணபோசனம், (22) சூலப்பிராந்தவிதோதனம், (23) தந்தசூகாசனம், (24) பரியாவர்த்தனம், (25) நிரோதானம், (26) சூசிமுகம், (27) பூயசோணிதபட்சம், (28) விஷாக்கினி பரிபீடனம், என்கிற இருபத்தெட்டுவிதமான நரகத்தை அடையமாட்டார்கள். அன்னியருடைய பொருள், மனைவி, மக்களிவர்களை யபகாரம் பண்ணுகிற பாபிகள் பயங்கரர்களான யமதூதர்களால் காலபாசத்தாற் கட்டப்பட்டுத் தாமிசிரமென்கிற நரகத்தில் தள்ளிவிடப்பட்டு வெகுகாலம் அதிலே கிடப்பார்கள். தன் னெஜமானனைக் கொன்று அவனுடைய திரவியாதிகளை யனுபவிக்கிறவன் மஹா துக்கம் நிறைந்த அந்த தாமிசிர நரகத்தை யடைகிறான். தன் குடும்பத்தைக் காப்பாற்றுநிமித்தம் மற்றவர்களுக்குத் துரோகம் பண்ணுகிறவன் விஷத்தைக் கக்கிக்கொண்டிருக்கிற சர்ப்பங்கள் நிறைந்த ரௌரவ நரகத்தில் யமபடர்களால் தள்ளிவிடப்பட்டுத் துக்கத்தையனுபவிக்கிறான். தன் மனைவி மக்களைச் சோற்றுக் கலையவிட்டுத் தன் சரீரத்தைமட்டும் போஷித்துக்கொள்ளுகிறவன் மஹா ரௌரவநரகத்திலே தன் மாமிசத்தையே புசித்துக்கொண்டு நெடுங்காலம் துக்கத்தையனுபவிப்பான். உயிரோடிருக்கிற பட்சிகளையும், மிருகங்களையும் மாம்ச பட்சணிகள்கூட வெறுக்கும்படியாக இரக்கமில்லாமல் அடைத்துவைக்கிறவன் எண்ணெய் கொதித்துக்கொண்டிருக்கிற கும்பீபாக நரகத்தில் விழுகிறான். தாய் தந்தையர்களைத் துவேஷிக்கிற அதமன் பதினாயிரம் யோசனை விஸ்தாரமான காலசூத்திர நரகத்தில் விழுந்து கீழே அக்கினிஜ்வாலையாலும், மேலே சூரியவெப்பத்தாலுந் தகிக்கப்பட்டுப் பசியால் வருந்திக் காய்ந்துகொண்டிருக்கிற தாம்பிரத்தில் கிடந்து தவிக்கிறான். வேதமார்க்கத்தைக் கடந்து துர்மார்க்கத்திலே நடக்கிறவன் கோரமான அசிபத்திரவனமென்கிற நரகத்தில் விழுந்து துன்பப்படுகிறான். பஞ்ச மஹாயக்ஞங்களைச் செய்யாதவனும் பந்திபேதம் பண்ணி அன்னம் உண்ணுகிறவனும் கிருமிபட்ச நரகத்தில் விழுந்து புழுக்களால் தின்னப்பட்டுத், தானும் புழுக்களைத் தின்று,

புழுவாகிப் பாபம் நீங்கும் வரையில் அதிலேயே கிடக்கிறான். ஈசுவரனையே நம்பியிருக்கிறவர்களை யிம்சிக்கிறவன் இருள் நிறைந்த பயங்கரமான அந்தக்கூப நரகத்திலே விழுந்து தான் இம்சிதஅவர்களாலே யிம்சிக்கப்பட்டுத் தூக்கமில்லாமல் சுற்றித்திரிகிறான். பிராமணன் திரவியத்தைத் திருட்டினால் அபகரிக்கிறவனும், அன்னியர் சொத்தைப் பலாத்காரமாகப் பறித்துக்கொள்ளுகிற இராஜன் அல்லது அவனுடைய உத்தியோகஸ்தர்களும் ஸந்தம்சமென்கிற நரகத்தில், ஸந்தம்சர்களென்கிற யமதூதர்களாலே பிடிக்கப்பட்டு இரும்பினால் செய்யப்பட்ட அக்கினிகுண்டங்களில் போடப்பட்டு எரிக்கப்படுகிறார்கள். ஜீவப்பிராணிகளை பலவித உபாயங்களாலே இம்சிக்கிறவன் முள்மயமான சல்மலி நரகத்திலே விழுகிறான். அணையத்தகாத ஸ்திரீகளைச் சேருகிற புருஷனும், சேரத்தகாத புருஷனைச் சேருகிற ஸ்திரீயும் ஸூர்மி என்கிற நரகத்திலே இரும்பினால் செய்யப்பட்டுக் காய்ந்துகொண்டிருக்கிற ஸ்திரீ புருஷ சொரூபங்களைத்தழுவிக்கொண்டு சந்திர சூரியர்களுள்ள பரியந்தந்துன்பமனுபவித்துக் கொண்டிருப்பார்கள். இராஜனாவது அவனுடைய அதிகாரம் பெற்றவர்களாவது பாஷண்டமதத்தை யனுசரித்துத் தருமஎல்லை கடந்து நடக்கிறவர்கள் வைதரணி நரகத்தில் விழுந்து வருந்துகிறார்கள். நாய்களையும், அம்புகளையும்கொண்டு வேட்டையாடிக் காட்டிலிருக்கிற மிருகங்களை வதைக்கிற தொழிலுடையவன் பிராணரோதமென்கிற நரகத்தில் யமகிங்கிரர்களால் எய்யப்பட்ட அம்புகளால் வருந்திக்கிடக்கிறான். விதியனுஷ்டானங்களில்லாமல் டம்பத்துக்காகப் பசுவதம்செய்து யாகம்பண்ணுகிறவன் விரஸன மென்கிற நரகத்திலே ரம்பங்களாலே யறுப்பட்டுத் துன்பமடைகிறான். வழிபறிக்கிறவன், விஷமூட்டுகிறவன், நெருப்பிட்டுக் கிராமங்களைக் கொளுத்துகிறவன், வியாபாரிகள் சொத்தை யபகரிக்கிறவன், இவர்கள் வஜ்ரதம்ஷடரம் என்கிற நரகத்திலே விழுந்து வெகு காலம் துன்பப்படுகிறார்கள். தன்னுடைய தர்மபத்தினியை தன்ரேதஸைக்குடிக்கும்படி செய்கிறவன் ரேதக்குண்டமென்கிற நரகத்திலே ரேதஸைப் பானம்பண்ணிக்கொண்டு துன்பப்படுகிறான். சௌசாசாரமில்லாமல் வேதவிதிகடந்து வெட்கமில்லாமல் பசுக்களைப்போலச் சூத்திரஸ்திரீ சம்போகஞ்செய்து திரிகிறவன் நாற்றம்வீசுகிற மலம், மூத்திரம், இரத்தம், சிலேஷமம், பித்தம்

இவைகள் நிறைந்த அநிபீபற்சமென்கிற நரகத்திலே விழுந்துகிடக்கிறான். தண்டிக்கத்தகாதவனைத் தண்டிக்கிறவனும், பிராமணனுக்குச் சரீரதண்டனை செய்கிறவனும், ஸூகரமுகமென்கிற நரகத்திலே கரும்புபோல் ஆலையில் வைத்து அரைக்கப்பட்டு வருந்துகிறான். தனுக்கோடியில் ஸ்நானம்பண்ணுகிறவன் மேலே சொன்ன நரகங்களிலும், மற்றுமுள்ள நரகங்களிலும் விழுந்து வருந்தவே மாட்டான். தனுக்கோடியில் ஒரு தடவை ஸ்நானம்பண்ணுகிறவன் அசுவமேதபலனையும், துலாபுருஷதானபலனையும், ஆயிரங்கோதானபலனையும், பிரமஞானத்தையும் பெற்றுப்பாபத்தில் வெறுப்பு உண்டாகித் துக்கமொழிந்து, புத்திதெளிந்து ஸாலோக, ஸாமீப, ஸாரூப, ஸாயுஜ்யமென்கிற நாலுவகை முக்திகளையும் கிரமமாக அடைகிறான். தர்ம, அர்த்த, காம, மோட்சங்களி லெதை உத்தேசித்து ஸ்நானம்பண்ணுகிறானே அவன் அதை யுடனேயடைகிறான். மஹாபாதகங்களைச் செய்தவனானாலும், ஸர்வபாபங்களையும் செய்தவனானாலும் தனுக்கோடியில் ஸ்நானம்பண்ணினமாத்திரத்தில் அவைகளினின்றும் விடுபட்டுத் தர்மத்தில் புத்தியுண்டாகி ஐசுவரியம், கீர்த்தி, புத்தி, ஞானம், மனச்சுத்தி, முதலானவைகளை யடைகிறான். பதினாயிரம் பிரம்மஹத்தி செய்திருந்தாலும், பதினாயிரம் சுராபானம் பண்ணியிருந்தாலும், பதினாயிரம் சொர்ணஸ்தேயம் பண்ணியிருந்தாலும், பதினாயிரம் குருதல்பகமனஞ் செய்திருந்தாலும், அவர்களோடு கூடிக் கோடி ஸம்ஸர்க்கபாபங்களைச் செய்திருந்தாலும், பஞ்சமஹாபாதகங்களுக்குச் சமானமான பாதகங்களைச் செய்திருந்தாலும், அவைகளெல்லாம் இந்தத் தனுக்கோடியில் ஸ்நானம் பண்ணின உடனே நசித்துப்போகின்றன. இதில் சந்தேகமேயில்லையென்று நான் எரிகிற மழுவை நாக்கில் வைத்துக்கொண்டு நிச்சயமாகச்சொல்லுவேன். இவைகளை யெல்லாம் அர்த்தவாதமென்று சொல்லுகிறவன் ஸர்வ கர்மங்களிலும் அநருகனென்று விலக்கப்பட்டு நரகத்திலே விழுகிறான். பிராம்மணோத்தமர்களே! ஸமஸ்தபாபங்களையும் நீக்கி, இஷ்டகாமியங்களைக் கொடுத்து, அஞ்ஞானத்தைப்போக்கி, அத்துவைதஞான ஒளியைக்காட்டி, முக்தியின்பத்தைபூட்டுகிற இந்தத்தனுக்கோடி தீர்த்தமிருக்கையில், அதைவிட்டு வேறு தீர்த்தங்களில் மனிதர்கள் புத்தி செலுத்துகிறார்களே. ஆ! ஆ! இதென்ன மூடத்தனம், இதென்ன மூடத்தனம்! இதெ

ன்ன மூடத்தனம்! இந்தத் தனுக்கோடியின் மஹத்துவத்தை நா னென்னவென்று சொல்லுவேன். இதில் ஸ்நானம் பண்ணுகிறவர் களுக்கு நரகபயமேயில்லை. தனுக்கோடியைப் பார்க்கிறவர்களும் நமஸ்காரம் பண்ணுகிறவர்களும், துதிக்கிறவர்களும், ஸ்பரிசிக்கிற வர்களும், அதில் ஸ்நானம் பண்ணுகிறவர்களும் மறுபடியும் பிறந்து தாய் முலைப்பால் குடிக்கிறதேயில்லை என்று தனுக்கோடியின் மகி மையைச் சூதபுராணிகரெடுத்துச் சொல்ல, ரிஷீசுவரர்கள் ஐயா! சூதமுனிவரே! இந்தத் தீர்த்தத்துக்குத் தனுக்கோடி யென்று பேர்வந்த காரணமென்ன? இதை யெங்களுக்கு விஸ்தாரமாகச் சொல்லவேண்டுமென்று கேட்கச் சூதர் சொல்லுகிறார்.

பூர்வம் ஸ்ரீராமர் லோககண்டகனான இராவணனைச் சங்காரஞ் செய்து, விபீஷணனுக்கு இலங்கையில் பட்டங்கட்டிவைத்து, சீதை, இலட்சுமணன், சுக்ரீவன் முதலான வானரவீரர்களோ டு சித்தர், சாரணர், கந்தர்வர், வித்தியாதரர், ரிஷீசுவரர்கள், அப்ஸரஸ்திரீகள் முதலானவர்கள் ஸ்தோத்திரஞ்செய்யத், திரிபுர ஸம்ஹாரம்பண்ணின ஸ்ரீ ருத்திரமூர்த்தியைப் போலக் கையிலே கோதண்டத்தை யேந்திக்கொண்டு, கந்தமாதனம் வந்து தங்கியிருந் தார். அப்பொழுது தர்மத்தை யறிந்த விபீஷணர் அஞ்சலிபந்தஞ் செய்துகொண்டு ராகவனைப் பார்த்துச் "சுவாமீ! உம்மால் கட்டப் பட்ட சேதுமார்க்கமாகப் பலசாலிகளான இராஜர்கள் இலங்கைக்கு வந்து தொந்தரவு செய்வார்கள். ஆகையால் இந்தச்சேதுவை உம்மு டைய வில்லின் நுனியால் உடைத்துத் தகர்த்துவிடவேண்டும்"என் று பிரார்த்திக்க, இரகுராமர் அப்படியே தமது தனுக்கோடியினால் சேதுவை உடைத்துவிட்டார். பிராம்மணர்களே! ஆகையால் அந் தத் தீர்த்தத்துக்குத் தனுக்கோடியென்று பேர்வந்தது. சாக்ஷாத் ராமருடைய தனுக்கோடியினால் உப்புக்கடலிலுள்ள சேதுவைப் பிளந்தகோட்டைத் தரிசிக்கிறவன் அநேக துக்கங்கள் நிறைந்த கர்ப்பவாசத்தைக் காணுமல் மோக்ஷத்தை யடைகிறனென்றால் அதில் ஸ்நானஞ்செய்கிறவன் அடைகிற பலன் இன்னதென்று எனக்குத்தெரியாது. நர்மதாதீரத்தில் தபசு பண்ணினால் மஹா பாதகங்கள் நீங்கும்; கங்கையாற்றங்கரையில் மரணமடைந்தால் மோட்சமடைவான்; குருக்ஷேத்திரத்திலே தானம்பண்ணினால் பிர

ம்மஹத்தியாதி பாபங்கள் நீங்கும். தனுக்கோடியில் செய்கிறதபசு, அடைகிற மரணமும், கொடுக்கிற தானமும், மஹாபாதகங்களைப் போக்கி, அபீஷ்டசித்தியையுங் கொடுத்து, மோட்சத்தையுங் கொடுக்கிறது. முக்தியைக்கொடுக்கிற தனுக்கோடியைக் காணாதவரையில் ஒருவனுக்குப் பாபங்களாலும், உப பாதகங்களாலும் துன்பமுண்டாகிறது. தனுக்கோடியைக் கண்டவனுக்கு இருதயகமலம் மலர்ந்து, சகல சமுசயங்களும் நீங்கிப், பாபங்களெல்லாம் ஒழிகின்றன. தட்சிணசமுத்திரத்தில் விபீஷணருக்கு இதமுண்டாகும் பொருட்டு ஸ்ரீராமரால் கிழிக்கப்பட்டகோடுதான் சொர்க்கலோகம், பிரம்மலோகம், வைகுண்டம், சிவலோகம் முதலானவைகளுக்குப் போகிறவழியாகும். இதில் சந்தேகமில்லை. தனுக்கோடியில் ஸ்நானம் பண்ணுகிறது சமஸ்த யாகங்களுக்கும், சகலமான தானங்களுக்கும், மந்திரங்களுக்கும் மேலானது. தனுக்கோடியைத் தரிசித்தவனுக்குக் காயக்கிலேசமுண்டாக்குகிற தபசுகளாலும், யாகங்களாலும், வேதங்களாலும், சாஸ்திரங்களாலும் என்ன பிரயோசனம்? தனுக்கோடி ஸ்நானம் கிடைக்கப்பெற்றவனுக்குக், கரிய யமுனாநதி, வெண்மையான கங்காநதி முதலான தீர்த்த ஸ்நானங்கள் என்னத்துக்கு? ஒருவனுக்குத் தனுக்கோடி தரிசனம் கிடைத்தால் முக்திக்காகக் காசியில் மரணமடைகிறதை யேன்விரும்புகிறான்? தனுக்கோடியில் மூன்றுநாள் ஸ்நானம்பண்ணி, உபவாசமிருந்து, சொர்ணதானம், கோதானங்கள் செய்யாதவன் எந்நாளும் தரித்திரனாகவே இருப்பானென்பதில் சந்தேகமில்லை. தனுக்கோடியில் ஸ்நானம்பண்ணுகிறதினால் வருகிறபலன் வெகு தக்ஷிணை கொடுத்து அக்கினிஷ்டோமாதி யாகங்களைச் செய்தவனாலும் வருகிறதில்லை. இது சத்தியம், சத்தியம். தனுக்கோடி தீர்த்தமானது சர்வதீர்த்தங்களிலும் உயர்வானதென்று சொல்லுகிறார்கள். உலகத்தில் விளங்காநின்ற பதினாயிரம்கோடி தீர்த்தங்களும், அஷ்டவசுக்களும், ஆதித்தியர்களும், ருத்திரர்களும், மருத்துக்களும், சாத்தியர்களும், கந்தர்வர்களும், சித்தர்களும், வித்தியாதரர்களும், இன்னமுள்ள தேவர்களும், பிரம விஷ்ணு ருத்திரர்களும், பார்வதி, இலட்சுமி, சரஸ்வதிகளும் இந்தத் தனுக்கோடி தீர்த்தத்தில் சதாவாசம்பண்ணிக்கொண்டிருக்கிறார்கள். இந்தத் தனுக்கோடிக் கரையிலே

தேவர்களும், ரிஷிகளும் தபசுசெய்து, சகல சித்திகளையும் அடைந்தார்கள். இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணிப் பிதுர்க்களுக்கும் தேவர்களுக்கும் திருப்திசெய்வித்தால் அவன் ஸமஸ்தபாபங்களினின்றும் விடுபட்டுப் பிரம்மலோகத்திலே மகிமையோடு வாழ்ந்திருப்பான். இங்கே பக்தியோடு ஒரு பிராம்மணனுக்கு அன்னங்கொடுக்கிறவன் இகலோகத்தில் சகல போகங்களையும் அனுபவித்துப், பரத்திலேயும் சுகத்தை அடைகிறான். கந்தமூலபலங்களைத் தின்று தபசுபண்ணச் சக்தியில்லாதவனும், அசுவமேதயாகஞ் செய்யச் சக்தியில்லாதவனும், இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் அந்தப்பலன்களை யடைகிறான். நான்கு வருணங்களில் எந்தவருணத்தானாயிருந்தாலும் இந்தத் தனுக்கோடியில் ஸ்நானம் பண்ணினால் அவன் இழிவான ஜன்மத்தை யடைகிறதேயில்லை. சூரியன் மகரராசியி லிருக்கிற மாகமாசத்திலே இந்தத் தனுக்கோடியில் ஸ்நானம் பண்ணுகிறவனுடைய பலத்தையென்றாற் சொல்லிமுடியாது. மாகமாசத்திலே தனுக்கோடி தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணுகிறவர்கள் ஆணாயிருந்தாலும் பெண்ணாயிருந்தாலும் ஜன்மமுதல் கொண்டு செய்த பாபங்கள்போய், கங்காதி ஸர்வதீர்த்த பலனை யடைந்து, அக்ஷயலோக போகங்களை யனுபவித்து மோக்ஷசாம்பிராஜ்யபதத்தையு மடைகிறார்கள். ஸமஸ்தமான தேவர்களிலும் எப்படி ஸ்ரீராமன் உத்தமனோ அப்படியே சர்வதீர்த்தங்களிலும் இந்தத் தனுக்கோடி உத்தமமானது. மாகமாசம் முப்பது நாளும் இந்திரியங்களை யடக்கிக்கொண்டு நியமப்படி யிந்தத் தனுக்கோடியில் ஸ்நானம் பண்ணுகிறவனுக்குப் பிறப்புக்கிடையாது. ஒரேவேளை போஜனஞ் செய்துகொண்டு கோபத்தையடக்கி யிந்தத் தனுக்கோடியில் மாகமாசம் ஸ்நானம் பண்ணுகிறவன் பிரம்மஹத்தியாதி மஹா பாதகங்களினின்றும் விடுபடுகிறான். மாகமாசத்தில் தனுக்கோடியில் ஸ்நானம்பண்ணி, மாசக்கடைசியில் சிவராத்திரி தினத்தில் நிராஹாரனாயிருந்து இந்திரிய நிக்கிரகம்பண்ணி, இராத்திரி கண்விழித்திருந்து, சாமந்தோறும் இராமநாத லிங்கத்தை விதிப்படி யர்ச்சனைபண்ணி, மறுநாள் சூரியோதயமானவுடன் தனுக்கோடியிலும் மற்றுமுள்ள தீர்த்தங்களிலும் ஸ்நானம் பண்ணி நித்திய கர்மங்களை நிறைவேற்றி, இராமநாதரை மறுபடியும் தரிசித்து நமஸ்காரஞ் செய்து, தன் சக்திக்கேற்றபடி பிராமணர்களுக்கு அன்னம் கொடுத்து, கூடியமட்டும் பூமி, பசு, திலம்,

தானியம், தனம், இவைகளை யவர்களுக்குத் தானங்கொடுத்து, அவர்களுடைய அநுமதியின் பேரில் மௌனமாயிருந்து போஜனஞ் செய்கிறவனுக்கு மஹேசுவரரான இராமநாதர் அவன்செய்த சகல பாபங்களையும் அழித்துப் புக்திமுக்திகளையுங் கொடுக்கிறார். ஆகையால் முனீசுவரர்களே! முமுட்சுக்கள் மோக்ஷமார்க்கத்தில் அவசியம் தனுக்கோடி ஸ்நானஞ் செய்யவேண்டும். அர்த்தோதய மஹோதய புண்ணியகாலங்களில் தனுக்கோடி ஸ்நானஞ்செய்கிறவர்களுக்குச் சகல பாபங்களும் நாசமாய்ப்போய், மும்மூர்த்திகளும் வசப்படுகிறார்கள். அவன் அத்துவைத ஞானசாஸ்திர விசாரணையில்லாமலே சாயுஜ்யமடைகிறான். அர்த்தோதய மஹோதய கால ஸ்நானமானது பாபிகளுக்குப் பிராயச்சித்தமாக மனுவாதிகளாலே விதிக்கப்பட்டிருக்கிறது. அந்தப்புண்ணிய காலங்களில் தனுக்கோடியில் ஸ்நானம்பண்ணுகிறவன் யக்ஞங்களைச் செய்யாமலே யக்ஞத்தின் சம்பூர்ணபலனை யடைவதில் சமுசயமில்லை. சந்திரசூரிய கிரஹணகாலங்களில் இந்தத் தனுக்கோடியில் ஸ்நானம் பண்ணுகிறவனுடைய புண்ணியபலனை ஆதிசேஷனாலுஞ் சொல்லி முடியாது. மேலேசொன்ன கிரஹண புண்ணியகாலஸ்நானம் பிரம்மஹத்தியாதி பாபங்களுக்குப் பிராயச்சித்தமாகவும், ஸர்வதீர்த்த பலனைக்கொடுக்கிறதாகவும், மோட்சமார்க்கமாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. புக்திமுக்திகளை அபேட்சிக்கிறவன் அர்த்தோதய மஹோதய புண்ணிய காலங்களிலும், சந்திரசூரிய கிரஹணபுண்ணிய காலங்களிலும் அந்தத் தனுக்கோடியில் ஸ்நானம்பண்ண வேண்டியது.

ஆகையால் முனிவர்களே! நீங்கள் எல்லாவற்றையும் விட்டொழித்து, மஹா புண்ணியமாயும், புக்திமுக்திகளைக் கொடுக்கிறதாயுமிருக்கிற தனுக்கோடிக்குப்போய், அங்கே பிதுர்க்களைக் குறித்துப் பிண்டமிடுங்கள். இங்கே பிண்டம் போட்டால் பிதுர்க்களுக்குக் கற்பகாலந் திருப்தியுண்டாகிறது. சேதுமூலம், தனுக்கோடி, கந்தமாதனம், இந்த மூன்றையும், ஸ்ரீராமர் பிதுர்க்களுக்குப் பிண்டமிடுகிற ஸ்தானங்களாக நியமித்திருக்கிறார். இந்த இடங்களில் பிண்டமிடுவீர்களானால் நீங்கள் பிதுர் ரிணங்களினின்றும் முக்தராவீர்கள். இந்த மூன்றிடங்களுக்கும் ரிணமோட்சமென்று பெயர். ஆகையால் நீங்கள் கட்டாயமாகத் தனுக்கோடியை ஸேவியுங்கள். இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினதினால்

துரோணபுத்திரனுகிய அசுவத்தாமன் ஸுப்தமாரண தோஷத் (தூங்குகிறவர்களைக் கொல்லுகிற தோஷம்) தினின்றும் பரிசுத்த னுனன். இந்தவிதமாகத் தனுக்கோடி வைபவத்தை யுங்களுக்குச் சொல்லிவிட்டேன். இந்த அத்தியாயத்தைப் படிப்பவரும் கேட் பவரும் பிரமஹத்தியாதி மஹா பாதகங்களையும் நீருக்கிச் சகல போக போக்கியங்களையும் அனுபவித்து அந்தத்தில் மோட்ச சாம் பிராஜ்யத்தையும் காணியாட்சியாகப் பெற்றுப் பேரானந்தத்தை யும் அனுபவிப்பார்கள்.

முப்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

முப்பத்தோராவது

# அசுவத்தாமா தனுக்கோடியில் ஸ்நானம்பண்ணி ஸப்தமாரண தோஷம் நீங்கின

அத்தியாயம்.

---

சௌனகாதியர் சூதரைப்பார்த்து, ஐயா! பௌராணிகோத்தமரே! அசுவத்தாமா ஸப்தமாரணதோஷத்தைச்செய்வானேன்? தனுக்கோடியிலெப்படி யவருக்குப் பாபவிமோசனமாயிற்று? சிரத்தையுடைய எங்களுக்கு விஸ்தாரமாகச் சொல்லவேண்டும். உமது வாக்காகிய அமிர்தத்தைப் பானஞ்செய்யச் செய்ய எங்களுக்குத் திருப்தியாகவில்லையே! என்று சொல்லச், சூதர் தம் குருவாகிய வியாசமுனிவரைத் தியானஞ்செய்து சொல்லத்தொடங்கினார்.

பிராம்மணோத்தமர்களே! பாண்டவர்களுக்குந் திருதராஷ்ட்ரர்களுக்கும் இராஜ்யவிஷயமாகக் கலகம் உண்டாகிப் பதினெட்டு அக்குரோணி சேனைகளோடு குருக்ஷேத்திரத்தில் யுத்தஞ்செய்யச், சந்தனுகுமாரனாகிய பீஷ்மர் பத்துநாள் யுத்தஞ்செய்து அடிபட்டு சரசயனத்தில்படுத்திருக்கத், துரோணர் ஐந்துநாள் யுத்தம்பண்ணி யிறந்தார். கர்ணன் ஒருநாள், சல்லியன் ஒருநாள், யுத்தம்செய்திறந்தார்கள். பதினெட்டாம்நாள் துரியோதனன் யுத்தஞ்செய்து பீமசேனன் கதையால் தொடையிலடிபட்டு விழுந்து இரணகளத்தில் தனித்துக்கொண்டு கிடக்கையில், திருஷ்டதுய்மன், சிகண்டி முதலான ஜயங்கொண்ட ராஜர்களெல்லாரும் சங்கத்தொனி செய்துகொண்டு சந்தோஷத்தோடு அதிவேகமாகத் தங்கள் தங்கள் கூடாரம்போய்ச்சேர்ந்தார்கள். பின்பு மஹாவீரர்களான பாண்டவர்களும், கிருஷ்ணர், சாத்தியகி முதலானவர்களோடு துரியோதனன் கூடாரத்துக்குள்ளே புகுந்து, அங்கே காஷாய வஸ்திரந்தரித்திருந்த விருத்த மந்திரிகள், ஸ்திரீ இரட்சகர்களான அலிகள், இவர்கள் அஞ்சலிபந்தம் பண்ணி வணங்க, அங்கிருந்த திரவியங்களையெல்லாம் எடுத்துக்கொண்டு, அந்தக் கூடாரத்தில் வசிக்க எண்ணங்கொண்டி

ருக்கையில், ஸ்ரீகிருஷ்ணர் நாம் க்ஷேமத்தோடு இருக்க விரும்பினால் கூடாரத்தில் தங்கக்கூடாது என்று சொல்லி, அவர்களையழைத்துக் கொண்டு வெளியில்வந்து ஓகவதீ நதிக்கரைபோய்ச் சேர்ந்து அங்கே இராத்திரிமுழுவதும் சுகமாக வசித்திருந்தார்கள்.

இது , இப்படியிருக்கச் சாயங்காலவேளையில் கிருதவர்ம்மா, கிருபாசாரி, அசுவத்தாமாவாகிய மூன்று பேர்களும் துரியோதனனிடம் வந்து, பீமசேனனுடைய கதையினால் தொடையிலடிபட்டுத், தேகமெல்லாம் இரத்தமொழுகப், புழுதியில் புரண்டுகொண்டு இரணகளத்தில் கிடப்பதைக்கண்டு துக்கப்பட, துரியோதனனும் அவர்களைப் பார்த்துக் கண்களில் தாரை தாரையாய் நீர்பெருக அழுதான். அப்பொழுது அசுவத்தாமா கோபத்தினால் ஜொலித்துக் கண்கள் விசாலமாகக், கைகளைப் பிசைந்துகொண்டு விம்மியழுது நாக்குழறத் துரியோதனனைப் பார்த்து, "இந்த அற்பர்கள் என் தகப்பனாரைக் கபடமாய் இரணகளத்தில் கொன்றதைப்பற்றிக்கூட எனக்கு வருத்தமுண்டாகவில்லை: இரணகளத்தில் விழுந்து கிடக்கிற உன்னைப் பார்க்கும்போது என் வயிறு எரிகிறது. நான் சொல்லும்வார்த்தையைக்கேளு. நான் செய்தபுண்ணியத்தின் மேலாணையிட்டுத் தருகிறேன். இந்தக் கிருஷ்ணன் பார்த்துக்கொண்டிருக்கும்போதே ஸ்ருஞ்சயர்களோடுகூடப் பாண்டவர்களை இன்றிரவுக்குள்ளாக நாசஞ்செய்து விடுகிறேன். எனக்கு உத்தரவு கொடு." என்று சொல்ல, அதுகேட்ட துரியோதன மஹாராஜன் அப்படியே யாகட்டுமென்றுசொல்லிக், கிருபாசாரியாரைப்பார்த்து "அசுவத்தாமாவுக்குச் சேனாபதியாக அபிஷேகஞ்செய்து விடும்" என்றுசொல்ல, அவருமப்படியே அபிஷேகஞ் செய்யப், பிறகு அபிஷேகம்பெற்ற அசுவத்தாமாவும் துரியோதனனைக் கட்டியணைத்துக் கிருதவர்மன், கிருபாசாரியாரோடு கூடக் கோபத்தோடும் அதிவேகமாய்ப் புறப்பட்டுத் தட்சணமுகமாகச்சென்று அஸ்தமனத்துக்கு முன்னாலே ஜயிக்கநினைத்துப், பாண்டவர்கள் கூடாரத்தருகில்போய்ப் பாண்டவசேனையின் ஆரவாரத்தைக் கேட்டுப், பாண்டவர்கள் துரத்துவார்கள் என்கிற பயத்தினால் கீழ்முகமாக ஓடிச், சிரமத்தாலே வருந்தி, நானாவிதவிருட்சங்கள், கொடிகள் நிறைந்ததாயும், அனேக மிருகங்கள் பட்சிகள் குலாவிக்கொண்டிருப்பதாயும், நிறைந்த ஜலத்தினால் விளங்கிக்கொண்டிருக்கிற தடாகங்களும், தாமரை நீலோத்பலங்கள், செங்கழுநீர் முதலியமலர்களால் நிறைந்த ஏரி

களுமுள்ள ஒரு பெரியகாட்டைக் கண்டு, அதனுள்ளே புகுந்து, தண்ணீர் குடித்துக், குதிரைகளுக்கும் தண்ணீர்காட்டி, யநேகம்கிளைகள் நிறைந்த பெரிய ஆலமரத்தைக்கண்டு, அதனடியில் இரதத்தை நிறுத்திக் குதிரைகளை யவிழ்த்துவிட்டு, ஸ்நானம்பண்ணிச் சாயம் ஸந்தியை முடித்தார்கள். சூரியனும் மலைவாயில் விழுந்து ஒளிமழுங்கியது. இருள்நிறைந்த இரவுவந்தது. பகலிலுலாவும் ஜந்துக்களெல்லாம் படுத்துத்தூங்கின. இரவில் சஞ்சரிக்கும் ஜந்துக்கள் இங்கும் அங்கும் உலாவிக்கொண்டிருந்தன. கிருதவர்மன், கிருபாசாரி, அசுவத்தாமா மூவரும் ஏக்கங்கொண்டு ஆலமரத்தடியிலுட்கார்ந்தார்கள். அதிக பராக்கிரமசாலிகளும், சுகமானபடுக்கையில் தூக்கமில்லாமல் படுக்கத்தக்கவர்களுமான கிருபர், கிருதவர்மனிருவரும் தரையின்மேலே படுத்துக்கொண்டு தூங்கினார்கள். துரோணபுத்திரனாகிய அசுவத்தாமன் மாத்திரம் கோபத்தால் மனங்கலங்கிப்பாம்பு போலச் சீறிக்கொண்டு தூங்காமல் விழித்திருந்தான். பயங்கரமான வனத்தை நாலாபக்கத்திலும் பார்த்துக்கொண்டிருந்தபொழுது அநேகங் காகங்கள் தங்கியிருந்த ஒரு ஆலமரம் கண்ணுக்குத்தோன்றியது. காகங்கள் கூட்டங்கூட்டமாய் வந்து அதின் கிளைகளில் தங்கிச் சுகமாய்த் தூங்குவது வழக்கம். அப்படி யவைகள் நிர்விசாரமாய்த் தூங்கிக்கொண்டிருந்தபொழுது செம்பட்டவர்ணமான குரூரசரீரத்தையுடைய ஒரு பெரிய கோட்டான் பயங்கரமாயும் கர்ணகடூரமாயு மிருக்கிற சப்தத்தைச் செய்துகொண்டு அந்த ஆலமரத்தை நோக்கிவந்து, அதில்புகுந்து, கிளைக்குக்கிளைதாவி, யவைகளில் தூங்கிக்கொண்டிருந்த காகங்களில் சிலவற்றின் சிறகுகளை ஒடித்தும், சில காகங்களின் கழுத்துகளையும் கால்களையும் முறித்தும் சின்னபின்னப் படுத்திவிட்டுக், காகங்களெல்லாம் கைகால்முறிந்து ஆலமரத்தைச்சூழ விழுந்துகிடப்பதைக் கண்டு சந்தோஷத்தா லிறுமாந்திருந்தது. இந்த மாதிரியாகக் கோட்டான் செய்ததைப் பார்த்துக்கொண்டிருந்த அசுவத்தாமன் "நானுமென் சத்துருக்களை யிவ்விதமாக இராக்காலத்தில் சங்கரித்து விடுகிறேன். நேர்வழியில் யுத்தம்பண்ணினால் பாண்டவர்களை ஜயிப்பது கஷ்டம்; ஆகையால் ஜயசாலிகளான அவர்களைக் கபடமாய்த்தான் கொல்லவேண்டும்; துரியோதனன் முன்னால் அவர்களைக் கொல்கிறேனென்று பிரதிக்ஞையும்பண்ணியிருக்கிறேன்; நேர்வழியில் சண்டைசெய்தால் எனக்குப் பிராணாபாயம் வந்துவிடும். தந்தி

ரமாய் யுத்தம்பண்ணினால் சத்துருக்களையுங் கொல்லலாம், ஜயத்தையும்பெறலாம்; க்ஷத்திரிய தர்மத்தை யனுசரிக்கிறவன் சர்வ ஜனங்களாலும் நிந்திக்கப்பட்ட காரியத்தைச்செய்தாவது சத்துரு ஜயம் பண்ணவேண்டும்; பாண்டவர்களும் துரியோதனன் விஷயத்தில் அக்கிரமஞ்செய்திருக்கிறார்கள். சத்துரு சைனியங் களைத்திருக்கிற பொழுதும், ஆறு முதலியவற்றைத் தாண்டும்பொழுதும், சாப்பிட்டுக்கொண்டிருக்கும் பொழுதும், பிரயாணம் போகும்போதும், ஊருக்குள்ளே நுழையும்போதும், அர்த்தராத்திரியில் படுத்துத் தூங்குகிறபோதும், இரணகளத்தில் ஆயுதத்தை யெறிந்திருக்கும் போதும், துணைபலமில்லாம லிருக்கும்போதும் சத்துருக்களைக் கொல்லலாமென்றுபெரியோர்களும் சொல்லியிருக்கிறார்கள். ஆகையால் தூங்கிக்கொண்டிருக்கிற சத்துருக்களை நாம் கொல்வது யுக்தம்" என்று தீர்மானம் பண்ணிக்கொண்டு, தூங்கிக்கொண்டிருந்த கிருபர், கிருதவர்மனிவர்களை யெழுப்பி, ஒருமுகூர்த்தகாலம் யோசனைபண்ணிப், "பார்த்தீர்களா! பலசாலியான துரியோதனனிறந்து கிடக்கிறான்; அற்பர்களான பாண்டவர்கள் அவனைக்கொன்றுவிட்டார்கள்; நெஞ்சிலிரக்கமில்லாத பீமசேனன் துரியோதனன் தலைமேலே காலைவைத்தானும். ஆகையால் நடுராத்திரியில் பாண்டவர் கூடாரத்துக்குப் போய்ச்சுகமாய்த் தூங்கிக்கொண்டிருக்கிறவர்களை நானாவித அஸ்திரசஸ்திரங்களாலே கொன்றுவிடலாம்" என்றுசொன்னான். அதுகேட்ட கிருபாசாரியர், "அப்பா தூங்குகிறவர்களையும், நிராயுதபாணிகளா யிருப்பவர்களையும், வாகனமில்லாதவர்களையும், கொல்வது தர்மமல்ல; இந்தச்செய்கை உலகத்திலும் புகழப்படாது. ஆகையால் நான் சொல்வதைக்கேள்; அக்கிரமஞ்செய்யாதே; திருதராஷ்டிரன், பதிவிரதையான காந்தாரி, விதுரன் முதலியவரைக் கண்டுகேட்போம்; அவர்கள் சொல்லுகிறபடி செய்வோம்" என்று சொல்ல, அசுவத்தாமா, "மாமா! பாண்டவர்களெல்லாரும் என் தந்தையைக்கபடமாகக்கொன்றது என்மர்மஸ்தானங்களை ரம்பம் போல்அறுக்கிறது. திருஷ்டதும்மன் நான் துரோணரைக் கொன்றேனென்று ஜனங்களுக்கு முன்னாலே சொல்லிக்கொள்வதை நானெப்படிக் கேட்பேன்? மாமா! இந்தப்பாண்டவர்கள் நீங்களும் ஸமஸ்தமான ராஜர்களும் பார்த்துக்கொண்டிருக்க அநியாயம் பண்ணினார்களே? அது உமக்குத் தெரியாதா? திருஷ்டதும்மன் நிராயுதபாணியாயிருக்கிற என்தகப்பனைக் கொல்லவில்லையா? சத்துரு

மாரனை பீஷ்மர் வில்லையும் ஆயுதங்களையுமெறிந்து நிராயுதராயிருக்கையில் சிகண்டியை முன்னிட்டுக்கொண்டு அர்ஜுனன் கொல்லவில்லையா? இதேமாதிரியாக மற்றவர்களையும் கபடமாய்க் கொல்லவில்லையா? அப்படியே நானும் இராத்திரியில் தூங்கிக்கொண்டிருக்கிறவர்களைக் கொன்றேதீருவேன்'' என்று சொல்லிக்குதிரையை இரதத்தில் பூட்டிச் சத்துருவிருக்கிற விடத்தைநோக்கிப் புறப்பட்டுப்போனான். கிருதவர்மன், கிருபர் இருவரும் கூடப்போனார்கள். அப்பொழுது கூடாரத்துக்குள்ளிருந்த ஜனங்களெல்லாரும் தூங்கிக்கொண்டிருந்தார்கள். அசுவத்தாமா கூடாரவாசலில்போய்க், கருணாநிதியான பரமசிவனைத் தியானித்து ஒரு அகலமான கத்தியைப் பெற்றுக்கொண்டு, கிருதவர்மன், கிருபாசாரி யிருவரையும் வாசலிலே வைத்துவிட்டுத், தானுள்ளேபுகுந்து, கத்தியைச் சுழற்றிக்கூடாரமுடியச்சுற்றிவந்து திருஷ்டதும்மனுடைய கூடாரத்துக்குப்போய் அங்கே பகலில் சண்டைசெய்த சிரமத்தால் சுகமாய்த்தூங்கிக்கொண்டிருக்கிற சேனைகளின் மத்தியில் வெள்ளைநிறமான படுக்கையில் படுத்துத்தூங்கின திருஷ்டத்யும்மனைத் தன் காலாலுதைக்க, அவன் படுக்கையை விட்டெழுந்திருந்து கண்ணைவிழித்து எதிரில் அசுவத்தாமா நின்றுகொண்டிருந்ததைப் பார்த்தான். பலசாலியான அசுவத்தாமன் அவன்தலைமயிரைப்பிடித்துக்கையாலே கசக்கிப்பூமியில் தள்ளிவிட்டான். திருஷ்டத்யும்மனுக்குத் தூக்கந்தெளியாமலும் பயமதிகமாயிருந்தபடியினாலும் ஒன்றுஞ்செய்யாமல் சும்மாவிருந்தான். அசுவத்தாமன் திருஷ்டதும்மனுடைய மார்பிலேகாலைவைத்து மிதித்துக்கொண்டு வில்நாணியால் கழுத்திலேகட்டி, அவன் கதறக்கதற இழுத்துக்கொண்டு வந்து, ஆட்டை அறுப்பதுபோல அறுத்துவிட்டான். அப்படியே யுதாமன்யு, உத்தமோஜா, சிகண்டி, துரோபதியின் புத்திரர்களான உபபாண்டவர்கள், மிகுந்த சோமர்கள், இவர்களையும் திருஷ்டதும்மனுடைய எல்லாச் சேனைகளையும் வெட்டி யெறிந்தான். அசுவத்தாமனுக்குப்பயந்து வெளியிலோடினவர்களை வாசலிலிருந்த கிருதவர்மன், கிருபாசாரியாரிருவரும் பிடித்து அடித்துக் கொன்று யமன்வீட்டுக்கு அதிதிகளாயனுப்பி விட்டார்கள். மஹா பலசாலிகளான மூவரும் பாண்டவர்கூடாரத்தை யிப்படியாக அழித்து நாசம்பண்ணப் பிரளயகாலத்தில் உலகமிருப்பதுபோல அந்தக்கூடாரங்கள் சூனியமாய்விட்டன. இப்படிப் பாழாக்கினபின் கூடாரத்தைவிட்டு வெளிப்பட்டு, பாண்டவர்களுக்குபய

ந்து நடுநடுங்கி அதிவேகமாய்த் தனித்தனியே பிரிந்து ஓடிப்போனார்கள். அசுவத்தாமா ரேவா நதிக்கரை போய்ச்சேர்ந்தான். அவ்விடத்திலே புண்ணியகதைகளைப் பேசிக்கொண்டும், வேதவிசாரம் செய்துகொண்டும் தபசிலிருந்த முனிவர்கள் அசுவத்தாமனுடைய கெட்டசெய்கையைத் தங்கள் யோகபலத்தால் தெரிந்துகொண்டு, அவனைப்பார்த்து "ஐயா! உம்மைப் பார்த்ததனாலேயே யெங்களுக்குப் பாபம் வரும்; உம்மோடு பேசினால் பதினாயிரம் பிரம்மஹத்தி தோஷம் வந்துவிடும்; ஆகையால் இந்த ஆசிரமத்தில் நில்லாமல் ஓடிப்போம்." என்று சொல்லக்கேட்ட அசுவத்தாமன் வெட்கப்பட்டு, முனிவர்களிருந்த அந்த ஆசிரமத்தை விட்டுப்போய் கங்கை முதலான தீர்த்தங்களில் ஸ்நானம் பண்ணி அங்குள்ள மஹாத்மாவான பிராமணர்களாலே நிந்திக்கப்பட்டுக் கடைசியாகப் பிராயச்சித்தம் பண்ணிக்கொள்ள விரும்பிப், பதரிகாசிரமத்தில் தபசுபண்ணிக்கொண்டிருந்த வியாசரைக்கண்டு, பக்தியுடனே நமஸ்காரம் பண்ணிச் சரணமடைந்தான். வியாசர் அவனைப்பார்த்து, "நீ தூங்குகிறவர்களைக் கொன்ற மஹாபாபி; உன்னோடு பேசினால்கூட எனக்குப் பாபம் வந்துவிடும்; இந்த ஆசிரமத்தில் நில்லாதே; ஓடிப்போ." என்று சொல்ல, அசுவத்தாமன், "ஐயா எல்லாரும் என்னை நிந்திக்கிறார்களென்று நானும்மைச் சரணமடைந்தேன். நீரும் இப்படிச் சொல்லிவிட்டா லெனக்கார்கதி? நான் செய்த பாபநிவர்த்திக்கு ஒரு பிராயச்சித்தம் எல்லாந்தெரிந்த நீரே விதிக்கவேண்டும்." என்று பிரார்த்தித்தான். அப்பொழுது அவர் வெகுகாலந் தியானம் பண்ணித், "துரோணபுத்திரனே கேளு; இந்தப்பாபத்துக்குப் பிராயச்சித்தம் ஸ்மிருதியில் கிடையாது; ஆனாலும் ஒரு உபாயம் சொல்லுகிறேன். தட்சிணசமுத்திரத்தில் விளங்காநின்ற முக்தியைக் கொடுக்கும்படியான இராமசேதுவில் தனுஷ்கோடியென்கிற பாபநாசனமான ஒரு புண்ணியதீர்த்த மிருக்கிறது; அதில் ஸ்நானம் பண்ணுகிறவர்களுக்குப் பிரம்மஹத்தியாதிசகல பாபங்களும் ஒழிந்து துர்ச்சொற்பனம், நரகதுன்பம், அகாலமிருத்யு, தாரித்திரியம் இவைகள் விலகி, ஆயுசு, சாந்தி, தாந்தி, சித்தசுத்தி, விஜயம் முதலான மங்களங்களெல்லாம் உண்டாகிச், சர்வாபீஷ்டமும் கைகூடிச் சொர்க்கமும், மோட்சமும் சித்திக்கிறது. அப்பேர்ப்பட்ட தனுக்கோடியில் ஒருமாசகாலம் நாள்தவறாமல் ஸ்நானம் பண்ணுவாயானால். ஸப்தமாரண தோஷத்தினின்றும் விட்டு நீ பரிசுத்தனாவாய்; நான் சொன்னதை உடனே கேளு." என்று சொல்ல, அசுவத்தாமனுமப்படியே தனுக்கோடிபோய்ச் சேர்ந்து ஒருமாசகாலம் சங்கல்ப பூர்வமாக மூன்றுவேளையிலும் ஸ்நானம்

பண்ணி, இராமநாதரைத் தரிசித்துவந்தான். முப்பதாம் நாள் ஸ்நானம் பண்ணிப் பஞ்சாட்சரத்தை ஜபித்து உபவாசம் பண்ணி, இராத்திரியில் இராமநாதர் சன்னிதியில் கண்விழித்துக்கொண்டிருந்து, பொழுது விடிந்தவுடனே சங்கற்ப பூர்வமாகத் தனுஷ்கோடியில் ஸ்நானம் பண்ணி, இராமநாதரைப் பக்தியோடு சேவித்துத் துதித்து, ஆனந்தக் கண்ணீர்பெருக, இராமநாதருக்கு முன்னாலே நர்த்தனம் பண்ணினான். அப்பொழுது பகவான் பிரசன்னராய் அவனுக்கெதிரில்தோன்ற, அசுவத்தாமன்ஸ்துதிக்க ஆரம்பித்தான்.— "கருணைக்கடலே! தேவதேவேசா! சங்கரா! ஆபத்தாகிற சமுத்திரத்திலே முழுகினவர்களுக்கு ஓடம்போன்ற திருவடியுடைய மஹாதேவா! தூர்ஜடி! நீலலோகிதா, உமாகாந்தா, விருபாட்சா, சந்திரசேகரா, உமக்கு நமஸ்காரம் நமஸ்காரம்; மிருத்தியுஞ்செயா, திரிணேத்திரா, பார்வதிபதீ, திரிபுரஸம்ஹாரா, சம்பூ, பிநாகபாணீ, திரியம்பகா, வந்தனம் வந்தனம்; அநந்தன் முதலான மாஹாநாகங்களை ஆபரணமாக அணிந்த சூலபாணீ, கங்காதரா, மிருடா, அவ்யயா, பாபக்கூட்டிலேயிருந்து என்னைக் கிருபாகடாட்சத்தினாலே விடுவித்துக் காப்பாற்றியருளவேண்டும்." என்று துதித்த அசுவத்தாமனைப் பார்த்து மஹாதேவன் சந்தோஷப்பட்டு, "அசுவத்தாமா! தனுக்கோடியில் ஸ்நானம் பண்ணினதினால் உனக்கு ஸுப்தமாரண தோஷம் நீங்கிப்போய்விட்டது. நான் பிரத்தியட்சமாயிருக்கும் பொழுது உனக்கு எதுதான் துர்லபம்? உனக்கிஷ்டமான வரத்தைக்கேள்" என்று சொல்லத் துரோணபுத்திரனாகிய அசுவத்தாமனும், "மஹேசுவரா! உம்மைத் தரிசிக்கமாத்திரத்திலே நான் கிருதார்த்தனாய்விட்டேன்; பாபிகள் கோடி ஜன்மம் எடுத்தாலும் உம்மைக் காணமாட்டார்கள்; ஆகையால் உம்முடைய சரணாரவிந்தங்களில் அசஞ்சலமான பக்தியொன்றே எனக்குவேண்டும். இந்த வரத்தையே நான் விரும்புகிறேன்." என்று சொல்ல, மஹாதேவன் அப்படியே யாகட்டுமென்று சொல்லி அசுவத்தாமன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அந்தர்த்தானமாய்விட்டார். அசுவத்தாமன் கோடிதீர்த்த ஸ்நானத்தினாலே பரிசுத்தனான பிறகு மஹரிஷிகளெல்லாரும் அவனைப் பரிசுத்தனென்று அங்கீகாரம் பண்ணிக்கொண்டார்கள். கேளுங்கள் முனீசுவரர்களே துரோணபுத்திரனாகிய அசுவத்தாமனுக்குப் பாபநிவர்த்திசெய்து பரிசுத்தத்தைக் கொடுத்த தனுஷ்கோடிமகிமையை யுங்களுக்குச் சொல்லிவிட்டேன். இந்த அத்தியாயத்தைப் பக்தியுடனே படிக்கிறவரும்

கேட்கிறவரும் சகல பாபங்களையும் உதறிவிட்டுச் சிவலோகம் போய்ச் சிறப்புடனே வாழ்ந்திருப்பார்கள்.

முப்பத்தோராவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## முப்பதிரண்டாவது

# தனுக்கோடியில் ஸ்நானம் பண்ணித் தர்மகுப்தன் பைத்தியம் நீங்கின

அத்தியாயம்.

---

கேளுங்கள் நைமிசாரணியவாசிகளே ! தனுக்கோடியின் மகிமையை யின்னமும் உங்களுக்குச் சொல்லுகிறேன், சிரத்தையுடன் கேளுங்கள். பூர்வகாலத்தில் சந்திரவம்சோற்பவனான நந்தன் என்கிற மஹாராஜாவானவர் தர்மத்தோடு நாலுசமுத்திரத்துக்குட்பட்ட பூமியை ஆண்டுவந்தார். இப்படி யிருக்கையில் அவருக்குத் தர்மகுப்தன் என்கிற பிள்ளைபிறந்து, இராஜ்யபாரத்தை வகிக்கும் வயதுவந்தபோது, நந்தமஹாராஜாவானவர் இராஜ்யத்தைப் புத்திரன் கையில் ஒப்புவித்துவிட்டு, இந்திரியங்களை நிக்கிரகம்பண்ணி ஆகாரத்தை ஒடுக்கித், தபசுபண்ணுவதற்காகத் தபோவனம் போய்ச்சேர்ந்தார். பிறகு தர்மத்தையும் நீதியையுமறிந்தவனான தர்மகுப்தன் பலவிதமான யாகங்களைச் செய்து, இந்திரன் முதலான தேவர்களையும், தனம் பூமிகளைக் கொடுத்துப் பிராமணர்களையுஞ் சந்தோஷப்படுத்தித் தர்மமாய் இராஜ்யபாரம் நடத்திக்கொண்டு வரும்போது, பிரஜைகளெல்லாரும் தத்தம்வருண ஆசிரமகிரமந்தவறாமலும், சோராதி பீடைகளில்லாமலும் சுகமாய் வாழ்ந்திருந்தார்கள். இப்படியிருக்கையில் ஒருநாள் தர்மகுப்தன் குதிரைமேலேறிக்கொண்டுவேட்டையாடுவதற்காகக் காட்டுக்குப்போய்த் திக்குகளையளாவிக்கொண்டிருக்கின்ற தமாலம், தாலம், இந்தாலாம், குரவம் முதலிய விருட்சங்களடர்ந்து, சிங்கம், வியாக்கிரம்முதலான மிருகங்களாலே பயங்கரமாயும், தடாகங்களில்தாமரை, செங்கழுநீர், அல்லி, நீலோ

த்பலம் முதலிய மலர்களில் மதுவையுண்டு மயங்கிக்கிடக்கும் வண்டுகளின் ரீங்காரத்தொனியானது திகந்தமளவும் பரவவும், தவம் புரியும் தபோதனர்கள் நிறைந்திருப்பதுமான அந்தக் காட்டிலே சுற்றித்திரிந்து கொண்டிருக்கையில் சூரியன் அஸ்தமானமாய், திக்குகளெல்லாமிருளும்படி யிராத்திரி வந்தது. இராஜனும் சாயம் சந்தியைமுடித்து வேதமாதாவாகிய காயத்திரியை ஜபித்து, கரடி சிங்கம் முதலிய மிருகங்களால் துன்பமுண்டாகுமோ வென்று பயந்து ஒருமரத்தின்மேலேறி யுட்கார்ந்திருந்தபோது, சிங்கத்தைக் கண்டு பயந்து ஓடிவந்த ஒருகரடியானது அந்த மரத்தின்மேலேறி, மஹாபல பராக்கிரமசாலியான அந்த ராஜாவைகண்டு, "ஐயா, நீர் பயப்படாதேயும்; ஒரு பெரியசரீரத்தையும், தெற்றுப்பல்லையும் உடைய பலமுள்ள ஒருசிங்கமானது என்னை மிரட்டிக்கொண்டு வந்து இந்த மரத்தடியி லுட்கார்ந்திருக்கிறது. இராத்திரிமுன் பாதியில் நான் விழித்துக்கொண்டிருந்து உம்மைக் காப்பாற்றுகிறேன். பின் பாதியிரவில்நீர்விழித்துக்கொண்டிருந்து என்னைக் காப்பாற்றும். இப்படி யிராப்போதைக் கழிப்போம்." என்று சொல்லிற்று. அரசனும் "அப்படியே யாகட்டும்" என்று சொல்லிவிட்டுத் தூங்கிக்கொண்டிருக்கையில் சிங்கம் கரடியைப்பார்த்து, "ஓ கரடியே, தூங்குகிற இராஜனை யென்னிடந் தள்ளிவிடு." என்று சொல்ல, தர்மந்தெரிந்த கரடியானது சிங்கத்தைப் பார்த்து "ஏ மிருகேந்திரா! உனக்குத்தர்மந் தெரியாது; நம்பினவர்களைக் கைவிட்டவர்க்கு மஹாகஷ்டங்கள் நேரிடுகின்றன. மித்திரத் துரோகிகளின் பாபம் பதினாயிரம் யாகம்பண்ணினாலுந் தீராது பிரம்மஹத்தியாதி பாபங்களுக்கு ஒருக்கால் பிராயச்சித்தமிருந்தாலும் இருக்கலாம்; நம்பிக்கைத் துரோகம்பண்ணினவன் பாபமானது கோடி ஜன்மம் எடுத்தாலும் நசிக்கிறதில்லை. சிங்கமே! மஹாமேருமலையைக்கூட நான்பாரமாக நினைக்கவில்லை; விசுவாச காதகத்தையே நான் பாரமாக நினைக்கிறேன்." என்று தர்மோபதேசம்பண்ணச் சிங்கம் சும்மா விருந்துவிட்டது. பிறகு தர்மகுப்த ராஜன் விழித்திருக்க, கரடி தூங்கினபோனது, சிங்கம் அரசனைப் பார்த்து "கரடியைக் கீழே தள்ளிவிடு." என்று சொல்ல, அரசன் தன்மடியில் தலையைவைத்துக்கொண்டு படுத்திருந்த கரடியை ஆலோசியாமல் தள்ளிவிட, கரடி தெய்வாநுகூலத்தினாலே நகங்களால் மரக்கிளையைப் பிடித்துக்கொண்டு, கீழேவிழாமல் தப்பித்துக்கொண்டு, அரசனிடம் வந்து, "ராஜனே, நான்பிருகுகுலத்தில் பிறந்தத்யானகாஷ்டன்என்கிறரிஷி; காம

ரூபியானதால் கரடி ரூபங்கொண்டிருக்கிறேன். குற்றமற்ற என்னைத் தள்ளிவிட்டபடியால் நீ உடனே சித்தப்பிரமை பிடித்து ஊரெல்லாந் திரியக்கடவாய்." என்று சபித்து, சிங்கத்தைப்பார்த்து, "ஏ சிங்கமே, நீ பூர்வஜன்மத்தில் குபேரன் மந்திரியாகிய பத்திரன் என்கிற யக்ஷன். நீ ஒருகாலத்தில் இமயமலைக்குவந்து கௌதமருடைய ஆசிரமத்துக்குச் சமீபத்தில் உன் ஸ்திரீயோடு கூடி நக்னனாய்க் காமலீலை பண்ணிக்கொண்டிருக்கையில், கௌதமர் சமித்துக்காக ஆசிரமத்தைவிட்டு திடீரென்று வெளியில் வந்து, நீ நிர்வாணமாக இருப்பதைப் பார்த்துக் கோபங்கொண்டு, 'என் ஆசிரமத்தில் நிர்வாணமாகக் காணப்பட்டபடியால் நீ சிங்கமாய்ப் போகக்கடவாய்.' என்று சபித்தபடியால் நீ சிங்கமானாய். நான் இவைகளை யென் தபோமகிமையால் தெரிந்துகொண்டேன். குபேரனும் அவனுடைய வேலைக்காரர்களும் தர்மசீலர்களாயிருக்கையில் நீ மட்டும் ரிஷியாயிருக்கிற என்னைத் துன்பப்படுத்துகிறாய்." என்றுசொன்னவுடனே சிங்கமானது தன் சிங்கரூபத்தைவிட்டு யக்ஷரூபமடைந்து, தியானகாஷ்டரைப் பார்த்து சுவாமீ! இப்போதுதான் என் பூர்வோத்திரம் எனக்குத் தெரியவந்தது. கௌதமர் சபிக்கையில், 'கரடி ரூபமாயிருக்கிற தியானகாஷ்டரோடு உனக்குச் சம்வாதம் நேரிடும்போது சிங்கரூபமொழிந்து யட்சரூபம் வரும்.' என்று சொல்லி யிருந்தார். இப்பொழுதெனக்குச் சிங்சரூபம் நீங்கினபடியால் தாங்கள் காமரூபியான தியானகாஷ்டரென்கிற பரிசுத்தமான ரிஷியென்று நானறிந்துகொண்டேன்." என்று சொல்லி நமஸ்காரம்பண்ணி, வந்திருந்த விமானத்தின்மேலேறிக்கொண்டு அளகாபுரிபோய்ச் சேர்ந்தான். பிறகு இஷ்டமான இடத்துக்குப் போகக்கூடிய தியானகாஷ்ட மஹரிஷியும் தமக்கிஷ்டமான இடத்துக்குப் போய்விட்டார். அந்த மஹரிஷியின் சாபத்தால் பைத்தியம் பிடித்த தர்மகுப்தனும் தன்னூர் போனான். மந்திரிகள் அவன் பைத்தியகாரனாயிருப்பதைக்கண்டு, அழகான ரேவாநதிக்கரையில் தபம் பண்ணிக்கொண்டிருக்கிற அவனுடைய பிதாவினிடம் அழைத்துக்கொண்டு போய்விட்டு, "உமது புத்திரனுக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறது." என்றுசொன்னார்கள். அவனும சமாசாரந்தெரிந்து தன்குமாரனையழைத்துக்கொண்டு ஜைமினி முனிவரிடத்துக்குப்போய் நடந்த சமாசாரத்தை யாதியோடந்தமாகத் தெரிவித்து, "சுவாமீ! என் புத்திரனுடைய பைத்திய நீங்குவதற்கு ஒரு உபாயம் சொல்லியருளவேண்டும்." என்று பிரார்த்தித்தான். முனிசிரேஷ்டரான

ஜைமினியும் அரசனைப்பார்த்து, "தீயானகாஷ்டருடைய சாபத்தால் வந்த பைத்தியம் நீங்குவதற் கோருபாயம் சொல்லுகிறேன். தட்சிண சமுத்திரத்தில் புண்ணியமான சேதுவில் தனுக்கோடியென்று பிரசித்தமான உத்தமதீர்த்தமொன்றிருக்கிறது. அது பவித்திரமானவைகளுக்கெல்லாம் பவித்திரமாயும், மங்களமானவைகளுக்கெல்லாம் மங்களமாயும், சுருதிசித்தமாயும், பிரம்மஹத்தியாதி பாபங்களை யெல்லாம் சேதித்துப் பரிசுத்தமாக்குகிறதாயு மிருக்கிறதீர்த்தம். அதில் உம்து புத்திரனை ஸ்நானஞ் செய்வித்தால் பைத்தியம் நீங்குவதில் ஆக்ஷேபனையில்லை." என்ற ஜைமினியை நமஸ்கரித்து, நந்தன் தன் குமாரனைத் தனுக்கோடிக்கழைத்துக் கொண்டுபோய் ஒருமாசகாலம் நியமத்தோடு ஸ்நானஞ்செய்விக்க உடனே அவனுக்குப் பைத்தியம் நீங்கிப்போயிற்று. நந்தனும் பக்தி பூர்வமாகத் தானும் ஸ்நானம்பண்ணி ஒருநாளிருந்து கிருபாமூர்த்தியாயும், சாம்பமூர்த்தியாயுமிருக்கிற இராமநாதரைச்சேவித்துத் தன் புத்திரனிடம் செலவுபெற்றுக்கொண்டு தபோவனம்போய்ச் சேர்ந்தான். தர்மகுப்தனும் பிராம்மணர்களுக்கும், இராமநாதருக்கும் பக்திபூர்வகமாக அநேக திரவியங்களையும், தானியங்களையும், பூமிகளையும் கொடுத்து, மந்திரிகளோடுகூடப் பட்டணம்போய்ச் சேர்ந்து சத்துருக்களில்லாமல் பரம்பரையாகத் தனக்குவந்த இராஜ்யத்தைத் தர்மமாக ஆண்டுகொண்டுவந்தான். உன்மத்தம், அபஸ்மாரம், பிசாசு முதலியவற்றால் வருத்தப்படுகிறவர்கள் இதில் ஸ்நானம்பண்ணினால் அவைகளுடனே நீங்கிப்போகும். இது சத்தியம், சத்தியம். தனுக்கோடி தீர்த்தத்தைவிட்டு வேறு தீர்த்தங்களைத் தேடிப்போகிறதானது கையிலே யிருக்கிற பசுவின்பாலைவிட்டுக் கள்ளிப்பாலைத் தேடிப்போகிறது போலிருக்கிறது. எந்த ஜன்மத்திலாவது ஸ்நானம்பண்ணும்பொழுது தனுக்கோடி யென்று மூன்றுதரம் உச்சரிக்கிறவர்களுக்குப் பரமபதவி கிடைத்துவிடும். கேட்டவுடனே பிரமஹத்தி, ஸ்வர்ணஸ்தேயாதி பஞ்ச மஹாபாதகங்களையும் நசிக்கச் செய்கிற தர்மகுப்தன் கதையை யுங்களுக்குச் சொல்லிவிட்டேன்.

## முப்பத்திரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

முப்பத்துமூன்றாவது

# தனுக்கோடியில் ஸ்நானஞ்செய்து பராவசு என்ற பிராம்மணன் பிதுர்ஹத்திதோஷம் நீங்கின

அத்தியாயம்.

---

கேளுங்கள் முனிவர்களே! அற்புதமாயும் இரகசியமாயும் கேட்கிறவர்களை யெல்லாம் பரிசுத்தப்படுத்துவதுமான தனுக்கோடி வைபவத்தை மறுபடியுமெடுத்துச் சொல்லுகிறேன். பூர்வ காலத்தில் பிரஹத்யும்நர் என்கிற மஹாபலமான சக்கிரவர்த்தி நாற் கடல்சூழ்ந்த பூமியைப் பரிபாலனஞ் செய்கிறபொழுது சத்திரயாகஞ்செய்யத் தொடங்கினான். அதில் பரமதார்மிகராயும், மஹா வித்துவானாயுமிருந்த ரைப்பியர் என்ற முனிவர் ஒருவரிருந்தார். அவருக்குப் பராவசு, அர்வாவசு, என்று இரண்டு குமாரர்களிருந்தார்கள். அவ்விருவரும் ஆறு அங்கங்களோடு கூடிய வேதங்களையும், சிரௌதஸமார்த்த விதிகளையும், கணாதர் செய்த வைசேஷிகத்தையும், ஜைமினி செய்த பூர்வமீமாம்சையும், கபிலர் செய்த ஸாங்கியத்தையும், வியாசர் செய்த உத்தரமீமாம்சை அல்லது வேதாந்தத்தையும், கௌதமர் செய்த நியாயசாஸ்திரத்தையும் பதஞ்சலி செய்த யோகசாஸ்திரத்தையும், பாணினி செய்த வியாகரண சாஸ்திரத்தையும், மனுவாதிகள் செய்த ஸ்மிருதிகளையும், கற்றுணர்ந்து தேர்ந்தவர்களாயும், அசுவினிதேவர்களைப்போல அழகுள்ளவர்களாயுமிருந்தார்கள். அவர்களைப் பிரஹத்யும்னராஜன் தன்யாகத்தை நிறைவேற்றிவைக்கும்படி கேட்க, அவர்கள் தங்கள் பிதாவின் அநுமதிபெற்று யாகசாலைக்கு வந்தார்கள். ரைப்பியர்மாத்திரம் மூத்தமருமகளோடு ஆசிரமத்திலிருந்தார். அந்த இரண்டு சகோதரர்களும் சத்திரயாகத்தை மந்திரதந்திர லோபங்களில்லாமல் நடத்திவருகையில், அரசனுலழைக்கப்பட்ட வசிஷ்டர், கௌதமர், அத்திரி, ஜாபாலி, காசியபர், கிருது, தக்ஷர் புலஸ்தியர், புலகர், நாரதர், மார்க்கண்டேயர், சதாநந்தர், விசுவாமித்திரர், பராசரர், ரத்ஸ, பிருகு, வால்மீகி, வியாசர், தௌமியர் முதலான ரிஷி

சுவரர்கள் எல்லாரும் கணக்கில்லாத சிஷ்யப்பிர சிஷியர்களோடும் வந்தார்கள். நாலுதிக்குகளிலிருந்து சதுரங்கபலங்களோடு அரசர்களும், வைசிய சூத்திரர்களும், பிரமசாரிகள், கிருகஸ்தர்கள், வானப்பிரஸ்தர்கள், சந்நியாசிகளாகிய நாலு ஆச்சிரமிகளும் யாகத்துக்கு வந்தார்கள். வந்த ரிஷீசுவரர்களை அர்க்கிய பாத்தியாதிகளாலுபசரித்து, மற்றவர்களுக்குத் தக்கபடி யுபசாரஞ்செய் தெல்லாருக்கும் ஷட்ரஸோபேதமாய்ப் போஜனமளித்து, வஸ்திராபரணாதிகளுங்கொடுத்து, வெகுமானஞ் செய்தார். ரைப்பிய புத்திரர்களாகிய பராவசு அர்வாவசு இருவரும் யாகத்தை முறைதவறாமல் நடத்துவதைப்பார்த்த ரிஷிகளெல்லாரும் சபாசு என்று சிரக்கம்பஞ் செய்தார்கள். மூன்றாவது யாகம்முடிந்ததும் மூத்தவனான பராவசு என்பவன் சில காரியங்களை முடித்துவிட்டுக் கிருககிருத்தியம் பார்த்துவருவதற்காகத் தன் ஆச்சிரமம் போனான். அந்த ராத்திரி காலத்திலே ரைப்பியர் மான்தோலைப் போர்த்துக்கொண்டு வனத்திலே உலாவிக்கொண்டிருந்தார். இருண்டராத்திரியில் பராவசுவானவன் வழிநடந்தசிரமத்தாலும், நித்திரைமயக்கத்தாலும் மயங்கி, மான்தோல் போர்த்திருந்த தன் தந்தையைப் பார்த்துத் தன்னைக் கொல்லவரும் மிருகமென்று நினைத்து, அவரைக்கொன்று விட்டான். பிறகு கிட்டப்போய்ப் பார்த்துத் தன் பிதாவென்றறிந்து தன்னை மறந்து அழுது பிரேதகாரியத்தை முடித்து மறுபடியும் அரசனுடைய யாகசாலைக்கு வந்து தன் தம்பிக்கு நடந்த காரியத்தைச் சொன்னான். அவனும் மிகுந்த துக்கமடைந்தழுதான். பராவசு என்பவன் தம்பியைப்பார்த்து, "அப்பா இராஜன் பெரிய யாகஞ்செய்யத் தொடங்கியிருக்கிறார். இதை நடத்துவதற்குப் பாலனாகிய உன்னால் முடியாது. நான் மிருகமோவென்று சந்தேகப்பட்டுத் தகப்பனைக்கொன்றதனால் எனக்குப் பிரம்மஹத்தி தோஷம் வந்திருக்கிறது. அதற்கு அவசியம் பிராயச்சித்தம் செய்துகொள்ளவேண்டும். நான் ஒருவனாகவிருந்து யாகத்தை நிறைவேற்ற முடியுமாகையால் நான் செய்யவேண்டிய விரதத்தை நீ செய்துகொண்டுவா." என்று சொல்ல, "அண்ணா! அப்படியே யாகட்டும். பிரம்மஹத்தி நீங்குவதற்கு நான் விரதமிருக்கிறேன்." என்று புறப்பட்டுப் போய்விட்டான். பராவசு அத்வர்யுவாகவிருந்து யாகத்தை நடத்திவந்தான். அப்பொழுது தம்பியாகிய அர்வாவசு பன்னிரண்டுவருஷம் விரதமிருந்து, பிறகு யாகசாலைக்குவரத், தமையனாகிய பராவசு அரசனைப்பார்த்து, "இவன் பிரம்மஹத்திசெய்தவன்; இவனையாகசாலைக்கு

வெளியிலே துரத்திவிடவேண்டும். இல்லாவிட்டால் யாகபலன்
வீணாய்ப்போய்விடும்” என்று சொல்ல, மஹாராஜாவும் தன்வேலை
க்காரர்களால் துரத்தச்சொல்லிய அவன் மஹாராஜாவே நான் பிரம்ம
“ஹத்திசெய்யவில்லை; அண்ணன்தான் செய்தார். அவருக்காக நான்
விரதமிருந்தேன். என்று சொல்லவும், அரசன் அதைக்கேளாமல்
துரத்திவிட்டான். பிராம்மணர்களும் அர்வாவசுவைச் சேர்த்துக்
கொள்ளாமல் தள்ளிவிட்டார்கள். உடனே அர்வாவசு வாயைமூடி
க்கொண்டு முனிவர்கள் நிறைந்த தபோவனம்போய் சூரிய
னைக்குறித்துத் தேவர்களாலுஞ் செய்யமுடியாத கடுமையான
தபசுசெய்தான். அவனுடைய தபசுக்கு மகிழ்ந்து கர்மசாட்சி
யும், ஜகச்சக்ஷுவும், தேவசிரேஷ்டனுமாகிய சூரியன் இந்திரன்
முதலான சகல தேவர்களையும் அழைத்துக்கொண்டும், தன் தேக
காந்தியால் உலகத்தை விளங்கிக்கொண்டும், அவனுக்குமுன்
தோன்றி, அப்பா அர்வாவசுவே தபசாலும், பிரமசரியத்தாலும்
ஆசாரத்தாலும், வைதிகாநுஷ்டத்தாலும், வேதசாஸ்திராதிபதி
சீலனத்தாலும் நீ மேலானவன். உன் தமயனான பராவசு உன்னை
யவமானஞ்செய்து துரத்தியடித்தாலும் நீ கோபங்கொள்ளாமல்
பொறுமையுடனே யிருந்தாய். உன் தகப்பனைப் பராவசு கொன்
றானே யொழிய நீ கொல்லவில்லை. அவனுடைய பிரம்மஹத்திக்
காக நீ விரதமனுஷ்டித்துமிருக்கிறாய்; ஆகையால் நாங்கள் உன்
னைச் சிரேஷ்டனாகக்கொண்டு அவனை நிராகரித்துவிடுகிறோம்.
உனக்குப் பிரியமான வ்ரதத்தைக் கேட்டுக்கொள் என்றார்கள்.
அப்பொழுது அர்வாவசு “என் தந்தை மறுபடியும் உயிர்பெற்று
எழுந்திருக்கவும், தாம் இறந்துபோனதை அவரறியாதிருக்க
வும் வரந்தருளவேண்டுமென்றும், என் சகோதரனுக்குப் பிரம்
மஹத்தி தோஷம் தீரவேண்டுமென்றும், பிரார்த்திக்கத்
தேவர்கள் அர்வாவசு நீ கேட்டுக்கொண்டபடியே உன் தக
ப்பன் உயிர் பிழைத்தெழுந்திருப்பார். அவருக்குத் தான்
இறந்துபோனது ஞாபகம் வாராது. பிராம்மணனாகிய தகப்பனைக்
கொன்றதனாலுண்டாகிய பிரம்மஹத்தி தோஷம் உன் தமைய
னுக்கு வந்திருக்கிறது. தான் செய்த பஞ்ச மஹாபாபத்துக்குப்
பிறர் பிராயச்சித்தம் செய்துகொண்டால் அது தீராது. தகப்பனா
கிய பிராம்மணனைக்கொன்ற பிரம்மஹத்தி தோஷத்துக்குப்
பிராயச்சித்த மில்லையாகையால் உன் தமையனுடைய பாபந்தீராது
தீர்ந்ததாகச் சொல்ல எங்களால் முடியாது. என்று தேவர்கள்

சொல்ல, அர்வாவசு அப்படியானாலும் என் தமையனுடைய பாப நிவர்த்திக்குத் தகுந்த பிராயச்சித்தத்தை நீங்களே ஆராய்ந்து சொல்லவேண்டும். என்று மறுபடி கெஞ்சிக்கேட்க தேவர்கள் நெடுநேரம் யோசித்து பிறகு அப்பா அர்வாவசு ஒரு உபாயஞ் சொல்லுகிறோம். கேள் தக்ஷிண சமுத்திரத்தில் முக்தியைக் கொடுக்கிற புண்ணியமான இராமசேதுவில் தனுக்கோடியென்கிற ஒரு தீர்த்தமிருக்கிறது. அது பிரமஹத்தியாதி பஞ்ச மஹா பாதகங்களையும், துஸ்வப்னங்களையும், நரக துக்கத்தையும், தரித்திரத்தையும், கடன்களையும், நிவர்த்தியாக்குகிறது. யாதொரு பலனையும் உத்தேசியாமல் ஸ்நானம் பண்ணுகிறவனுக்கும், தனுக்கோடி என்று மூன்றுதரம் ஸ்மரிப்பவனுக்கும் சொர்க்கம், கைலாச முதலிய முக்திகளும், மோக்ஷமும் கைகூடிவரும். அப்பேர்ப்பட்ட தீர்த்தத்தில் உன் தமையன் ஸ்நானம் பண்ணினால் அவன் பிரமஹத்தி தோஷத்தினின்றும் விடுபடுவான். இது இரகசியமான பிராயச்சித்தம்." என்று சொல்லித் தேவர்கள் தத்தமிருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள். அர்வாவசு தன் தமையனையழைத்துக் கொண்டு சேதுவுக்குப்போய்ச் சங்கற்ப பூர்வமாக ஸ்நானம் பண்ணி யெழுந்திருந்தவுடனே ஒரு அசரீரி வாக்குத்தோன்றி பராவசுவே உன் பிரமஹத்தி தோஷம் போய்விட்டது என்ற உடனே பராவசு தம்பியோடுகூடத் தனுக்கோடியை நமஸ்காரம் பண்ணி ஸ்ரீ ராமநாதரான மஹா தேவனைச் சேவித்துப் பாதகம் நீங்கிப் பிதாவினுடைய ஆசிரமம் வந்தபோது, இறந்துபோன ரைப்பியர் உயிர்பெற்றெழுந்திருந்து வந்த குமாரர்களைக் கண்டு சந்தோஷங்கொண்டு அவர்களோடு கூடச் சுகமாய்வசித்துக்கொண்டிருந்தார். ஸ்நானம் பண்ணின மாத்திரத்திலே பராவசுவினுடைய பிரம்மஹத்தியைப் போக்கின தனுக்கோடியின் வைபவமிது. இதில் ஸ்நானம் பண்ணினவுடனே சுராபானாதி மஹா பாதகங்களும் ஓடிப்போகின்றனவென்று கையைத்தூக்கிக்கொண்டு சத்தியம் பண்ணுகிறேன் இந்த அத்தியாயத்தைப் படிப்போருக்கும் கேட்போருக்கும் பிரமஹத்தியாதி மஹாபாதகங்களும் உடனே நிவர்த்தியாகும் என்பதில் சந்தேகமில்லை.

## முப்பத்து மூன்றும் அத்தியாயம்.

முற்றிற்று

முப்பத்துநாலாவது

# நரி குரங்குகளின் ஸம்வாத மூலமாகச் சுமதி மஹாபாதகம் நீங்கின கதையுரைத்த

அத்தியாயம்.

கேளுங்கள் முனீசுவரர்களே! தனுக்கோடி வைபவத்தை விளக்குகிற நரி குரங்குகளின் ஸம்வாதமான ஒரு இதிகாசம் சொல்லுகிறேன். முன்காலத்தில் பூர்வஜன்ம ஞானமுள்ள ஒரு நரியும் குரங்குமிருந்தன. அவைகள் மனிதராயிருந்த காலத்தில் தோழர்களாயிருந்ததுபோல இப்பொழுதும் சிநேகமாயிருந்தன. ஒருநாள் குரங்கானது மயானத்தில் நின்றுகொண்டிருந்த நரியைப் பார்த்ததும் பூர்வஞானமுண்டாய் "ஏ நரியே! நீ மயானத்தில் நாறிக்கொண்டிருக்கிற பிணங்களைத்தின்னும்படி பூர்வத்தில் என்ன பாதகஞ்செய்தாய்?" என்று வினவ, நரிசொல்லுகின்றது: நான் பூர்வஜன்மத்தில் தேவவர்மா என்ற பிராமணன். வேதத்தில் கரைகடந்தவனாகவும், சகலதர்மங்களையும் அறிந்த வித்துவானாகவுமிருந்தேன். அப்படியிருந்தும், பிராமணர்களுக்குப் பணங்கொடுப்பதாகப் பிரதிக்ஞைபண்ணிப் பின்பு கொடாமலிருந்த தோஷத்தால் இப்படிப்பட்ட இழிவான சாப்பாட்டைச் சாப்பிட்டுக்கொண்டிருக்கிறேன். கொடுக்கிறேனென்று பிரதிக்ஞைசெய்தபின் கொடாமலிருக்கிறவன் என்போல நரிஜன்மமெடுத்திருக்கிறான். பிரதிக்ஞைசெய்தபின் கொஞ்சமாவது கொடாதவனுடைய எண்ணங்கள் நபும்ஸகனுக்குப் பிரஜோத்பத்தியில்லாததுபோலப் போய்விடுகிறது. பிராம்மணனுக்குக் கொடுக்கிறேனென்று வாக்குதகொடுத்துப் பின்பு கொடாமலிருக்கிறவனுடைய ஜன்மங்களில் செய்த புண்ணியங்கள் உடனே நசித்துப் போகின்றன. தருகிறேனென்று பிரதிக்ஞைசெய்து கொடாமலிருக்கிற பாபத்துக்கு நூறு அசுவமேதஞ்செய்தாலும் பரிசுத்தியிராது. என்னுடைய இந்தப் பாபத்துக்கு எப்பொழுது நிவர்த்தியுண்டாகுமோ எனக்குத் தெரியாது. ஆகையால் கொடுப்பதென்று பிரதிக்ஞைசெய்ததை யெப்படியாவது கொடுத்துவிடவேண்டியது. பிரதிக்ஞைசெய்ததைக் கொ

டாமலிருக்கிறவன் கட்டாயம் நரியாகப்பிறக்கிறான்." என்று சொ
ல்லிவிட்டுக், குரங்கைப்பார்த்து நீயென்ன பாவஞ்செய்து குரங்கா
ய்ப்பிறந்து குற்றமில்லாதவைகளாய்ப் பின்தொடர்ந்துவரும் பட்
சிகளை யிம்சிக்கிறாய்? அந்தப்பாபத்தை யெனக்குச் சொல்லென்று
கேட்க வானரஞ் சொல்லுகிறது. நான் பூர்வ ஜன்மத்தில் வேதநா
தன் என்ற பிராமணன். என் தந்தை விசுவநாதன்; என் தாயார்பேர்
கமலாலயை. ஏ! நரியே, பூர்வ ஜன்மத்திலகூட நாமிருவருஞ்சிநேக
மாயிருந்தது உனக்குத்தெரியவில்லை. நான் பரமசிவனை யாரா
தித்து, அவருடைய பிரசாதம் பெற்றதனால் நான் விசேஷஞானத்
தையடைந்து நாமிருவரும் சிநேகமாயிருந்ததைக்கூடத் தெரிந்து
கொண்டேன். நரியே பூர்வஜன்மத்தில் ஒரு பிராம்மமணனுடைய
காய்கறிகளைத் திருடினபடியால் அந்தப் பாபத்துக்காக நரகத்தை
யனுபவித்துவிட்டு, இப்பொழுது குரங்காய்ப் பிறந்திருக்கிறேன்.
அப்பா! பிராம்மணனுடைய சொத்தைத் திருடவேகூடாது; திரு
டினால் நரகத்தையனுபவித்துக் குரங்காய்ப் பிறக்கவேண்டும். ஆட்
சேபணையில்லை. பிராம்மணன் சொத்தைத் திருடுகிறதைவிட மே
லானபாபம் கிடையாது. விஷம் குடித்தவனைமட்டுங் கொல்லுகிறது.
பிராம்மணன் சொத்தோ குடும்பத்தோடு நாசம்பண்ணுகிறது. இந்
தப்பாபத்தினால் கும்பீபாகாதி நரகங்களில் விழுந்து கஷ்டப்பட்டுப்
பிறகு வானரமாகவும் பிறக்கவேண்டும். ஆகையால் பிராமணன்
பாலனாயிருந்தாலும், தரித்திரனாயிருந்தாலும், கிருபணனாயிருந்தா
லும், வேதசாஸ்திரமறியாதவனாயிருந்தாலும், அவனை யவமதிக்கா
மல் அவனிடத்தில் பொறுமையாயிருக்கவேண்டும். அவன் கோ
பித்துக்கொண்டால் நெருப்புக்குச் சமானமாயிருப்பான். ஆகை
யால் பிராம்மணனுடைய சொத்தைத் திருடவே கூடாது. எனக்
குச் சென்ற ஜன்மத்தில் நடந்ததும், இனிவரும் ஜன்மத்தில் நடக்
கப்போகிறதும் நன்றாய்த் தெரிகிறது. ஆனால் இப்பொழுது அனுப
விக்கிறபாபத்தை நிவர்த்திசெய்கிற வழிமட்டுந் தெரியவில்லை: நீயும்
பூர்வ ஜன்மஞானமுடையவனாயிருந்தாலும் பிரதி பந்தத்தினாலே
நடந்ததும், நடக்கப்போவதும் உனக்கு நன்றாய்த் தெரியவில்லை.
கொஞ்சகாலம்வரைக்கும் இந்தத்துக்கத்தை யனுபவிப்போம்; நம்
மிருவரையு மிந்த பாபத்தினின்றும் எவன் விடுவிப்பானோ? என்று
சொல்லிக் குரங்கும் நரியும் பேசிக்கொண்டிருக்கையில் அவைகளு
டைய புண்ணிய வசத்தால் ஸர்வாங்கமும் விபூதியை உத்தூளனம்
பண்ணிக்கொண்டு, நெற்றியில் திரிபுண்டரமணிந்து, உருத்திராட்ச

மாலையை ஆபரணமாகத் தரித்துச் சிவநாம கீர்த்தனம் செய்துகொண்டு மஹாதேஜஸையுடையவரான சிந்துத்வீபர் என்கிற மஹாரிஷியானவர் தெய்வச் செயலாய் அவ்விடத்துக்குவந்தார். அப்பொழுது நரியும், குரங்கும் சந்தோஷப்பட்டு இவரைக்கண்டு பணிந்து, சுவாமீ சகல தர்மங்களுந் தெரிந்த தேவரீர் எங்கள் பேரில் கிருபைகூர்ந்து எங்களுடைய குரூரத்தன்மையும், பாபத்தன்மையும் நீங்கும்படி ஒரு உபாயஞ் சொல்லி யெங்களைக் காத்தருளவேண்டும்; தங்களைப் போலொத்த புண்ணியவான்களான சாதுக்கள், அனாதைகளாயும், கிருபணர்களாயும், அஞ்ஞானிகளாயும், பாலர்களாயும், ரோகிகளாயுமிருக்கிறவர்களைக் கிருபைகூர்ந்து பிரதியுபகாரத்தை யெதிர்பாராமல் எப்பொழுதும் இரட்சிக்கிறது வழக்கம் அல்லவா ஆகையாலெங்களைக் காப்பாற்றியருளவேண்டும் என்று பிரார்த்திக்க சிந்துத்வீப மஹாரிஷி நெடுங்காலம் யோசித்து ஓ குரங்கு நரிகளே! உங்களை நான் நன்றாயறிவேன். ஓ நரியே, நீ பூர்வத்தில் வேதசர்மா என்கிற பிராமணனாயிருந்து ஒரு பிராமணனுக்குத் தருகிறதாக வாக்குத்தத்தம் பண்ணியிருந்த தானியத்தைக் கொடாமலிருந்தபடியால் இந்த நரி ஜன்மத்தை யடைந்திருக்கிறாய் ஓ குரங்கே நீ பூர்வஜன்மத்தில் வேதநாதன் என்கிற பிராமணன் ஒரு பிராமணனுடைய வீட்டிலிருந்து காய்கறிகளைத் திருடினபடியால் ஸர்வ பட்சிகளும் பயப்படும்படியான குரங்காயிருக்கிறாய். உங்கள் இருவருக்கும் பாபம் நிவர்த்தியாகும் வழி சொல்லுகிறேன், கேளுங்கள். தட்சிணசமுத்திரத்திலிருக்கும் தனுக்கோடியில் சீக்கிரம் போய் நீங்கள் ஸ்நானம் பண்ணினால் உங்களுக்கு இந்தப் பாபம் நீங்கிப்போய்விடும். பூர்வம் கள்ளைக்குடித்துக்கொண்டு கிராதஸ்திரீ சம்போகஞ் செய்திருந்த சுமதியென்கிற ஒரு பிராமணன் இந்தத் தனுக்கோடியில் ஸ்நானம் பண்ணிப் பாபம் நீங்கிப் பரிசுத்தனானான் என்று சொல்ல, நரி குரங்குகள் சிந்துத்வீப முனிவரைப்பார்த்து, சுவாமீ, அந்தப் பிராமணனுடைய சரித்திரத்தை விஸ்தாரமாக எங்களுக்குச் சொல்லவேண்டுமென்று பிரார்த்திக்க, மஹாரிஷி சொல்லத் தொடங்கினார்.

மஹாராஷ்டிர தேசத்தில் யக்ஞதேவனென்கிற ஒரு ஆஸ்திகப் பிராமணரிருந்தார். அவர் வேத வேதாங்க பாரங்கதராய்த் தயாளுவாய் அதிதிபூஜை, சிவ விஷ்ணுபூஜைகளைச் செய்துகொண்டிருந்தார். அந்தப் பிராமணருக்குச் சுமதி என்கிற ஒரு பிள்ளையிருந்தான். அவன் தன் மாதாபிதாக்களையும், பதிவிரதையான தர்ம புத்

தினியையும் தள்ளிவிட்டு விடகோஷ்டிகளோடு கூடி உற்கலதேசம் போய்ச் சேர்ந்தான். அந்த தேசத்தில் யௌவன புருஷர்களை மயக்கி, அவர்களுடைய திரவியத்தை வஞ்சனையாகப் பறித்துக் கொண்டுவந்த ஒரு வேடஸ்திரீயிருந்தாள். அவள்வீட்டுக்குச் சுமதி யென்பவன் கையில் பணமில்லாமல் போனபடியால் அவள் அவனை யங்கிகாரம் பண்ணவில்லை. சுமதி எப்படியாவது அவளைச் சேர வேண்டுமென்கிற எண்ணங்கொண்டு, நாலுபக்கங்களிலும் போய்த் திருடிப் பணங்களைக் கொண்டுவந்து கொடுத்து அவளுடன் கூடி ஒருகலத்தில் புசித்தும், ஒரே பான பாத்திரத்தில் கள்ளைக்குடித்தும் சிற்றின்பத்தில் மூழ்கித்தன்தாய்தந்தைகளையும், மனையாளையும் நினையாமல் மறந்து வாழ்ந்திருந்தான். ஒரு சமயத்தில் வேடர்களெல்லாரும் ஒன்ருய்க்கூடி லாடதேசத்துக்குக் கொள்ளையிடப் போகையில் சுமதியும் வேடவேஷந் தரித்து அவர்களோடு கூடிக் கையில் கத்தி யேந்திக்கொண்டு துணிவோடு ஒரு பிராம்மணன் வீட்டில் புகுந்து, அவனையும் அநியாயமாய்க்கொன்று, அவனுடைய திரவியத்தையுங் கொள்ளையடித் தன்வைப்பாட்டியான வேடச்சி வீட்டுக்குவருகையில், நீலவஸ்திரமும், செம்பட்டமயிருமுடைய பயங்கரமான பிரம்மஹத்தியானது பூமி காய மெல்லாங்கிடுகிடென்று நடுங்கும்படி அட்டகாசஞ்செய்து கொண்டு பின்தொடர்ந்தது. அதினலே சுமதி உலகமெல்லாஞ் சுற்றித்திரிந்து, பயமடைந்து தன்னூருக்குவந்து, வீட்டுக்குள் நுழைந்து, அப்பா! என்னைக்காப்பாற்றும்; காப்பாறறும், என்றலறிக்கொண்டு தன் தகப்பன் பாதத்தில் விழுந்தான். தகப்பன் "அப்பா! பயப் படாதே என்று சொல்லி யவனைக் காப்பாற்ற முயன்ருர். பின் தொடர்ந்துவந்த பிரம்மஹத்தியானது அவன் தகப்பனைப் பார்த்து "ஓ பிராம்மணசிரோன்மணியே! இந்தப் பிள்ளையை நீர் வைத்துக்கொள்ளாதேயும்; இவன் சுராபானம் பண்ணி, சொர்ணத்தைத் திருடி மாதர் துரோகம், பிதுர்த்துரோகம், பாரியாதுரோகம் பண்ணிக் கள்ளைக்குடித்து, கிராத ஸ்திரீயோடு, கலந்து பிரம்மஹத்தி செய்த இந்த மஹா பாதகனை நான் ஒருபோதும் விடமாட்டேன். நீர் இந்த மஹா பாதகனை ஆதரித்தால், உம்மையும், உம் குடும்பத்தினியையும், மருமகளையும், இவனையும், உமது வம்சத்தாரையும் பட்சித்துவிடுவேன். இவனை நீர் விட்டுவிடுவீரானல் உங்களை நான் விட்டுவிடுவேன். ஒருவனுக்காகக் குலமுழுவதையு நாசம்பண்ணுதேயும், "என்று சொல்லி

யக்ஞதேவன் "பிள்ளையென்கிற ஆசாபாசம் என்னைத்தொந்தரவு செய்கிறதே! இவனை பெப்படிக்கைவிடுவேன்" என்று சொல்லப் பிரம்மஹத்தி "ஓபிராமண! இவன் பதிதனும் வர்ணாசிரமபிரஷ்டனுமாயிருக்கிறான். இவனைக் கண்டாலும் தோஷமவரும். இவனிடத்தில் நீர் ஆசை வையாமலிரும்," என்று யக்ஞதேவன் பார்த்துக் கொண்டிருக்கும் போதே சுமதியை நூக்கி அறைந்தது. அவன் அப்பா! அப்பா என்று வாய்விட்டுக்கதற, அவனுடைய தந்தை தாய், பனைவிகளும் கண்ணாலே தாரைதாரையாகக் கண்ணீர் பெருகக் கோவென்று கதறியழுதார்கள். இந்தச் சமயத்தில் சங்காரம் சமாகிய துருவாசமஹாரிஷி அங்கே திடீரென்று வரக்கண்டு யஞ்ஞ தேவர் அவரைத்துதித்து வணங்கிச் சரணமடைந்து, "ஐயா சங்க ராம்சமான யோகீசுவரரே! துர்ப்பாக்கியர்களுக்குத் தங்களுடைய தரிசனங்கிடைக்கிறது துர்லபம். என் புத்திரனுகிய இவன் பஞ்ச மஹா பாதகங்களையும் செய்திருக்கிறான். பிரம்மஹத்தி யிவனை யடிப்பதற்குத் தொடர்ந்து வந்திருக்கிறது. எனக்கு இவனைத் தவிர வேறு பிள்ளைகள் கிடையாது. இவனிறந்துபோனால் வம்சம் நாசமாய்ப் போய்ப் பிதுர்க்களுக்குப் பிண்டதானம் செய்யப் பிள்ளையில்லாமல் போய்விடும். ஆகையால் எங்கள் பேரில் கிருபை செய்து என் பிள்ளை பிரம்மஹத்தியினின்றும் விடுபடுவதற்கு ஒரு உபாயஞ் சொல்லவேண்டும் என்று பிரார்த்தித்தார்கள். துருவாசர் கருணைகூர்ந்து நெடுநேரஞ் சிந்தித்து யக்ஞதேவரைப் பார்த்து, 'ஐயா! உமது குமாரன் குரூரமான பாபங்களைச் செய்திருக்கிறான், இதற்குப் பிராயச்சித்தங் கிடையாது. ஆனாலுமொரு உபாயஞ் சொல்லுகிறேன், ஜாக்கிரதையாய்க் கேளும், தட்சிணசமுத்திரத் திலிருக்கிற தனுக்கோடி தீர்த்தத்தில் இவன் ஸ்நானம் பண்ணினால் உடனே பாபவிமோசன மாகும்; பூர்வத்தில் துர்விநீதன் என்ற பிராமணன் இதில் ஸ்நானம் பண்ணி மாதுருகமன தோஷத்தினின்று உடனே விடுபட்டான். சாட்சாத் ஸ்ரீ ராமமூர்த்தியினுடைய வில்லின் நுனியால் செய்யப்பட்ட இந்தத் தனுக்கோடி தீர்த்தமானது ஸ்நானம் பண்ணினவுடனே உமது குமாரனுடைய பாபங்களையெல்லாம் நாசம் பண்ணிவிடும்" என்று சொன்னார்.

முப்பத்துநாலாவது அத்தியாயம்

முற்றிற்று.

முப்பத்தைந்தாவது

# நரியுங் குரங்கும் தனுக்கோடியில் ஸ்நானம் பண்ணிச் சாப விமோசனமடைந்து சொர்க்கம் பெற்ற

அத்தியாயம்.

யக்ஞதேவர்.—ஐயா! சதசத்துக்களின் சொரூபங்களை யுணர்ந்த மஹா பிராக்ஞரான ரிஷீசுவரரே! மாதுர் கமனம் பண்ணின துர்விநீதன் கதையை யெங்களுக்கு விஸ்தாரமாய்ச் சொல்லவேண்டுமென்று கேட்டார். துருவாசர் சொல்லுகிறார்:—

பூர்வத்தில் பாண்டிநாட்டில்இத்மவாகன் என்றசாஸ்திரந் தெரிந்த ஒரு பிராமணனிருந்தான். அவனுக்கு ருசீஎன்ற மனைவியும் துர்விநீதன் என்கிற பிள்ளையுமிருந்தார்கள். துர்விநீதன் பாலியமாயிருக்கும்போதே தகப்பனிறந்துபோனார். பிறகு துர்விநீதன், தகப்பனுக்குரிய உத்தரக் கிரியைகளை முடித்துவிட்டு விதவையானதாயாரோடு கூடக் கொஞ்சகாலம் வீட்டில் வசித்துக்கொண்டிருந்தான். அப்பொழுது துவாதச வருஷ க்ஷாமம் வந்து, பிரஜைகள் துன்பப்படத் துர்விநீதன் தாயாரோடு தேசாந்தரம் போய்ச் சுபிக்ஷமாயிருந்த கோகருணத்தில் வெகுகாலம் வாசம்பண்ணிக்கொண்டிருந்தான். அப்படியிருக்கையில் ஒருநாள் பூர்வஜன்ம வினைப்பயனால் மன்மத பாணங்களாலடிப்பட்டுக் காமத்தால் மதிமயங்கி 'அப்பா! வேண்டாம், வேண்டாமென்று தடுத்த தாயாரைப்பலாத்காரமாகப் பிடித்திழுத்துப் புணர்ந்தான். ரேதஸ்கலனமானவுடனே நல்லறிவு தோன்றி, ஐயோ! நாம் காமன் கணையால் புத்திகெட்டுப் பெற்ற தாயாரைப் புணர்ந்து மஹா பாதகஞ் செய்துவிட்டோமேயென்று வாய்விட்டலறி வருத்தப்பட்டு, ரிஷிகளிடத்திலோடி, நாணி அவர்களைப்பார்த்து, ஸர்வ,சாஸ்திரந்தெரிந்த மஹாத்மாக்களே! மாதுர்காமியான எனக்குப் பிராயச்சித்தம் விதித்து என்னைக் காத்தருளவேண்டும்; தாங்களென்ன பிராயச்சித்தம் விதித்தாலும் அதைச்

செய்யச்சித்தமாயிருக்கிறேன்; மரணமே பிராயச்சித்தம் என்று சொன்னாலும் சாகத்துணிந்திருக்கிறேன்; சந்தேகமில்லை. என்று சொன்னதைக்கேட்ட சில முனீசுவரர்கள் இவனோடு பேசினாலும் தோஷம் வருமென்று வாய்மூடிக்கொண்டிருந்தார்கள். இன்னம் சிலர் மாதுர்காமியான பாதகா! எங்கள் முன் நில்லாதே. ஓடு, ஓடு என்று துரத்தியடித்தார்கள். அப்பொழுது கிருபாசீலராயும், ஸர்வக்ஞராயுமிருக்கிற கிருஷ்ணத்வைபாயனர் அந்த ரிஷிகளைச்சாந்தப்படுத்தி துர்வினீதனைப்பார்த்து, 'அப்பா! இராமசேதுவில் இருக்கிற தனுக்கோடிக்கு உன் தாயாரையழைத்துக்கொண்டு சீக்கிரம்போய், சூரியன் மகரத்திலிருக்கிற மாகமாசத்தில், இந்திரியங்களின்கோபத்தையடக்கி, பரதுரோகத்தைவிட்டு, ஆகாரமில்லாமல் தாயாரோடு நிரந்தரமாய் ஒரு மாசம் ஸ்நானம்பண்ணினால் மாதுர்கமனதோஷம் நிவர்த்தியாய்விடும். நீயும், உன் தயாரும் பரிசுத்தராவீர்கள். சுருதிஸ்மிருதி புராணங்களில் தனுக்கோடியானது மஹாபாதகநாசனமாக அநேகந்தடவை சொல்லப்பட்டிருக்கிறது. ஸேது ஸ்நானத்தினால் நிவர்த்தியாகாத பாபங்கிடையாது. மநு முதலியோர் ஸ்மிருதிகளில் வேறு பிராயச்சித்தம் விதித்திருந்தாலும், இந்தத்தனுக்கோடியில் ஸ்நானம்பண்ணினால் கோடி பாதகங்கள்கூட நிவர்த்தியாய்விடுமென்பதை நீ வேதவாக்கியமாக நம்பி உடனே புறப்பட்டுத்தனுக்கோடிக்குப்போ.' என்று சொன்னார். துர்வினீதன் வியாசரையும், தனுக்கோடியையும் நமஸ்காரம் பண்ணி, தனுக்கோடிபோய், மாகமாசத்தில் சூரியன் மகரத்திலிருக்கும்பொழுது இந்திரியங்களையும், கோபத்தையும் அடக்கி ஒரு மாசம் நிராகாரனாய்ச் சங்கல்பபூர்வமாய், நிரந்தரமாய் ஸ்நானம்பண்ணித் திரிகாலங்களிலும் இராமநாதரைப் பக்தியுடனே தரிசித்து, மாசக்கடைசியில் பாரணைபண்ணிப் பரிசுத்தமான தாயாரோடு வியாசரிடம் வந்து அவரை வணங்கி, 'சுவாமீ, கருணைக்கடலே! மஹாநுபாவா! நான் தாயாரை அழைத்துக்கொண்டு தனுக்கோடிக்குப்போய், ஒருமாசம் ஆகாரம் சாப்பிடில்லாமல் ஸ்நானம்பண்ணி, மஹேசுவரனைத் தரிசனம் பண்ணி வந்தேன். பக்தவத்ஸலா! இனிமேலே நான் செய்யவேண்டியதைச் சொல்லியருளும்,' என்று பிரார்த்தித்தான். நா

ராயணும்சயான வியாஸ முனிவர் துர்விநீதனுக்குத் தர்மோபதேசம் பண்ணத்தொடங்கினர். 'அப்பா! ஸேது ஸ்நானத்தினால் உனக்கு மாதுர்கமன தோஷம் நிவர்த்தியாயிற்று. உன் தாயாருக்கும் உன்னோடு சேர்ந்த தோஷம் போய்விட்டது. இதில் சந்தேகமே கிடையாது. நான் சத்தியமாய் சொல்லுகிறேன். உன்னுடைய பந்துக்களும் மற்றுமுள்ள பிராமணர்களும் உன்னையும், உன் தாயாரையும் பரிசுத்தர்களாக அங்கீகரித்துக்கொள்வார்கள். தனுக்கோடியில் ஸ்நானம் பண்ணின நீ விவாகஞ்செய்துகொண்டு கிருகஸ்த தர்மத்தையனுஷ்டித்துவா. பிராணி ஹிம்சையைவிட்டு எப்பொழுதும் ஸஜ்ஜனங்களைப்பக்தியோடு பணி. சந்தியோபாசன முதலிய நித்திய கர்மங்களை விடாதே. இந்திரியங்களை யடக்கு. ஹரியையும், ஹரனையும் பூஜைசெய் பிறரை நிந்தை கூறாதே. அசூயை கொள்ளாதே. பிறர் வாழ்வைக்கண்டு பொறாமையடையாதே. அன்னியன் மனைவியைத் தாயாரைப்போல் எண்ணு. ஒதினவேதங்களை யொருபோதும் மறவாதே. அதிதியை அவமதி செய்யாதே. பிதுர்தினத்தில் சிராத்தத்தை விட்டுவிடாமல் செய். சொற்பனத்தில்கூடப் பிறர்மேல் கோள் சொல்லாதே. இதிகாசங்கள், புராணங்கள், தர்மசாஸ்திரங்கள், வேதாங்கங்கள், வேதாந்தம் இவைகளையடிக்கடி பரிசீலனைசெய்துகொண்டிரு. ஹரி ஹர நாமங்களை வெட்கப்படாமல் சொல்லிக்கொண்டிரு. ஜாபாலோபநிஷத்தில் சொல்லியிருக்கிற மந்திரங்களை யுச்சாரணம் பண்ணிக்கொண்டு விபூதியை உத்தூளனஞ் செய்துகொண்டு, திரிபுண்டரமாகவும் அணிந்துகொள். ருத்திராட்சத்தைத் தாரணம் பண்ணிக்கொள்ளு. எப்பொழுதும் சௌசாசாரபரனாக இரு. துளசி பத்திரத்தால் நாராயணனையும், வில்வபத்திரத்தால் பரமேசுவரனையும ஒருபொழுதாவது, இருபொழுதாவது, அல்லது மூன்றுபொழுதுமாவது பூஜைபண்ணு. விஷ்ணு நிர்மாலியத்தின்மேல் துளசிதளத்தையும் அவருடைய பாதோதகத்தையும் இட்டுஅவர் சந்நிதானத்தில் புசி. சிவநிர்மாலியத்திலே வில்வதளத்தையும் அபிஷேக தீர்த்தத்தையும் இட்டுச் சிவசந்நதியிலே புசி. அன்னம் சுத்தியாவதற்காக வைசுவதேவம் பண்ணு. வீட்டுக்குவந்த யதீசுவரர்களையும், பிரம நிஷ்டர்க

ளையும், விருந்தர்களையும், அநாதைகளாயிருக்கிறவர்களையும், ரோகிஷ்டர்களையும் அன்னங்கொடுத்து ஆதரி. மாதாவைப் பூஜை பண்ணு. ஔபாசனம் விடாதே. பிரணவத்தோடுகூடின பஞ்சாட்சர அஷ்டாக்ஷரங்களையும், இதர மந்திரங்களையும், பரிசுத்தனாயிருந்துகொண்டு மந்திராதிஷ்டான தேவதைகளைத் தியானித்துக்கொண்டு ஜபி இப்படியே ஸ்மிருதியில் சொல்லப்பட்ட இதர தர்மங்களையும் எப்பொழுதும் அநுஷ்டித்துவா. இப்படிச் செய்துகொண்டுவந்தால் தேகாந்தத்தில் நீ முக்திபெறுவாய்' என்று சொன்ன வியாசரைப் பணிந்து துர்விநீதன் அவர் சொன்னபடி தர்மானுஷ்டானம் பண்ணித் தேகாந்தத்தில் முக்தியும் அடைந்தான் அவனுடைய மாதாவுங்காலத்தில் இறந்து தனுக்கோடி ஸ்நானபலத்தினால் இறப்புப்பிறப்பில்லாத முக்தியையடைந்தாள். கேளும, யக்ஞதேவரே! இவ்விதமாகத் துர்விநீதனும் அவன் தாயாரும் தனுக்கோடியில் ஸ்நானம் பண்ணி முக்தியடைந்தார்கள். ஆகையால் உமது புத்திரனுடைய பிரம்மஹத்தி நிவர்த்திக்காக முக்தியைக்கொடுக்கும் தனுக்கோடிக்குப்போம்" என்று துர்வாசர் சொன்னதைக்கேட்டு யக்ஞதேவரும் தன் புத்திரனையழைத்துக்கொண்டு தனுக்கோடி போய்ச்சேர்ந்து, அங்கே ஆறுமாசம் தங்கியிருந்து ஸ்நானம்பண்ணிவந்தார். ஆறுமாசக்கடைசியில் ஒரு அசரீரிவாக்குத் தோன்றி, 'ஏ யக்ஞதேவரே! உன் பிள்ளையைப்பிடித்திருந்த பிரம்மஹத்தியும், சுராபானம், சொர்ணஸ்தேயம், கிராதஸ்திரீ சங்கமம் முதலான பாபங்களும் இன்றோடே விமோசனமாய் விட்டது. யக்ஞதேவரே! நீர் இந்த விஷயத்தில் சந்தேகப்படாதேயும்,' என்று சொன்னவுடனே, யக்ஞதேவர் சந்தோஷித்து இராமநாதரைச்சேவித்து, பிள்ளையோடுகூட ஊர் வந்துசேர்ந்து சுகமாய் வெகு காலம வாழ்ந்திருந்தார். கேளுங்கள், நரிகுரங்குகளே யக்ஞதேவர் குமாரனை சுமதி என்பவன் தனுக்கோடியில் ஸ்நானம் பண்ணி மஹா பாபங்களினின்றும் விடுபட்டதை யுங்களுக்குச் சொல்லிவிட்டேன். நீங்களும் உங்களுடைய பாப விமோசனத்துக்காகத் தனுக்கோடி போய்ச்சேருங்கள். பாப நிவர்த்திக்கு வேறுவழி கிடையாது, என்று சிந்துத்வீபர் சொன்னார்.

அதுகேட்ட நரியும் குரங்கும் அதிசீக்கிரம் வழிநடந்து சிரமத்தோடு தனுக்கோடிபோய், அதில் ஸ்நானம்பண்ணி ஸர்வபாபங்களினின்றும் விடுபட்டு, ஹாரகேயூர மகுடகடகாதி திவ்யாபரணங்கள் அணிந்து, தேவர்கள் புஷ்பமாரிபொழியத் தேவஸ்திரீகளிருபுறத்திலும் வெண்சாமரைகள் வீச அழகான தேவலோகம்போய், இந்திரனுடன் அர்த்தாசனத்தில் வீற்றிருக்கும் மகிமை பெற்றன.

கேளுங்கள் முனிவர்களே! தனுக்கோடியில் ஸ்நானம் பண்ணி நரியும் குரங்கும் பாபத்தினின்றும் விடுபட்ட கதையை உங்களுக்குச்சொல்லிவிட்டேன். இந்த அத்தியாயத்தைப் படிப்பவரும் கேட்பவரும் தனுக்கோடி ஸ்நானபலனையடைந்து யோகிகளுக்குங்கிட்டாத முக்தியையும் பெறுவார்கள்.

முப்பத்தைந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

முப்பத்தாறுவது

# தனுக்கோடியில் துராசாரன் ஸ்நானப்பண்ணி ஸம்ஸர்க்கபாதக தோஷம் நீங்கினதுகூறிய

அத்தியாயம்.

---

கேளுங்கள் முனிவர்களே! தனுக்கோடி வைபவத்தையுங்களுக்கு இன்னமுஞ் சொல்லுகிறேன். துராசாரன் என்பவன் இதில் ஸ்நானம்பண்ணி முக்தனானனென்று சொல்ல, முனிவர்கள், "ஐயா! சகல தத்துவமுந் தெரிந்த சூதமுனிவரே! துராசாரன் என்பவன் யார்? அவன் என்ன பாபஞ்செய்தான்? எப்படி முக்தியடைந்தான்? இவைகளை எங்களுக்கு விஸ்தாரமாக எடுத்துச்சொல்லவேண்டும்:" என்று கேட்கச்சூதர் சொல்லுகிறார்.

பூர்வம் கௌதமி தீரத்தில் துராசாரன் என்ற ஒரு பிராமணனிருந்தான. அவன் மஹாபாபி, சதா குருதார்யங்களைச்செய்து கொண்டு பிரம்மஹத்தி, சுராபானம், சொர்ணஸதேயம், குரு

தல்பகமனம் என்கிற நால்வகைப்பாபஞ் செய்தவர்களோடு
சிநேகமாயிருந்து காலங்கழித்து வந்தபடியால் இவனுக்குப்
பிராமணத்வம் முற்றிலும் தொலைந்துபோய்விட்டது. மஹாபா
தகர்களோடு சேர்ந்து ஒருநாள் வாசம்பண்ணுகிறவனுக்குப்
பிராமணியத்தில் நாலிலொரு பங்கு உடனே தொலைந்துபோய்
விடுகிறது. சம்சயமில்லை. இரண்டு நாள் மஹாபாதகர்களைப்பா
ர்த்து, ஸ்பரிசித்து, பந்தியில் ஸஹபோஜனம் செய்து, ஒரு படு
க்கையில் சேர்ந்து படுத்துக்கூடியிருக்கிறவனுக்கு அப்படியே
இரண்டுபங்கும், மூன்று நாளிருப்பவனுக்கு மூன்று பங்கு பிரா
மண்யமும் போய்விடுகிறது. நாலு நாள் கூடியிருப்பவனுக்குப்
பிராமண்யம் முற்றுந்தொலைந்துவிடுகிறது. அதற்குமேல் அவர்
களோடு சேர்ந்திருக்கிறவன் அவர்களுக்குச் சமானமான பாபி
யாய்விடுகிறான். இந்தத்துராசாரன் மஹா பாதகர்களோடு கலந்
திருந்தபடியால் பிராமணியத்தை யிழந்து மஹா பாதகனாய்விட்
டான். பின்பு பயங்கரமான பலமுள்ள ஒரு பெரிய வேதாளத்
தால் பிடிக்கப்பட்டுத் துன்பமடைந்து, தேச தேசாந்தரங்கள்,
வனம் வனாந்தரங்கள் எல்லாஞ்சுற்றித் திரிந்து, பூர்வபுண்ணிய
பரிபாகத்தால், மஹாபாதகநாசனமான தனுக்கோடியையடைய,
அவனைப் பிடித்துக்கொண்டிருந்த வேதாளம அவனை நீரில் அமு
க்கிற்று. அந்தத் தீர்த்தத்தில் முழுகி யெழுந்திருந்தவுடனே
வேதாளம் அவனைவிட்டு விலகிப்போய்விட்டது உடனே துராசா
ரனுக்கு நல்லறிவு வந்து, "இது எந்த தேசம்? இதென்ன சமு
த்திரம்? கௌதமிதீரத்திலிருந்த நாம் இங்கே வரவேண்டிய
காரணமென்ன?" என்று யோசித்துத் தனுக்கோடியில் வாசம்
பண்ணிக்கொண்டிருந்த தத்தாத்திரேயர் என்கிற மஹா யோகீசுவ
ரரைக்கண்டு வணங்கி, "சுவாமீ! இந்தத்தேசத்துக்குப் பேரெ
ன்ன? நான் கௌதமிதீரத்தில் வாசம்பண்ணிக் கொண்டிருந்
தேன். என் பேர் துராசாரன். நான் இங்கே எப்படி வந்தேன்?
கிருபைகூர்ந்து எனக்குச் சொல்லியருளவேண்டும்." என்று
கேட்க, கிருபாநிதியான தத்தாத்திரேயர் ஒரு முகூர்த்தகாலந்
தியானம்பண்ணி "ஏ துராசாரா! நீ மஹா பாதகர்களோடு சேர்
ந்திருந்தபடியால் பிராமணியத்தையிழந்து, வேதாளத்தால் பிடி
பட்டு, மதிமயங்கிச் சுவாதீனமற்று இங்கேவந்து சேர்ந்தாய்,
உன்னைப்பிடித்திருந்த வேதாளம் உன்னைத்தனுக்கோடி தீர்த்த
த்தில் அமிழ்த்திற்று நீ அதில் முழுகி யெழுந்திருந்தவுடனே
உன் பாதகம் விடுபட்டுப்போயிற்று. தனுக்கோடியில் ஸ்நானம்
பண்ணுகிறவர்களுடைய பஞ்ச மஹாபாதகங்களும் நசித்துப்
போகின்றன. ஆகையால் இதில் ஸ்நானம்பண்ணின நீ மஹா
பாதக ஸம்ஸர்க்க தோஷத்தினின்றும் விடுபட்டாய். உன்னைப்

பிடித்திருந்த வேதாளமும் விலகிப்போய்விட்டது. அந்த வேதாளம பூர்வஜன்மத்தில் ஒரு பிராமணன். பாத்திரபதமாதக் கிருஷ்ணபட்சத்தில் பார்வண விதிப்படி மஹாளய சிராத்தம செய்யாதபடியால் பிதுர் சாபம்பெற்று வேதாளமாயிற்று. தனுக்கோடியைக் கண்டவுடனே வேதாளத்துவம் விட்டொழிந்து விஷ்ணுலோகம் போய்ச்சேர்ந்தது. பாத்திரபத மாசத்தில் பிதுர்க்களை உத்தேசித்து மஹாளய சிராத்தம் பண்ணாதவர்கள் வேதாளமாகவே பிறப்பார்கள். சந்தேகமேயில்லை. ஆகையால் பிதுர்க்களை யுத்தேசித்துச் சக்தியாநுசாரம் ஒன்று, இரண்டு, அல்லது மூன்று பிராம்மணர்களை வைத்து மஹாளயசிராத்தஞ் செய்தால் அவனுக்கு ஒருபோதும் துர்க்கதி கிடையாது. இந்த மஹாளய சிராத்தத்துக்குப் பாத்திரபதமாத முதல் விருச்சிக மாசபரியந்தம் தத்துவதரிசிகளான முனிவர்கள் கால அளவு ஏற்படுத்தியிருக்கிறார்கள். ஆனாலும் பாத்திரபதமாசம் கிருஷ்ணபட்சம் மிகவும் விசேஷமானது. கிருஷ்ணபட்சம் பிரதமாதிதியில் வேதவித்தான பிராமணனை வைத்து மஹாளயசிராத்தம் பண்ணினால் அக்கினிபகவான் திருப்தியடைந்து அவனுக்கு இகத்தில் சகல போகபாக்கியங்களையுங் கொடுத்து, அந்தத்தில் தன்னுலகத்தில் வாழ்ந்து ஆனந்திக்கிறபெருமையைக்கொடுக்கிறார். பண்ணுகிறவனுடைய பிதுர்க்களும பதினாயிரம கற்பம திருப்தியடைகிறார்கள் பிரதமாதிதியில் சிராத்தம் பண்ணாவிட்டால் அவனுடைய வீட்டையும், வயலையும், ஐசுவரியத்தையும அக்கினி கொளுத்தி அழித்துவிடுகிறார். துவிதியையில் மஹாளயசிராத்தம் பண்ணினால் பவானிபதியாகிய சம்புதிருப்தியடைந்து, இகத்தில் சகல வாழ்வையும் கொடுத்து, முடிவில் கைலாசபதவியையும் கொடுக்கிறார். பண்ணினவனுடைய பிதுர்க்களும்இருபதினாயிரம் கற்பம் சந்தோஷமடைந்து இவனுடைய சந்ததி விருத்தியாகும்படி ஆசீர்வதிக்கிறார்கள் அந்தத்திதியில் மஹாளயம்பண்ணாமல் போனால் சம்புவானவர் கோபங்கொண்டு அவனுடைய பிரமதேஜஸை அழித்துக் காலசூத்திரமென்கிற ரௌரவ நரகத்திலே தள்ளுகிறார். திரிதியைதிதியில் மஹாளயசிராத்தம் பண்ணினால் லோகபாலனான குபேரன் திருப்தியடைந்து, மஹாபத்ம முதலான நிதிகளை அவன் வசப்படுத்துகிறான். பிரம விஷ்ணு ருத்திரர் மூவரும் அவனுக்கு வசப்படுகிறார்கள அவனுடைய பிதுர்க்களும் முப்பதினாயிரம் கற்பம் திருப்தியடைகிறார்கள். அந்தத் திதியில் மஹாளயம் பண்ணாமல்போனால் குபேரன் கோபங்கொண்டு, அவனுடைய ஐசுவரியத்தை அபகரித்துக்கொண்டு மஹா துக்கம் நிறைந்த தரித்திரத்தைக் கொடுக்கிறான். சதுர்த்தி திதியில் பக்தியுடனே மஹாளயம் பண்ணினால் பார்வதி குமாரனாகிய

விநாயகமூர்த்தி திருப்தியடைந்து அவனுக்கு வருகிற விக்கினங்களையெல்லாம் நிவர்த்தி பண்ணுகிறார். அவனுடைய பிதுர்க்களும் நாற்பதினாயிரம் கற்பம் சந்தோஷப்பட்டு ஏராளமான சந்ததியைக்கொடுத்து நிரந்தரமாகச் சிராத்தத்தை நிறைவேற்றிக் கொள்ளுகிறார்கள். அந்தத்திதியில் செய்யாவிட்டால் விக்கினேசர் கோபங்கொண்டு, அவன் தொடங்குகிற காரியங்களுக்கெல்லாம் விக்கினத்தை யுண்டாக்கிச்சண்டகோலாகல மென்கிற நரகத்தின் ஆழத்தில் தள்ளியழுத்திவிடுகிறார். பஞ்சமிதிதியில் மஹாளயம் பண்ணினால் அவனிடத்தில் விஷ்ணுபத்தினியாகிய இலட்சுமீதேவியானவள் அவனுடைய வீடு, வயல், மனைவி முதலானவர்கள் சிறந்து விளங்கும்படி எப்பொழுதும் அவனிடத்தில் வாசமாயிருக்கிறாள். அவனுடைய கீர்த்தியும் சந்திரசூரியர்கள் உள்ளவரைக்கும் பூலோகத்தில் ஓங்கிவளரும்படி கடாக்ஷஞ்செய்கிறாள். அவனுடைய பிதுர்க்களும் ஐம்பதினாயிரம் கற்பம்வரைக்கும் திருப்தியடைந்து அவனுடைய சந்ததியும் இடையறாமல் விருத்தியாகச்செய்கிறாள். மஹா ஐசுவரியத்தைக்கொடுக்கிற பார்வதிதேவியும் அவனிடத்தில் பிரசன்னமாயிருக்கிறாள். அந்தத்திதியில் மஹாளயம் பண்ணாமல் போனால் கலகத்துக்கு ஆதாரமான மூதேவி அவன் வீட்டில் பிரசன்னமாயிருந்துகொண்டிருக்கிறாள். ஷஷ்டிதிதியில் மஹாளயம் பண்ணினால் பார்வதி புத்திரராகிய ஷண்முகக்கடவுள் திருப்தியடைவார். அவருடைய பிரசாதத்தால் புத்திர பௌத்திரர்களெல்லாரும் பாலக்கிரக தோஷம் முதலான துன்பங்களில்லாமல் சுகமாக வாழ்ந்திருப்பார்கள். அவனுடைய பிதுர்க்கள் அறுபதினாயிரம் கற்பம் திருப்தியடைந்து ஏராளமான சம்பத்தையும், சந்ததியையும் கொடுக்கிறார்கள். அந்தத் திதியில் மஹாளயம் பண்ணாவிட்டால் ஷண்முகதேவர் கோபங்கொள்வார். அவனுடைய பிரஜைகளும் பூஸ்பரிசமானவுடனே அழிந்துவிடுகின்றன. இல்லாவிட்டால் பூதனாதி கிரகங்களால் குழந்தைகளெல்லாம் நிரந்தரமாய்ப் பீடிக்கப்பட்டு வருந்துகிறார்கள். அவனும் வன்னிஜ்வாலாப் பிரவேச நரகத்தில் விழுந்து துன்பப்படுவான். ஸப்தமிதிதியில் மஹாளயம் பண்ணினால் ஹிரண்யபாணியான சூரியதேவன் திருப்தியடைந்து ஆரோக்கியத்தைத்தந்து, திடகாத்திரனாய்ச்செய்து தமது கையாலே சொர்ணத்தையள்ளிக்கொடுக்கிறார். அவனுடைய பிதுர்க்கள் எழுபதினாயிரம் கற்பம் திருப்தி யடைந்து அவனுடைய சந்ததியறாமல் விருத்தியாகச்செய்கிறார்கள். பண்ணாதவன் க்ஷயம் முதலிய ரோகங்களால் இரவும் பகலும் வருந்திக்கடைசியில் தீக்ஷ்ணதாராஸ்திரசையை என்கிற நரகத்திலே விழுகிறான்.

அஷ்டமி திதியில் மஹாளய சிராத்தம் செய்கிறவனிடத்தில் மிருத்தியுஞ்ஜயராயும், கிருத்திவாசராயுமிருக்கிற சங்கரர் பிரசன்னராய்க் கைவல்யமாகிய மோட்சத்தைக்கொடுக்கிறார். சாட்சாத் திரியம்பகமூர்த்தியே பிரசன்னராயிருக்கும்போது பதினாலுலோகங்களிலேயும் அவனுக்குக்கிடைக்காதது என்ன இருக்கிறது? அவனுடைய பிதுர்க்கள் எண்பதினாயிரம் கற்பம் திருப்தியடைந்து ஆசீர்வதித்து அவனுக்கு வரும் இடையூறுகளையும் நீக்கியழியாத சந்ததியையும் கொடுக்கிறார்கள். மூடத்தனத்தினால் சிராத்தம் பண்ணாதவன் கோரமான ஸம்ஸார ஸாகரத்தில் விழுந்துமுழுகிக்கிடக்கிறான். அவன் பூமியிலுள்ள பரியந்தம் அவனுடைய எண்ணங்கள் நிறைவேறுகிறதில்லை. கடைசியில் சந்திர நட்சத்திரங்களுள்ள பரியந்தம் வைதரணி நரகத்தில் விழுந்துவருந்துகிறான். நவமி திதியில் மஹாளயம் பண்ணுகிறவனிடத்தில் சப்பு பத்தினியாகிய துர்க்காதேவி பிரசன்னமாயிருந்து க்ஷயாபஸ்மாரகுஷ்டாதிரோகங்களையும் கனமானபூதப்பிரேத பிசாசங்களையும் விலக்கிக்காக்கிறாள். அவனுடைய பிதுர்க்தேவதைகளும் தொண்ணூறாயிரம்கற்பம் திருப்தியடைந்து கெடாத சந்ததியையுங்கொடுக்கிறார்கள். அந்தத் திதியில் மஹாளயம் பண்ணாவிட்டால் அபஸ்மார ரோகத்தாலும், பிரமராக்ஷஸாலும், பில்லிசூனியங்களாலும் துன்பப்படுகிறான். தசமி திதியில் மஹாளயம் பண்ணுகிறவனிடத்தில் பதினாறு கலைகளோடுகூடிய சந்திரன் பிரத்தியட்சமாகி, அவனுடைய நெல் முதலான தானியங்களையும், செடிகொடிப்பயிர்களையும் வளர்ந்தோங்கச்செய்கிறான். அவனுடைய பிதுர்க்களும் நூறாயிரம் கல்பம்திருப்தியடைந்து சந்ததியைக்கொடுக்கிறார்கள் பண்ணாமல்போனால் அவனுடைய செடிகொடிகள் பயனற்றுப்போய், வேளாண்மைத் தொழிலும் கெட்டுப்போகிறது. ஏகாதசியில் மஹாளயம் பண்ணுகிறவனிடத்தில் ஸகல லோக ஸம்ஹாரகர்த்தாவாகிய ருத்திரமூர்த்தி பிரசன்னராய் அவனுடைய சத்துருக்களை ஜயிக்கிறார். பதினாயிரம் பிரம்மஹத்தி தோஷங்களும் தொலைந்துபோகின்றன. அக்கினிஷ்டோமாதியாகங்களின் பூரண பலனும் கைகூடுகிறது. இருநூறாயிரம் கல்பம் அவனுடைய பிதுர்க்கள் திருப்தியடைந்து சந்ததியைக்கொடுக்கிறார்கள் பண்ணாமல்போனால் ருத்திரமூர்த்தி கோபங்கொள்ளுகிறார். அவன் அநேகமான சத்துருக்களால் துன்பப்படுகிறான். அவன் வெகு தக்ஷிணை கொடுத்துச்செய்கிற அக்கினிஷ்டோமாதி யாகங்கள் சாம்பலிற் செய்த ஆகுதிபோல் நிஷ்பிரயோஜனமாகின்றன. இவன் சிராத்தம் பண்ணாத தோஷத்தால் பிரம்மஹத்தி செய்

தவனுக்குச் சமானமாய்விடுகிறான். துவாதசி திதியில் மஹாளயம் பண்ணினால் இலட்சுமிபதியாகிய ஸ்ரீமந்நாராயணர் பிரசன்னராகிறார். தேவதேவனான ஜனார்த்தனன் பிரசன்னராயிருக்கும்போது சராசரமான உலகமெல்லாமவனிடத்தில் பிரியமாயிருக்கிறது. விஷ்ணுவினுடைய தேவிமார்களான பூமிதேவியும், இலட்சுமிதேவியும் அவனுடைய தானியசம்பத்தையும் தனசம்பத்தையும் வளர்ந்தோங்கச்செய்கிறார்கள். நாராயணர் கையிலிருக்கிற கதை அபஸ்மாராதி பூதங்களையும், தீட்சண்ய முனைகளையுடையசக்கிராயுதம் அவனுடைய சத்துருக்களையும், சங்கமானது ராட்சசர் பிசாசாதிகளையும் அழித்துத்தொம்சம் பண்ணுகின்றன. இப்படியாகக் கேசவன் சகலவிதமான கஷ்டங்களையும் நிவர்த்திசெய்கிறார். அவனுடைய பிதுர்க்களும் அறுநூறாயிரம் கற்பம் திருப்தியடைந்து சந்ததிகளை அவிச்சின்னமாகச்செய்கிறார்கள். பண்ணாமல்போனால் அவனுடைய சம்பத்தும், வயல் முதலியவைகளும் நசித்துப்போகின்றன. அபஸ்மாராதி பூதங்களும், சத்துருக்களும், ராட்சசர், பேய் முதலியவைகளும் துன்பப்படுத்துகின்றன. கடைசியாக அஸ்திபேதனமென்கிற நரகத்திலும் விழுகிறான். திரயோதசியில் மஹாளயம் பண்ணினால் இரதிதேவி நாயகனாகிய காமதேவன் பிரசன்னமாய்ச்சந்தணம், மாலை, பெண்முதலிய விஷயாதி போகங்களைக் கொடுத்துப்பிறந்தது முதல் சாகும்வரையில் சுகத்தையே கொடுக்கிறான். அவனுடைய பிதுர்க்களும் பத்து இலட்சம் கற்பம் திருப்தியடைந்து சந்ததிவிருத்தியைக்கொடுக்கிறார்கள். பண்ணாமல்போனால் காமதேவன் கோபங்கொண்டு, அவனுடைய மனைவிமுதலிய போகவஸ்துக்களை நாசம்பண்ணிக் கடைசியில் அங்காரசையாபிரமணம் என்கிற நரகத்திலும் தள்ளிவிடுகிறான். சதுர்த்தசியில் பக்தியோடு மஹாளயம் பண்ணினால் சாக்ஷாத் சங்கரமூர்த்தியவனுடைய அபீஷ்டசித்தியைக்கொடுத்துச் சுராபானம், சொர்ணஸ்தேயம் விருஷ்னஸ்திரீ சம்போகம், சண்டாளஸ்திரீ சங்கமம், முதலான மஹாபாதகங்களையும் போக்கிச் சிவஞானத்தையூட்டிச சாயுஜ்யத்தையுங்கொடுக்கத்தயாராயிருக்கிறார். ஆயிரம் அசுவமேதயாகம், பதினாயிரம் பௌண்டரீகயாகங்கள் செய்த பூர்ண பலசித்தியுண்டாகிறது. அவனுடைய பிதுர்க்களும், நூறாயிரம் இலட்சங்கோடி கற்பம் திருப்தியடைந்து, அவிச்சின்னமான சந்ததியையும் கொடுக்கிறார்கள். நரகத்திலிருக்கிற பிதுர்க்கள்கூட சொர்க்கத்தையடைகி

ருர்கள். பண்ணுமல்போனல் நூருயிர இலட்சங்கோடி கற்பம் சம் சாரம் என்கிற இருண்ட கிணற்றில் விழுந்து பிராயச்சித்தமில்லா மல் திரிகிருர்கள். இவன் தங்கத்தைத் திருடாமலிருந்தாலும், சுரா பானம் பண்ணுமலிருந்தாலும் அந்தப் பாபங்களையடைகிறுன். இவன் கிரமப்படி செய்த யாகங்களும் நிறைவேருமல் நிஷ்பலமா கின்றன. அமாவாசையில் மஹாளயஞ்செய்தால் அவனுடைய பிதுர்த்தேவதைகளெல்லாரும் அமிர்தபானம் பண்ணின தேவர்க ளைப்போலத் திருப்தியடைவார்கள். இந்த அமாவாசையானது பிதுர்த்தேவதைகளால் நமஸ்கரிக்கப்பட்டது. பரமசிவனுக்குப்பி ரியமானது, பிரம்மஹத்தியாதி மஹாபாதகங்களையும் போக்கத்த க்கது. விதிப்படி செய்யப்பட்ட சகல பலனையும், தர்மபலனையுங் கொடுக்கத்தக்கது. அதில் மஹாளயம் பண்ணுகிறவன் பிரத்தியக் பிரம்மத்தை யறிந்து சாயுஜ்ஜியமடைகிறுன். அதில் மஹாளயம் பண்ணுதவனுடைய பிதுர்த்தேவதைகள் பிரம்மலோகத்திலிருந் தாலும் நரகத்தில் விழுகிருர்கள். சந்ததியும் அற்றுப்போகிறது. இந்த அமாவாசையில் மஹாளயஞ்செய்து விதிப்படி பிராம்மணர் களுக்கும் அன்னம் கொடாமலிருக்கிறது பெரிய கெடுதி.

புரட்டாசிமாசம் வந்தவுடனே பிதுர்க்களெல்லாரும் நம்மு டைய புத்திரர்கள் நம்மை உத்தேசித்துப் பிராமணர்களுக்கு அன் னம் அளிப்பார்கள்; அதனுல் நம்முடைய நரகவேதனை தீர்ந்து விடும்; சூரிய சந்திர நட்சத்திரங்களுள்ளமட்டும் நமக்குச்சொர் க்க வாழ்வு கிடைக்கும் என்று ஆனந்தத்தாலே நர்த்தனம் பண்ணிக் கொண்டிருக்கிருர்கள். பாத்திரபதமாசத்தில் தினந்தோறும வேத வித்தான ஒரு பிராமணனுக்கும், விசேஷமாய்க் கிருஷ்ணபட்சம் முழுமையுமாவது, அல்லது கிருஷ்ணபட்சம் ஸப்தமி முதல் அமா வாசைவரைக்கும் தினம் வேதமுணர்ந்த மூன்று பிராம்மணர்க ளுக்கும், அல்லது துவாதசிமுதல் அமாவாசைவரைக்கும் கட்டா யம் தினம் மூன்று வேதப்பிராம்மணர்களுக்கும், எண்ணெய் கொ டுத்து நெய், பருப்பு, பால், பாயசம், தயிர், அதிரசம், வடை, தேன், திரட்டுப்பால், நானுவிதமான சாகாதிகள், அநேகவித பட் சணங்களோடு சம்பா அரிசி அன்னம் திருப்தியாகும் வரைக்கும் தாராளமாய்ப்போடவேண்டும். இப்படிபோட்டால் அவனுடைய மாதுர்வம்ச பிதுர்வம்ச பிதுர்க்கள் ஒரு கற்பம் அமிர்தபானம் பண் ணிக்கொண்டு திருப்தியடைந்திருக்கிருர்கள். அக்கினிஷ்வாததாதி

பிதுர்த்தேவதைகளும், இந்திராதிதேவர்களும், மும்மூர்த்திகளும் சந்தோஷப்படுகிறார்கள். அதிகமாகச்சொல்லுவானேன்? மூன்று உலகங்களும் ஆனந்திக்கின்றன. இந்த மஹாளயத்தைப் பார்வண சிராத்தமாகச்செய்து, மாதுர்வம்ச பிதுர்க்களையும் பிதுர்வம்ச பிதுர்க்களைப்போல அழைத்துச் சக்திக்கேற்றபடி தட்சிணை கொடுக்க வேண்டியது. இந்த தட்சிணை யாகங்களில் புரோகவமென்று சொல்லப்படுகிறது. இந்தப்புரோகவமில்லாமல் செய்யப்படுகிற யாகமெப்படி நிஷ்பலனாய்ப்போய்விடுகிறதோ அதுபோலத் தட்சிணையில்லாமல் செய்யப்படுகிற மஹாளய சிராத்தமும், வியர்த்தமாய்ப்போய்விடுகிறது. ஆகையால் மஹாளயத்தில் கொஞ்சமாவது தட்சிணை கொடுக்கவேண்டியது. புத்திரர்களில்லாத விதவைகள் கூடத் தங்களுடைய பர்த்தாக்களையுத்தேசித்துச் சமாராதனை ரூபமாய் மஹாளயத்தைச் செய்யவேண்டியது. செய்யாமலிருந்தால் அவர்களுக்குத் தர்மஹானியும், குரூரமான நரகமும் சம்பவிக்கும். பாத்திரபதமாசத்தில் மஹாளயஞ் செய்யாமலிருக்கிறவனுடைய குலம் நாசமாய்ப்போய்விடுகிறது. ஐசுவரியமழிந்து தரித்திரம் வந்து பிரம்மஹத்தி சூழ்ந்துகொள்ளுகிறது. சிரத்தையோடு பிதுர்க்களையுத்தேசித்து மஹாளயம் பண்ணுகிறவர்களுடைய சந்ததி ஒருபோதும் அழிந்துபோகிறதில்லை. அழியாத சம்பத்துமுண்டாகிறது. அவன் குடும்பம் எப்பொழுதும் மங்களகரமாகவே வாழ்ந்துகொண்டிருக்கிறது. மஹம் என்றால் மங்களத்துக்குப் பெயர். ஆலயம் என்றால் இருப்பிடத்துக்குப் பெயர். மங்களத்துக்கு இருப்பிடமானபடியால் இந்தச்சிராத்தத்துக்கு மஹாளயமென்று பெயர். இந்த மஹாளயம் செய்கிறவனுக்கு ஒருபோதும் அமங்களமுண்டாகாது. மாதாபிதாக்களிறந்த திதியில் சிராத்தம் பண்ணிவிட்டாலும், அவசியம் மஹாளய சிராத்தம் பண்ணித்தீரவேண்டும். மஹாளயம் பண்ணச்சக்தியில்லாமல்போனால் சிஷ்டர்களான பிராம்மணனிடத்தில் தனதானியங்களை யாசகஞ்செய்தாவது செய்து தீரவேண்டும். பதிதர்களிடத்தில் யாசகம் பண்ணக்கூடாது. தனதானிய யாசகம் செய்வதற்குப் பிராம்மணனில்லாமற்போனால் யோக்கியனான க்ஷத்திரியனிடத்திலும், க்ஷத்திரியன் கிடைக்காமல்போனால் யோக்கியனான வைசியனிடத்திலும் யாசகம் பண்ணவேண்டியது. வைசியனும் கிடைக்காமற்போனால் பசுவுக்குப் புல் போடவேண்டியது. அல்லது, காட்டுக்குப்போய்க் கையினால் வயிற்றிலடித்துக்கொண்டு, 'ஓ பிதுர்த்தேவதைகளே!

தங்களுக்குத் திருப்திசெய்விக்கவேண்டிய பாத்திரபதமாசம் வந்து விட்டதே! நானோ தரித்திரனாகவும், வெட்கமற்றவனாகவும், பாபியாகவுமிருக்கிறேன். உங்களுக்கு மஹாளய சிராத்தம் பண்ணச் சக்தியில்லை. உலக முடியச்சுற்றித்திரிந்தும் எனக்குக்காசு கிடைக்கவில்லை. நீங்கள் தயாமூர்த்திகளானபடியால் என் பேரிலிரக்கம் வைத்துப் பொறுத்துக்கொள்ளவேண்டும்' என்று கண்ணீர்விட்டுக் கதறியழவேண்டும். அப்படிச்செய்தால் அவனுடைய பிதுர்த்தேவதைகள் அமிர்தபானம பண்ணின தேவர்களைப்போலத் திருப்தியடைகிறார்கள். மஹாளயத்தில் பிராம்மணர்களுக்குப் போஜனஞ் செய்வித்தால் எவ்வளவு திருப்தியடைவார்களோ அப்படியே பசுவுக்குப்புல் போடுவதாலும், காட்டிலேபோய் அழுவதாலும் திருப்தியடைகிறார்கள். இந்த பாத்திரபதமாசத்தில் மஹாளயஞ் செய்வதற்கு இடையூறாகச் சூதகம்முதலிய ஆசௌசம்சேரிட்டால்சூதகம்போனபிறகு விருச்சிகமாசத்துக்குள்ளே ஒருநாள் செய்துவிடவேண்டியது. மஹாளய சிராத்தத்தில் தகப்பனுக்காக ஒரு வேதவித்தான பிராமணனையும், பிதாமகனுக்காகஒருபிராமணனையும், பிரபிதாமகனுக்காக ஒரு பிராமணனையும், மாதாமகன், மாதுப்பிதாமகன், மாதுப்பிரபிதாமகன் இமமூவரையும் உத்தேசித்து மூன்று பிராமணர்களையும், விசுவே தேவர்களுக்காக இரண்டு பிராமணர்களையும், மஹாவிஷ்ணுவுக்காக ஒரு பிராமணனையுமாக ஒன்பது பிராமணனை வரிக்கவேண்டியது. அப்படியில்லாவிட்டால் மாதுர்வர்க்கத்துக்கு ஒரு பிராமணனும், பிதுர்வர்க்கத்துக்கு ஒரு பிராமணனும், விசுவே தேவர்களுக்காக ஒரு பிராமணனும், மஹாவிஷ்ணுவுக்காக ஒருபிராமணனுமாக நாலுபிராமணர்களையும் வரிக்கவேண்டியது அவசியம். வரிக்கப்படும் பிராமணர்களும் வேதவித்துக்களாயும், ஆசாரசம்பன்னர்களாயும் இருக்கவேண்டும். அப்படியில்லாமல்போனால் மஹாளயம் நஷ்டம். துராசாரனே, கேளு. பாத்திரபதமாசத்தில் விசேஷமாகக் கிருஷ்ண பட்சத்திலாவது சிரத்தையோடும் மஹாளயம் பண்ணினால் சர்வ தீர்த்தஸ்நான பலனும், அக்கினிஷ்டோமம் முதலான நூறுயாகங்கள் பண்ணினபலனும், துலாபுருஷதானமுதலான தானங்கள் பண்ணினபலனும், சாந்திராயணாதிவிரதங்கள் பண்ணின பலனும், சாங்கமாக நாலுவேதங்களையும் பாராயணம் பண்ணின பலனையும், காயத்திரியாதி மஹா மந்திரங்களை ஜபித்த பலனையும், இதிகாசபுராணங்களைப் படித்த பல

லேயும் அடைந்து, அந்தத்திலே பிரம விஷ்ணு ருத்திரர்களு டைய பதவிகளேயும் கிரமமாக அடைவான். மஹாளயத்துக் குச் சமானமான விரதம் கிடையாது. மஹாளய முதலிய சிராத் தம் நித்தியமென்றும் காமியமென்று இரண்டு வகைப்படும். ஆகை யால் செய்யாத பட்சத்தில் கெடுதியும், செய்தால் இஷ்டசித்தியும் உண்டாகுமென்பதில் ஆக்ஷேபணையில்லை. மஹாளயத்தைச் செய் தால் பூதப்பிரேத பிசாச, டாகினி முதலிய துஷ்டதேவதைகளும் அபஸ்மாரம் முதலான துஷ்டகிரகங்களும் இராட்சதர்களும் உட னே நசித்துப் போகிறார்கள். ஏராளமான சம்பத்துமுண்டாகிறது.

பூர்வகாலத்தில் தசரதரானவர் வசிஷ்டருடைய உபதேசத்தி னுல் புரட்டாசி மாசத்தில் மஹாளய சிராத்தம் பண்ணி லோகப் பிரியர்களான இராமன் முதலான நாலு பிள்ளைகளையும் பெற்று உலகத்திலே மேலான செல்வத்தையும், உத்தமமான கீர்த்தியை யும் அடைந்தார். இராஜஸத்தமனுகிய யயாதி மஹாராஜாவும் யது முதலாயின வம்சவர்த்தனர்களான புத்திரர்களைப் பெற்று, பிறரு க்கெட்டாத சொர்க்கத்தையும் அடைந்தான். துஷ்யந்த மஹாராஜ னும் மஹாளயஞ் செய்த பலனுல் பரதனென்கிற புத்திரனைப் பெற் முன். தமயந்தி நாயகனுகிய நளமஹாராஜனும் இந்தமஹாளயத்தை ச்செய்து கொடுமையானகஷ்டங்களையுங்கடந்து, கலியையும் புஷ் கரனையும் ஜயித்து இராஜ்யத்தையு மடைந்து, வாழ்ந்து, இந்திர சேனனென்கிற தார்மிகனுன புத்திரனையும் பெற்முன். சத்திய வாக்கியனுன ஹரிச்சந்திர மஹாராஜாவானவர் மஹாளயம்பண்ணின புண்ணியத்தினுலே விசுவாமித்திரர் செய்த கொடுமையினின்றும் விடுபட்டு சந்திரமதி என்கிற பாரியையும், லோகிதாசுவன் என்கிற குமாரனையும் மீட்டுச் சுகப்பட்டான். பலசாலியான கார்த்தவீரியா ர்ச்சுனன் மஹாளயஞ்செய்த புண்ணியத்தினுலே பதினெட்டுத்தீவு களுக்கும் ஆதிபத்தியத்தைப் பெற்முன். தசரதராமன் தண்டகார ணியத்தில் மஹாளயஞ்செய்த பலத்தினுல் இராவணனை ஜயித்துச் சீதையை மீட்டுக்கொண்டார். யுதிஷ்டிர மஹாராஜாவும் மஹா ளயஞ்செய்து துக்கசாகரத்தைக் கடந்து, துரியோதனுதியர்களை வென்முர். வசிஷ்டர், அத்திரி, பிருகு, குத்ஸர், கௌதமர், ஆங்கி ரஸ், காசியபர், பர்த்வாஜர், விசுவாமித்திரர், அகஸ்தியர், பராசரர், மிருகண்டு, மற்றுமுள்ள ரிஷிசிரேஷ்டர்களும் இந்த மஹாளயம் பண்ணின பலத்தினுலே அணிமாதி அஷ்டசித்திகளுக்கும், விரதங்

களுக்குமிருப்பிடமாகி உலகத்திலே மேன்மை பெற்றவர்களாய்ச் சீவன் முக்தராயிருந்தார்கள். ஆகையால், துராசாரா! க்ஷேமத்தை விரும்புகிறவன் அவசியம் மஹாளயஞ்செய்து தீரவேண்டும். உன்னைப் பிடித்துக்கொண்டிருந்த வேதாளம் பூர்வ ஜன்மத்தில் குசஸ்தலி என்கிற கிராமத்தில் வாசம் பண்ணிக்கொண்டிருந்த பரத்துவாசர் என்கிற பிராமணனுக்கு வேதநிதி யென்கிற புத்திரனாக பிறந்திருந்தான். அவன் மஹாளய சிராத்தம் செய்யாத தோஷத்தால் பிதுர் சாபம் வந்து இந்த ஜன்மத்தில் வேதாளமாகப் பிறந்திருந்தான். புரட்டாசிமாசத்தில் அவசியம் மஹாளய சிராத்தம் பண்ணு. பண்ணினால் தாரித்திரியம் வாராது. சுகமாக வாழ்ந்திருப்பாய். மஹாபாதக ஸம்ஸர்க்கம் பண்ணாதே. நீ வேதாளத்தினிடம் அகப்பட்டுக்கொண்டு பட்ட கஷ்டம் போதும். சீக்கிரம் ஊர் போய்ச்சேரு. நான் அநுமதிகொடுத்துவிட்டேன்" என்று தத்தாத்திரேயர் சொன்னார். துராசாரன் அவரை நமஸ்காரம் பண்ணிக்கிருதார்த்தனாகித், தன்னூர்போய்ச்சேர்ந்து, தத்தாத்திரேயர் சொன்னபடி பாதகருடைய சேர்க்கையை ஒழித்துவிட்டுத், தன்னாச்சிரமத்துக்குரிய ஆசாரத்தை யனுஷ்டித்துக்கொண்டிருந்து, தேகாந்தத்தில் மோட்சம் போய்ச்சேர்ந்தான்.

கேட்டீர்களோ, முனிவர்களே. துராசாரனென்பவன் மஹாபாதக நாசனியான தனுக்கோடியில் ஸ்நாநம் பண்ணி, பாபத்தினின்றும் விடுபட்ட சரித்திரத்தையுங்களுக்குச் சொல்லிவிட்டேன். இந்தத் தனுக்கோடியின் மகிமையை நானென்னென்று சொல்வேன்? பிராயச்சித்தமில்லாத பாபங்களைக்கூட இந்தத்தனுக்கோடி நாசம் பண்ணிவிடுகிறது. சூத்திரன் பூஜைபண்ணின சிவ விஷ்ணுக்களை வணங்குகிற பிராமணனுக்கும், பிராமணநிந்தை செய்கிறவனுக்கும், நம்பிக்கை துரோகம் பண்ணுகிறவனுக்கும், செய்த நன்றி மறக்கிறவனுக்கும், பிராதுர்ப்பாரியா சங்கமம் செய்கிறவனுக்கும், சூத்திரனுடைய அன்னத்தைப் புசிக்கிறவனுக்கும், வேதநிந்தை செய்கிறவனுக்கும், கன்னியா விக்கிரயம் பண்ணுகிறவனுக்கும், குதிரை விக்கிரயம் பண்ணுகிறவனுக்கும், வேதவிக்கிரயஞ் செய்கிறவனுக்கும், வேதவிக்கிரயத்தையே தொழிலாகக் கொண்டவனுக்கும், தர்மவிரதம், தீர்த்தம் இவைகளை விக்கிரயம் பண்ணுகிறவனுக்கும், மாதுர்த்துரோகம், பிதுர்த்துரோகம், யதிதுரோகம் செய்வதில் ஆசைகொண்டவனுக்கும், குருநிந்தை, யதிநிந்தை, சிவநிந்தை, விஷ்ணு நிந்தை பண்ணுகிறவனுக்கும், நல்ல கதையைத்

தூஷிக்கிறவனுக்கும் பிராயச்சித்தமில்லையென்று ஸ்மிருதிகர்த்தர்கள் சொல்லியிருக்கிறார்கள். அப்படிப்பட்ட பாதகர்கள் கூடத் தனுக்கோடிஸ்நானத்தினால் பரிசுத்தராகிறார்கள். ரிஷீசுவரர்களே! இவ்விதமாகத் தனுக்கோடி வைபவத்தையுங்களுக்குச் சொல்லி விட்டேன். இந்த வைபவத்தைக் கேட்கிறவனுக்குச் சகலபாபங்களும் நீங்கிவிடுகின்றன.

முப்பத்தாறுவது அத்தியாயம்
முற்றிற்று

---

## முப்பத்தேழாவது
# க்ஷீரகுண்டத்தின் சொரூபம் கூறிய
## அத்தியாயம்.

---

கேளுங்கள் முனீசுவரர்களே! சக்கிரதீர்த்தம் முதலாக இருபத்துநாலு தீர்த்தங்களையும் உங்களுக்குச் சொல்லிவிட்டேன்! இன்னம் எந்த அற்புதமான விஷயங்களை நீங்கள் கேட்க விரும்புகிறீர்கள்? என்று கேட்க, "ஐயா! க்ஷீரகுண்டத்துக்கு சமீபத்தில் சக்கிரதீர்த்தமிருக்கிறதாகச் சொன்னீர்களே. க்ஷீரகுண்டம் எங்கேயிருக்கிறது? அது எப்படிப்பட்டது. அதனுடைய வைபவமென்ன? இவைகளை எங்களுக்குச் சொல்லவேண்டும்" என்று கேட்கச் சூதர் சொல்லுகிறார்.

மஹாபண்ணியமான தேவீபட்டணத்துக்கு மேல் திசையில் கொஞ்சதூரத்தில் புல்லகிராமமென்ற ஒரு இடமிருக்கிறது. இவ்விடத்திலே தான் ஸ்ரீராமர் சேதுகட்ட ஆரம்பித்தார். அந்தப் புல்லக்கிராமம் ஒரு புண்ணிய க்ஷேத்திரம் அதிலே தான் பாபநாசனமான க்ஷீரகுண்டமிருக்கிறது. அதைத்தியானம் பண்ணினாலும் கண்டாலும், தொட்டாலும் வாயாலே அதனபேரை உச்சரித்தாலும் மோட்சத்தைத் தரத்தக்கது. அதற்கு க்ஷீரகுண்டமென்கிற பெயர்வந்த காரணத்தை உங்களுக்குச் சொல்லுகிறேன். சாவதானமாய்க் கேளுங்கள்.

பூர்வத்தில் தட்சிணசமுத்திரக் கரையில் புண்ணியமான புல்லகிராமத்தில் வேதோக்தமான கருமங்களைச் செய்துகொண்டி

ருந்த முத்கலர் என்கிற ஒரு முனிவர் நாராயணனைக்குறித்து ஒரு யாகம்பண்ணினார். ஸ்ரீமந்நாராயணரும் அவருடைய யாகத்துக்கு மகிழ்ந்து பிரசன்னராய் யக்ஞபூமியில் வந்து நின்றார். காளமேக சொரூபராயும், பீதாம்பரதாரியாயும், கௌஸ்துபாலங்கிருதராயும், சங்க சக்கிர கதாபத்மதாரியாயுமிருக்கிற ஸ்ரீமந்நாராயணர் இலட்சுமிதேவியோடு, கருடாரூடராய்வரக்கண்டமுத்கலர் ஆனந்த பரவசமடைந்து, புளகாங்கிதராய்க், காதுக்கினிய சொல்லுக்களாலே துதிக்கிறார்" "ஸ்வாமீ! ஜகத்தைச்சிருஷ்டித்து, பரிபாலித்து, சங்கரிக்கின்ற ஸ்ரீமந்நாராயணனாகிய உமக்கு நமஸ்காரம். மச்சம், கூர்மம், வராகம், நாரசிம்மம், வாமனம், பரசுராமன், தசரத ராமன், பலபத்திரராமன், கிருஷ்ணன், கற்கி, என்ற தசாவதாரங்களை எடுத்த சச்சிதாநந்த சொரூபியாகிய உமக்கு நமஸ்காரம். கருணைக்கடலாகிய நராயணமூர்த்தியே! வெட்கமற்றவனையும், தீனனையும், குரூரனையும், கோள்சொல்லுகிறவனையும், டாம்பிகனையும் பிறனுடைய பொருள், ஸ்திரீ, பூமி யிவைகளிலாசை கொண்டவனையும், அசூயை நிறைந்தவனையும் இருக்கிற என்னைத் தயவுசெய்து காப்பாற்றி யருளவேண்டும். என்று ஸ்தோத்திரம் பண்ணின முத்கலரைப் பார்த்து, மேககர்ஜனைபோன்ற தொனியோடு" ஐயா, முத்கலரே! நீர்செய்த ஸ்தோத்திரங்களாலும், யாகத்தாலும் நான் சந்தோஷமடைந்தேன். நீர் கொடுக்கிற அவிசை நேரிலே வாங்கிப்புசிக்கும்படியாக யாகசாலையில் வந்திருக்கிறேன். என்று சொல்ல, முத்கலரும் சந்தோஷப்பட்டு, "ஐயா, நானும் என்மனைவி புத்திரர்களும் கிருதார்த்தர்களாய் விட்டோம். என்னுடைய ஜன்மம், தபசு, வம்சம், ஆச்சிரமம் எல்லாம் இன்றைக்குத்தான் ஸபலமாயின. யோகீசுவரர்கள் யோகாப்பியாசம்பண்ணித் தங்களுடைய ஹ்ருதய கமலத்தை தேடிக்கொண்டிருக்கிற சுவாமீ! தாங்கள் சாட்சாத்தாக என்னுடைய யக்ஞபூமிக்கு வந்துவிட்டபடியால் என் யாகம் ஸபலமாய்விட்டது." என்றுசொல்லி, ஆசனங்கொடுத்துச் சந்தன புஷ்பங்களால் பூஜித்து, அர்க்கியங்கொடுத்து, மனமகிழ்ச்சியோடு புரோடாச மென்கிற அவிசையுங்கொடுத்தார். அப்பொழுது லோகபாவனரான நாராயணர் முத்கலர் கொடுத்த அவிசைத் தமது கையாலெடுத்துப் புசிக்க, அக்கினிமுதலான தேவர்களும், ரித்துவிக்குகளும், எஜமானனும், அங்கிருந்த பிராமணர்களும், சராசரமான உலகமும் திருப்தியடைந்தார்கள். பிறகு நாராயணர் முத்கல முனிவரைப்பார்த்து, "ஐயா! 'நல்ல அனுஷ்டானமுடையவ

ரே! உமக்கு வேண்டுமென்கிற வரத்தைக் கேட்டுக்கொள்ளும்" என்று சொல்ல, முத்கலர், "பகவானே! என் யாகசாலைக்கு நீர் பிரத்தியட்சமாக வந்து அவிர்ப்பாகத்தை வாங்கிக்கொண்டபடியால் நான் கிருதார்த்தனாய் விட்டேன். எனக்கு வேறென்ன வேண்டியிருக்கிறது? ஆனாலும் உம்மிடத்தில் கபடமில்லாத திடமான பக்தியிருக்கவேண்டும். மாதவா! காலை மாலைகளாகிய இரண்டு வேளைகளிலும் பசுவின்பாலைக்கொண்டு உம்முடைய சொரூபமான அக்கினியில் ஹோமம்பண்ண விரும்புகிறேன். இந்த இரண்டாவது வரத்தை யெனக்குக் கொடுத்தருள வேண்டும். சுருதியிற் சொல்லுகிற பயஹோமத்துக்கு வேண்டிய பால் கொடுக்கும்படியான பசுக்கள் எனக்குக்கிடையாது." என்று சொன்னதைக்கேட்ட ஸ்ரீமந்நாராயணர் சிற்பியாகிய விசுவகர்மா'வைக்கூப்பிட்டு, ஸ்படிக முதலிய கல்லுகளைக்கொண்டு ஒரு குளத்தைகட்டுவித்து, அதைச் சுற்றிலும் பிராகாராதிகளால் அலங்கரித்துக், காமதேனுவை யழைத்து, "என் பக்தனாகிய இவன் எனக்குத் திருப்தி செய்யும்படி பாலால் ஹோமஞ்செய்ய விரும்புகிறான். ஆகையால் நான் சந்தோஷப்படும்படி நீ காலைவேளையிலும் சாயங்காலத்திலும் இவ்விடத்தில் வந்து, உன்மடியிலிருந்துண்டாகிற பாலால் இந்தச்சரசை நிரப்பிவிடு. இவன் இரண்டு வேளைகளிலும் ஹோமஞ்செய்யட்டும்." என்று ஆக்ஞாபித்து, முத்கலரைப்பார்த்து, முனிவரே! நீர் இந்தக் குளத்திலுண்டாகிற பாலைக்கொண்டு தினந்தோறும் இரண்டுவேளைகளிலும் ஹோமம்பண்ணும்; நான் திருப்தியடைவேன். அதனாலுமக்குச்சர்வசித்திகளும் உண்டாகும் இந்தச்சரசுக்கு க்ஷீரசரசு என்று பேர்வரும். இந்தச் சரசில் ஸ்நானம் பண்ணினவர்களுடைய பஞ்சமஹாபாதகங்களும் மற்றுமுள்ள பாதகங்களும் உடனேபஞ்சாய்ப்பறந்துபோம். நீரும் தேகாந்தத்தில் ஸமஸ்த பந்தங்களு மொழித்து என்னை வந்தடைவீர்." என்று சொல்லி முத்கலரைக் கட்டிக்கொண்டு, அவரால் நமஸ்காரம்பண்ணப்பட்டு அந்தர்த்தானமடைந்து விட்டார். முத்கலரும் அநேகமாயிரம் வருஷம் காமதேனுவின் பாலால் அக்கினியில் ஹோமம்பண்ணிக்கொண்டு வந்து கடைசியாக முக்தியைக்கொடுக்கும்படியான புல்லக்கிராமத்திலேயே சரீரத்தை விட்டு விஷ்ணுஸாயுஜ்ய மடைந்தார்.

கேளுங்கள் முனிவர்களே! இந்தத்தீர்த்தத்துக்கு க்ஷீரகுண்டமென்று பேர்வந்த காரணத்தை சொல்லிவிட்டேன். இதில் ஸ்

தமனசோடு ஸ்நானம்பண்ணுகிறவர்கள் சமஸ்தமான பந்தங்களும் நீங்கி புண்ணிய சீலர்களாகிமுக்தர்களாகிறார்கள். க்ஷீரகுண்டத்தைக்கண்ணால் பார்ப்பவர்களுக்கு யாகம், வேதம், தீர்த்தயாத்திரை, ஜபம், விரதம், முதலியவை என்னத்துக்கு? க்ஷீரகுண்டத்திலிருந்து வீசுகிறகாற்று எவன் பேரிலடிக்கிறதோ அவன் பிரமலோகம்போய்ச் சேர்ந்து அங்கிருந்தபடியே முக்தியடைகிறான். க்ஷீரகுண்டத்தில் ஸ்நானம்பண்ணுகிறவர்கள் சூரியனையும் அலட்சியம்பண்ணி, அக்கினிபோல ஜ்வலித்துக்கொண்டு சூரியனுடைய சிரசின்மேலே வீற்றிருப்பார்கள். க்ஷீரகுண்டத்தில் ஸ்நானம்பண்ணினவர்களுக்கு வைதரணிநதி குளிர்ந்துபோகிறது. அவன் நரகங்களையடைகிறதில்லை. காமதேனுவுடனே கூடியிருக்கிற க்ஷீரகுண்டமிருக்கும்பொழுது வேறுதீர்த்தங்களில் ஸ்நானம்பண்ணும்படி அலைகிறவன் பசுவின்பாலைக் கையிலே வைத்துக்கொண்டு எருக்கம்பாலுக்கு அலைகிறாப்போலிருக்கிறது. இதில் ஸ்நானம்பண்ணினவர்களுக்குக் கிடையாதது எது? முக்திகூடக்கையிலிருக்கிறது. இந்த விஷயத்தில் கைதூக்கிச் சத்தியம்பண்ணுகிறேன். இந்த லோகப்பிரசித்தமாயும் புண்ணியமாயுமிருக்கிற இந்த க்ஷீரகுண்டத்தில் காசியபர் பத்தினியாகிய கத்துருஎன்பவள் தன் பர்த்தாவினுடைய வாக்கியப்படி நியமத்தோடு ஸ்நானம்பண்ணி, வஞ்சனையாலே தன்சக்களத்தியை ஜயித்த பாபத்தினின்றும் விடுபட்டாள். என்று சூதமுனிவர் சொல்ல சௌனகாதியர்கள், "சூதமுனீந்திரரே! கத்துரு என்பவள் யார்? அவள் யாருடைய பெண்? அவளுடைய ஸபத்தினி யார்? தன்னுடைய சக்களத்தியை அவள் என் மோசஞ்செய்து ஜெயிக்கவேண்டும்? இவைகளை யெங்களுக்குச் சவிஸ்தாரமாகச் சொல்லவேண்டும்," என்று கேட்கச் சூதர் சொல்லுகிறார்.

## முப்பத்தேழாவது அத்தியாயம்



# முப்பத்தெட்டாவது

# கத்துரு க்ஷீரகுண்டத்தில் ஸ்நானம் பண்ணி மோசம்பண்ணின பாபம் நீங்கின

## அத்தியாயம்.

---

கேளுங்கள் சௌனகாதி முனீசுவரர்களே! கிருதயுகத்தில் பிரஜாபதிக்கு விநதை, கத்துரு என்ற இரண்டு குமாரத்திகளிருந்தார்கள். அவ்விரண்டுபேரையும் காசிப்பமுனிவர் விவாகஞ் செய்துகொண்டார். கத்துரு அநந்தன், வாசுகி முதலிய அநேகமான விஷமுள்ள நாகங்களைப்பெற்றாள். ஒருநாள் இந்த இரண்டு சகோதரிகளும், உச்சைச்சிரவம் என்ற தேவேந்திரனுடைய வெள்ளைக்குதிரைவரக்கண்டு, கத்துரு விநதையைப் பார்த்து, "சகோதரியே! இந்தக் குதிரையின் வால்வெளுப்பா? கறுப்பா? உனக்கென்ன தோன்றுகிறது!" என்று கேட்க, விநதை "இதனுடையவால் வெளுப்பாகத்தான் எனக்குத் தோன்றுகிறது. உனக்கெப்படி தோன்றுகிறது. சொல்" என்று கேட்டாள். கத்துரு "அதன் வால் கறுபபென்று எனக்குத் தோன்றுகிறது" என்று தன் அபிப்பிராயத்தை வெளியிட்டாள். பிறகு இருவரும் தோற்றவர்கள் ஜயித்தவர்களுக்கு அடிமையாகிறதென்றுபந்தயம் போட்டுக்கொண்டார்கள். பின்பு கத்துரு தன் புத்திரர்களாகிய வாசுகிமுதலானவர்களையழைத்து, குமாரர்களே! என்னுடையஇஷ்டம் நிறைவேறும்படியும், நான் விநதைக்கு அடிமையாகாதபடியும் நீங்கள் அந்தக் குதிரையின் வாலை மறைத்துக்கொள்ளவேண்டியது. என்று சொல்ல, அந்நாகங்கள் அவள் பேச்சை அங்கிகாரம் பண்ணுமையினுல், கத்துரு உக்கிரமான கோபங்கொண்டு, நீங்கள் எலலோரும் ஜனமேஜயனுடைய சர்ப்பயாகத்திலே சாகக்கடவீர்கள் என்று சபித்தாள், உடனே கார்க்கோடகன் என்கிற நாகம் அதிக பயங்கொண்டு, அவள் காலில் விழுந்து "அம்மா, நீ பயப்படாதே. நான் உச்சைச்சிரவத்தினுடைய வாலை மைபோலக் கறுப்பாகச் செய்துவிடுகிறேன். என்று கெஞ்சிச்சொல்லி, தன்னுடைய உடலாலே யந்தக் குதிரையின்வாலை மறைத்து மைபோலக்கறுப்பாக்கி விட்டான். பிறகு இரண்டுசகோதரிகளும் குதிரையைப்பார்க்க அதிவேகமாக

ப்புறப்பட்டு, சந்திரன், சங்கு, மாணிக்கம், முத்து, ஐராவதம் இவைகளுக்குப் பிறப்பிடமாயும், யுகாந்தத்தில் ஸ்ரீமந்நாராயணரு க்கு யோகநித்திரை செய்கிற சயனமாயுமிருக்கிற திருப்பாற்கடலை க் கடந்து, தேவேந்திரனுடைய வாகனமாகிற உச்சைச்சிரவமெ ன்கிற குதிரையைக்கண்டார்கள். அதன் வால் கறுப்பாக இருக் கிறதை விநதை கண்டு, அதிக விசனங்கொண்டு, தாங்கள் செய்து கொண்ட பிரதிக்ஞையின்படி கத்துருவுக்கு அடிமையானாள். இப் படியிருக்கையில் மலைபோன்ற சரீரத்தையுடைய கருடனானவன் முட்டையை யுடைத்துக்கொண்டு தேவர்கள் புகழவும், அவனு டைய பெரிய சரீரத்தைக்கண்டு மூன்று லோகங்களும் நடுங்கவும், அக்கினியைப்போல உயரக்கிளம்பி, தன்னுடைய சரீரத்தைக் கண்டவர்கள் பயப்படுவார்களென்று நினைத்து, சரீரத்தைச்சுருக்கி அருணனைத்தன் தோளின்மேல் ஏற்றிக்கொண்டு தாயாராகிய விந தையிடம் வந்து சேர்ந்தான். அப்பொழுது கத்துருவானவள் தனக்குப் பயந்து அடங்கியிருக்கிற விநதையைப் பார்த்து, அடீ சேடீ! நான் தேவலோகம் போகவேண்டும், என்னை நீ தூக் கிக்கொள்: என் புத்திரர்களை கருடன் தூக்கிப்போகட்டும்'' என் றாள். விநதை கருடனைப்பார்த்து, அப்பா! நானிந்த கத்துருவை த்தூக்கிக்கொள்ளுகிறேன்; நீ அவளுடைய குமாரர்களாகிய பாம் புகளைத்தூக்கிக்கொள்'' என்று சொல்லித் தான் கத்துருவைத்தூ க்கிக்கொண்டாள். கருடனும் தாய் சொல்படி பாம்புகளைத் தூக்கி க்கொண்டான். தூக்கிக்கொண்டு போகும்போது சூரியன் கிட்டப் போகப் போகப்பாம்புகளெல்லாம் சூரியவெப்பம் பொறுக்கமாட் டாமல் சுருண்டுபோகக், கத்துரு தன் புத்திரர்களுடைய வெப்பத் தைச் சாந்தப்படுத்தும்படி இந்திரனைப்பிரார்த்திக்க, அவன் மழை பொழியும்படி செய்து வெப்பத்தைத் தணித்தான். பிறகு தே வலோகம்போய்ச் சேர்ந்தார்கள். போனவுடனே நாகங்களெ ல்லாம் கருடனைப்பார்த்து, "நாங்கள் தீபாந்தரம்போய்ப்பார் க்க அதிக விருப்பமுள்ளவர்களாக இருக்கிறோம். ஆகையால் பணிவிடைக்காரி புத்திரனாகிய கருடா! எங்களை க்ஷணத்துக்குள் தூக்கிக்கொண்டுபோ." என்று சொன்னார்கள். அப்பொழுதுகரு டன் தன் தாயாகிய விநதையைப் பார்த்து," அம்மா! நானேனிந் தப் பாம்புகளைச் சுமக்கவேண்டும்? நீ ஏன் கத்துருவைச்சுமக்கவே ண்டும்? இந்த பாம்புகள்' சேடீபுத்திரனே' என்று என்னைக்கூப்பி டவேண்டிய காரணமென்ன? இவைகளையெல்லாம் அம்மா! எனக்கு

உண்மையாய்ச்சொல்லியருளவேண்டும்'' என்றுவினவ, விநதையும் "அப்பா, என்னுடையகொடிய சகோதரியானவள் என்னை கபடமாய்ச்செயித்தபடியால் நானவளுக்கு அடிமையாயிருக்கிறேன். நீயும் சேடிபுத்திரனாயிருக்கிறாய். ஆகையாற்றான் நான் இவளைச் சுமக்கிறேன். நீயும் பாம்புகளைச் சுமக்க நேரிட்டது." என்று ஆதியோடந்தமாய் அவனுக்குச்சொல்லி முடித்தாள். அதுகேட்ட கருடன் தன் மாதாவைப்பார்த்து" அம்மா! இந்த அடிமை நீங்குவதற்கு நானென்ன செய்யவேண்டுமென்று" கேட்க, விநதை நீபாம்புகளைப்பார்த்து, என் தாயின் அடிமைத்தனம் நீங்குவதற்கு நானுங்களுக்கு என்னசெய்யவேண்டுமென்று கேள்" என்று சொல்லக் கருடன் சர்ப்பங்களிடம்போய்க் கேட்க, அவர்கள், "நீ தேவலோகத்திலிருந்து சீக்கிரம் அமிருதம் கொண்டுவருவாயேயானால் உன் தாயின் அடிமைத்தனம் நீங்கிவிடும்." என்று சொன்னார்கள். பிறகு கருடனும் தன் தாயிடம்வந்து அவளைவணங்கி, "அன்னையே, நான் அமிர்தங்கொண்டுவரப்போகிறேன். எனக்கு அன்னம்போடு." என்று கேட்டான். தாயார் தன் புத்திரனைப்பார்த்து, "அப்பா சமுத்திரமத்தியில்சில வேடர்களிருக்கிறார்கள். அவர்களைப்புசித்துபசிதீர்த்துக்கொள்ளு. ஆனால் அவர்களுக்குள்ளே ஒருபிராமணன் வேடச்சியோடுகூடி விடபுருஷனாக இருந்துகொண்டிருக்கிறான்; அவனைப்புசித்தால் அவனுடைய பிரமதேஜஸால் உன்தொண்டை எரிந்துபோம். ஆகையால் அவனைவிட்டுவிடு." என்று சொல்லி "உன்னுடைய சிறகு முதலான அவயவங்களை, மருத்து முதலானதேவர்கள் காப்பாற்றக்கடவர்கள்!" என்றாசீர்வதித்து அனுப்பினாள். கருடன் வேடர்களிருக்கிற இடம்போய் வாயைத்திறந்து தின்ன ஆரம்பித்தபோது, வேடர்கள் மலைக்குகையில் பட்சிகள் புகுவது போல அவனுடையவாயிலே புகுந்தார்கள். பிராமணனுங்கூட வாயிற் புகுந்து தொண்டையில் சுடக்கண்ட கருடன், அந்தப் பிராமணனைக்கூப்பிட்டு," நீ மஹாபாபியாயிருந்தாலும், நான் உன்னைக்கொல்லத்தகாது. நீ வெளியிலோடிப்போ." என்று சொல்ல அந்தப்பிராமணன், "என் மனைவியாகிய வேடச்சியுங்கூட வரவேண்டும்." என்று கேட்க அப்படியேயாகட்டுமென்று அவ்விருவரையுங் கக்கிவெளியில்விட அந்தப்பிராமணன் வேடச்சியை யழைத்துக்கொண்டு தனக்கிஷ்டமான இடம்போய்ச் சேர்ந்தான். கருடன் கிராதகர்களைத்தின்றுவிட்டுத் தன் தகப்பனாகிய காசியபரிடம்போய்ச்சேர்ந்தான். காசியபர்," அப்பா கருடா! எங்கே போகிறாய்?'' என்று கேட்க, " ஐயா

என் தாயாருடைய அடிமைத்தன்மையை நீக்கும்பொருட்டு அமிர்தங்கொண்டுவரப் போகிறேன். வருகிறவழியில் அநேககிராதகர்களைத்தின்றும் என் பசி தீரவில்லை. ஆறுத பசியானது அல்லும்பகலும் என்னை வருத்துகிறது. ஆகையால் இப்பசி நீங்கி அமிர்தங்கொண்டுவரும்படியான சக்தியுண்டாகும்படி ஒரு ஆகாரம் கொடுத்தருளவேண்டும்''என்று பிரார்த்திக்க, காசியபர் "அப்பா! பூர்வத்தில் விபாவசு சுப்பிரதீகனென்கிற இரண்டு முனிவர்கள் தங்கள் தங்களுக்குக் கிடைக்கவேண்டிய பாகத்துக்காகச் சண்டைபோட்டுப் பகைமுற்றிக் கோபத்தாலொருவரை யொருவர் சபித்துக்கொண்டு, சுப்பிரதீகன் ஆறுயோசனை உயரமும் பன்னிரண்டு யோசனை நீளமுமுள்ள ஒரு யானையாகியும் விபாவசு மூன்று யோஜனை உயரமும் பத்து யோஜனை விசாலமுமுள்ள ஆமையாகியும் இந்தச் சரசில் வைரம் நீங்காதவர்களாய் இன்னமும் சண்டை போட்டுக் கொண்டே யிருக்கிறார்கள். அவர்களிரண்டு பேரையும் பட்சித்துப் பசியாற்றிக்கொண்டு அமிர்தத்தைக் கொண்டு வா.'' என்று சொல்ல, கருடனும்மப்படியே பிரமாண்ட சரீரத்தையும், மிகுந்த பல பராக்கிரமத்தையும் உடைய அந்தயானையையும், ஆமையையும் நகங்களில் இடுக்கிக்கொண்டு, விளம்பம் என்னும் தீர்த்தக்கரையில் வந்து இறங்கினவுடனே, அந்தக்கரையில் ஓங்கிவளர்ந்த ஒரு பெரிய ஆலமரமானது "அப்பா கருடா! நூறுயோசனை நீளமுள்ள இந்த என்கிளையின்மேலே யுட்கார்ந்து நீ கொண்டுவந்த ஆகாரத்தைப் பட்சித்துச் சுகமாகப்போ'' என்று சொன்னதைக் கேட்ட மனோவேகமுள்ள பட்சிராஜனும், இந்தக் கிளையின் மேலுட்கார்ந்த வுடனே அது மளுக்கென்று முறிந்தது. அதில் தலைகீழாகத்தொங்கிக்கொண்டிருந்த அங்குஷ்டப்பிரமாணமுள்ள வாலகில்லியர்கள் அறுபதினாயிரம்பேரையுங்கண்டு, அவர்கள் கீழே விழுந்துவிடுவார்களென்கிற பயத்தினால் அந்தக்கிளையையும், ஆமை, யானைகளையும் தூக்கிக்கொண்டு ஆகாசமார்க்கமாகவந்த தன் புத்திரனைக் காசியபர் கண்டு "அப்பா! நிர்ஜனமான ஒரு மலையின்மேலே இந்தக்கிளையை யிறக்கிவிடு'' என்று சொல்ல, அது கேட்ட கருடனும் அப்படியேநிர்ஜனமான ஒரு மலையிலிறக்கிவிட்டு, ஆமையையும், யானையையும் பட்சித்துக்கொண்டிருந்தான். அந்தச்சமயத்தில் தேவலோகத்தில் ஒரு அபசகுனங்கண்டது. அது கண்ட இந்திரன் தன் குருவாகிய பிரகஸ்பதியிடத்தில் "இந்த அபசகுனத்துக்குக் காரணமென்ன'' என்று அடிக்கடி கேட்க

பிரகஸ்பதியும்" ஏ இந்திரா! பூர்வம் காசியபர் யாகம்பண்ணி ஆரம்பித்து ரிஷிகளையும், தேவர்களையும், யட்ச கந்தருவ கின்னர கிம்புருடர்களையும், யக்ஞவஸ்துக்களைக் கொண்டுவரும்படி யனுப்பின்போது யக்ஞசாமான்களை யெடுத்துக்கொண்டு வந்த வாலகில்லியர்கள் மாட்டுக்குளம்படி நீரில் முழுகிப்போக, நீர் அதுகண்டு சிரித்ததனாலுண்டான கோபத்தால் 'காசியபருக்குப் பிறக்கப்போகிற இந்தப்பிள்ளை இந்திரனுக்குப் பயத்தைக்கொடுக்கிற சத்துருவாக இருக்கக்கடவது.' என்று யாகாக்கினியில் ஹோமம்பண்ண, அந்த மந்திரபலத்தால் காசியபருக்குற்பத்தியான கருடன் அமிர்தத்தை யபகரித்துக்கொண்டு போவதற்காக வந்து கொண்டிருக்கிறான். அதனாலேதான் துர்ச்சகுன முண்டாயிருக்கிறது என்று சொல்ல, அதுகேட்ட இந்திரன் அக்கினிமுதலான தேவர்களையழைத்து"கருடன் அமிர்தத்தைக்கொண்டு போகாதபடி காத்துக்கொள்ளுங்கள்" என்று ஆக்ஞாபனம் பண்ண, அப்படியே தேவர்களெல்லாரும் ஆயுதபாணிகளாகிக் காத்துக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது கருடனும் அங்கே வந்துவிட்டான். மஹாபலவானான கருடனைக் கண்டு பயந்தார்கள். தேவர்களுக்கும் கருடனுக்கும் பலமான யுத்தமுண்டாகக் கருடன் அமிர்தத்தைக் காத்துக்கொண்டிருந்த பௌமனன் என்பவனைத் தன் மூக்கினால் கடித்துத் துண்டித்துப் போட்டான். அதுகண்ட தேவர்கள் கோபங்கொண்டு நானாவித சஸ்திரங்களால் அடித்துத் தொந்தரவு செய்யக் கருடன் கோபங்கொண்டு அக்கினி முதலான தேவர்களைச் சிறகினால் தூரத்திலொதுக்கித் தள்ளிவிட்டான். தேவர்கள் பின்னும் கோபித்து நாராசம் பிண்டி பால முதலான பல ஆயுதங்களைக் கருடன்மேலெறிய, அவன் தன் சிறகினால் புழுதியை வாரியிறைத்துத் தேவர்கள் கண்களை மறைத்துவிட்டான். தேவர்கள் காற்றினாலே தூளியை யடக்கிவிட்டார்கள். இப்படிச்சிறிதுநேரம் யுத்தஞ்செய்த பின் கருடன் வசுக்கள், ருத்திரர், ஆதித்தியர், மருத்து, மற்றுமுள்ள தேவர்களையும் மூக்காலும் இறகுகளாலும் அடித்துவருத்தித் துரத்திவிட, அக்கினி மாத்திரம் எதிரில் வந்து ஜ்வலித்துக்கொண்டு நிற்க, கருடன் நதியிலிருக்கிற நீரை யெல்லாம் குடித்து மழையைப்போல ஜலத்தை வருஷித்து அக்கினியை அவித்துவிட்டான். பின்பு அமிர்தத்துக்குச் சமீபத்தில் சுழன்றுகொண்டிருக்கிற கூர்மையான முனைகளோடுங்கூடின சக்கிராயுதத்தின் ஆரையின் வழியாகச்சரீரத்தைச் சுருக்கிக்கொண்டு உள்ளே புகுந்து, கண்ணாலே பார்

த்தவர்களைக்கூடப் பஸ்மீகரமாக்கத்தக்கதாய் வாயைத்திறந்துகொண்டு பயங்கரமாக உட்கார்ந்துகொண்டிருந்த இரண்டு சர்பங்களைக்கண்டு தன் சிறகாலும் மூக்காலும் அவைகளை நாசப்படுத்தி, அமிர்தத்தைத் தூக்கிக்கொண்டு உயரக்கிளம்பின கருடனைப்பார்த்து இலட்சுமிபதியான மாதவன்,“ அப்பா கருடா! நான் உன்னிடத்தில் திருப்தி அடைந்திருக்கிறேன், ஆகையால் உனக்கு வேண்டிய வரத்தைக்கேள்”என்று சொன்னார்,கருடன்,“ஐயா,நான் உமக்குமேலாக இருக்கவேண்டும். கிழத்தன்மையும், சாவும், எனக்கு வாராதிருக்கவேண்டும்.”என்று கேட்க, ஹரியும் “அப்படியேயாகட்டும்”என்று சொன்னார். உடனே கருடன் விஷ்ணுவைப்பார்த்து, “உமக்கு வேண்டிய வரத்தை நீர் கேட்டுக்கொள்ளுந் தருகிறேன்” என்ன, அவர் “அப்படியானால் நீஎனக்கு வாகனமாகவும், கொடியாகவுமிருக்கவேண்டும்” என்று கேட்க “ அப்படியே யாகட்டும்” என்று கருடன் வரங்கொடுத்தான். பின்பு கருடன் அமிர்தத்தைக் கொண்டுபோனதைக்கேட்ட இந்திரன், அதிவேகமாக ஓடிவந்துவச்சிராயுதத்தினால் கருடனுடைய சிரசில் அடித்தான். அதைக்கண்ட கருடன் சிரித்து“இந்திரா,உன்வச்சிராயுதத்தினால் எனக்கொரு சேதமுமில்லை, ஆனால் உன் வச்சிராயுதம் வியர்த்தமாகாதபடி ஒரு இறகைக் கொடுக்கிறேன். ” என்று சொல்லி ஒரு இறகை உதிர்த்தான். அந்த இறகு அழகாயிருந்தபடியால் கருடனுக்கு சுபர்ணன் என்று பேர்வந்தது. தங்கநிறமான இறகைக்கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். பிறகு கருடன் இந்திரனைப்பார்த்து,“உன்னோடுகூடச்சேர்ந்து இந்த உலகத்தையெல்லாம் சுமக்கும்படியான சக்தி யெனக்கிருக்கிறது; உன்னைப்போல ஆயிரமிந்திரர்கள் சண்டைசெய்ய வந்தாலும் எனக்கு இலட்சியமில்லை.” என்று சொன்னதைக்கேட்ட இந்திரன்,“ இந்த அமிர்தத்தினால் உனக்கென்னபிரயோஜனம்? அமிர்தத்தை என்னிடங்கொடுத்துவிடு. நீ இந்த அமிர்தத்தைப் பாம்புகளுக்குக் கொண்டுபோய்க் கொடுத்தால் அவர்கள் புசித்துவிட்டு ஜராமரணங்களற்று நம்மைக்காட்டிலும் பலவந்தர்களாகித் தேவர்களைத் துன்பப்படுத்துவார்கள்.” என்று சொல்லக், கருடன் இந்திரனைப்பார்த்து“ நான் கொண்டுபோய் வைக்கிற இடத்திலிருந்து நீ தூக்கிக்கொண்டுபோய்விடு.” என்று சொல்ல, இந்திரன்,“ புத்திசாலியான கருடா! உனக்கென்ன வரம் வேண்டும், கேள், என்று சொல்ல “ ஐயா! அப்படியானால் என் தாயாரைக் கபடமாக வெள்ளாட்டியாக்கின சர்ப்பங்கள் எனக்கு

எப்பொழுதும் இரையாயிருக்கவேண்டும்” என்றுகேட்க, இந்திரன் அப்படியேயாகட்டுமென்றுசொல்லிக்கருடனுக்குவிடைகொடுத்தனுப்பினன். உடனே கருடன் அமிர்தத்தை யெடுத்துக்கொண்டு அதிகவேகமாகப்போகும்போது இந்திரனும்பின்தொடர்ந்துபோனன். கருடன்தன்தாயாரிடம்போய் “சர்ப்பங்களே, நான்கொண்டுவந்த அமிர்தத்தைத் தர்ப்பையின்மேலேவைக்கிறேன். நீங்கள் ஸ்நானம்பண்ணிப் பரிசுத்தர்களாக வந்துஇதைப்புசியுங்கள். என்தாயாருக்கும் இன்றோடே அடிமைத்தன்மை நீங்கிவிடவேண்டும்” என்றுசொல்லச்சர்ப்பங்களும் அப்படியேயாகட்டும் என்று சொல்லின. விநதையும் அடிமையினின்றும் நீங்கினள். சர்ப்பங்கள் அமிர்தத்தைப்புஜிப்பதற்காக ஸ்நானமபண்ணப்போயின. அந்தசமயத்தில் இந்திரன் அமிர்தத்தையெடுத்துக்கொண்டுபோய்விட்டான். ஸ்நானம்பண்ணித்திரும்பிவந்த ஸர்ப்பங்கள் அமிர்தத்தைக்காணமல், அதுவைக்கப்பட்டிருந்தஇடத்திலுள்ள தர்ப்பத்தை நாக்காலே நக்க நாக்கு இரண்டாகப்பிளந்துபோயிற்று. கேளுங்கள் ரிஷீசுவரர்களே, அதுமுதலாகச்சர்ப்பங்களுக்குத்துவிஜிஹ்வம்(இரண்டு நாக்குள்ளவை)என்று பேர்வந்தது. கருடன் இப்படியாகத்தன் தாயாரை அடிமையினின்றும் மீட்டுக்கொண்டபின், கத்துருவைப்பார்த்து; “நீ என் தாயாரைமோசம்செய்துஜயித்து அடிமைகொண்டபடியால் உன் கணவனுடைய பணிவிடைக்குநீ உபயோகப்படாமல் போகக்கடவாய்” என்று சபித்துவிட்டுஇஷ்டமான இடத்துக்குப்போனன். பிறகு கத்துருவும்விநதையுஞ்சேர்ந்துதங்கள்பர்த்தாவிடம்போகஅவர்முகத்தைத்திருப்பிக் கொண்டு கோபத்தினல், “கத்துரு நீ வஞ்சனையாலே விநதையை ஜயித்து அடிமையாக்கிக்கொண்ட துராத்மாவானபடியால்என்பணிவிடைக்குத்தகாதவள். பெண்ணவது, ஆணவது ஒருவனைக்கபடமாக ஜயித்தால்அவர்கள் பாதகர்களாகிறார்கள்; அவர்களோடே பேசுகிறவனும், பிரம்மஹத்தி, சுராபானம், சொர்ணஸ்தேயம், குருதல்பகமனம், இவர்களோடு சம்பந்தப்பட்டபாதகம் ஆகிய பஞ்சமஹாபாதகங்களையுஞ் செய்தவனை ரிஷிகளால் சொல்லப்படுகிறன். ஆகையால் உன்னேடு பேசினல் கூடநரகத்துக்குப்போகும்படியானதோஷமெனக்குவந்துவிடும். குரூரமான கத்துருவே, நீ யென்னெதிரில்நில்லாதே. கபடமாய்ஜயித்தவனுடனே ஸஹபோஜனம் பண்ணினவனுடன் பேசினலுங் கூடநரகசமுத்திரத்திலே முழுகிக்கிடக்கவேண்டும். வஞ்சனையா

லே ஜயித்தவனைப் பார்த்ததோஷ நிவர்த்திக்காகச் சூரியனையாவது, நெருப்பையாவது,ஜலத்தையாவதுபார்க்கவேண்டும். அவனிருக்கிற ஆச்சிரமத்திலாவது, வீட்டிலாவது தங்கக்கூடாது; தங்கினால் நரகத்தையனுபவிக்கவேண்டும். துன்மார்க்கத்தில்செல்லாத பரிசுத்த இருதயமுடைய இந்தவிநுதையை வஞ்சனைசெய்துஜயித்தபடியால் நீயென் கண்முன்னே நில்லாதே,ஓடிப்போ, ஓடிப்போ" என்று கத்துருவைத் திக்காரம்பண்ணிவிரட்டி, நல்ல சுபாவமுள்ளவிநுதையைச்சேர்த்துக்கொண்டார். இப்படிவைது விரட்டப்பட்டகத்துருவானவள் மிகதுக்கங்கொண்டு மனநொந்து கோவென்றுகதறியவர்காலில் விழுந்தும், அவள்செய்தபாபத்தை நினைத்து மனமிரங்காமல், அவளையங்கீகாரஞ் செய்யமாட்டேன் என்று சொல்ல, விநுதை அவர்பாதத்தில் வணங்கி,"சுவாமீ,கருணைக்கடலேஎன்சகோதரியானவள்பேதைமையாலேயிந்தப்பாபத்தைச் செய்துவிட்டாள். அதைத்தேவரீர்பொறுத்தருளவேண்டும். பெரியோர்களுக்குஎல்லாரிடத்திலும் தயவுவைக்கிற சுபாவமல்லவோ?" என்றுகெஞ்சிக்கேட்டும்,காசிபர்விநுதையைப்பார்த்து, "பெண்ணே,இவள்செய்த பாபத்துக்குப்பிராயச்சித்தஞ் செய்யாமலிவளைச் சேர்த்துக்கொள்ளமாட்டேன். சொன்னேன், சொன்னேன், சொன்னேன்" என்றுமறுத்துவிட்டார். மறுபடியும் வணங்கி "சுவாமீ, என்னுடையசகோதரியின்பாபத்துக்குத் தேவரீரே பிராயச்சித்தஞ் சொல்லி அவள்தம்முடைய பரிசாரகத்துக்குத் தகுந்தவளாகிறவழியைத்தேடிக்கொடுக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தாள். பிறகு மரீசிபுத்திரனாகியகாசியபர் ஒருமுகூர்த்தம்மனசால் யோசித்து, "விநுதையே, க்ஷீரசமுத்திரக்கரையிலிருக்கிறமுக்தியைக்கொடுக்கும்படியானபுல்லகிராமத்தில்பாபத்தைப்போக்கும்படியானக்ஷீரகுண்டமென்றொருபுண்ணியதீர்த்தமிருக்கிறது. அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணினமாத்திரத்தில்இவளுடையபாபமெல்லாம் நசித்துப்போம். அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணாமல் என்னபிராயச்சித்தம் பண்ணிக்கொண்டாலும்இவளுடையபாபந்தீராது.ஆகையாலிவளந்தச்சரஸுக்குப்போகட்டும்" என்றுபிராயச்சித்தம் விதித்தார்.கத்துருபிராம்மணோத்தமரான தன்பர்த்தாவைவணங்கி உடனேபிள்ளைகளை யழைத்துக்கொண்டுகொஞ்சநாளில் க்ஷீரகுண்டம்வந்து சேர்ந்து, இந்திரியங்களையடக்கி,ஆசாரமாய்ச்சங்கற்பஞ்செய்து கொண்டு மூன்றுநாள் நியமத்தோடு ஸ்நானம்பண்ணி உபவாச

மிருந்து, நாலாவது நாள் இவள் பக்தியோடு ஸ்நானம் பண்ணுகிற பொழுது ஆகாயவாணியானது "ஏ கத்துருவே! இதில் ஸ்நானம் பண்ணினதினால் நீ வஞ்சனை செய்து ஜயித்த பாபம் போய்விட்டது. உன்னுடைய பர்த்துரு சிசுருஷைக்கு அருகமாய்விட்டாய். கருடன் கொடுத்த சாபமும் நீங்கிவிட்டது. உன் பர்த்தாவிடம் போனால் உன்னையவர் கட்டாயம் அங்கீகாரம் பண்ணிக்கொள்வார்" என்று சொன்ன ஆகாயவாணியை மகிழ்ச்சியோடு நமஸ்காரம் பண்ணி த்தீர்த்தத்தைத் தன் புத்திரர்களோடும் வலம் வந்து வணங்கிப் பர்த்தாவுக்குச் சிசுருஷை பண்ணவேண்டுமென்கிற பிரியத்தோடு பர்த்தாவிடம வந்துசேர, அவரும் க்ஷீரகுண்டத்தில் ஸ்நானம் பண்ணி ப்பரிசுத்தமானாள் என்பதைச் சமாதியாலறிந்து தன்னுடைய சிசுருஷை செய்யும்படி அங்கீகாரம் பண்ணிக்கொண்டார்.

கேட்மரோ முனிவர்களே! கத்துருவின் பாபமானது இந்த க்ஷீரசரசில் ஸ்நானம் பண்ணினதினால் விமோசனமான சரித்திரத்தை யுங்களுக்குச் சொல்லிவிட்டேன். இந்த அத்தியாயத்தைப் படிப்பவரும், கேட்பவரும் க்ஷீரகுண்டஸ்நானபலனையும், அசுவமேதாதியாகங்களின பூர்ணபலனையும், கங்காதி ஸர்வதீர்த்தபலனையும, பரமஹம்சன் அடைகிற கதியையும அடைகிறார்களென்பதில் சந்தேகமே கிடையாது.

முப்பத்தெட்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

## முப்பத்தொன்பதாவது

# கபிதீர்த்தத்தில் ரம்பை சாப விமோசனமடைந்த

## அத்தியாயம்.

---

சௌனகாதி முனிவர்களே! கந்தமாதனத்தில் கபிதீர்த்தமென்றொரு தீர்த்தமிருக்கிறது. அதன் மகிமையையுங்களுக்கெடுத்துச் சொல்லுகிறேன்: பூர்வகாலத்தில் இராவணாதி ராட்சதர்களைச் சம்ஹாரம் பண்ணிவிட்டு, ஸ்ரீராமரோடு திரும்பிவந்த காமரூபிக

ளான கபிகளெல்லாமிந்தத் தீர்த்தத்தையுண்டுபண்ணி, சந்தோஷத்தோடும் அதில் ஸ்நானம்பண்ணி, "இந்தத் தீர்த்தத்தில் பக்தியோடு ஸ்நானம்பண்ணுகிறவர்கள் மகாபாபங்களொழிந்து தரித்திரம் நீங்கி, நரகபயமற்று, யமபயமில்லாமல் முக்தியடையக்கடவார்கள். கபிதீர்த்தத்திற்குப் போகிறேனென்று சொல்லிக்கொண்டு நூறடிதூரம்போனாலும் அவனுக்குப்பரமபதங்கிடைக்கவேண்டும். இந்த தீர்த்தத்துக்குச் சமானமானதீர்த்தங்கிடையாமற்போகட்டும்" என்று ஸர்வஜனோபகாரமாக வரங்கொடுத்து ஸ்ரீராமமூர்த்தியை வணங்கி, "சுவாமி, நாங்களுண்டாக்கின இந்தத்தீர்த்தத்துக்கு தேவரீரும் அற்புதமானவரங்கொடுத்தருளவேண்டும்" என்று பிரார்த்தித்தன. அப்பொழுது ஸ்ரீராமசந்திரனும் அதிக சந்தோஷத்தோடு, "இந்த தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணுகிறவர்களுக்குக் கங்கா ஸ்நானபலனும், பிரயாகை ஸ்நானபலனும், ஸர்வதீர்த்தபலனும் அக்கினிஷ்டோமாதி யாகங்களின் பூர்ணபலனும், காயத்திரியாதி மஹாமந்திர ஜபபலனும், ஆயிரகோதான பலனும், நாலு வேதங்களை பாராயணஞ்செய்த பலனும், பிரமவிஷ்ணுமகேசுவரர் முதலாகிய தேவர்களைப் பூஜை செய்த பலனும், கிடைக்கக்கடவது" என்று வானரங்கள் திருப்தியடையும்படி வரங்கொடுத்தருளினார். இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், முக்கண்ணனை ஈசானன், ஆகிய அஷ்டதிக்குப்பாலகர்களும், பிரமா, சந்திரசூரியர்கள், சாத்தியர்கள், வசுக்கள், விசுவேதேவர்கள் முதலான தேவர்களும், அத்திரி, பிருகு, குத்ஸர், கௌதமர், பராசரர், கண்வர், அகஸ்தியர், சுதீக்ஷணர், விசுவாமித்திரர் முதலான ரிஷிகளும், ஸனகாதி யோகிகளும், நாரதாதி தேவரிஷிகளும், ஸர்வாபீஷ்டங்களையுங்கொடுக்கும்படியான இந்தத்தீர்த்தத்தை வெகுவாக சிலாகித்து ஸ்நானம்பண்ணி, "இது கபிகளால் நிர்மாணம்பண்ணப்பட்டபடியால், கபிதீர்த்தமென்று பிரசித்தமடையட்டும்." என்று சொல்லிப்போனார்கள். ஆகையால், ரிஷீசுவரர்களே, முமுட்சுக்கள் இந்தத்தீர்த்தத்திற்கு அவசியம் போகவேண்டும். இந்தத் தீர்த்தத்தின் பெருமையைச்சொல்ல முடியாது. பூர்வகாலத்தில் கௌசிகசாபத்தால் கல்லாய்ப்போன ரம்பை யிந்ததீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணி சாபம் நீங்கி நிஜசொரூபம் பெற்றுச் சொர்க்கம் போய்ச்சேர்ந்தாள். என்றுசூதர்சொல்ல, ரிஷீசுவரர்கள், "ஐயா, கௌசிகர் ரம்பையை ஏன் சபித்தார்? கல்லாய்ப்போன ரம்பை

யெப்படி கபிதீர்த்தத்துக்குப்போனுள்? இவைகளை மயங்களு
க்கு விளங்கச்சொல்லவேண்டும்" என்றுவினவச்சூதர் சொல்
லுகிறார்.

குசிக குலத்திற் பிறந்த விசுவாமித்திரர் என்கிற பராக்கிர
மசாலியான மஹாராஜா சதுரங்க சேனைகளோடு புறப்பட்டுப்
பூமியிலிருக்கிற இராஜ்யங்களைப் பார்க்கவிரும்பி, வெகுதேச
ங்களைச்சுற்றிக் கடைசியாக வசிஷ்டாசிரமத்துக்குவந்தார். அப்
பொழுது மஹாத்மாவாகிய வசிட்டரும் அவரை ஆதித்தியத்து
க்காகஅழைக்க அரசனும் அப்படியேயாகட்டு மென்றுசொ
ல்லித்தண்டம் போல வசிட்டர் காலில் விழுந்தார். பிறகுகா
மதேனுவின் மகிமையால் விசுவாமித்திரருக்கும், அவருடைய
சேனைகளுக்கும்பிரமபுத்திரரான வசிஷ்டர் விருந்துசெய்து திரு
ப்திசெய்வித்தார். விசுவாமித்திரர் காமதேனுவின் மகிமையை ய
றிந்து, கேட்டதையெல்லாம்கொடுக்கும்படியான காமதேனுவை
த்தனக்கு கொடுக்கும்படி பிரார்த்தித்தார். அவர் மாட்டேனென்
று மறுத்தமையால் பலாத்காரமாக காமதேனுவைப் பிடித்திழு
த்தார். உடனே காமதேனுவினுல் சிருஷ்டிக் கப்பட்டமிலேச்சர்
கள் அவரை அடித்துத்துரத்த விசுவாமித்திரரும் மஹாதேவ
ரைப் பிரார்த்தித்து அவரிடத்திலிருந்து பிரம்பாஸ்திரம் முதலா
ன அஸ்திரங்களைப் பெற்று திரும்பி வசிஷ்டாச்சிரமம் வந்து
அவ்வஸ்திரங்களைப்பிரயோகித்தார். அப்பொழுது பிரமகுமார
ருன வசிஷ்டர் தம்முடைய தபோபலத்தால் சிருஷ்டிக்கப்பட்ட
பிரம்ம தண்டத்தினுல் அவைகளை நாசஞ்செய்து விட்டார்.
விசுவாமித்திரர் தோல்வி யடைந்ததனுல் வெட்கப்பட்டு தனக்
கு பிராமண்யம் சித்திக்கவேண்டு மென்று தபசுசெய்வதற்காகக்
காட்டுக்குப் போய் கிழக்கு, தெற்கு, மேற்கு, என்கிற மூன்
று திசைகளிலும் தவம்புரிந்து, அங்கு உண்டான மஹாவிக்கி
னங்களினுலே தபசுநிறைவேருமல், வடதிக்குப்போய்ச் சேர்ந்து
நிர்மலமான இமயமலையில் புண்ணியமான கௌசிகீ தீரத்தில்
தேவவருஷத்தில் ஆயிரம் வருஷம் இந்திரியங்களையும் கோபத்
தையுமடக்கி, சுவாசத்தை ஒடுக்கி, ஆகாரமில்லாமல், கண்ணைமூ
டிக்கொண்டு, சலனமற்றுக், கையைத் தூக்கிக் கொண்டு, ஆதா
ரமில்லாமலிருந்து, கிரீஷ்மகாலத்தில் பஞ்சாக்கினிமத்தியிலேயும்,
பனிகாலத்தில் ஜலத்திலேயும், வருஷாகாலத்தில் வெட்டவெளியி
லிருந்தும் கொடூரமான தபசுசெய்தார். அதுகண்டசொர்க்கவாசி
களான இந்திராதிதேவர்களெல்லாரும்பயந்து, ரம்பையைப்பார்
த்து, "பெண்ணே, இமயமலையில்கௌசிகீதீரத்தில்தபசு செய்து

கொண்டிருக்கிற விசுவாமித்திரரை உன்னுடைய லீலைகளினாலே மயக்கித் தபசுக்கு விக்கினம் உண்டாகும்படி செய்யவேண்டும்" என்று ஆக்ஞாபிக்க, ரம்பை அவர்களை வணங்கிக்கைகூப்பி நின்று, "தேவர்களே, விசுவாமித்திரமுனிவர் மஹாகுரூரமானவர்; கோபிஷ்டர். அவரென்னைச் சபித்துவிடுவாரே, அவரைக்கண்டால் பயமாயிருக்கிறதே, தங்களுடைய பணிவிடைக்குரிய என்னை தயவுசெய்து காப்பாற்றிவிடுங்கள்" என்றுகெஞ்சிக்கேட்டுக் கொண்டாள். அப்பொழுது இந்திரன் "ஏ ரம்பையே, நீ விசுவாமித்திரருக்காகப்பயப்படவேண்டாம. உனக்குச்சகாயமாக மன்மதனை யழைத்துக்கொண்டு நானும் வருகிறேன். கோகிலங்கள்கூவுகிற வசந்தகாலமும்வரும். நீ அதிசுகந்தரூபங்கொண்டு அந்தமஹாரிஷியைமயக்கிவிடு." என்றுதைரியஞ்சொல்லக்கேட்டரம்பைநன்றாய் அலங்காரம்பண்ணிக்கொண்டு விசுவாமித்திரருடையஆசிரமத்துக்குப்போய் அவருக்கெதிரில்நின்றுகொண்டு, அவர்மனமயங்கும்படியான லீலைகளைச்செய்து அவரைமயக்கஆரம்பித்தாள். அப்பொழுது குயில் கேட்டவர்மனமுருகும்படிகூவிற்று. குயில் கூவுவதையும், ரம்பையெதிரில் நிற்பதையும் கண்டு சந்தேகங் கொண்ட விசுவாமித்திரர், இவையெல்லாமஇந்திரனுடையஏவுதலென்று அறிந்து, ரம்பையைப்பார்த்து, "ரம்பையே, கோபத்தை ஜெயிக்கவேண்டுமென்றிருக்கிற எனக்குக்கோபம் உண்டாக்கினபடியால், நீ பத்துலட்சம் வருஷம் கல்லாய்க்கிடக்கக் கடவாய். சாபத்தின் முடிவில் ஒரு பிராமணனுடைய சகாயத்தாலே சாபவிமோசனமடையக்கடவாய்." என்றுசபித்தார். இப்படிசாபம் பெற்ற ரம்பை உடனே கல்லாய்ப்போய் அவருடைய ஆசிரமத்திலேயே கிடந்தாள். அப்படியிருக்கும்போது அந்த ஆசிரமத்தில் அகஸ்தியருடைய சிஷ்யனாகிய சுவேதன் என்ற மகாரிஷி மோட்சத்தையுத்தேசித்துவெகுகாலமாய்த் தபசு பண்ணிக்கொண்டிருந்தார். ஒருநாள்அவருடைய தபசைக் கெடுக்க எண்ணங் கொண்ட அங்காரகை என்கிற ராட்சதிமலமூத்திரஇரத்தங்களை வாரியிறைத்துக்கொண்டும், மேகம் போலக்கர்ஜித்துக்கொண்டும் வந்து தொந்தரவு பண்ணினாள். அப்பொழுது சுவேதர் கோபங் கொண்டு, விசுவாமித்திரர்சாபத்தால்கல்லாய்க்கிடந்த ரம்பையை எடுத்து, வாயு மந்திரத்தை யுச்சரித்து அதைவாயுவாஸ்திரமாகப் பிரயோகம்பண்ணினார். அந்தக்கல்லு ராட்சதியைத் துரத்தும் போது அவள் பயந்தோடி தட்சிணசமுத்திரக் கரைக்கு வந்து

கபிதீர்த்தத்தில் விழுந்தாள். விரட்டிக்கொண்டு பின்தொடர்ந்து வந்த கல்லானது அவள் தலையில் பொத்தென்று விழ ராட்சதி மடிந்தாள். அந்தக்கல் கபிதீர்த்தமகிமையால்சிலாரூபம் போய் பழைய ரம்பையாகி திவ்யாம்பரமணிந்து, ஹாரம், கேயூரம், கடகம், மூக்குத்தி, புலாக்குமுதலான திவ்யாபரணங்களைத் தரித்துத்திவ்ய விமானத்திலேறி, ஊர்வசிமுதலானதோழிகளாகிய அப்ஸரஸ்திரீகள் சூழ்ந்துவரத்தேவர்கள்புஷ்பவருஷம்வருஷிக்க, கபிதீர்த்தத்தைப் புகழ்ந்துகொண்டு, சந்திரசேகரரான இராமநாதனைச் சேவித்து அழகான அமராவதி போய்ச்சேர்ந்தாள். அந்தராட்சதியானவள் பூர்வ ஜன்மத்தில் கிருதாசியென்கிற தேவஸ்திரீ அகஸ்தியர் சாபத்தால் இராட்சதியாகி யிந்தக் கபிதீர்த்தத்தில்ஸ்நானம்பண்ணினதினால் சாபமொழிந்துபழைய வடிவம பெற்றுச்சொர்க்கலோகம்போய்ச் சேர்ந்தாள்.

கேளுங்கள் முனிவர்களே, இப்படியாகச் சுவேதருடைய பிரசாதத்தால்ரம்பையும்கிருதாச்சியும் சாபவிமோசனம பெற்ற கபிதீர்த்த மகிமையையுங்களுக்கு வெளிப்படுத்தினேன். இந்த அத்தியாயத்தைப் படிப்பவரும, கேட்பவரும் கபிதீர்த்தஸ்நான பலனையடைவார்கள்.

முப்பத்தொன்பதாவது அத்தியாயம்
முற்றிற்று

நாற்பதாவது

# காயத்திரீசரஸ்வதி தீர்த்தங்களின் வரலாறுரைத்த

அத்தியாயம்

---

கேளுங்கள் முனிவர்களே, கந்தமாதனத்திலிருந்த காயத்திரீ, சரஸ்வதியென்கிறதீர்த்தமகிமையையுங்களுக்கெடுத்துரைக்கிறேன். பிரமபத்தினிகளான காயத்திரீ சரஸ்வதியென்கிறஇருவரும் வாசம்பண்ணிக்கொண்டிருக்கிறபடியால் அதற்கு இந்தப் பெயர் வந்ததென்று சூதர்சொல்ல, ரிஷிகள் ஐயா, சூதமுனிவரே பிரமபத்தினிகளாகிய காயத்திரீ, சரஸ்வதியென்பவர்கள்

கந்தமாதனத்துக்குவந்த காரணமென்ன? என்று வினவச் சூதர் சொல்லுகிறார்.

பூர்வகாலத்தில் பிரம்மதேவர் வாக்கு என்கிற தன் புத்திரியைக்கண்டு, காமவெறியால் மயங்கி மோகங்கொண்டார். அந்தப் பெண் தன் தகப்பன் தன்னிடத்திலாசைப்படுவதைக்கண்டு வெட்கப்பட்டுப்பெண்மானுருவங்கொண்டு ஓடினாள். பிரமதேவர் ஆண்மானுருவங்கொண்டு அவளைத்துரத்தினார். அதுகண்ட தேவர்களெல்லோரும் லோகசிருஷ்டாவாகிய பிரமா தன் மகளைப்பெண்டாளச்செல்வது அக்கிரமம் என்று தூஷித்தார்கள். அப்பொழுது பரமசிவன் அநியாயத்திற் பிரவிர்த்தித்தது பொறுக்காமல், வேடரூபந்தரித்துப் பிநாக மென்கிற வில்லைக் கையிலெடுத்து வளைத்துக்காதுவரைக்கும் இழுத்து அம்பைத்தொடுத்துப் பிரயோகம் பண்ணினார். அப்பொழுது பிரம்மாவாகிய மான் பரமசிவன் அம்பாலடிபட்டுப்பூமியில் விழுந்துமடிந்தது. உடனே அதனுடைய சரீரத்திலிருந்து ஒரு பெரிய ஜோதிகிளம்பி ஆகாசம்போய் மிருகசீரிஷ நட்சத்திரம் ஆய்விட்டது. பரமசிவனுடனே ஆருத்திரா நட்சத்திரமாகி மிருகசீரிஷ நட்சத்திரமான பிரமதேவனைத் துன்பப்படுத்தினார். இப்பொழுதுகூடப்பரமசிவன் வேடரூபமாய் மிருகசீரிஷ நட்சத்திரத்தின் சமீபத்தில் காணப்படுகிறது நிச்சயம். இந்த மாதிரியாகப் பரமசிவனால் பிரமதேவன் உயிரிழந்ததைக் கேட்ட காயத்திரீஸரஸ்வதீ யிருவரும்வைதவ்யத்தையடைந்த துக்கத்தினால் வருந்தி நமது கணவனை உஜ்ஜீவிப்பதற்கு நாமென்ன செய்வோம் என்று பரஸ்பரம் யோசனை செய்துகொண்டு சர்வோத்க்ருஷ்டமாய்ச் சிவபெருமானுக்கு இருப்பிடமாய் எல்லாருக்கும் அபீஷ்டத்தைக் கொடுக்கும்படியான கந்தமாதனத்துக்குப் போய், சிவனையுத்தேசித்துத் தபசுபண்ணத்தீர்மானம் பண்ணிக்கொண்டு, தங்கள் ஸ்நானத்திற்காகத் தங்கள் பேராலிரண்டு தீர்த்தங்களையுண்டாக்கியவைகளில் தினமும் மூன்றுவேளை ஸ்நானம் பண்ணிக் காமக்குரோதாதிகளை விட்டு, ஆகாரமில்லாமல், பஞ்சாட்சர மஹா மந்திரமொன்றையேஜபித்து, சிவத்தியானம்பண்ணிக்கொண்டு வெகுகாலம் உக்கிரமான தபசுபண்ணினார்கள். அவர்களுடைய தபசினால் திருப்தியடைந்த கிருபாமூர்த்தியான பரமசிவன், அவர்களுடைய தபப்பலனையளிக்க எண்ணங்கொண்டு, ஸ்ரீ விக்கினேசுவரரும், சுப்பிரமண்ணிய சுவாமியு மிருபக்கத்திலும் வர பார்வதீ

ஸமேதராய் அவர்களுக்கெதிரில் தோன்ற, அதைக் கண்ட அவ்விரு வரும் பரமேசுவரனை ஸ்தோத்திரம்பண்ணத் தொடங்கினார்கள்: "நீக்கமுடியாத சமுசாரமாகிற இருளைத் தொம்சம்பண்ணுகிறதற்கு முக்கிய காரணராயும், எரிந்துக்கொண்டிருக்கிற ஜ்வாலைகளாலே பயங்கரமான காளகூட விஷத்தைப் பானம்பண்ணினவராயும், ஜகத்தை மோகிக்கச்செய்கிற பஞ்சபாணங்களையுடைய மன்மதனுடைய சரீரத்தை யெரித்தவராயும், ஜகத்தை யழிக்கிற குரூரனான யமனை அழித்தவராயும், கங்கையின் அலைகள் மோதும்படியான ஜடாமண்டலத்தையுடையவராயும், பாலசந்திரனைத் தரித்தவராயும், பினாகமென்கிற வில்லினுடைய பயங்கரமான டங்காரத்தொனியால் திரிபுரங்களை நடுநடுங்கச் செய்தவராயும், நானாவிதமான உலகத்தைப் படைத்தவரான பிரம்மதேவனுடைய சிரசை யறுத்தவராயும், குளிர்ந்து பாவனமான கிருபாதிருஷ்டியால் மார்க்கண்டேயரைக் காப்பாற்றினவராயும் இருக்கிற உமக்கு வந்தனம், வந்தனம்; கிரிஜாநாதா, மஹாதேவா, ஜகந்நாதா, திரிபுராந்தகா, சங்கரா, வாமதேவா, சரணமடைந்த எங்களைக் காத்தருளும்!" என்று துதிக்க, தேவதேவரான மகேசுவரரும் பிரீதியோடுகூட அவர்களிருவரையும் பார்த்துப் "பெண்களே உங்களிடத்தில் நான் பிரியமாயிருக்கிறேன்; உங்களுக்கு வேண்டியவரத்தைக் கேட்டுக் கொள்ளுங்கள்" என்று சொல்லக் காயத்திரீ ஸரஸ்வதிகள் "தேவதேவா! எங்களுடைய பர்த்தாவான பிரம்மதேவனைக் கிருபைகூர்ந்து உயிர்ப்பித்துத் தரவேணும்; எங்களுக்குப் பிதாவாகிய திரிபுராந்தகா! புத்திரிகளாகிய எங்களுக்குப் பதிதானம்பண்ணி யெங்களைக் காப்பாற்றவேண்டும்" என்று பிரார்த்திக்கச், சம்புவானவர் "அப்படியே யாகட்டும்" என்று சொல்லிப், பிரம்மாவினுடைய சிரசுகளை நந்தி, பிருங்கி, முதலான பூதகணங்களைக்கொண்டு தருவித்துப், பிரம்மாவின் சரீரத்தில் பொருத்தினபோது, காயத்திரீ, ஸரஸ்வதியிருவரும் பார்த்துக் கொண்டிருக்கும்போதே பிரம்மதேவன் நாலு முகங்களோடுகூடத் தூங்கி யெழுந்தவனைப்போல் எழுந்திருந்தார். எழுந்திருந்தவுடனே சந்திரசேகரரான சங்கரனைக்கண்டு ப்ரீதியைகளோடுஉத்தமமானவசனங்களாலே ஸ்தோத்திரம்பண்ணினார்:— "தேவதேவா, ஈசா, கருணாகரா, சங்கரா, கருணாஸிந்துவே, பிரபுவே உமக்கு நமஸ்காரம். சம்புவே, நான் இனிமேல் குமார்க்கத்தில் போகாதபடி யென்னைக் காத்தருளும!" என்று பிரார்த்திக்க

பார்வதீபதியான பரமசிவன் "அப்பா பிரம்மாவே, இனிமேல் கவனத்தாழ்ச்சியான செய்கை செய்யாதே; குமாரக்த்தில் போறவர்களை நான் எப்பொழுதும் சிக்ஷித்துக்கொண்டிருக்கிறேன்" என்று சொல்லி, ஸரஸ்வதியையும், காயத்திரியையும் பார்த்து "பெண்களா! என்னுடைய அநுக்கிரகத்தால் உங்களுடைய பர்த்தாவான பிரம்மதேவன் உயிர்பிழைத் தெழுந்திருக்கிறான்; அவனோடுகூடச் சீக்கிரம் பிரம்மலோகம்போய்ச் சேருங்கள்; நீங்கள் உங்களுடைய அம்சத்தினாலே இந்தத் தீர்த்தங்களில் எப்பொழுதும் வாசம்பண்ணிக் கொண்டிருப்பதால் இந்தத் தீர்த்தங்கள் காயத்திரீ ஸரஸ்வதீ யென்கிற உங்கள் பெயரால் பிரக்கியாதியாயிருக்கட்டும். இந்தத் தீர்த்தங்களில் ஸ்நானம் பண்ணுகிறவர்கள் சகல பாபங்களும் நீங்கிச், சுத்தி, சாந்தியுண்டாகிச் சருவாபீஷ்டமும் கைகூடி, என்னுடைய அநுக்கிரகமும் விஷ்ணுவினுடைய அநுக்கிரகமும் பெற்றுச் சாயுஜ்யமென்கிற முக்தியையும் அடையக்கடவார்கள். இந்தத் தீர்த்தத்துக்குச் சமானமான தீர்த்தமும் மேலான தீர்த்தமுமிருந்ததுமில்லை; இருக்கப்போகிறதுமில்லை. காயத்திரீயுபாஸ்தியில்லாமலும், வேதாப்பியாசம் பண்ணாமலும், ஔபாசனம் செய்யாமலும், பஞ்சமஹா யக்ஞானுஷ்டானம் பண்ணாதவர்களும், நித்தியகர்ம்மாநுஷ்டானம் பண்ணாதபாபிகளும், இந்தக் குண்டங்களில் ஸ்நானம்பண்ணிச் சுத்திபெற்று அந்தந்தப் பலன்களை யடையக்கடவார்கள்" என்று சொல்லி யெல்லாரும் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அந்தர்த்தானமடைந்து விட்டார். பிறகு காயத்திரீ ஸரஸ்வதீ யென்கிற இரண்டு தேவிமார்களும் தங்கள் கணவனை யழைத்துக்கொண்டு பிரம்மலோகம் போய்ச்சேர்ந்தார்கள்.

கேளுங்கள் முனிவர்களே! கந்தமாதனத்தில் காயத்திரீ, ஸரஸ்வதீ யிருவரும் வந்த காரணத்தை யுங்களுக்குச் சொல்லிவிட்டேன். இந்த அத்தியாயத்தைப் படிப்போரும், கேட்போரும் அந்தத்தீர்த்தங்களில் ஸ்நாநம்பண்ணின பலனை யடைகிறார்கள். இதில் சந்தேகமில்லை.

நாற்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## நாற்பத்தோராவது

# காயத்திரீ ஸரஸ்வதி தீர்த்தங்களில் ஸ்நானம்பண்ணிக் காசிபர்பாபம் நீங்கின

## அத்தியாயம்.

முனீசுவரர்களே! இந்தக் காயத்திரீ, ஸரஸ்வதி தீர்த்தங்களில் ஸ்நானம்பண்ணிக் காசிபர் என்ற பிராமணன் நரகத்தைக் கொடுக்கத்தக்க பாபத்தினின்றும் விடுபட்டு முக்தியை அடைந்தாரென்று சூதர் சொல்ல, ரிஷீசுவரர்கள், ஐயா, கிருபாமூர்த்தியாகிய சூதமுனிவரே! காசிபரென்ற பிராம்மணன் என்ன பாபம் செய்தார்? உம்முடைய வாக்காகிய அமிர்தத்தைப் பானம்பண்ணித் திருப்தர்களாய்ப் பசிதாகங்கூட இல்லாமல் சிரத்தையோடு கேட்டுக்கொண்டிருக்கிற எங்களுக்கு அதைச் சவிஸ்தாரமாகச் சொல்லியருளும் என்று கேட்க, முனிவர்களே! காயத்திரீ, ஸரஸ்வதி தீர்த்தங்களின் மகிமையை விளக்குகிறதாயும், கேட்பவருடைய பாபத்தைப் போக்குகிறதாயுமிருக்கிற அந்த இதிகாசத்தைச் சொல்லுகிறேன் கேளுங்களென்று சூதமுனிவர் சொல்லுகிறார்.

பூர்வகாலத்தில் அபிமன்யுவின் புத்திரனான பரிட்சித்து மஹாராஜாவானவன் தர்ம்மமாய்ச் செங்கோல் செலுத்தி அஸ்தினபுரத்தில் வாழ்ந்து வந்தான். அவனுக்கு அறுபது வயதானபொழுது, ஒரு நாள் வேட்டையாட விரும்பிக் காட்டுக்குட்புகுந்து, அவன் வேட்டையாடி, தப்பி ஓடிப்போன ஒரு மானைத்துரத்திக்கொண்டு போய்ப் பசிதாகங்களால் வருந்தி வருகையில், அவ்விடத்தில் மரவுரிதரித்துத், தியானம் பண்ணிக்கொண்டிருந்த சமீகமுனிவரைக் கண்டு "முனீந்திரரே! என் அம்பால் அடிபட்டுப் பயந்து ஓடிவந்த மானைப்பார்த்தீரோ" என்று கேட்க, அந்த முனிவர் சமாதியிலிருந்தபடியால் மௌனமாயிருந்து விட்டார். அப்பொழுது அரசன் கோபங்கொண்டு, தன்வில்நுனியால் செத்துக்கிடந்த ஒருபாம்பை யெடுத்து அந்த முனிவருடைய தோளில் போட்டுவிட்டுத் தன்னகரம் போய்ச்சேர்ந்தான். அந்த ரிஷீசுவரருடைய குமாரனான சிருங்கி என்பவனைப் பார்த்து அவனுடைய தோழனான கிருசன் என்பவன் "ஏ மித்திரா! உன் தகப்பன் தோளில் செத்த பாம்பைப் போட்டுக்

கொண்டிருக்கிருரே! உனக்குக் கருவமென்னத்துக்கு? அந்த வீண் கருவத்தை விட்டுவிடு" என்று பரிகாசம் பண்ணிச சிரிக்கச், சிருங்கனுக்குக் கோபமுண்டு, "என் தகப்பன் தோளிலே, செத்தபாம்பைத் தூக்கிப்போட்டவுடன் இன்னும் ஏழுநாட்களுக்குள் தட்சகன் என்கிற சர்ப்பத்தால் கடிக்கப்பட்டிறக்கக் கடவது" என்று சபித்தான். அது கேட்ட அவனுடைய தந்தையாகிய சமீகர் "அப்பா! சமஸ்த ஜனங்களையும் பரிபாலிக்கிற மகாராஜனை யேன் சபித்தாய்; அரசனில்லாமற் போனால் நாமெல்லா மெப்படி ஜீவிக்கிறது. கோபத்தால் பாபமுண்டாகும், பொறுமையால் சுகமுண்டாகும். உண்டான கோபத்தைப் பொறுமையால் அடக்கிக்கொள்ளுகிறவன் இகபரமிரண்டிலும் சுகத்தை யடைகிறான். பொறுமையுள்ளவர்கள் அல்லவோ உலகத்தில் உத்தமமான கீர்த்தியை அடைகிறார்கள்" என்று சொல்லித், தன் சிஷ்யனாகிய கௌரமுகன் என்பவனை நோக்கி "அப்பா நீ பரிக்ஷித்து மஹாராஜாவினிடம் போய், என் புத்திரன் கொடுத்த சாபத்தைச் சொல்லிவிட்டுச் சீக்கிரந் திரும்பி வா" என்று அனுப்பினார். கௌரமுகன், சுபத்திரை புத்திரனாகிய பரிக்ஷித்துவினிடம் போய், "ஓ மஹாராஜாவே; நீர் சமீகரிஷியினுடைய தோளில் செத்த பாம்பைப் போட்டுவந்தபடியால் அவருடைய குமாரன் சிருங்கி என்பவன், கோபங்கொண்டு, இன்று ஏழாம்நாள் தட்சகன் என்கிற பாம்பினாலே நீர் கடிக்கப்பட்டு விஷாக்கினியாலெரிக்கப்பட்டிறக்கக் கடவதென்று சபித்திருக்கிறான். இதை உம்மிடம் சொல்லிவிட்டு வரும்படி என் குருவாகிய சமீகர் என்னை யனுப்பினார்" என்று கௌரமுகன் திரும்பிப்போய் விட்டான். உடனே பரிக்ஷித்துமஹாராஜன் சோகசாகரத்தில் முழுகி ஆகாசமளாவியிருக்கிற ஒரேகம்பத்தை நாட்டியதன்மேல், விஸ்தாரமாயும், உயரமாயுமிருக்கிற ஒரு மண்டபம் கட்டி, அதில் கருடமந்திரம் தெரிந்தறிந்தவர்களையும், ஔஷதந்தெரிந்த வைத்தியர்களையும், அநேக தேவரிஷி, பிரம்மரிஷி, ராஜரிஷிகளையும் வைத்துக் கொண்டு ஸ்ரீமந்நாராயணனைத் தியானம்பண்ணிக் கொண்டிருந்தான். அந்தச் சமையத்தில் 'மாந்திரீகோத்தமரான காசிபர்என்கிற பிராமணன் தரித்திரத்தினாலே பொருளை யிச்சித்து, பரிட்சித்து மஹாராஜனைக் கடிக்கப்போகிற தட்சகனுடைய விஷத்தை யிறக்குவதற்காக வந்துகொண்டிருந்தான். இந்தச் சமையத்தில் தட்சகனும் பிராமணவேஷந் தரித்துவர, இருவரும் நடுவழியில் சந்தித்

னார்கள். அப்பொழுது தட்சகன் காசிபரைப் பார்த்து "ஓய் பிராமணா ! நீர் எங்கே போகிறீர் ? எனக்குச் சொல்லவேண்டும்" என்று கேட்க, காசிபரும்தட்சகனைப்பார்த்து "ஐயா! பரிட்சித்துமஹாராஜாவைத் தட்சகன் கடிக்கப்போகிறானும் ; அந்த விஷத்தை யிறக்கப் போகிறேன்" என்றான். தட்சகன் "ஓய் பிராம்மணோத்தமா ! நான் தட்சகன், நான் கடித்தவிஷத்தை யிறக்குவதற்கு நூறுவருஷம் மஹாமந்திர ஜபம்பண்ணினாலும் முடியாதே. நான் கடித்ததைச் சிகிச்சை செய்யும் சக்தி உமக்கிருந்தால், அநேக யோசனை தூரம் வளர்ந்திருக்கிற இந்த ஆலமரத்தைக் கடிக்கிறேன் ; அதைப்பிழைப்பித்தால் அப்பொழுது நீர் கெட்டிக்காரர்தான்" என்று சொல்லி யந்தமரத்தை யுடனே கடித்தான். அந்த உயரமான மரமும் பஸ்மீகரமாய்விட்டது அந்த மரத்தில் முன்னமே ஒருவன் ஏறியிருந்தான். அவனுங்கூடத் தட்சகனுடைய விஷஜுவாலைகளால் எரிந்து போனான். அது காசிபர் தட்சகர்களுக்குத் தெரியவராது. அப்பொழுது மாந்திரீகோத்தமனை காசிபன் தட்சகன் கேட்கும்படியாக "என்மந்திர சக்தியை இப்பொழுதெல்லாரும் பார்க்கட்டும்" என்று பிரதிக்ஞைபண்ணி விஷாக்கினியால் எரிந்துபோன ஆலவிருட்சத்தை மறுபடியும் பிழைக்கப் பண்ணினபொழுது அதிலிருந்த மனுஷனும் பிழைத்துவிட்டான். அப்பொழுது தட்சகன் மந்திரத்திற் சிறந்த காசிபனைப் பார்த்து, "ஐயா! அந்த ரிஷியினுடைய வாக்குப் பொய்யாகாதபடி நீர் செய்யவேண்டும் ; அரசன் கொடுக்கிற திரவியத்தைவிட இரண்டு பங்கு நான் தருகிறேன். நீர் சீக்கிரம் வீடுபோய்ச்சேரும்" என்று சொல்லி, அவருக்கு விலையுயர்ந்த ரத்தினங்களைக் கொடுத்து அனுப்பிவிட்டான். காசிபரும் தட்சகனிடத்தில் இரத்தினத்தைப் பெற்றுக்கொண்டு தன் ஞானதிருஷ்டியால் அரசனுக்கு அற்பாயுசுதானென்று தெரிந்துக்கொண்டு மௌனமாய் வீடுபோய்ச் சேர்ந்தார். அந்தக்ஷணத்திலேயே தட்சகன் பாம்புகளை யழைத்து "நீங்களெல்லாரும் முனிவர் வேஷந்தரித்துப் பரிக்ஷித்து மஹாராஜாவுக்குக் காணிக்கையாகப் பழங்களை யெடுத்துக்கொண்டுபோய்க் கொடுங்கள்" என்று சொல்ல, அவர்கள் கொண்டுபோன ஒரு இலந்தைப்பழத்திலே அத்தக்ஷகன் புழுவடிவம் கொண்டு அரசனைக் கடிக்கும்படியாக உட்கார்ந்திருந்தான். அந்தப்பாம்புகளும் பழங்களை யெடுத்துக்கொண்டுபோய் இராஜாவுக்குக் கொடுத்தன. பரிட்சித்து மஹாராஜா பிராமணரூபங்கொண்டசர்ப்பங்கள் கொடுத்தபழங்களை

யெல்லாம், மந்திரத்தில் சிறந்த பிராமணர்களுக்குக் கொடுத்துவி ட்டு, அவைகளில் பெரிதாயிருந்த ஒரு பழத்தைத்தானெடுத்துக் கையில் வைத்துக்கொண்டான். இந்தச் சமயத்தில் சூரியன் மலைவா யில் விழுந்தது. அப்பொழுது அங்கிருந்த ரிஷிகளும், பிராமணர் களும், ராஜாக்களும், மற்று முள்ளவர்களும், ஓ! ஓ! ரிஷிவாசகம் பொய்யாய்ப்போய்விட்டதென்று சொல்லிக் கொண்டார்கள். உட னே அரசன்கையிலிருந்த பழத்திலிருந்து ஒரு செவந்த புழுவா னது யாவரும் பார்க்கும்படியாக வெளியில் வந்தது. அரசன் அந் தப் புழுவை யெடுத்து, "இந்தப் புழுத்தானு என்னைக் கடிக்கப் போகிறது" என்று சொல்லி அந்தப் பழத்தைத் தன் கழுத்தில் வைத்துக்கொண்டான். அந்தப் பழத்தில் முன்னேதானே புழுவ டிவங்கொண்டிருக்கிற தட்சகன் வெளிப்பட்டு அரசன் தேகத்தைச் சுற்றிக் கொண்டான். உடனே பக்கத்திலிருந்தவர்களெல்லாரும் பயந்து ஓடிப்போனார்கள். அரசனும் விஷாக்கினியாலே மண்டபத் தோடுகூட எரிந்து சாம்பலாய் விட்டான். பின்பு அரசனுடைய புரோகிதர்களெல்லாரும் அவனுக்குச் செய்யவேண்டிய உத்தரகிரி யைகளைச் செய்து முடித்தார்கள். மந்திரிமார்கள் அரசன் புத்திர னுகிய ஜனமேஜயனுக்கு உலகத்தைப் பரிபாலிக்கும்படி பட்டங் கட்டினார்கள்.

பிராமணோத்தமர்களே கேளுங்கள். பரிக்ஷித்தை இரட்சிக்க வந்து, தட்சகனிடத்தில் பொருளை வாங்கிக்கொண்டு திரும்பிப் போன காசிபர் சமாசாரத்தை சொல்லுகிறேன் கேளுங்கள். அவன் போனவிடங்களிலெல்லாம் யோக்கியர்களாலும், ஜனங்க ளாலும் நிந்திக்கப்பட்டுத் தேசங்களெல்லாஞ் சுற்றிவந்தான். இவ ன்போன ஊரிலுள்ள ஜனங்களும், ஆச்சிரமங்களிலுள்ளவர்களும், இவனை யடித்துத்துரத்தி யிடங்கொடாமலிருந்தபடியால், கடை சியில் அவன் சாகல்யமஹாரிஷியைச் சரணமடைந்து, வணங்கி "ஐயா! சகலமும் தெரிந்த விஷ்ணு பக்தரான மஹாரிஷியே நான் போன விடங்களிலுள்ள பிராமணர்களும், முனிவர்களும், மித்தி ரர்களும், மற்றுமுள்ளவர்களும், என்னை நிந்தித்துத்துரத்தி யடிக்கி ரூர்கள்; இதற்குக் காரணந்தெரியவில்லை. நான் பிரம்மஹத்தி, சுராபா னம், சொர்ணஸ்தேயம், குருதல்பகமனம், அவர்களுடன் கூடியிரு க்கிற பாபங்களாகிய பஞ்சமஹாபாதகங்களை ஒருபொழுதும் செய்த தியேன். மற்றைய பாபங்களையுஞ் செய்ததாக எனக்குத் தோன்ற

யில்லை அப்படியிருந்தும் பந்துக்கள் கூட வீணாய் நிந்திக்கிறார்களே; சுவாமி நான் செய்திருக்கிற பாபம் இன்னதென்று உமக்குத் தெரியுமானால் எனக்குச் சொல்லவேணடும்." என்று கேட்கச் சாகல்யரும் க்ஷணகாலம் யோசித்துச் சொல்லுகிறார்:—"அப்பா! நீ பரிக்ஷித்துவைத் தட்சகனினின்றுங் காப்பதற்குப் போகும் பாதி வழியில் தட்சகன் பேச்சைக்கேட்டுத் திரும்பிவந்து விட்டாயல்லவா? விஷம், ரோகம் முதலானவைகளால்பிடிக்கப்பட்டவர்களைச் சிகிச்சைபண்ணச் சக்தியுள்ளவன் காமம், குரோதம், மோகம், லோபம், பயம், மாற்சரியம் ஆகிய துர்க்குணங்களினால்காப்பாற்றாமல் விட்டுவிட்டால் மஞ்சமஹாபாதகனென்றும், அவனுக்குப் பிராயச்சித்தமில்லை யென்றும் சொல்லுகிறார்கள். கன்னிகையை விக்கிரயம் பண்ணுகிறவனுக்கும், குதிரை விக்கிரயம் பண்ணுகிறவனுக்கும், செய்த நன்றி மறக்கிறவனுக்கும், சாஸ்திரங்களில் பிராயச்சித்த மேற்பட்டிருக்கிறது. விஷரோகாதிகளால் பீடிக்கப்படுகிறவர்களைச் சக்தியிருந்தும் காவாதவனுக்குப் பதினாயிரம் பிராயச்சித்தம் பண்ணிக்கொண்டாலும் பரிசுத்தமாகிறதில்லை. அவனோடு பேசவும் கூடாது, அவனைப்பார்க்கவும் கூடாது, அவனோடு பந்தி போஜனம் பண்ணவுங்கூடாது. புண்ணியவானும், தார்மிகனும், விஷ்ணுபக்தனும், மஹாயோக்கியனும், சாதுர்வர்ணங்களைக் காப்பவனுமான பரிக்ஷித்து வியாசபுத்திரரான சுகமுனிவரிடத்தில் ஹரிகதையைப் பக்தியோடு கேட்டிருந்தான். அப்பேர்ப்பட்ட இராஜனை தக்ஷகன் பேச்சைக்கேட்டு இரட்சியாமல் வந்துவிட்டபடியினால் தான் உன்னை பந்துக்கள்கூட நிந்திக்கிறார்கள். பரிக்ஷித்து மஹாராஜன் க்ஷணத்துக்குள்ளே சாகிறவனாகக் காணப்பட்டாலும் அவன் சாகிறபரியந்தம் புத்திசாலியாகிய நீ சிகிச்சைபண்ணி யிருக்கவேண்டியதல்லவா; உலகத்தில் சாகக்கிடக்கிற ஒருவனுக்கு அவன் மூச்சுப்போகிறவரைக்கும் வைத்தியஞ் செய்யவேண்டுவது அவசியமென்றும், அது பலியாமற்போனால அது காலகதி யென்றும் வைத்தியந்தெரிந்த பெரியோர்கள். சொல்லியிருக்கிறார்கள். ஆகையால் வைத்தியஞ்செய்யச் சக்தியிருந்தும் பாதிமார்க்கத்தில் திரும்பிவிட்டபடியால் நீயே அவனைக் கொன்றுவிட்டாயென்று சொல்லலாம்" என்று சொல்லச், "சுவாமி நான் இந்தப் பாபத்தினின்றும் விடுபட்டு என் பந்துக்களாலும், மித்திரர்களாலும் ஏற்றுக்கொள்ளும்படி கிருபைகூர்ந்து செய்தருளவேண்டும்" என்று கெஞ்சினான்.

சாகல்யர் கொஞ்சநேரம் தியானத்திலிருந்து, "அப்பா காசிபா! இந்தப்பாவம் போகும்படியான உபாயஞ் சொல்லுகிறேன்; நீ அதைத் தாமதியாமல் சீக்கிரஞ் செய். தெட்சணசமுத்திரத்தில் சேது ரூபமான கந்தமாதனத்தில் காயத்திரி, ஸரஸ்வதி யென்று இரண்டு தீர்த்தங்களிருக்கின்றன; அதில் ஸ்நானம்பண்ணினவுடனே நீ பரிசுத்தனாய் விடுவாய்; அந்தத் தீர்த்தத்தின் ஜலக்காற்று எவன்மேல் படுகிறதோ அவன் சமஸ்தபாபங்களையும் போக்கிச் சுவர்க்கமடைகிறான். ஆகையால் நீ அந்தத் தீர்த்தங்களுக்குப் புறப்பட்டுப்போ" என்று சொல்லக், காசிபர் சாகல்யரை நமஸ்கரித்துப், போய்வருகிறேனென்று விடைபெற்றுக்கொண்டு கந்தமாதனம் போய், அந்தத்தீர்த்தங்களையும், தண்டபாணியாகிய பைரவரையும் வந்தனம் பண்ணிச் சங்கற்பபூர்வமாக ஸ்நானம்பண்ணினவுடனே, பாபவிமோசனமடைந்து, அத்தீர்த்தங்களின் கரைகளில் கொஞ்சநாள் தங்கியிருந்தான். அப்படியிருக்கையில் சர்வாபரண பூஷிதைகளாயிருக்கிற காயத்திரியும், ஸரஸ்வதியும் அவனுக்கெதிரில் வந்து நின்றார்கள். அவர்களைக்கண்டு பக்தியுடன்வணங்கி "அம்மா! ரூபயௌவனசாலிகளான நீங்கள் யார்" என்று கேட்டான். அவர்கள் சிகாசிபனே நாங்களிருவரும் பிரம்மதேவன் பத்தினிகளான காயத்திரி ஸரஸ்வதிகள். இந்தத்தீர்த்தங்கள் ரூபமாக நாங்கள் இங்கே யெப்பொழுதுமிருந்து கொண்டிருக்கிறோம். இந்தத்தீர்த்தங்களில் நீ ஸ்நானம்பண்ணி யிருப்பதால் நாங்கள் உன்னிடத்தில் பிரீதியாய் வந்திருக்கிறோம். உனக்கு வேண்டுமென்கிற வரத்தைக் கேட்டுக்கொள். இந்தத் தீர்த்தங்களில் ஸ்நானம் பண்ணுகிறவர்களுக்கு நாங்கள் அபீஷ்டசித்தியைக் கொடுப்போம்" என்று சொல்லக் காசிபர் சிறந்தவாக்கியங்களால் அவர்களைத் துதிக்கத்தொடங்கினான்:— "சதுரானனுக்குப் பத்தினிகளாயும், ஜகத்துக்கு மாதாக்களாயும், வித்தியா சொரூபிகளாயும், சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹார காரணிகளாயும், வேதமாதாக்களாயும், ஹவ்விய கவ்விய சொரூபிகளாயும், சூரிய சந்திரர்களைக் கண்ணாகக் கொண்டவர்களாயும், சமஸ்த தேவர்களுக்கும் ஈசுவரிகளாயுமிருக்கிற உங்களை யெப்போதும் பஜிக்கிறேன். ஜகத்துத்துக்கு ஹிதஞ்செய்கிற நீங்களிருவருமே பார்வதியும், இலட்சுமிதேவியும்; ஜகத்சிருஷ்டி முதலான வியாபாரங்களெல்லாம் உங்களுடைய கண்களிலேயே யடங்கியிருக்கின்றன. உங்களுடைய விழிப்பே ஜகத்சிருஷ்டியும் கண்மூடுதலே ஜகத்பிரளயமுமாகும். உங்களைக் கண்ட

தனுலேயே நான் கிருதார்த்தனுய் விட்டேன். இந்தத் தீர்த்தங்களில் ஸ்நானம்பண்ணிப் பாபவிமோசனமடைந்த என்னைப் பிராமணர்களும், முனிவர்களும், பந்துக்களும், அங்கீகாரஞ்செய்து கொள்ள வேண்டும். இனிமேல் பாபத்திலே புத்திபோகாமல் தர்ம்மத்திலேயே புத்தி யெப்பொழுதுஞ் செல்லவேண்டும். இதைத்தவிர வேறு வரமெனக்கு வேண்டியதில்லை" என்று சொல்ல, அவர்களும் "அப்பா! எங்களுடைய அனுக்கிரகத்தால் அப்படியே யாகட்டும்" என்று சொல்லி யுடனே யந்தர்த்தானமாய் விட்டார்கள். காசிபநும் கிருதார்த்தராகித், தம்தேசம்போய் பந்துக்களாலும் பிராம்மணர்களாலும் சேர்த்துக்கொள்ளப்பட்டார்.

ரிஷீசுவரர்களே காசிபநுக்குப் பாபவிமோசனஞ் செய்த காயத்திரீ ஸரஸ்வதி தீர்த்தங்களின் மகிமையைக் கூறிவிட்டேன். இந்த அத்தியாயத்தைப் பக்தியுடன் படிப்பவரும் கேட்பவரும் அந்தத் தீர்த்தங்களில் ஸ்நானம்பண்ணின பலனை யுடைகிறார்கள்.

நாற்பத்தோராவது அத்தியாயம்

முற்றிற்று.

---

நாற்பத்திரண்டாவது

# ரிணமோசன முதலிய தீர்த்தமகிமை உரைத்த

அத்தியாயம்.

---

கேளுங்கள் முனிவர்களே! நானிதுவரையி லுங்களுக்குச் சொல்லாதனவாய்ச் சேதுமத்தியிலிருக்கிற ரிணமோசனம் முதலான தீர்த்தங்களின் மகிமையைச் சொல்லுகிறேன். ரிணமோசன மென்கிற ஒரு புண்ணியதீர்த்தமிருக்கிறது. அதில் ஸ்நானம்பண்ணினவர்களுக்கு மூன்று வகையான கடன்களுந்தீர்ந்து விடுகின்றன. துவிஜனாய்ப் பிறந்தவனுக்கு ரிஷிகடன், தேவகடன், பிதுர்க்கடன் என்று மூன்று கடன் உண்டு. வேதாத்தியாயனம் பண்ணுதவனுக்கு ரிஷிகடன் உண்டாகிறது. யக்ஞாதிகள் செய்யாததினுல் தேவர்களுக்குக் கடனாளியாகிறுன். புத்திரனை யுண்டுபண்ணுமல்போனுல் பிதுர்க்களுக்குக் கட

ஞனியாகிறான். வேதாத்தியாயனம், யாகம், புத்திரோத்பாதன மிவைகளில்லாமலே ரிஷி,தேவர்,பிதுர்க்கடன்களைத் தீர்க்கவிரும்புகிறவன், இந்த ரிணமோசனத்தில் ஸ்நானம்பண்ணினால் அந்தக்கடன்கள் உடனே தீர்ந்துபோகின்கிறன. இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணுகிறவனிடத்தில் ரிஷிதேவர் பிதுர்க்களுக்கு உண்டாகிற திருப்தி, பிரமசரியம், யாகம், புத்திரோத்பாதனம் செய்கிறவனிடத்தில் உண்டாவதில்லை. மேலுமிந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணினால் தரித்திரனாய்க் கடனாளியாயிருக்கிறவன் கடனெல்லாம் நீங்கிச்சம்பத்தை யடைகிறானென்பதில் சந்தேகமில்லை. ஸ்நானம் பண்ணுகிறவர்களுக்கு ரிணமோசனமுண்டாகிறபடியால் இந்தத் தீர்த்தத்துக்கு ரிணமோசன தீர்த்தமென்று பேர் உண்டாயிற்று. ஆகையால் எவ்வகையான கடனையுடையவர்களும், கடன் தீர்வதற்காக ஸ்நானம் பண்ணித் தீர வேண்டும்.

பாண்டவதீர்த்த மென்றொரு தீர்த்தமிருக்கிறது. தர்மபுத்திராதி பஞ்சபாண்டவர்களுமதில் ஸ்நானம்பண்ணி யிஷ்டார்த்த ஸித்தி யடைந்தார்கள். இந்தத் தீர்த்தத்தில் பதினாயிரம்கோடி உத்தமதீர்த்தங்களும், ஆதித்தியர்களும், வசுக்களும், ருத்திரர்களும், மருத்துக்களும், சாத்தியர்களும் சதாவாசம்பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இதில் ஸ்நானம்செய்து பிதுர்க்களுக்கும், தேவர்களுக்கும் தர்ப்பணம்பண்ணி பாவனமான அதன் கரையில் ஒருபிராம்மணனுக்காவது அன்னம் போட்டால் அவன் இகத்தில் சகல பாபங்களும் நீங்கிப் போகபோக்கியங்களை யனுபவித்துவிட்டுப், பரத்தில் பிரமலோகம்போய்ச்சிறந்து வாழ்ந்திருக்கிறான். இந்தத் தீர்த்தத்தில் புண்ணிய காலங்களில் ஸ்நானம்பண்ணுகிறவன் எந்த வருணத்தில் பிறந்தவனாயிருந்தாலும் நரகத்தைப்பாராமலே முக்தியடைகிறான். இத்தீர்த்தத்தைக் காலையிலும், மாலையிலும் ஸ்மரிக்கிறவன் கங்காதி ஸர்வதீர்த்தங்களிலும் ஸ்நானம்பண்ணினவனாய் விடுகிறான்; சந்தேகமேயில்லை. இந்தத் தீர்த்தமானது புக்தியையும், முக்தியையும் கொடுக்கிறது.

தேவதீர்த்தம் என்கிற ஒரு புண்ணியதீர்த்தமிருக்கிறது. இந்திராதி தேவர்கள் தைத்தியர்களை ஜெயிக்கும் நிமித்தம் இதன்கரையில் யாகஞ்செய்தார்கள். இதில் ஸ்நானம் பண்ணுகிறவன் சகல பாபங்களுமொழிந்து, சர்வகாமங்களையுமடைந்து, அழிவில்லாத லோகங்களையுமடைகிறான். ஸ்திரீயாகட்டும், புருஷர்களாகட்டும் இதில் ஸ்நானம்பண்ணினால் அவர்கள் ஜன்மமுதல்கொண்டு செய்திருக்கிற

சகல பாபங்களுந்தீர்ந்து போகின்றன. விஷ்ணுவானவர் தேவர்களுக் கெல்லாம் ஆதியாகவிருப்பதுபோல இந்தத்தீர்த்தமானது தீர்த்தங் களுக்கெல்லாம் ஆதியாயிருக்கிறது. நூறுவருஷம் விடாமல் அக்கினி ஹோத்திரம் பண்ணுகிறவர்களுக்கும் இதில் ஒருவேளை ஸ்நானம் பண்ணுகிறவனுக்கும் புண்ணியம் சமமாக இருக்கிறது. இந்தத் தே வதீர்த்தத்துக்குப் போவதும், அதில் ஸ்நானம்பண்ணுவதும், அதன் கரையில் தானம்பண்ணுவதும், வாசம்பண்ணுவதும் மனிதர்களுக் குத்துர்லபம். தேவர், ரிஷி, பிதுர்க்கள் சேவித்துக் கொண்டிருக்கிற இதன் கிட்டப்போனால் அவன் அசுவமேதம்பண்ணின பலனையடைந் து விஷ்ணுலோகம் போகிறான். இரண்டு, மூன்று, ஐந்து, அல்லது ஆறுதினங்கள் இதன் கரையில் வசித்தால் அவன் இறப்புப்பிறப் பற்று உத்தமமான சித்தியை யடைகிறான். மூன்றுநாள் ஸ்நானம் பண்ணினவன். வாஜபேய பலனையடைகிறான். தேவதீர்த்தமென்று ஸ்மரித்தவுடனே சகல பாபங்களும் நீங்கிப்போகின்றன. இந்தத் தீர்த் தக்கரையில் பிதுர்க்களையும்தேவர்களையும் பூஜித்தவன்சகல யக்ஞப லனையடைந்து, சகலமனோபீஷ்ட ஸித்தியையும் அடைகிறான். இந்தத் தீர்த்தத்துக்குச் சமமான புண்ணியதீர்த்தம் இருந்ததுமில்லை; இருக் கப்போகிறதுமில்லை. இகபரபலன்களை அபேட்சிக்கிற முமுட்சுக்கள் கட்டாயம் இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணவேண்டும். இந்தத் தீர்த்தத்தின் மகிமையை யுங்களுக்குச் சுருக்கமாகச்சொன்னேன். விஸ்தாரமாகச் சொல்ல என்னால் முடியாது.

சுக்கிரீவதீர்த்தத்தைப் பற்றி யுங்களுக்கு நான் சொல்லுகிறேன். இதில் பக்தியோடு ஸ்நானம் பண்ணினவர்கள் சூரியலோகம் போய்ச் சேருவார்கள். இதில் ஸ்நானம்பண்ணினால் பிரம்மஹத்தியாதி பாபங் கள் நீங்கி அசுவமேத பலனை யடைகிறான். அந்தத் தீர்த்தத்துக்குப் போனால் ஆயிரம்கோதான பலனும் அதை நினைத்தால் வேதபாராய ணம் பண்ணினபலனும், அதன் கரையிலொருநாள வாசஞ்செய்தால் பிராயச்சித்தம் பண்ணிக்கொள்ளாமலே மஹாபாதக நிவர்த்தியும், அதில் ஸ்நானம்பண்ணிப் பிதுர்க்களுக்குந் தேவர்களுக்குந் தர்ப்பண ம் பண்ணினால் அப்தோர்யாமம் என்கிற யாகத்தி னெட்டுமடங்கு பல னும், நரமேதம்பண்ணின பலனும்வரும். இந்தத்தீர்த்தத்தில் ஸ்நான ம்பண்ணினால் பூர்வஜன்மஞானமுண்டாகும். ரிஷீசுவரர்களே உங்களு க்குச் சுக்கிரீவ தீர்த்த மகிமையைச் சொல்லிவிட்டேன். நீங்கள் இஷ் டஸித்தியடையும் பொருட்டுச் சுக்கிரீவ தீர்த்தம் போகவேண்டும்.

நளதீர்த்த மகிமையைக் கேளுங்கள். இந்த நளதீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணினால் சொர்க்கலோகம் போய்ச்சேர்வான். இதில் ஒரு தடவை ஸ்நானம் பண்ணினதினாலேயே சமஸ்த பாபங்களும் நீங்கி அக்கினிஷ்டோம, அதிராத்திர முதலான யாகபலன்களையும் அடைகிறான். மூன்றுநாள் அதன் கரையில் வசித்துப் பிதுர்க்களுக்குத் தர்ப்பணம்பண்ணினால் அவன் சூரியனைப்போலத் தேஜஸையும், அசுவமேத பலனையுமடைகிறான்.

மஹாபாதக நிவர்த்தகமான நீலதீர்த்த மகிமையைக் கேளுங்கள். இந்தத்தீர்த்தம் அக்கினி குமாரனாகிய நீலனால் நிர்மாணம் பண்ணப்பட்டது. இதில் ஸ்நானம்பண்ணுகிறவன் சமஸ்தபாபங்களினின்றும் விடுபட்டு, வெகு தட்சணைகொடுத்துச் செய்யப்பட்ட யாகத்தினுடைய பத்துமடங்கு பலனையடைந்து, சகல போக போக்கியங்களையனுபவித்து அந்தத்தில் அக்கினிலோகத்தை யடைகிறான்.

கவாக்ஷதீர்த்த மகிமையைக் கேளுங்கள். இதில் ஸ்நானம்பண்ணினவன் நரகத்துக்கே போகிறதில்லை. அங்கததீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினால் தேவேந்திர பதவியைப்பெறுகிறான். கஜன், கவயன், சரபன், குமுதன், ஹரன், பனசன், முதலிய எல்லாவானரங்களாலும் நிர்மாணம் பண்ணப்பட்டுப் புண்ணியமானகந்தமாதனத்திலிருக்கிற தீர்த்தங்களில் ஸ்நானம் பண்ணுகிறவன் முக்தனாய் விடுகிறான்.

விபீஷணதீர்த்தத்தின் மகிமையைக் கேளுங்கள். இதிலே ஸ்நானம்பண்ணுகிறவன் மஹாபாதகங்கள், மஹாதுக்கங்கள், மஹாரோகங்கள், மஹாதரித்திரங்கள் நீங்கித், துர்ச்சொற்பனங்களில்லாமல், கும்பீபாக முதலான நரக துன்பமில்லாமல் இறப்புப்பிறப்பற்ற வைகுண்டம்போய்ச் சேருகிறான். விபீஷணனுடைய மந்திரிகளால் செய்யப்பட்ட நாலு தீர்த்தங்களிலும் ஸ்நானம்பண்ணுகிறவன் மஹாபாபங்களினின்றும் விடுபடுகிறான். சரயு நதியானது ஸ்ரீராமநாதராகிய மஹாதேவரைச் சேவிக்கும்பொருட்டு எப்பொழுதும் அங்கே வசித்துக்கொண்டிருக்கிறது. அதில் ஸ்நானம் பண்ணுகிறவர்கள் ஸமஸ்தமான பாபங்களினின்றும் விடுபட்டுச் சகல யக்ஞம் தபசு, தீர்த்தஸ்நானம் பண்ணின பலன்களை யடைகிறான்.

உபவீதாந்திரமென்கிற தீர்த்தத்தில் முப்பத்து முக்கோடி தேவர்களும், பிதுர்தேவதைகளும், சகல முனிவர்களும், யக்ஷர், சித்தர், கின்னரர்களும், ஸ்ரீராமசந்திரனுடைய ஆக்ஞையால் வசித்துக்கொண்டிருக்கிறார்களென்று பிரம்மதேவர் சொல்லியிருக்கிறார். இங்

தப் புண்ணியமான கந்தமாதனத்தில் பதிஞுயிரங் கோடி தீர்த்தங்களும், கங்கை முதலான நதிகளும், ஸப்தசமுத்திரங்களும் எப்போதும் வசிக்கின்றன. அதுவும் தவிர புண்ணியரிஷி யாச்சிரமங்களும் புண்ணியமான காடுகளும், உத்தமமான சிவக்ஷேத்திரங்களும் விஷ்ணுக்ஷேத்திரங்களும், விளங்கிக்கொண்டிருக்கின்றன.

கேளுங்கள் ரிஷீசுவரர்களே; இவ்வகையான தீர்த்தங்களின் மகிமையைச் சொல்லிவிட்டேன். இந்த அத்தியாயத்தை பக்தியோடு படிப்பவரும் கேட்பவரும் துக்கங்களெல்லாம் நீங்கி யிறப்புப்பிறப் பற்ற முக்தியை யடைகிருர்கள்.

நாற்பத்திரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

நாற்பத்துமூன்ருவது

## இராமநாதருடைய மகிமையுரைத்த

அத்தியாயம்

---

கேளுங்கள் முனிவர்களே! கேட்டவர்களுடைய சகல பாபங்களையும்போக்குகிற இராமநாதருடைய மகிமையைச் சொல்லுகிறேன். தசரதராமனுலே பிரதிஷ்டைசெய்யப்பட்ட இராமநாதலிங்கத்தை எப்பொழுதாவதொருதரம் பார்ப்பவன் சிவசாயுஜ்யமென்கிற முக்தியை யடைகிருன். கிருதயுகத்தில் பத்துவருஷம் புண்ணியதபபலனது; திரேதாயுகத்தில் ஒருவருஷத்திலும், துவாபர யுகத்தில் ஒரு மாசத்திலும், கலியுகத்திலொரு நாளிலும் சித்தியாகிறது. கலியுகத்தில் கோடிநாள் செய்யப்பட்ட புண்ணியபலன் இராமநாதரை ஒரு தரம் தரிசித்தவன் நிமிஷந்தோறும் அடைகிருன். இதில் சந்தேகம் கிடையாது. இராமநாதலிங்கத்தில் சகலமான தீர்த்தங்களும் ஸமஸ்தமான தேவர்களும், முனிவர்களும், பிதுர்க்களும் நிறைந்திருக்கிருர்கள். இந்த லிங்கத்தை ஒருகாலமாவது, இரண்டுகாலமாவது, மூன்று காலமாவது அல்லது எப்பொழுதுமாவது ஸ்மரித்துத் துதித்தால் சமஸ்தமான பாபக்கூட்டினின்றும் விடுபட்டு சச்சிதாநந்த அத்துவைதரான பார்வதி சமேதராகிய ருத்திரமூர்த்தியை யடைகிருன். இராமசந்திரன் பூஜைசெய்த இராமலிங்கத்தை ஸ்மரித்தவனுக்கு யம

பீடையுங்கிடையாது. அந்த லிங்கத்தை ஒருதடவை அர்ச்சனை செய்தவர்களை மனிதர்களென்று நினைக்கக்கூடாது; ருத்திரர்களாக வே நினைக்கவேண்டியது. இந்தலிங்கத்தை அர்ச்சனை பண்ணுதவன் வெகுகாலம் நிஸ்ஸாரமான ஸம்சார துக்கத்தில் முழுகிக்கிடக்கிருன். இந்த லிங்கத்தை எப்பொழுதாவது ஒருதடவையாவது, பார்க்கிறவர் களுக்குத் தானம், விரதம், தபசு, யாகம் முதலானவை யென்னத்துக் கு? இந்த லிங்கத்தை ஒருக்ஷணமாவது நினையாதவன் அஞ்ஞானியா யும், பாபியாகவும், ஊமையாகவும், குருடனுகவும், செவிடனுகவும், ஆகிருன். அவனுக்கடிக்கடி ஆபத்துக்கள் வந்துகொண்டிருக்கும்; அவனுடைய பிள்ளை பெண்டாட்டி முதலானவர்கள் நாசமடைவார் கள். இராமநாத மஹாலிங்கத்தை ஒருதரம் கண்டால் காசிக்குத் தான் போவானேன்? கயையில்தான் பிண்டங்கொடுப்பானேன் ? பிர யாகையில்தான் ஸ்நானம்பண்ணுவானேன் ? துர்லபமான மனுஷ ஜன்மத்தை யடைந்து இராமநாத மஹாலிங்கத்தைப் பூஜைபண்ணு கிறவர்களே கிருதார்த்தர்கள். அவர்களுடைய ஜன்மமே சபலம். இராமநாதலிங்கத்தைப் பூஜைபண்ணினுல் பிரம, விஷ்ணு, இந்தி ராதி தேவர்களை வணங்குவானேன் ?

இராமநாதரைப் பக்தியுடன் வணங்குவோர் திருவடிகளை ஸ்ம ரித்துவணங்கிப்பூஜைபண்ணுகிறவர்கள் துக்கங்களையடைகிறதில்லை; யமன்வீட்டுக்கும் போகிறதில்லை. இந்த லிங்கத்தைக்கண்டமாத்திரத் திலே ஆயிரம் பிரம்மஹத்திகளும், பதினுயிரம் சுராபான தோஷ மும், கோடிஜன்மங்களில் செய்திருக்கிற பாபங்களும் நாசமடைகின் றன. சதாபோகத்தில் இச்சைப்படுகிறவர்களும், தேவேந்திர பத வியை விரும்புகிறவர்களும் இராமலிங்கத்தைச் சந்தோஷத்தோடும் ஒருதரம் தரிசிக்கக்கடவர்கள். சகவாசத்தாலேயாவது, சந்தோஷத்தி னுலேயாவது, பேராசையாலேயாவது, பயத்தினுலேயாவது, இராமநாதரை ஸ்மரிக்கிறவன் இகபரங்களில் துக்கத்தையே யடையமாட்டான். இராமலிங்கத்தைக் கீர்த்தனம் பண்ணுகிறவனும், அர்ச்சனை பண்ணுகிறவனும் சிவசாரூபத்தை யடைகிருன். அதில் சந்தேகமேயில்லை. கொழுந்துவிட்டெரிகிற அக்கினியானது விறகு களை க்ஷணத்துக்குள் சாம்பலாக்கிவிடுகிறதுபோல் இராமநாதரு டைய தரிசனமானது பாபங்களையெரித்துச் சாம்பலாக்கிவிடுகிறது. இராமலிங்கத்தைப் பக்திபண்ணுதலானது எட்டுவிதம். அவையா வன : அவருடைய பக்த ஜனங்களிடத்தில் விசுவாசம் வைத்தல்

அவர்களைச் சந்தோஷத்தோடும் பூஜைபண்ணுதல்; தான் பக்தியோடு இராமலிங்கத்தைப் பூஜித்தல்; அந்த லிங்கத்துக்கு நியமகயிங்கரியஞ் செய்தல்; அதனுடைய மஹாத்மியங்களைக் கேட்பதில் ஆசைவைத்தல்; அதைக் கேட்கும்போது கண்களில் ஆநந்தபாஷ்பம் பொழிதல், மயிர்சிலிர்த்தல், ஸ்வரம் பேதப்படுதல் முதலிய பக்திக்குறிகளையடைதல்; அந்தலிங்கத்தைச் சதா ஸ்மரித்தல்; அந்த லிங்கத்தையாசிரயித்தே ஜீவித்தல்; என்பவைகளாம். இந்த எண்வகை பக்திகள் மிலேச்சனிடத்திலிருந்தாலும் அவனே முக்தி வீட்டுக்குப்பங்காளியாகிறான். ஜிதேந்திரியர்களான யதிகளுக்கு வேதாந்த சிரவணத்தினாலே பக்தியுண்டாய், அதனாலே பிரம்மஞானம பிறந்து, முக்திகிடைக்கிறது; அந்த முக்தியானது, விரக்தியுண்டாகாமலும், யதியாகாமலும், வேதாந்த சிரவணம்பண்ணி ஞானமடையாமலும், எல்லாவருணத்தாருக்கும், எல்லா ஆசிரமத்தாருக்கும், இராமநாதரைக் கண்டமாத்திரத்திலே வருகிறது. இராமேசுரத்தில் வசிக்கிற கீடங்கள், கிருமிகள், தேவர்கள், முனிவர்கள், தபோதனர்கள் எல்லாரும் இராமநாதருடைய பிரசாதத்தால் தாரதம்மிய மில்லாமல் சமமான அந்தஸ்தை யடைகிறார்கள். நான் பாபம்பண்ணிவிட்டேனென்று ஒருவன் பயப்படவும்வேண்டாம், நான் புண்ணியம் பண்ணினேனென்று கருவமடையவும் வேண்டாம். இராாமநாதரைத் தரிசித்தமாத்திரத்திலிருவரும் சமனாய்விடுகிறார்கள். இராமநாதலிங்கத்தைப் பக்தியோடு தரிசிக்கிறவனுக்குச் சதுர்வேதங்களை யோதினவனும் சமானமாக மாட்டான். இராமநாதரைப் பக்திபண்ணுகிறவன் நாயை அடித்துத்தின்கிறவனாயிருந்தாலும், அவனுக்கே தானங்களெல்லாம் பண்ணவேண்டும்; இராமநாதரைப்பக்தி பண்ணாதவன் மூன்றுவேதமறிந்த பிராம்மணனாயிருந்தாலும் அவனுக்குத் தானம்பண்ணப்படாது. இந்திரியங்களைஜயித்து யோகாப்பியாசஞ்செய்கிறமுனிவர்கள் அடைகிற கதியை, இராமநாதரைத் தரிசிக்கிறஸர்வஜந்துக்களும் அடைகின்றன. இராமநாத சிவக்ஷேத்திரத்தில் வசிக்கிறவர்கள் எல்லாரும், ஐந்து முகங்களையுடையவர்களாகவும், சந்திரசேகரர்களாகவும், நாகாபரணதாரிகளாகவும், விருஷபத்துவஜர்களாகவும், முக்கண்ணர்களாகவும், பஸ்மோத்தூளித ஸர்வாங்கர்களாகவும், கபாலந்தரித்தவர்களாயும், ஆய்விடுகிறார்கள்; சந்தேகமேயில்லை. இராமேசுவரத்துக்குச் சந்தோஷத்தோடு போகிறவர்கள் அடிக்கு ஒரு அசுவமேதபலனை யடைகிறார்கள். இராமசேதுவுக்குப்போய் இராமநாதரை

உத்தேசித்து ஒரு பிராம்மணனுக்கு ஒருபிடி அன்னம் போடுகிறது, காடு, மலை, வனங்களோடுகூடிய பூமியைத் தானம்பண்ணினதற்குச் சமானம். இராமநாதருக்குப் பத்திரம், புஷ்பம், பலம், ஜலம், இவைகளைப் பக்தியோடு கொடுக்கிறவனை இராமநாதர் இரவும், பகலும் காப்பாற்றுவார். கருணாமூர்த்தியாகிய பார்வதீநாதராயிருக்கிற இராமநாதரிடத்தில் பக்தியாயிருப்பதும், அவரைப் பூஜை பண்ணுகிறதும், அவரை ஸ்மரிக்கிறதும்கூட மனுஷர்களுக்குத் துர்லபம். அந்த முக்கண்ணரான இராமநாதரைப் பக்தியோடு சரணமடைகிறவர்களுக்கு இகபரலாபங்களும் ஜயமுங்கிடைக்கின்றன. இராமநாத மஹாலிங்கத்தினிடத்தில் இரவும் பகலும் எவன்சிந்தையைவைக்கிறானோ அவனே தன்னியன். அந்தலிங்கத்தைப் பக்தியோடு பூஜைபண்ணுகிறவனே புக்தி முக்திகளுக்கும் இராஜ்யத்துக்கும் அருகனாகிறான். இந்த லிங்கத்தை யர்ச்சனைபண்ணுகிறதற்குச்சமானமான புண்ணியமேகிடைக்கிறது துர்லபம். இந்த லிங்கத்தை அஞ்ஞானத்தாலே துவேஷிக்கிறவன் பதினாயிரம்பிரம்மஹத்தி தோஷத்தை யடைந்தவனாகிறான். அவனோடே பேசினாலும் நரகம்வரும். வேதங்களெல்லாம் இராமநாதனையே சொல்லுகின்றன. யாகங்களெல்லாம் இராமநாதனைக்குறித்தே செய்யப்படுகின்றன. எல்லாம் ராமநாதரைக் குறித்தே செய்யப்படுகின்றன. இராமநாதரைத் தவிர வேறுபொருளில்லை. ஆகையால் எல்லாவற்றையும் விட்டுவிட்டு இராமநாதரையே ஆச்ரயிக்கவேண்டும். இராமநாத மஹாலிங்கத்தைச் சரணமடைந்தால் அவனுக்குத் துர்க்கதி கிடையாது; சிவலோகம் கைக்குள்ளேயிருக்கிறது. சமஸ்தமானயாகம், தபசு, தானம், தீர்த்தஸ்நானம் பண்ணினதினால் வருகிறபலனைவிடக் கோடிபங்கு பலன் இராமநாதரைச் சேவிப்பதினால் வந்துவிடுகிறது. இராமநாதலிங்கத்தை யிரண்டு நாழி சிந்திக்கிறவன் இருபது குலங்களோடுகூடச் சிவலோகம்போய் மகிமையோடு வாழ்கிறான். ஒருநாள் தரிசிக்கிறவன் இவ்வுலகத்திலேயே சகல போகங்களையும் அனுபவித்துவிட்டு அந்தத்தில் ருத்திரனாய் விடுகிறான். காலையிலெழுந்திருந்து இராமநாத மஹாலிங்கத்தைத் தரிசித்தவனைத் தரிசிக்கிறவனுக்குச் சகல பாபங்களும் போய்விடுகின்றன. இராமநாதரை மத்தியானத்தில் தரிசிக்கிறவனுக்கு ஆயிர சுராபானதோஷம் அந்த க்ஷணத்திலேயே போய்விடுகிறது. சாயங்காலத்தில் தரிசிக்கிறவனுக்குக் குருபத்தினியைச்சேர்ந்த பாபம் போய்விடுகிறது. சாயங்காலத்தில் இராமநாதரை ஸ்தோத்திரம் பண்

ணுகிறவனுக்கு ஆயிரம் சொர்ணஸ்தேய தோஷம் அப்பொழுதே போய்விடுகிறது. தனுஷ்கோடி ஸ்நானமும் இராமநாதர் தரிசனமும் ஒருவனுக்குக் கிடைத்தால் அவன் காசிக்கு ஏன் போகவேண்டும்? இராமநாதரைச் சேவித்தும் கிடைக்காதது வேறெந்தத் தர்மஞ் செய்தாலும் கிடைக்கப்போகிறதில்லை. எப்பொழுதாவது ஒருதரம் இராமநாதரைத் தரிசியாதவன் தன் சொந்தத் தகப்பனுக்குப் பிறவாதவன். காலையிலெழுந்திருந்து மூன்றுதரம் இராமநாதரைத் தியானம் பண்ணுகிறவனுக்கு முதல் நாள் செய்தபாபம் அந்தக்ஷணமே அடியோடே நாசமாய்ப்போகிறது. பக்தர்களைக் காப்பாற்றுகிறதற்கு இராமநாதர் கங்கணங்கட்டிக் கொண்டிருக்கும்போது ஏ! ஜனங்களே, ஏன் கஷ்டப்படுகிறீர்கள்? கருணைக்கிருப்பிடமான இராமநாதர் பிரசன்னரானால்சகல கஷ்டங்களும் சூரியனைக்கண்ட பனிபோல நீங்கிவிடுகின்றன. பிராணன்போகிறசமையத்தில இராமநாதரை ஸ்மரிக்கிறவன் மறுபடியும்பூமியில் பிறவாமல் சிவனேயாய்விடுகிறான். இராமநாதா! மஹாதேவா! கருணாநிதியே! என்று ஸதா தியானம் பண்ணுகிறவனுக்குக்கலியால்பீடையில்லை. இராமநாதா! ஜகன்னாதா! தூர்ஜடி, நீலலோகிதா! என்று உச்சரிக்கிறவனுக்கு மாயையினாலே துன்பங்கிடையாது. நீலகண்டா! மஹாதேவா! இராமேசுவரா! சதாசிவா! என்று தியானிக்கிறவன் காமத்தால் பீடிக்கப்பட மாட்டான். இராமேசுவரா! காலகாலா! காளகூடவிஷாசனா! என்று ஸதா சொல்லுகிறவன் கோபத்தாலே துன்பமடையவே மாட்டான். இராமநாதருடைய கோயிலைக்கட்டைகளால்கட்டுகிறவன் மூன்று கோடி குலங்களோடு சொர்க்கத்தையும், செங்கல்லால்கட்டுகிறவன் பரமபதத்தையும், கருங்கல்லால் கட்டுகிறவன் பிரமபதத்தையும், ஸ்படிகாதிகற்களால் கட்டுகிறவன் விமானத்திலேறிக்கொண்டு சிவலோகத்தையும், தாம்பிரத்தால் கட்டுகிறவன் சிவசாமீபத்தை அடைந்து, சிவனுடைய அர்த்தாசனத்தில் உட்காரும் பெருமையையும், வெள்ளியால் கட்டுகிறவன் சிவசாரூபத்தை யடைந்து சிவனைப்போலச் சதாசந்தோஷத்தையும், சொர்ணத்தால் கட்டுகிறவன் சிவசாயுஜ்யத்தையும் அடைகிறான். ஏழையானவன் மண்ணால் இராமநாதர் ஆலயத்தைக் கட்டுகிறதற்கும், தனிகனானவன் தங்கத்தாலே கட்டுகிறதற்கும்பயன் ஒன்றே. இராமநாத மஹாலிங்கத்துக்கு அபிஷேகம் பண்ணிவைக்கிற மூன்று காலங்களிலும் காகள முதலான முகவாத்தியம், பாட்டு, நர்த்தன முதலியவை செய்துவைக்கிறவன் மஹாபாதகங்களினின்றும் விடுபட்டு ருத்திரலோகத்

தில் பூஜ்யனுயிருக்குந் தன்மையை அடைகிறான். ருத்திராத்தியாயம் புருஷசூக்தம், திரிஸுபர்ணம், பாவமான்யாதி பஞ்சசாந்தியையும் பிரீதியோடு ஜபிக்கிறவனும் பசுவின்பாலாலும் தயிராலும், நெய்யாலும், பஞ்சகவ்வியத்தாலும் அபிஷேகஞ்செய்து வைக்கிறவன், நரகத்தையனுபவிக்கமாட்டான். இந்த மஹாலிங்கத்துக்கு நெய் அபிஷேகஞ் செய்விக்கிறவன் கற்பகோடி ஜன்மங்களிற்செய்த பாபங்களினின்றும் உடனே விடுபடுகிறான். கோவின் பாலால் அபிஷேகஞ் செய்விக்கிறவன் இருபத்தோருதலை முறைகளை உத்தாரணம் பண்ணிக்கொண்டு சிவலோகம்போய் அவவிடத்தில பெருமையோடு வாழ்ந்திருப்பான். தயிரால் ஸ்நானம்பண்ணுவிக்கிறவன் சமஸ்த பாபங்களினின்றும் விடுபட்டு விஷ்ணுலோகம்போய்ச் சுகமாக வாழ்ந்திருப்பான். தேனால் ஸ்நானம் பண்ணுவிக்கிறவன் சகல பாபங்களையுமுதறிவிட்டுப் பிரமலோகம்போய்ச் சுகமாக வாழ்ந்திருக்கிறான். நலலெண்ணெயாலபிஷேகஞ் செய்விக்கிறவன் குபேரலோகம்போய் வாழ்வான். கருப்பஞ்சாற்றால் அபிஷேகஞ் செய்விப்பவன் சந்திரலோகம்போய்ச் சேருவான். எலுமிச்சம்பழ ரசத்தாலும், மாம்பழச்சாற்றாலும் ஸ்நானம் பண்ணுவிப்பவன் பிதுர்லோகம் போவான். இளநீரால் ஸ்நானம் பண்ணுவிப்பவனுக்குப் பிரம்மஹத்தியாதி சகல பாபங்களும் தொலைந்து போகின்றன. வாழைப்பழத்தைப் பிசைந்து அபிஷேகஞ் செய்விப்பவன் சகல பாபங்களையும் நாசம்பண்ணிவிட்டு வாயுலோகம்போய் வாழ்வான். வடிக்கட்டின குளிர்ந்த ஜலத்தால் அபிஷேகஞ் செய்விப்பவன் வருணலோகம்போய் வாழ்வான். சந்தனங்கலந்த ஜலத்தைத் தாளபாத்திரத்தில் விட்டு அபிஷேகஞ் செய்கிறவன் கந்தருவலோகம்போய்ச் சுகித்திருப்பான். தாமரைத் தடாகத்து ஜலத்தைக்கொண்டு வந்து புஷ்பவாசனையூட்டித் தங்கரேக்குடன் கலந்து அபிஷேகம் செய்துவைக்கிறவன் இந்திரலோகம்போய் அவனுடன் அர்த்தாசனத்தில வீற்றிருந்து அவனோடு சந்தோஷமாக இருப்பான். பாதிரி, நீலோத்பலம், செங்கழுநீர், சுரபுன்னை, அலரி முதலிய புஷ்பங்களால் வாசனைகட்டியநீராலே அபிஷேகஞ் செய்விக்கிறவன் பாபங்களினின்று விலகிச் சிவலோகம்போய்ச் சிறப்புடன் வாழ்ந்திருப்பான். ஏலம், கற்பூரம், விளாமிச்சைவேர் இவைகளால் வாசனைகட்டின சுத்தஜலத்தால் இராமநாதருக்கு அபிஷேகஞ் செய்து வைக்கிறவன் அக்கினிலோகத்துக்குப்போய்ச் சகல போகங்களையும் அனுபவிக்கிறான். கங்காதீர்த்தத்தைக் கொண்டுவந்து இரா

மநாதருக்கு அபிஷேகஞ்செய்துவைக்கிறவன் சிவன்கூடப் பூஜிக்கத் தக்கவனாகிறான்; சந்தேகமேயில்லை. இராமநாதருடைய அபிஷேகத்துக்காக மண்குடங்கொடுக்கிறவன் நூறுவயது பூலோகத்தில் வாழ்ந்து போகபோக்கியங்களை யனுபவிக்கிறான். தாம்பிரக்குடம் கொடுக்கிறவன் தேவேந்திரனாய் விடுகிறான். வெள்ளிக்குடம் கொடுக்கிறவன் பிரம்மலோகத்துக்கும், தங்கக்குடங் கொடுக்கிறவன் சிவலோகத்துக்கும், இரத்தினக்குடம் கொடுப்பவன் சிவசமீபத்துக்கும் போகிறான். இராமநாதருடைய அபிஷேகத்துக்காகவும், நைவேத்தியத்துக்காகவும் கறவைப்பசுவைக் கொடுக்கிறவன் சிவலோகத்தை யடைந்து சிவசாரூப்பியத்தை யடைகிறான். இராமசேதுவே, தனுஷ்கோடியே, இராமநாதா! என்று சொல்லிக்கொண்டு எந்த ஜலத்திலாவது ஸ்நானம் பண்ணினால் அவன் சேது ஸ்நானபலனை யடைகிறான். இராமநாதருடைய ஆலயத்துக்குச் சாந்து பூசுகிறவனுடைய புண்ணியத்தை நூறுவருஷமானாலு மென்னால் சொல்லிமுடியாது. இராமநாதருடைய ஆலயத்தைப் புதுப்பிக்கிறவன் முன் சொன்னவனைவிட நூறு பங்கு அதிகமான பலனை யடைகிறான். ஜீரணமாய்க்கிடக்கிற இராமநாதர் கோயிலைப் பக்தியோடு கட்டிவைக்கிறவனுக்குப் பதினாயிரம் பிரம்மஹத்தி தோஷங்கள் நீங்குகின்றன. இராமநாதர் சந்நிதியில் சந்தோஷத்துடன் தீபங்களேற்றினால் அவன் மாயா படலத்தை யுடைத்துக்கொண்டு பிரம ஐக்கியத்தையடைகிறான். இராமநாதருக்கு நெய், எண்ணெய், பச்சைப்பயறு, சர்க்கரை, அரிசி, வெல்லமிவைகளைக் கொடுக்கிறவன் தேவேந்திர பதத்தையடைகிறான். இராமநாதருக்குப் பெரிய கண்டாமணி, கண்ணாடி, பேரி, மிருதங்கம், படகம், நிஸ்ஸாணம், முரசம், புள்ளாங்குழல், தாளம் முதலான வாத்தியங்களைக் கொடுக்கிறவன் பதினெட்டு வாத்தியங்களும் கோஷிக்கும்படியாக விமானத்தின்மேலேறிப்போய்ப் பலவகையான போகங்களை யனுபவித்துக்கொண்டு அநேக யுகங்கள் சிவலோகத்தில் வாழ்ந்துகொண்டிருக்கிறான். இராமநாதரை யுத்தேசித்துச் சொற்பங் கொடுத்தாலும் கொடுத்தவனுக்கு அது அநந்த பலனாகவளருமென்று சொல்லப்படுகிறது. இராமேசுவரத்தில் இராமநாதருடைய சந்நிதியில் வசிக்கிறவன் இறப்புப் பிறப்பில்லாத முக்தியையடைகிறான். ஆயுசும், யௌவனமும், சம்பத்தும், மனைவி மக்களும், க்ஷணத்துக்குள் அழிந்து போகின்றன. வீடு, வயல் முதலிய ஐசுவரியங்களை அரசர் முதலா

னவர்கள் அபகரித்துக்கொள்ளுகிறார்கள். ஆகையாலே சம்சார வியாபாரத்தை ஒழித்துவிட்டுத் தன்னைச் சரணமடைந்தவர்களுடைய ஆபத்துக்களை நீக்குகிற ஸ்ரீ ராமநாதரையே ஸ்மரித்துக், கீர்த்தனம் பண்ணி, அவருடைய மகிமையையே கேட்டுக்கொண்டிருக்கவேண்டியது. இராமநாதரை ஸ்மரிக்கிறதும், தரிசிக்கிறதும், ஸ்பரிசிக்கிறதும், அர்ச்சனை பண்ணுகிறதும், அந்த க்ஷணத்திலேயே பாபங்களை நீக்கிவிடும். பாத்திரங்களுக்குள்ளே உத்தமமான பாத்திரம் இராமநாதர். ஆகையால் அவருக்குக் கிராமதானம் பண்ணுகிறவன் தேகாந்தத்திலே சிவனேயாய்விடுகிறான். இராமநாதருக்குக் கொஞ்சம் கொடுத்தாலும் அவன் மறுஜன்மத்தில் பூலோக சக்கிரவர்த்தியாய்விடுவான். ஆகையால் அவருக்கு விசிறி, சத்திரம், சாமரம், சந்தனம், குங்கிலியம், இவைகளைக் கொடுக்கிறவன் மறுஜன்மத்தில் பூமண்டலாதிபதியாவான். இராமநாதர் பூஜைக்காக நந்தவனம் வைக்கிறவன் அசுவமேத பலனையடைகிறான். சந்தனம், கோஷ்டம், குங்குமப்பூ, கஸ்தூரி, குங்கிலியம், பனுகு சவ்வாது, சரளக்கட்டை, இவைகளைக் கொடுக்கிறவன் மறுஜன்மத்தில் வேதபாரங்கதனான பிராம்மணனாய்ப் பிறந்து ஐசுவரியத்தை யனுபவிக்கிறான். விலை உயர்ந்த முத்து, ஆபரணம், வஸ்திரம், இவைகளைக் கொடுக்கிறவன் ஒருநாளும் தரித்திரத்தை யடையமாட்டான். இராமநாத மஹாலிங்கத்தைச் சேவிக்கிறதற்காகப் போகிறவனைக் கண்டு பாபக் கூட்டங்களெல்லாம் நடுங்குகின்றன. இராமநாத லிங்கத்தின் மகிமையைக் கேட்டாலும், ஸ்மரித்தாலும், தரிசித்தாலும், வணங்கினாலும், பூஜித்தாலும், மனிதனுக்குத் துர்லபமானது ஒன்றுங்கிடையாது. இராமநாத லிங்கத்தைத் தரிசித்தால், வேதமோதுவானேன்! சாஸ்திரம் படிப்பானேன்! தீர்த்தயாத்திரை செய்வானேன்! மோட்சாபேட்சையுள்ளவர்கள், நரைதிரை மூப்புவந்து, பொறிபுலன் ஒடுங்கி, மரணம் அடைவதற்கு முன்னே யிராமநாதரைச், சிந்தித்துத் துதித்துப் பூஜிக்கவேண்டும். சகல புராணங்களிலேயும், சகல தர்ம்ம சாஸ்திரங்களிலேயும், இராமநாதர் பூஜைக்குச் சமானமான தர்மம் விதிக்கப்படவில்லை. மஹா கருணையுடையவராயும், பிரபுவாயுமிருக்கிற இராமநாதரைப் பக்தியுடன் நித்தம் வணங்குகிறவர்கள் புத்திர மித்திரகளத்திராதிகளுடன் பூலோகத்திலுள்ள சகலபோகங்களையும் திருப்தி உண்டாகும் வரையில் அநுபவித்துத் தேகாந்தத்தில் இறப்புப் பிறப்பில்லாத

சாசுவதமான முக்தியை யடைவார்கள்.

கேளுங்கள் முனிவர்களே! இராமநாதருடைய வைபவத்தை யெடுத்துரைத்துவிட்டேன். இந்த அத்தியாயத்தை நித்தமும் பக்தியுடன் படிப்போரும், கேட்போரும், இராமநாதரைச் சேவித்த பலனையும், தனுஷ்கோடி மஹா தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணின பலனையும் அடைவார்கள்.

நாற்பத்துமூன்றாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

நாற்பத்துநாலாவது

# ஸ்ரீராமர் இராமநாதலிங்கப பிரதிஷ்டை செய்த வரலாறு கூறின

அத்தியாயம்.

---

சகல வேதசாஸ்திரங்களின் தத்துவங்களை யறிந்து, புராணக் கடலைக் கரைகடந்தவராயும, வியாசருடைய திருவடிச்சேவையினாலே சகல அசுபங்களையும் போக்கிக்கொண்டவராயும், சகலருக்கும் புராணார்த்தோபதேசம் பண்ணி உபகாரம் பண்ணுகிறவராயும், முனிவராயுமிருக்கிற தாங்கள் எங்களுக்குப் புராணங்களைச் சொல்லிய யனுக்கிரகம் பண்ணியிருக்கிறீர்கள். இப்பொழுதும் தங்களால் சொல்லப்பட்ட ஸேது மஹாத்மியத்தைக் கேட்டுக் கிருதார்த்தர்களாய்விட்டோம். ஆயினும் ஸ்ரீராமசந்திர மூர்த்தி, ஸ்ரீராமலிங்கத்தைப் பிரதிஷ்டை பண்ணின விதத்தைக்கேட்க ஆவலுள்ளவர்களாயிருக்கிறோம். தேவரீர் அதை யெங்களுக்குச் சொல்லியருள வேண்டுமென்று கேட்கச் சூதமுனிவர் சொல்லத் தொடங்கினார்.

கேளுங்கள் பிராம்மணோத்தமர்களே! இந்தக் கந்தமாதனத்தில் ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தி இராமலிங்கத்தைப் பிரதிஷ்டை பண்ணின காரணத்தைச் சொல்லுகிறேன். பலசாலியான இராவணன் தண்டகவனத்திலிருந்த தன்பாரியை யபகரித்துக்கொண்டு போன

பின் வீரனுன இராமசந்திரன் தம்பி லட்சுமணனேடு வானர சேனைகளை யழைத்துக்கொண்டு மகேந்திரகிரிபோய்ச் சேர்ந்து, அபாரமான சமுத்திரத்திலே அணைகட்டி, அதன் வழியாக இராவணனுடைய இலங்காபுரிக்குப் போனூர். அப்பொழுது ஆயிரம் கிரணங்களையுடைய சூரியனஸ்தமனமாயினபின் பிரதோஷகாலத்தில் பூர்ணசந்திரப்பிரகாசத்திலே சைனியங்களோடுகூடச் சுவேலமலை போய்ச் சேர்ந்தார். அப்பொழுது தன் உப்பரிகையின்மேல் உட்கார்ந்துகொண்டிருந்த இராவணனைக் கண்டு பலசாலியான சுக்ரீவன் அங்கே தாவி, யிராவணனுடைய கிரீடத்தை யுதைத்துக் கீழே தள்ளிவிட்டான். மகுடமிழந்த ராவணன் தன் வீட்டுக்குள் புகுந்தான். ஸ்ரீராமர், தம்பி இலட்சுமணன், சுக்கிரீவன் முதலியவர்களோடுகூடச் சேனையைப் பருவத்தின்மேலிருந்து கீழிறக்கி, யிலங்கைக்குச் சமீபத்திற் கூடாரமடித்து இருக்கச்செய்தார். அந்தக்கூடாரத்தில வானரசேனைகள் தங்கியிருக்கும்போது, இராவணனுடைய போர் வீரர்களாகிய பர்வணன், பூதனன், ஜநம்பன், கங்ன், ரோதவசன், ஹரி ப்ராநசன், அநுஜன், பிரஹஸ்தன் முதலானவர்கள் ஆயுதபாணிகளாய்ச் சைனியங்களை யழைத்துக்கொண்டு, கண்ணுக்குத்தெரியாமல் மறைந்திருந்து அடிக்க ஆரம்பித்தவுடன் விபீஷணன் அவர்கள்மறைந்திருக்கும் மாயாசக்தியைத்தொலைக்க, கண்ணுக்குத்தெரியநின்ற அவர்களை பலசாலியான வானரசேனைகள் அடித்துக் கொன்றூர்கள். உடனே இராவணன் சேனைகள் அழிந்ததுகண்டு சகியாமல் வீட்டைவிட்டுப் புறப்பட்டுச் சேனைகளை அணியாக வகுத்து நின்று, பாணங்களாலே வானரசேனைகளை யெதிர்த்தான். அது கண்டராமன் இராவணனேடு சண்டைசெய்யும்படியாய்ச் சேனைகளோடும் புறப்பட்டார். அப்பொழுது இலட்சுமணன் இந்திரஜித்தோடும், சுக்கிரீவன் விரூபாட்சனேடும், அங்கதன் கர்வடனேடும், நளன் பவுண்டரனேடும், பனசன் புடசனேடும், கைகலந்து பயங்கரமான தொந்தயுத்தஞ்செய்தார்கள். பிறகு பயங்கரமான வானரப்படைகளால் இராட்சதர்கள். முறியடிக்கப்பட்டு, இரணகளத்தைவிட்டுச் சீக்கிரமாக இலங்காபட்டணத்துக்குள் ஓடினூர்கள். அதுகண்ட ராவணன் தன் பிள்ளையான இந்திரஜித்தையனுப்ப, அவன் வந்து நாகபாசத்தால் இராமலட்சுமணர்களைக் கட்டியுருட்டிவிட்டான். உடனே மஹாத்மாவான கருடன்வந்து கட்டவிழ்த்துவிட்டார். பிரஹஸ்தன் என்பவன் அதிவேகமாக ஓடிவந்து,

காலூத்து, கதையினாலே விபீஷணனை ஓங்கியடித்தான். மஹா பல வீரனான விபீஷணன் அந்த அடியால் கொஞ்சங்கூட அசையாமல் இமவானைப்போலிருந்து எட்டுமணி கட்டிய மஹாசக்தியென்னும் ஒரு ஆயுதத்தை மந்திரோச்சாரணஞ்செய்து அவன் தலைக்கு இலட்சியம் வைத்துப் பிரயோகம் பண்ணினார். இந்திரனுடைய வச்சிராயுதம்போல மஹா வேகமாய் வந்த அச்சத்தியால் தலையறுந்து பெருங்காற்றாலடிபட்ட மரத்தைப்போல விழுந்தான். அது கண்டு தூம்ராட்சன் அதிகவேகத்தோடு வானரசேனையை விரட்டினான். அப்பொழுது வாயு புத்திரனான அனுமான் ஒரு மரத்தை யெறிந்து, அவனையடித்துக்கொன்றார். இவ்விதமாகப் பிரகஸ்தனும், தூம்ராட்சனு மிறந்துபோனதைக்கண்டு மிஞ்சியிருந்த ராட்சதர்கள் தங்களுடைய இராஜனாகிய இராவணனிடத்திற்கோடித் தெரிவித்தார்கள். உடனே இலங்கேசனான இராவணன் தூங்கிக் கொண்டிருந்த தன் தம்பியான கும்பகர்ணனை யெழுப்பிச் சண்டைக்கனுப்ப, அவனை இலட்சுமணரானவர் அதிக கோபங்கொண்டு பிரம்மாஸ்திரத்தினாலடித்து மடித்தார். தூஷணனுடைய தம்பிகளாகிய வச்சிரவேகன், பிரமாதி என்னும் இராவணனுக்கொப்பானவர்களை அனுமானும் நீலனும் அடித்து வதைத்தார்கள். விசுவகர்மனுடைய புத்திரனான நளன், வஜ்ரதம்ஷ்டிரனையும், வானர சிரேஷ்டனாகிய குமுதன், அகம்பனையும் கொன்றார்கள். இலட்சுமணன் அதிகாயன், திரிசிரன், சுக்கிரீவன், நராந்தகன், என்பவர்களையும், அனுமான் கும்பகர்ணனுடைய இரண்டு குமாரர்களையும், விபீஷணன், கரன் குமாரனான மகாராட்சனையும், அடித்துக்கொன்றார்கள். இவ்விதம் தோல்வியடைந்த இராவணன் தன் பட்டணத்துக்குள் புகுந்து, பிள்ளையாகிய இந்திரஜித்தைச் சண்டைக்கனுப்பினான். அப்பொழுது இந்திரஜித்து, சகோதரர்களான இராமலட்சுமணர்களை மயங்கவடித்து, அங்கதனுடைய அம்புகளாலே வாகனமிழந்து ஆகாயத்தில் நின்றுகொண்டு, குமுதன், அங்கதன், சுக்கிரீவன், நளன், ஜாம்பவன் முதலான படைத்தலைவர்களுடன் வானரங்களை யெல்லாம் அடித்துத் தொம்சம் பண்ணி, ஆகாயத்தில் மறைந்து நின்றான். அப்பொழுது விபீஷணன், இட்சுவாகு குல அலங்காரமான இராமனை நமஸ்கரித்துக் கைகூப்பிக்கொண்டு, "ஐயா! குபேரனுடைய கட்டளையால் இந்தக் குஹ்யகனானவன் கையில் ஜலம் கொண்டுவந்திருக்கிறான். அந்த ஜலத்தினால் கண்ணைத் துடைத்துக்கொண்டு பார்ப்பவர்கள் கண்

னுக்கு மறைந்திருப்பவர்களெல்லாரும் நன்றாய்த் தோன்றுவார்கள். ஆகையால் நீர் இந்த ஜலத்தால் கண்ணைத்துடைத்துக்கொண்டால் மறைந்திருக்கிற பிராணிகளெல்லாம் உம்முடைய கண்ணுக்குத் தோன்றும்'', என்று சொல்ல, இராமன் அந்த ஜலத்தையெடுத்துத் தன் கண்களிலும், இலட்சுமணன், சுக்கிரீவன், அனுமான், ஜாம்புவான், அங்கதன், மயிந்தன், துவிதன், நீலன் இன்னம் மற்றுமுள்ள வானரங்களினுடைய கண்களிலுமதைப்போட, ஆகாசத்தில் மறைந்துகொண்டிருந்த இந்திரஜித்து எல்லாருடைய கண்களுக்குந் தெரியப்பட்டான். இப்படிக்கண்ணுக்குத் தெரிந்த இந்திரஜித்தை இலட்சுமணர் விரட்டி யுத்தஞ்செய்ய, இருவருக்கும் பிரகலாதனுக்கும், இந்திரனுக்கும் நேர்ந்தசண்டையைப்போலக் கொடிய சண்டையுண்டாய் வெகு பிரயாசப்பட்டு மூன்றாவது நாளில் இந்திரஜித்தைக் கொன்றார். புத்திசாலியான இராமனும் மூலபல சேனையைத் தொலைத்தார். இந்தமாதிரி தனக்குப் பிரியமான குமாரனிறந்துபோனதைக் கேட்டு, இராவணன் கோபங்கொண்டு, இரதத்தின்மேலேறி, அநேக சேனைகளோடு பட்டணத்திலிருந்து வெளிக்கிளம்பி, நடுவழியில் ஜானகியைக் கொல்லயத்தனப்பட்டான். அதை யங்குள்ள விருத்தர்கள் தடுத்ததனால் நேராக இரணகளம் வந்துசேர்ந்தான். அப்பொழுது இந்திரசாரதியான மாதலியானவன் தோல், மயிர், வால் முதலிய உறுப்புகளெல்லாம் சொர்ணமாயிருக்கிற குதிரைகள் கட்டப்பட்டுச் சூரியனைப்போல ஜ்வலித்துக்கொண்டிருக்கிற தேரைக்கொண்டுவந்து இரணகளத்தில் நிறுத்தினான். மஹா தார்மிகரான ஸ்ரீராமர் அந்தத் தேரின் மேலேறிக்கொண்டு, இராவணனோடு யுத்தம் தொடங்கிப் பிரம்மாஸ்திரத்தால் அவனுடைய பத்துத்தலைகளையும் வெட்டியெறிந்தார்

இப்படி இராவணனைச் சங்கரித்தது கண்டு மகிழ்ச்சிகொண்ட தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், வித்தியாதரர்கள் முதலியோர் ஸ்ரீராமசந்திரனை ஜய விஜயீபவவென்று வாழ்த்தியவர்மேல் புஷ்பவருஷம் பொழிந்தார்கள். பிறகு ராமசந்திரன் விபீஷணனை யிலங்காபதியாக அபிஷேகஞ்செய்துவிட்டு, சீதா இலட்சுமணர்களுடனும், வானரசேனைகளோடும், ஆசீர்வதிக்க வந்த தேவர் கூட்டங்களோடும், புஷ்பகவிமானத்தி லேறிக்கொண்டு கந்தமாதனபருவதம் வந்தடைந்து, சீதையின் கற்பைப் பரிசோதித்து மகிழ்ந்திருந்தார்.

அப்பொழுது தண்டகாரணிய வாசிகளான அகஸ்தியர் முதலான ரிஷிகணங்களெல்லாம் ஸ்ரீராமர் இராவணனைச் சங்காரம்பண்ணி வந்திருப்பதை யறிந்து கந்தமாதனம் வந்து அவரைத்துதிக்க ஆரம்பித்தார்கள்:—"லோகாநுக்கிரகம் பண்ணின ராமசந்திரா! உமக்கு வந்தனம்; இராவணனை யழிக்கப்பூமியில் அவதரித்தவராயும், தாடகை, சுபாகு இருவரையுங்கொன்று விசுவாமித்திரநுடைய யாகத்தைக் காத்தவராயும், பாதபங்கஜ தூளியினால் அகலிகைக்குச் சாப விமோசனஞ் செய்தவராயும், சிவனுடைய வில்லை விளையாட்டாக முறித்துச் சீதையைப் பாணிக்கிரகணம் பண்ணினவராயும், வழியில்வந்த பரசுராமரை ஜயித்து விரட்டினவராயும், கைகேயிக்குக் கொடுத்த வரத்தால் கட்டுப்பட்ட தகப்பனுடைய வார்த்தையை நிலைநிறுத்தும்பொருட்டுச் சீதா இலட்சுமண சமேதராய்க் காட்டுக்குப் போனவராயும், பிரார்த்தித்துக் கேட்ட பரதனுக்குப் பாதுகாதானம் பண்ணினவராயும், சரபங்கரிஷி சொர்க்கத்துக்கு போக அனுக்கிரகம் பண்ணினவராயும், விராதனை வதம் பண்ணினவராயும், ஜடாயுவுக்குச் சிநேகராயும், மாயா மிருகவேஷம் பூண்டவனான மாரீசனுடைய அங்கத்தைச்சின்னாபின்னப்படுத்தினவராயும், சீதையை அபகரித்துக்கொண்டு போன இராவணனோடு சண்டைசெய்து மடிந்த ஜடாயுக்கு அக்கினி காரியம்பண்ணி மோட்சம் கொடுத்தவராயும், கபந்த சம்ஹாரம் பண்ணினவராயும், சபரியால் பூஜிக்கப்பட்ட திருவடிகளை யுடையவராயும், சுக்கிரீவனுடைய சிநேகத்தைப் பெற்று வாலியை சம்ஹரித்தவராயும், சமுத்திரத்தில் சேதுவைக்கட்டி இராவணன் முதலான இராட்சதர்களெல்லாரையும் வதம்பண்ணினவராயும், ஸம்ஸார சாகரத்தைத் தாண்டுவதற்கு ஓடம்போன்றிருக்கிற பாதங்களையுடையவராயும், பக்தர்களுடைய துக்கங்களை நீக்குகிறவராயும், சச்சிதானந்த சொரூபராயும், ஜகத்துக்கெல்லாம் க்ஷேமத்தைச் செய்கிறவராயும், இராமன் முதலான புண்ணிய நாமங்களை ஜபிக்கிறவர்களுடைய பாபங்களைப்போக்குகிறவராயும், ஸமஸ்தலோகங்களையும் சிருஷ்டித்துப் பரிபாலித்து ஸம்ஹாரம் பண்ணுகிறவராயும், கருணாமூர்த்தியாயும், பக்தரட்சண தீட்சிதராயும், விபீஷணனுக்குச் சுகத்தைக் கொடுத்தவராயும், சீதாசமேதராயுமிருக்கிற உமக்கு வந்தனம், வந்தனம்; ஏ ராமா! இலங்கேசுவரனான இராவணனைவதைத்து

உலகத்தையெல்லாங்காத்த நீர் எங்களையும் காத்தருளும்" என்று துதித்தார்கள். கேளுங்கள் ரிஷீசுவரர்களே! தண்டகாரணிய வாசிகளாலே துதிக்கப்பட்ட இந்தஸ்தோத்திரத்தை மூன்றுகாலங்களிலும் பக்தியோடு படிக்கிறவன் இகத்தில் சகல போகங்களையும் அனுபவித்துப் பரத்தில் முக்தியடைவான். பிரயாணகாலத்திலிதைப்படிக்கிறவனுக்கு வழியில் பயமேயுண்டாகாது. இதைப்படித்தால் பூதப்பிரேத பிசாசங்களால் பீடையுமிராது. ஸமஸ்தரோகங்களும் நீங்கிவிடுகிறது. பாபங்களும் ஒழிந்துபோகிறது. புத்திரகாமன் புத்திரனையும், தனகாமன் தனத்தையும், மோட்சகாமன் மோட்சத்தையும், அடைகிறான். கன்னிகையிதைப்படித்தால் நல்ல கணவனையுமடைகிறாள். இதைப்படிக்கிறவன் சர்வாபீஷ்டங்களையுமடைகிறான். பிறகு இராமன் முனிவர்களை நமஸ்கரித்துக் கைகூப்பிக்கொண்டு "ரிஷீசுவரர்களே சமஸ்தான ஜனங்களும் பரிசுத்திக்காக என்னையடைகிறார்கள். என் கண்ணில் தென்பட்ட சகல பிராணிகளும் மோட்சத்துக்குப் பாத்திரமாகின்றன. அப்படியானாலும் நான் ஆத்மாவை யறிந்து சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறவர்களாயும், பூததயவுள்ளவர்களாயும், அகங்காரமற்றவர்களாயும், ஊர்த்துவரேதஸர்களாயும், சாந்தர்களாயுமிருக்கிற உங்களைப் பக்தியுள்ள சித்தத்தோடு நமஸ்காரம்பண்ணுகிறேன். ஏனென்றால் பிராம்மணர்களையே நான் தெய்வமாகக் கொண்டிருக்கிற படியினாலே எப்பொழுதும் பிராம்மணர்களைப் பஜிக்கிறது வழக்கம். இப்பொழுது நான் கேட்கிறதை நீங்கள் யோசித்துச் சொல்லவேண்டும். அது என்னவென்றால், இராவணனைக் கொன்றதனால் எனக்குப் பாபம் வந்திருக்கிறது. அந்தப் பாபம் நீங்கும்படியான பிராயச்சித்தம் என்ன? அதை யெனக்குச் சொல்லவேண்டும்" என்று கேட்டார். அப்பொழுது ரிஷீசுவரர்களெல்லாரும் இராமரைப்பார்த்துச், "சத்தியவிரதனே; ஜகத்ரட்சகதுரந்தரா! ஜகந்நாதா! கேளும் சர்வலோகங்களுக்கும் உபகாரஞ் செய்யும்படியாகவும், லோகத்துக்குத் தர்மத்தை யனுஷ்டித்துக் காட்டும்பொருட்டாகவும் முக்தியைக் கொடுக்கிற புண்ணியமான இந்தக் கந்தமாதன சிகரத்திலே ஒரு சிவலிங்கத்தைப் பிரதிஷ்டைபண்ணி அதை நீர் பூசைபண்ணினால் தசக்கிரீவனைக்கொன்ற தோஷம் நீங்கும். சிவலிங்கப் பிரதிஷ்டையின் புண்ணியத்தைச் சதுர்முகங்களையுடைய பிரமாவானுஞ் சொல்ல முடியாதென்றால் சாதாரண மனுஷனால் சொல்லமுடியு

மோ? நீர் இந்தப் பருவதத்தில் ஸ்தாபனம் பண்ணுகிற லிங்கத்தி
னுடைய தரிசனமானது மனிதர்களுக்குக் காசியிலிருக்கிற லிங்கத்
தைத்தரிசிப்பதைவிடக்கோடிமடங்கு அதிகமானபுண்ணியத்தைக்
கொடுக்கும் என்பதில் சந்தேகமில்லை. புண்ணிய பாபங்களாகிற
கட்டைகளைநெருப்புப்போல நாசம்பண்ணுகிற இந்த லிங்கமானது
உமது பேராலே இராமலிங்கமென்று உலகத்தில் பிரசித்தியடைய
ட்டும். இராமசந்திரா; கருணாமூர்த்தியே! மஹாநுபாவா! லிங்கப்
பிரதிஷ்டைசெய்யும விஷயத்தில் தாமசிக்கவேண்டாம்" என்று
சொன்னார்கள். அதுகேட்ட ஜகத்பதியான ஸ்ரீராமர் இரண்டுமுகூர்
த்தம்வரைக்கும் சுபமுகூர்த்தத்தைப் பற்றி யாலோசித்து, அநு
மானை யழைத்து "அஞ்சனைக்கும வாயுவுக்கும்பிறந்த அநுமானே
நீர் சிவனுக்கு வாசஸ்தானமாயிருக்கிற கைலாசத்துக்குப்போய்
அதிசீக்கிரத்தில் ஒரு சிவலிங்கம் கொண்டுவாரும்" என்று ஆக்ஞா
பித்தார். வீரியமுள்ளஆஞ்சநேயர் இரண்டுமுகூர்த்தம்வரைக்கும்
சுபமுகூர்த்தத்தை யாராய்ந்துபார்த்துப் புஜங்களைத் தட்டிக்கொ
ண்டு, சர்வதேவர்களும், மஹாத்மாக்களான ரிஷிகளும் பார்த்துக்
கொண்டிருக்கும்போதே கந்தமாதனம் நடுங்கும்படி உயரப்பாய்
ந்து, அதிகவேகமாக ஆகாசமார்க்கமாய்ப்போய்க் கைலாசத்தையடை
ந்து, லிங்கத்தைத் தேடிப்பார்த்து அகப்படாமையால், சங்கரரு
க்கு வாசஸ்தானமாகிய கைலாசபருவதத்திலேயே கிழக்குநுனி
யிருக்கும்படி தர்ப்பத்தைப் பரப்பி அதன்மேலேயிருந்து இந்திரி
யங்களை ஜயித்துச், சுவாசத்தையடக்கி ஊர்த்துவபாகுவாய் நிரா
லம்ப யோகத்திலிருந்து மஹாதேவனைக் குறித்துத் தபசுபண்ணிக்
கொண்டிருந்தார்.

கேளுங்கள் ரிஷீசுவரர்களே! அநுமானிப்படிக் கைலாசத்தில்
தபசுபண்ணிக்கொண்டிருக்கையில், கந்தமாதனத்திலிருந்த உண்
மைதெரிந்த முனிவர்கள் எல்லாரும் அநுமான் வராததையும், கு
றித்த முகூர்த்தகாலம் எல்லாம் சென்று கொஞ்சமாயிருப்பதை
யுங் கண்டு ஸ்ரீராமரைப்பார்த்து "ஏ ராமா! குறித்தமுகூர்த்தம் தப்
பிப்போகிறது. ஆகையால் ஜானகியானவள் விளையாட்டுக்காக மண
லால் செய்துவைத்திருக்கிற சிவலிங்கத்தை யெடுத்து நீர் பிரதிஷ்
டைபண்ணிவிடும்" என்று சொல்ல, ஸ்ரீராமனும் உடனே
இரட்சாபந்தனம் பண்ணிக்கொண்டு, ஆனிமாசம், சுக்கில
பட்சம், தசமி திதி, புதன்கிழமை, ஹஸ்தநட்சத்திரம், வியதிபாதம்,

கரஜைகரணம், கன்னியாசந்திரன், விருஷபரவி இவைகள்கூடியப சுபமுகூர்த்தத்தில் கந்தமாதன பருவதத்திலே சிவலிங்கத்தைப் பிரதிஷ்டைபண்ணிக் கங்காதரராயும், சந்திரசேகரராயுமிருக்கிற சாம்ப பரமேசுவரனை யாராதனை பண்ணினர். உடனேமஹாதேவர் பார்வதீ சமேதராய் லிங்கத்தினின்றும் ஆவிர்ப்பவித்து, ராமரைப் பார்த்து "மஹாத்மாவான ராகவா! தனுஷ்கோடியில் ஸ்நானம் பண்ணி நீ ஸ்தாபனம் பண்ணின லிங்கத்தைத் தரிசிப்பவர்கள் மஹா பாதகர்களாக இருந்தாலும் அவர்களுடைய பாபங்களெல்லாம் பஞ்சாய்ப்பறந்து போய்விடுகிறது. இராமசந்திரா! இதில் சமுசயமில்லை" என்று வரங்கொடுத்தார். ஸ்ரீராகவன் அந்தலிங்கத்துக்கு எதிரில் நந்திகேசுவரரை ஸ்தாபனம் பண்ணி, தன்னுடைய தனுக்கோடியால் பூமியைப்பிளந்து ஒரு கிணற்றை யுண்டாக்கி, அதிலிருந்துண்டான தீர்த்தத்தால் இராமலிங்கத்துக்கு அபிஷேகம் பண்ணினர். இந்தத் தீர்த்தத்துக்குக் கோடிதீர்த்தமென்று பெயர். ரிஷீசுவரர்களே; யிந்த தீர்த்தத்தைப்பற்றி யுங்களுக்கு முன்னாலேயே சொல்லியிருக்கிறேன். தேவர்களும், முனிவர்களும், நாகர்களும், கந்தவர்களும், அப்ஸரஸ்களும், வானரங்களும் தனித்தனியே ஒவ்வொரு லிங்கப்பிரதிஷ்டை செய்து பக்தியோடும் பூஜைசெய்தார்கள்.

கேளுங்கள் ரிஷீசுவரர்களே புக்தியும், முக்தியும் கொடுக்கும்படியான இராமநாத லிங்கத்தை ஸ்ரீராமன் பிரதிஷ்டைபண்ணின விதத்தை யுங்களுக்குச் சொன்னேன். இந்த லிங்கப்பிரதிஷ்டை கூறின அத்தியாயத்தைப் படிப்போரும் கேட்போரும் இராமலிங்கத்தைப் பூஜைபண்ணின பலனையடைந்து கடைசியில் சாயுஜ்யத்தையும் அடைவார்கள்.

நாற்பத்துநாலாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## நாற்பத்தைந்தாவது

# ஸ்ரீராமர் அனுமாருக்குத் தத்துவோபதேசஞ் செய்த

## அத்தியாயம்.

---

கேளுங்கள் சௌனகாதி ரிஷீசுவரர்களே; உத்தமமான கர்மங்களைச்செய்த ஸ்ரீராமர் ஸ்ரீராமலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்தபின்பு, அநுமார் கைலாசத்திலிருந்து இரண்டு சிவலிங்கங்களை யெடுத்துக்கொண்டுவந்து தசரதகுமாரனை வீரமுள்ள ஸ்ரீராமரையும், சீதாதேவியையும் லக்ஷ்மணரையும் சுக்ரீவனையும் வணங்கினார். அப்பொழுது அனுமார், ஸ்ரீராமர் முனிவர்களுடனிருந்து சீதாதேவியால் விளையாட்டுக்காகச்செய்யப்பட்ட சைகதலிங்கத்தைப் பூஜைசெய்துகொண்டிருப்பதைப்பார்த்துக் கோபங்கொண்டு, தான் சிரமப்பட்டுக்கொண்டுவந்தலிங்கம் வீணாய்ப்போய்விட்டதே யென்று துக்கமடைந்து தர்மக்ஞரான ராமரைப்பார்த்து "ஏ ராமா! நானெடுத்தஜென்மம் வீணாய்ப்போய்விட்டது. உலகத்திலே துன்பத்தை மட்டும் அனுபவிக்க நான்பிறந்தேன். குரூரர்களான தேவர்களாலும், இராட்சதர்களாலும் நான் வெகுதுன்பங்களை யடைந்திருகிறேன். உலகத்திலென்னைப்போலொத்த பிள்ளைகளை ஒருதாயும் பெறவேண்டாம். சம்சாரசாகரத்தில் ஏராளமான துக்கத்தை அநுபவிக்கும்படி யெனக்குநேர்ந்தது. முன்னாலேயும்மைச் சேவிக்கிறதினால் துக்கத்தை அனுபவித்தேன். பிறகு உமக்காகச் சண்டைசெய்து அதைவிட அதிகமான துக்கத்தை யடைந்தேன். இப்பொழுது நீர் என்னை யவமானஞ் செய்தபடியினால் அதிலும் அதிகமான துக்கத்தையடைய நேரிட்டது. பாரும்! சுக்ரீவன் மனைவிநிமித்தமாகவும், இராவணன் தம்பியான விபீஷணன் இராஜ்யத்துக்காகவும் உம்மைச் சேவித்தார்கள். நான் யாதொரு காரணமுமில்லாமலே யும்மைச் சேவித்துவருகிறது உமக்கேதெரியும். வானரப்படைகள் அனேகமிருக்கும்பொழுது நீர் என்னைத் தெரிந்தெடுத்துச் சிவலிங்கங்கொண்டு வருவதற்காகக் கைலாசத்துக்குப்போகும்படி யாக்ஞாபித்தீர். அப்படியே யதிவேகமாகக் கைலாசத்துக்குப்போய், அங்கே சிவலிங்கத்தைக் காணாமல் ஸாம்பபரமேசுவரனைக்

குறித்துத் தபசுசெய்து, அவரிடமிருந்து லிங்கத்தைப் பெற்றுக் கொண்டு சீக்கிரமாக வந்திருக்கிறேன். இங்கே நீர் ஒரு ஸைகத லிங்கத்தைப் பிரதிஷ்டைபண்ணி முனிவர்களோடும், தேவர்களோடும், கந்தர்வர்களோடும் குதூகலமாய்ப் பூஜை பண்ணிக் கொண்டிருக்கிறீர். நான் கைலாசத்திலிருந்து கொண்டு வந்த லிங்கம் வீணாகப் போய்விட்டது. இப்படித் துர்ப்பாக்கியனான நான் ஐயோ! பூமிக்கு பாரமாக ஆய்விட்டேன். ஏ! ஜானகி காந்தா! பிரபுவே, இரகுநாயகா! இந்தத் துக்க மென்றால் சகிக்க முடியவில்லை. சுவாமீ, நான் என்னபண்ணுவேன்! எங்கேபோவேன்! எனக்கு கதியில்லையே. இராமா! நீர் செய்த அவமானம் பொறுக்கமுடியாமையால் நானிந்தச் சரீரத்தை விட்டுவிடுகிறேன்" என்று பலபடியாகப் புலம்பிக் கோபமும் சோகமும் மேலிட்டுத் தண்டம்போலப் பூமியில் விழுந்தார். அதுகண்ட ராமனும், தேவர்களும், முனிவர்களும், கந்தர்வர்களும் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அனுமாருடைய கோபத்தைச் சமனம் பண்ணும்பொருட்டுச் சிரித்தமுகத்துடன் சில வார்த்தைகள் பேசினார்:—"நீமுகூர்த்தந்தப்பி வந்தபடியால் சீதையின் ஸைகதலிங்கத்தை நான் ஸ்தாபனம் செய்யும்படி நேரிட்டது. ஆகையால் நீ இந்த விஷயத்தில் கோபத்தையும் துக்கத்தையும் அடையாதே. அநுமானே என்னுடையகாரியத்தையும், பிறந்தவன், இறந்தவன், பிறந்துகொண்டிருக்கிறவன் எல்லாருடைய காரியத்தையும் நானறிவேன். ஒருவனே தன்னுடைய கர்ம வசத்தால் பிறந்து இறக்கிறான். நரகத்துக்கும் போகிறான். பரமாத்வோ நிர்குணமாயிருக்கிறது. இந்த உண்மையை அறிந்து துக்கத்தை விட்டுவிட்டு, ஆண், பெண்! அலியென்கிற பேதமில்லாததாய், மாயா ரகிதமாய், பற்றற்றதாய், நிர்விகாரமாய்ச் சோதிமயமாயிருக்கிற பரமாத்மாவை எப்பொழுதுந் தரிசித்துக்கொண்டிரு. தத்துவஞானத்துக்கு விரோதமான துக்கத்தை யேன் பாராட்டுகிறாய்? ஏ! வானரோத்தமா! தத்துவ ஞானத்தைக் கைக்கொண்டு சுவயம் பிரகாசமான பரமாத்மாவைச் சதா தியானம் பண்ணிக்கொண்டிரு. தேகாதி யபிமானங்களை விட்டு விடு. சதா தர்மங்களைச் செய்துகொண்டிரு. பிராணி இம்சை செய்யாதே. பெரியோர்களை வணங்கு. இந்திரியங்களை யடக்கு. பிறர் தூஷணை செய்யாதே. சிவன் விஷ்ணு முதலான தேவர்களைச் சதா பூஜைசெய். எப்பொழுதும் உண்மைபேசு. துக்

கத்தை விட்டுவிடு. பிரத்தியக்பிரமம் ஒன்றேயுள்ளது. மற்றொன்று மில்லை யென்கிற ஞானமில்லாமையினாலே மோகமுண்டாகிறது. அந்த மோகத்தினாலே விகாரமற்ற பிரம்மத்தினிடத்திலே சுக துக்கங்கள் யதார்த்தமா யிருப்பதுபோலகற்பித்துக் கொள்ளுகிறான். சுகமுடையதென்று எண்ணப்படுகிற பதார்த்தத்தினிடத்தில் மூடர்களுக்கு இராக மூண்டாகிறது. அதுபோலவே துக்கமுடையதென்று எண்ணப்படுகிற பதார்த்தத்தினிடத்தில் துவேஷம் ஜனிக்கிறது. இந்த இராகதுவேஷங்களால் புண்ணியபாபங்களாகிற கர்மத்தில் கட்டுப்பட்டுத் தேவர், மனுஷியர், திரியக் முதலான ஜன்மங்களை யடைகிறான். பாரு. சந்தனம், அகில், கற்பூரம் முதலான சோபனமான பரிமள திரவியங்கள் எந்த சரீரத்தில் பட்டமாத்திரத்திலே மலமாய்ப் போகின்றனவோ அந்த சரீரத்தைச் சுகமென்று சொல்லலாமோ ? பட்சியம், போஜ்யம் முதலான போஜன வஸ்துக்களெல்லாம் எந்தச் சரீர சம்பந்தத்தால் மலமாய் விடுகின்றனவோ அந்தச் சரீரத்தை எப்படிச் சுகமானதென்று சொல்லலாம் ? நல்லவாசனையுள்ளதும், குளிர்ந்ததுமான நீர் எந்தச் சரீர சம்பந்தத்தால் மூத்திரமாகின்றதோ அந்தச் சரீரத்தைச் சுகமென்று எப்படிச் சொல்லலாம் ? அதிசுத்தமாயும் வெண்மையாயுமிருக்கிற வஸ்திரங்கள் எந்தச் சரீரத்தின் வேர்வையால் அழுக்கடைகின்றனவோ அந்தச் சரீரத்தைச் சுகமுடையதென்று சொல்லலாமா ? அனுமாரே ! சொல்லுகிறேன் கேளு. சமுசாரமாகிற இந்தக் குழியில் கொஞ்சமாவது சுகம கிடையாது. ஜீவன் ஜனனம், பாலியம், யௌவனம், வார்த்தகம், மரணம், புனர் ஜனனம் ஆகிய துக்கங்களுக் குள்ளாகிறது. இந்த துக்கங்கள் அக்ஞானவைபவத்தால் உண்டாகின்றன அந்த அஞ்ஞானம் நிவர்த்தியானல் உத்தமமான சுகமுண்டாகிறது. இந்த அஞ்ஞான நீக்கமும் ஞானத்தாலுண்டாகுமே யல்லாமல் கர்மத்தாலுண்டாகாது. ஞானமாவது வேதாந்த வாக்கிய சிரவணத்தாலுண்டாகிற பரபிரமஞானமேயாம். அந்தப் பரப்பிரமஞானமும் ஆசாரியநுக்கிரகம் பெற்ற முக்கியாதிகாரியாகிய விரக்தனுக்குண்டாகிறது. மற்றவர்களுக்குண்டாகிறதில்லை. எப்பொழுது இருதயத்திலிருக்கிற ஆசையெல்லாம் ஒழிகிறதோ அப்பொழுதே அவன் ஜீவன் முகத்தனாய் பிரமானந்தத்தை யநுபவிக்கிறான். ஜீவனானது விழித்துக்கொண்டிருந்தாலும், தூங்கிக்கொண்டிருந்தாலும், இரு

ந்துகொண்டிருந்தாலும், சாப்பிட்டுக் கொண்டிருந்தாலும், குரூரனா கிய யமதருமராஜன் பிடித்து இழுத்துக்கொண்டு போகிறான். குவியல்களெல்லாம் கடைசியில் க்ஷயத்தையடைகின்றன.)உயர்ந்தவைகளெல்லாம் கடைசியில் தாழ்வடைந்து விழுகின்றன. சேர்ந்தவைகளெல்லாம்முடிவிலே பிரிகின்றன. பிறந்தவைகளெல்லாம் கடைசியில் இறக்கின்றன. பழுத்த பழங்களுக்குக் கீழே விழுகிறதைத் தவிர வேறுபயமில்லாததுபோலப் பிறந்தவர்களுக்கு மரணமடைவதைத்தவிர வேறுபயமில்லை. வீடானது பலமானஸ்தம்பங்களால் தாங்கப்பட்டிருந்தும், நாளாவட்டத்தில் ஜீரணதசையையடைந்து அழிந்துபோகிறதுபோல் ஜீவனும் ஜரா மரணங்களுக்குள்ளாகி அழிகின்றது. இரவும்பகலும் சென்றுகொண்டேயிருக்கிறதினால் ஜீவனுக்கு ஆயுசும் நசித்துக்கொண்டே வருகிறது. ஒருவனிருந்து கொண்டிருந்தாலும், நின்றுகொண்டிருந்தாலும், ஓடிக்கொண்டிருந்தாலும், ஆயுசு நசிக்கிறது. சாவானது ஒருவன் போய்க்கொண்டிருந்தாலும் அவன் கூடவேபோகிறது. உட்கார்ந்து கொண்டிருந்தாலுங்கூடவே யுட்காருகிறது. ஒருவன் தூரதேசங்களுக்குப் போய்த் திரும்பிவந்தாலும் அதுவுங்கூடவேபோய்த் திரும்பிவருகிறது. விருத்தாப்பியம்வந்து நரைதிரைகளுண்டாகிச் சுவாசகாசாதிகளால் வருந்திச் சரீரம் அழிந்துபோகின்றது. ஒரு பெரிய சமுத்திரத்திலே கட்டையும் கட்டையும் சேர்ந்து காலாந்திரத்திலே பிரிந்து போகிறதுபோல மனைவி மக்கள் பந்துவர்க்கங்கள் வயல் திரவியம் முதலானவைகள் ஒரு சமையத்தில்கூடி மற்றொரு சமையத்தில் பிரிந்துபோகின்றன ஒருவழிப்போக்கனானவன் மற்றொரு வழிப்போக்கனோடு கூடியிருவருஞ் சேர்ந்து சில தூரம்போய்ப் பிறகு பிரிந்துபோகிறதுபோலப் பெண்டாட்டி பிள்ளைகளும் கூடிப் பிரிந்துபோகிறார்கள். சரீரத்தோடுகூடமிருத்தியுவும் பிறக்கிறது. இப்படி நிச்சயமாயிருக்கிற மரணத்துக்குப் பரிகாரமொன்றுமில்லை. ஒரு சக்ரம்விழுந்தபின் ஜீவனானது கர்மகதியால் மற்றொரு சரீரத்தை யடைகிறது. ஆகையால் ஜீவன்கள் ஓரிடத்தில் நிலையாய் நில்லாமல் கர்மானுசாரத்தின்படி தனித்தனியே பிரிந்துபோகின்றன. பிராணிகளின் சரீரம் எப்படி நசித்துத்தோன்றுகிறதோ அது போல ஆத்மா நசித்துத்தோன்றுகிறதில்லை ஆகையால் ஆஞ்சநேயரே, நீர் ஆத்துமாவைப் பற்றித்துக்கப்பட்டு, மற்றொன்றையும் பற்றித்துக்கப்படாமல் சோகமற்றதாயும், சித்தாயும், சத்தாயும்,

அத்துவைதமாகியும், அமலமாயிருக்கிறபிரமத்தை யிரவும் பகலுந் தியானம் பண்ணிக்கொண்டிரு. என்செய்கை உன்செய்கைதான்; உன்செய்கை என்செய்கைதான்; நான் ஸ்தாபனம் பண்ணின லிங்கமானது நீ ஸ்தாபனஞ் செய்த லிங்கமேயாம். ஆனாலும் நீ கைலாசத்திலிருந்து கொண்டுவந்த லிங்கத்தை ஒரு நல்ல சுபமுகூர்த்தத்தில் ஸ்தாபனம்பண்ணு. நீ ஸ்தாபனம் பண்ணுகிற லிங்கமானது உன்பெயரால் அநுமலிங்கமென்று உலகத்தில் பிரசித்திபெறட்டும். இந்த அநுமலிங்கத்தைத் தரிசித்துவிட்டுத்தான் நான் ஸ்தாபித்த இராமலிங்கத்தைத் தரிசிக்கவேண்டியது. பிரமகுலத்தில் பிறந்த அநேகராட்சதர்களை நீ சங்காரஞ்செய்திருக்கிறபடியால் உனக்குப் பிரமஹத்தி தோஷம் வந்திருக்கிறது. அநுமலிங்கமென்கிற ஒரு லிங்கத்தை நீ ஸ்தாபனம்பண்ணினால் உனக்கு அந்தப்பாபம் நிவர்த்தியாகும். சாட்சாத் பரமசிவன் கொடுத்த இந்த அநுமலிங்கத்தையும், இராமலிங்கத்தையும் தரிசிக்கிறவனும், ஆயிரம் யோசனை தூரத்திலிருந்து ஸ்மரிக்கிறவனும் கிருதகிருத்தியனாகி அந்தத்தில் சாயுஜ்யத்தை அடைவான். அநுமலிங்கத்தையும், இராமலிங்கத்தையும் தரிசிக்கிறவன் சமஸ்தமான தபஸ்பண்ணின பலனையும், சமஸ்தமான யாகம்பண்ணின பலனையும் அடைகிறான். அநுமலிங்கம் இராமலிங்கம், சீதாலிங்கம், இலட்சுமணலிங்கம், சுக்ரீவலிங்கம், அங்கதலிங்கம், சேதுகட்டின நளலிங்கம், ஜாம்பவலிங்கம், விபீஷணன் ஸ்தாபித்த இரத்தின லிங்கம், இந்திராதியர்களால் ஸ்தாபிக்கப்பட்ட லிங்கம், ஆதிசேஷன் முதலியோரால் ஸ்தாபிக்கப்பட்டலிங்கம், ஆகிய இந்தப் பதினொரு லிங்கங்களிலும் ஏகாதசருத்திர சொரூபராயிருக்கிற பரமசிவன் சதா வாசம்பண்ணுகிறார். ஆகையால் அநுமானே உன்னுடைய பாபநிவர்த்திக்காக நீ கொண்டுவந்த லிங்கத்தை ஸ்தாபனம் பண்ணு.

உனக்கிஷ்டமில்லாவிட்டால் என்னால் ஸ்தாபிக்கப்பட்டு அதல, விதல, சுதல முதலான கீழேழு உலகங்களையுங் கடந்து போய் வேரூன்றியிருக்கிற சைகதலிங்கத்தை நீ பிடுங்கியெறிந்துவிட்டாயானால் நீ கொண்டுவந்த லிங்கத்தை நான் ஸ்தாபனம் பண்ணிவிடுகிறேன். ஆனால் அந்த லிங்கத்தைப் பெயர்க்க யாருக்குத்தான் சக்தியிருக்கிறது? உனக்கு சக்தியுண்டானால் நான் ஸ்தாபித்த லிங்கத்தைப் பிடுங்கியெறிந்துவிட்டு நீ கொண்டுவந்த லிங்கத்தை ஸ்தாபனம்பண்ணு. எழுந்திரு பார்ப்போம். தூக்கப்

படாதே." என்று இராமன் சொன்னதைகேட்டு அநுமானவன் உடனேஸ்ரீராமருக்கு நமஸ்காரம் பண்ணிவிட்டுத், தான் பலசாலி யென்று இறுமாப்புக்கொண்டு, "இதோ இந்தமணல் லிங்கத்தைப் பிடுங்கி யெறிந்துவிட்டு, நான் கைலாசத்திலிருந்து கொண்டுவந்த லிங்கத்தை ஸ்தாபித்துவிடுகிறேன். இதைப் பிடுங்கி யெறிகிறது எனக்கொருபாரமா!" என்று தன் மனதிலெண்ணித், தேவர்கள், ரிஷிகள், கவிகள், இராட்சதர்கள், இராமன், இலட்சுமணன், சீதை, எல்லாரும் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே, அலட்சியமாய் ஒரு கையால் பிடித்துக்கொண்டு வெகு சிரமத்தோடு லிங்கத்தை அசக்கியும் அசைக்க முடியவில்லை. பிறகு அநுமானும் கீச்சிட்டு வாலைத்தூக்கிக்கொண்டு தன்னுடைய முழுபலத்தோடு இரண்டு கைகளாலுமசைக்க அப்பொழுதும் அது அசையவில்லை. பின்பு இரண்டு கைகளையும் பூமியிலூன்றிக்கொண்டு, வாலால் அதைச் சுற்றி அதிகமாக ஆகாசத்தில் கிளம்பி யிழுத்தான். அப்பொழுது இழுத்தவேகத்தால் லிங்கத்துக்கு ஒரு குரோசதூரத்துக்கப்பால் இரத்தத்தைக் கக்கிக்கொண்டு பூமியும், மலைகளும நடுங்கும்படி பூமியில் விழுந்து மூர்ச்சையடைந்தான். மூர்ச்சையாய்க்கிடந்த அவனுடைய கண், மூக்கு, வாய், காது, அபான முதலான இடங்களிலிருந்து இரத்தம ஆறுகப்பெருகிவர அதனால் ஒருபெரிய இரத்த குண்டமுண்டாயிற்று. அப்பொழுது தேவர், மனிதர், அசுரர்கள் எல்லாரும் ஹா ! ஹா ! வென்று சப்தித்தார்கள். அப்பொழுது இராம இலட்சுமணரும், ஜானகியும் வானரங்களோடும் அநுமான் விழுந்திருந்த இடத்துக்கு ஓடி அவனுடைய நிலைமையைக் கண்டு துக்கப்பட்டார்கள். சீதையோடும், வானரசேனைகளும்கூட கந்தமாதன மலையிலிருந்த இராம இலட்சுமணர்கள் இராக்காலத்தில் நட்சத்திரக் கூட்டங்களோடுகூடின சூரிய சந்திரர்களைப்போல விளங்கினார்கள். அவ்விடத்தில் அநுமான் தன் சரீரம் நொறுங்கி, வாயால் இரத்தத்தைக் கக்கிக்கொண்டு மூர்ச்சையாய்க் கிடப்பதைக்கண்டு வானரங்களெல்லாந் துக்கத்தினாலே ஹாஹாவென்று கூச்சலிட்டுப் பூமியில் விழுந்தார்கள். அப்பொழுது சீதையானவள் மிகுந்த கருணையோடு பூமியில் விழுந்துகிடந்த அநுமானை யிரண்டு கையாலும அப்பா ! அப்பா ! வென்று தொட்டாள். இராமனும் அநுமானைத் தன்மடியில் வைத்துக்கொண்டு கண்ணீர்விட்டுக் கையால் அவன் சரீரத்தைத் தடவிப் புலம்பத்தொடங்கினர்.

## நாற்பத்தைந்தாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

நாற்பத்தாறுவது

# அநுமத்லிங்கமும் அநுமத்குண்டமும்

## வந்த வரலாறுகூறின

அத்தியாயம்.

---

"ஏ! வானரசிரேஷ்டரான அநுமானே! பம்பாதீரத்தில் துக்கமடைந்திருந்த காலத்தில் எங்களைச் சூரியகுமாரனான சுக்கிரீவனோடு சிநேகம் செய்வித்து எங்களுடைய துக்கத்தை நீக்கினாய். உன்னைக்கண்ட மாத்திரத்தில் நாங்கள் எங்களுடைய தந்தையையும் தாயாராகிய கௌசலையையும், மற்றுமுண்டான பந்துக்களையும் பாராதிருக்கிற துக்கத்தையும் மறந்துவிட்டோம். அப்பா அநுமானே, நீ யெனக்கு எவ்வளவோ உபகாரம்பண்ணி யிருக்கிறாய். அநேக யோசனை விஸ்தாரமுள்ள சமுத்திரத்தையுந் தாண்டினாய்; நடுவிலே தோன்றின மைநாக மலையையுங் கையினால் அடித்துத் தள்ளினாய். நாகமாதாவாகிய சுரஸை என்பவளையும் ஜயித்து, மஹாகுரூரமுள்ள சாயாகிரகிணியையும் ஸம்ஹாரம்பண்ணிச் சாயங்காலம் சுவேலமலைபோய்ச் சேர்ந்து, இலங்காதேவியைக் கையால் அடித்து, எனக்காக இராவணனுடைய வீட்டுக்குள்ளே புகுந்து, இராத்திரியில் பயமில்லாமல் சீதையைத்தேடி அங்கே அவளைக்காணாமல் அசோகவனம்போய், அங்கே வைதேகியைக்கண்டு நமஸ்கரித்துச், சூடாமணியை அடையாளமாகப் பெற்றுக்கொண்டு, அசோகவனத்திலுள்ள மரங்களையெல்லாம் நீ முறித்தழித்தாய். அப்பொழுது இராவணனுக்கொப்பான பலசாலிகளான எண்பதினாயிரம் கிங்கரர்கள் இரதகஜதுரகபதாதிகளோடு வந்தெதிர்க்க எண்ணிமித்தமாக அவர்களைக்கொன்றாய். பிறகு பிரகஸ்தன் புத்திரனான ஜம்புமாலியையும், நெருப்புக்கொப்பான எழுமந்திரி குமாரர்களையும், பஞ்சசேனாதிபதிகளையும், அக்ஷயகுமாரனையும்,எனக்காகஅடித்தடித்து எமனுடைய வீட்டுக்கு அனுப்பவில்லையா? பிறகு இந்திரஜித்தினால் இராவணனுடைய சபைக்குக் கொண்டுபோகப்பட்டு, அங்கே அவனைத்திரணமாக நினைத்துப்பேசி இலங்கா பட்டணத்தைக் கொளுத்திவிட்டுப், பின்பு நானிருந்த ரிசியமுகபருவதத்துக்கு வந்

தாயே! இந்தமாதிரியான மஹாதுக்கங்களை யெல்லாம் என்னிமித்தமாக அனுபவித்த நீ இப்பொழுது பூமியில்விழுந்துகிடக்கிறதைப் பார்க்க எனக்கு மஹாதுக்கமா யிருக்கிறது. நீ யிறந்துவிட்டாயேயானால் என்னுயிரையும் நான் விட்டுவிடுகிறேன். நீ உயிர்பிழைத்திராமல்போனால் சீதை, இலட்சுமணன், பரதன், சத்துருக்கனன், ஐசுவரியம், இராஜ்ஜியம் இருந்து எனக்கென்ன பிரயோசனம்? அப்பா! அநுமானே, ஏன் பூமியில் படுத்துக்கொண்டிருக்கிறாய், எழுந்திரு. அநுமானே! இந்திரஜித்தானவன் என்னையும், இலட்சுமணனையும் பிரம்மாஸ்திரத்தால் கட்டினபொழுது எங்களை விடுவித்தாய். நீ ஔஷதங்களைக்கொண்டுவந்து இலட்சுமணனைப் பிழைப்பித்தாய், உன்னுடைய சகாயத்தைக்கொண்டு பலசாலிகளான இராவணன் முதலான ராட்சதர்களை நான் கொன்று என் பிராணநாயகியான மைதிலியை யடைந்தேன். சீதையினுடைய துக்கத்தை நீக்கின அநுமானே! அஞ்சனாபுத்திரா! என்னையும், சீதையையும், இலட்சுமணனையும் அயோத்திகொண்டுபோய்ச் சேர்க்காமல் நடுவழியில் விட்டுவிட்டு நீ போனது நியாயமா? ஏ! இராட்சத கண்டகனான மஹாவீரா! நீ எங்கேபோய்விட்டாய்? நான் ஸ்நானத்துக்குப்போகிறேன் என்னுடைய மரவுரியையும், கலசம், மான் தோல், தர்ப்பம் முதலானவைகளையெல்லாங் கொண்டுவா. எனக்கு ஆகாரத்துக்காகக் கந்த மூலபலங்களைச் சேகரி. நான் தூங்குவதற்குப் படுக்கைபோடு." என்று அநுமான் முகத்தைப் பார்த்துப் பார்த்துக் கண்ணீர் பெருகவிட்டுப் புலம்பினார். இராமருடைய கண்ணீர் அநுமான் சரீரத்தில் பட்ட உடனே அவன் மூர்ச்சை தெளிந்து கண்விழித்துப் பார்த்தான். அப்பொழுது இராவணனுடைய பயத்தினாலே நடுங்கிக்கொண்டிருந்த உலகத்தாரைக் காப்பாற்றுவதற்காக மனுஷாவதாரஞ் செய்தவராயும், நீலமேக சாமளராயும், இரணகளத்தூளிபடிந்த சரீரமுடையவராயும், ஜடாமண்டலத்தால் பிரகாசிக்கிறவராயும், தாமரைமலர்போல நீண்ட கண்களையுடையவராயும், சண்டைசெய்து சிரமத்தையடைந்தவராயும், தேவர்கள், ரிஷிகள், பிதுர்க்கள், கின்னரர்கள் முதலானவர்களால் ஸ்தோத்திரம் பண்ணப்பட்டுக் கொண்டிருக்கிறவராயும், கிருபை நிறைந்த மனமுடையவராயும், சீதா இலட்சுமண சமேதராய், வானரங்களால் சூழப்பட்டவராயும், தன் சரீரத்தைத் தமது கைகளால் தடவிக்கொண்டிருந்தவராயு மிருக்கிற ஸ்ரீராம

ஷரக்கண்டு எழுந்திருந்து, பூமியில் தண்டம்போல விழுந்து நமஸ்கரித்து, அஞ்சலிபந்தம் பண்ணிக்கொண்டு துதிக்கிறார்:—"பிரபுவாயும், விஷ்ணுவாயும், ஆதிதேவராயும், புராணராயும், கதையைக் கையிலேந்தினவராயும், சந்தோஷமடைந்த வானரசைனியங்களால் ஸேவிக்கப்பட்ட பாதகமலங்களை யுடையவராயும், நித்தியம் புஷ்பகவிமானத்தில் உட்கார்ந்து கொண்டிருப்பவராயும், இராட்சதர்களையெல்லாம் நாசம்பண்ணிஜகத்துக்கு உபகாரம் செய்தவராயுமிருக்கிறஉமக்குநமஸ்காரம்! ஸஹஸ்ரசிரஸையுடையவராயும்,ஸஹஸ்ரம கண்களையுடையவராயும், சுத்தராயும், பக்தர்களுடைய துக்கத்தை நீக்குகிறவராயும், சீதாபதியாயும், இராகவனுயு மிருக்கிற உமக்கு நமஸ்காரம்! நரஸிம்மாவதாரம் பண்ணி தைத்திய இராஜனுகிய ஹிரணியனைக்கொன்றவராயும், வராகாவதாரம்பண்ணிப் பூமியைப் பல்லிலேதூக்கினவராயும், திரிவிக்கிரமாவதாரம்பண்ணி மஹாபலியினுடைய யாகத்தை யழித்தவராயும், கூர்மாவதாரஞ்செய்துமந்தரகிரியைச் சுமந்தவராயும், மத்சியாவதாரம்பண்ணி மூன்றுலோகங்களையும் பரிபாலித்தவராயும், பரசுராமாவதாரஞ் செய்து க்ஷத்திரியர்களை நாசம்பண்ணினவராயும், இராமாவதாரம் பண்ணி மஹாதேவனுடைய மஹாபயங்காரமான பெரியவில்லை முறித்தவராயும், க்ஷத்திரியர்களையெல்லாம் நாசம்பண்ணின பரசுராமனுக்குப் பயத்தையுண்டுபண்ணினவராயும், அகலியாசாபத்தை நீக்கினவராயும், பதினுயிரம் யானை பலத்தோடுகூடிய தாடகையைக் கொன்றவராயும், கல்லைப்போலக் கடினமாயும், விசாலமாயுமிருக்கிற வாலியினுடைய மார்பைப் பிளந்தவராயும், மாயாமிருகமாகவந்த மாரீசனைக்கொன்றவராயும், அநேகமான அலைகளோடுகூடின சமுத்திரத்தினுடைய கருவத்தை யடக்கினவராயும், இராட்சதர்களைச் சம்ஹாரம் பண்ணினவராயும், கோதண்டபாணியாயும், சீதையினுடைய மனசாகிய தாமரைப் பூவுக்குச் சூரியன்போலிருக்கிறவராயும், தசரதனுடைய துக்கமாகிற சமுத்திரத்தை வற்றச் செய்வதில் அகஸ்தியரை ஒத்தவராயும், இராஜேந்திரராயும், ஜானகீபதியாயும், தாரகபிரமமாயும், தாமரைபோல் கண்களையுடையவராயும், சுகசொரூபராயும், விசுவாமித்திரப் பிரியராயும், கரனைச்சம்ஹாரம் பண்ணினவராயுமிருக்கிற உமக்கு நமஸ்காரம்! நமஸ்காரம்! ஏ! தேவதேவேசா! பக்தர்களுக்கு அபயங்கொடுப்பவனே! கருணைகடலே! இராமசந்திரா! என்

னைக்காத்தருளும்! வேதவாக்குகளுக்கு எட்டாதவராயும், இரகு குலத்தில் பிறந்தவராயுமிருக்கிற ஏ இராமா! உம்மை நான் சரணமடைகிறேன்; நீரென்னைக் காத்தருளும். ஐயா! இரகு வீரா! எனக்குண்டாயிருக்கிற மஹாமோகத்தை யிப்பொழுது நீக்கும். நான் ஸ்நானம்பண்ணிக் கொண்டிருக்கும்போதும், ஆசமனம் பண்ணிக்கொண்டிருக்கும் போதும், சாப்பிட்டுக்கொண்டிருக்கும் போதும், விழித்துக்கொண்டிருக்கும்போதும், சொற்பனவஸ்தை சுழுத்தியவஸ்தையிலிருக்கும்போதும், எல்லா விடத்திலும் என்னைக் காப்பாற்றும், ஏ இரகுநந்தனா! உம்முடைய மகிமையை ஸ்தோத்திரம்பண்ண யாரால் முடியும்? உம்முடையபெருமையை நீரே யறியவேண்டும்." என்று இராமசந்திரனை ஸ்தோத்திரம்பண்ணிச், சீதையையும் பக்தியோடுகூட ஸ்தோத்திரம்பண்ண ஆரம்பித்தார்:—ஏ ஜானகீ! சமஸ்தபாபங்களை நீக்குகிறவளாயும், தாரித்திரத்தையும், கடன்களையும் போக்கடிக்கிறவளாயும், பக்தர்களுக்கு இஷ்டத்தைக் கொடுக்கிறவளாயும், விதேக இராஜன் புத்திரியாயும், இராகவனுக்கு ஆனந்தத்தைச் செய்கிறவளாயும், பூமிதேவியின், குமாரத்தியாகியும், நித்திய சொரூபியாகியும், பிரகிருதியாயும், மங்களகரையாயும், இராவணனுடைய ஐசுவரியத்தைக் குலைத்தவளாயும், ஐசுவரிய சொரூபியாயும், ஸரஸ்வதீ சொரூபியாயும், பதிவிரதாசிரோமணியாயும், அநுக்கிரகம பண்ணுகிறதற்குத் தயாராயிருக்கிறவளாயும், பாபமற்றவளாயும், விஷ்ணுவுக்குப் பிரியையாயும், ஆத்மவித்யா சொரூபியாயும், வேதசொரூபியாயும், உமா சொரூபியாயும், மலர்ந்த முகத்தையுடையவளாயும், க்ஷீராப்திபுத்திரியாயும், சந்திரன் சகோதரியாயும், சர்வாங்கசுந்தரியாயும், தர்மத்துக்கிருப்பிடமாயும், கருணாமூர்த்தியாயும், வேதமாதாவாயும் தாமரைப்பூவிலிருந்து தாமரைப்பூவைக் கையில் பிடித்தவளாயும், விஷ்ணுவின் மார்பிலிருக்கிற இலட்சுமிதேவியாயும், சந்திரமண்டலத்தில் வசிக்கிறவளாயும், சந்திரனுக்குச் சமானமான முகத்தை யுடையவளாயும், பார்த்தவர்களுக்குச் சந்தோஷத்தை யுண்டாக்குகிற சொரூபத்தை யுடையவளாயும், சித்தி சொரூபியாயும், லோகமாதாவாயும், இராமச்சந்திரனுடைய பிராண நாயகியான சீதாதேவியாயுமிருக்கிற உன்னை இருதயத்தில் எப்பொழுதும் தியானிக்கிறேன்." என்று சீதையையும் துதித்து ஆநந்தக் கண்ணீர்பெருக மௌனமாயிருந்துவிட்டார். அநுமார் செய்த

ஸ்ரீராமசந்திர ஸ்தோத்திரத்தையும், சீதா ஸ்தோத்திரத்தையும் தினந்தோறும் படிக்கிறவன் மகாஐசுவரியத்தையும், பூமியையும், தனதானியத்தையும், பால்ராசியுள்ள கறக்கிறபசுக்களையும், ஆயுளை யும, வித்தைகளையும், புத்திரர்களையும், அழகான மனைவியையும் அடைகிறான். இந்த ஸ்தோத்திரத்தை ஒருதரம் படிக்கிறவன் பிரம்மஹத்தியாதி மஹா பாபங்களைச் செய்தவனு யிருந்தாலும் அந்தப் பாபங்களினின்றும் விடுபட்டுத் தேகாந்தத்தில் நரகத்தைப் பாராமல் முக்தியடைகிறான்.

கீழே சொன்னபடி அநுமாரால் ஸ்தோத்திரம்பண்ணப்பட்ட சீதாராமரானவர், அநுமானைப்பார்த்து "வானரோத்தமா! நீ மூடத்தனத்தால் யோசியாமல் காரியஞ்செய்துவிட்டாய்; நான் ஸ்தாபனம்பண்ணின லிங்கத்தை அசைப்பதற்கு இந்திரன் முத லான் முப்பத்து முக்கோடி தேவர்களாலும், பிரமாவாலும், விஷ்ணுவாலும் முடியாது. இப்பொழுது நீ கீழே விழுந்து மூர்ச்சையடைந்தது மஹாதேவனுக்குச் செய்த அபசாரத்தாலே. இனிமேல் நீ சாம்பபரமசிவனுக்கு அபசாரஞ் செய்யாதே. இன் றைய முதல்கொண்டு நீ விழுந்து மூர்ச்சையடைந்த இடத்துக்கு அநுமத்குண்டமென்று உலகத்தில் பெயர் வழங்கும். இதில் ஸ்நானம் பண்ணினதினால் மஹாபாதகங்களும் நிவர்த்தியாய்விடும். மஹாதேவனுடைய ஜடையிலிருந்து உண்டானது கௌதமி; அந்த நதியில் ஸ்நானம் பண்ணுகிறவனுக்கு ஆயிரம் அசுவமேதயாகபலன் வருகிறது. அதைக் காட்டிலும் நாலுமடங்கு அதிகமான பலனைக் கொடுக்கத்தக்கது கங்கை, யமுனை, சரஸ்வதி, யென்னும் நதிகள். இந்த மூன்று நதியும் சேர்ந்து ஓடுகிற இடத்தில் ஸ்நானம்பண்ணி னால் அதைவிட ஆயிரமடங்கு அதிகமான பலனை அடைகிறான். இந்த ஆயிரமடங்கு பலனானது அநுமத்குண்ட ஸ்நானத்தினால் வந் துவிடும். துர்லபமான மனித ஜன்மத்தையடைந்தும் அநுமத்குண் டத்தில் பக்தியோடு சிராத்தஞ் செய்யாதவனுடைய பிதுர்த்தேவ தைகள் நிராசையாய்க் கோபங்கொண்டு போய்விடுகிறார்கள். அப்படியே முனிவரும், இந்திரன் முதலான தேவர்களும், அவனைக் கோபித்துக்கொள்கிறார்கள். அநுமத்குண்ட தீரத்தில் எவன் தானங்கொடுத்து ஹோமஞ்செய்யவில்லையோ அவனுடைய ஜன்மம் வீண். அவன் இகபரங்களில் துக்கங்களையுமடைகிறான். அநுமத்குண்டத்தில் திலதர்ப்பணம் பண்ணுகிறவனுடைய பிதுர்க்

கள் சந்தோஷமடைந்து மகிழ்ந்திருப்பார்கள்." என்று இராமன் சொன்ன வசனத்தைக் கேட்டதும் வாயு புத்திரனான அநுமான் தான் கொண்டுவந்த சிவலிங்கத்தை இராமலிங்கத்துக்கு வடபுறத்தில் இராமர்கட்டளையின்படி அநுமத்லிங்கத்தை ஸ்தாபனம் பண்ணினார். இராமநாத லிங்கமானது அநுமார் வாலினாலே சுற்றப்பட்டது. அந்த லிங்கத்தில் இப்பொழுதுகூடப் பிரத்தியட்சமாய்த் தெரிகிறது.

இந்த அத்தியாயத்தைப் படிப்போரும் கேட்போரும் சமஸ்த பாபங்களையுந் தொலைத்துவிட்டுச் சிவலோகம் போய் வாழ்ந்திருப்பார்கள்.

## நாற்பத்தாறுவது அத்தியாயம்

முற்றிற்று.



# நாற்பத்தேழாவது

# ஸ்ரீராமருக்குப் பிரம்மஹத்தி வந்த காரணங் கூறின

## அத்தியாயம்.

---

ஐயா சூதமஹா முனிவரே ! மஹாத்மாவான ராமருக்கு ராட்சதனுகிய ராவணனைக் கொன்றதனால் பிரமஹத்தி யெப்படி வந்தது? உலகத்தில் பிராம்மணனைக் கொன்றதனாலல்லவோ பிரமஹத்தி வருகிறது. இராவணனே பிராம்மணனல்லவே! அவனைக் கொன்றதனால் ராமசந்திரனுக்குப் பிரம்மஹத்தி யெப்படி வரக்கூடும்? இந்த விஷயத்தைச் சிரத்தையுடைய எங்களுக்குத் தயவுசெய்து சொல்லவேண்டும் என்று நைமிசாரணிய வாசிகளான மஹாரிஷிகள் கேட்கச், சூதமஹாமுனிவர் உத்தரஞ்சொல்லத் தொடங்கினர்,

கேளுங்கள் ரிஷீசுவரர்களே! பூர்வத்தில் பிரமதேவன் குமாரனை புலஸ்தியர் என்கிற மஹாதேஜஸை யுடைய ஒரு பிராம்மணனிருந்தார். அந்தப்புலஸ்தியருக்கு விச்ரவஸ் என்ற ஒரு குமாரனிருந்தான். அவன் வெகுகாலந் தேவர்களாலுஞ் செய்யமுடியாத தபசைச்செய்து வந்தான். அப்படித் தவசுசெய்து வருங்காலையில் சொர்ணத்தால் செய்யப்பட்ட தோள்வளையும், காசுமாலையும் தரித்தவனும், நீருண்டமேகம்போலக் கறுத்தவர்ணமுடையவனுமான சுமாலி என்கிற ஒரு இராட்சதன், கையில் தாமரை மலரைத் தாங்காத இலட்சுமிபோலிருந்த தன் பெண்ணையழைத்துக் கொண்டு பாதாளத்தினின்றும் பூலோகத்தில் வந்து திரிந்து கொண்டிருக்கையில், புஷ்பகமென்னும் விமானத்தில் வீற்றிருந்த விச்ரவஸின் குமாரனை குபேரனைக்கண்டு, " இந்தக் குபேரனைப் போன்ற பிள்ளையொருவன் நமக்கிருந்தால் நாம் இராட்சதர்களெல்லாரோடும் நிர்ப்பயமாக வாழ்ந்து வரலாம்." என்று யோசித்துக் கிட்டவிருந்த தன் பெண்ணைப் பார்த்து, " அம்மா கைகசீ, உனக்கு யௌவனம் வந்துவிட்ட படியால் விவாககாலம் சமீபித்து விட்டது. உன்னை யாராவது ஒருவனுக்கு விவாகஞ்செய்து கொடுத்தே தீரவேண்டும். பெண்களைத் தகுந்த வயது

வந்தகாலத்தில் விவாகம் செய்துகொடாமல்போனால் தகப்பனுக்குத் துக்கமுண்டாகிறது. தவிர, நீ சிரேஷ்டமான சர்வகுணங்களும் நிறைந்தவளாயிருக்கிறாய். வரித்தால் வாயிழந்து போய்விடுவோமே என்கிற பயத்தினால் ஒருவரும் உன்னைப் பாரியையாக வரிக்கத் துணியவில்லை. மானமுள்ளவன் பெண்ணைப் பெற்றால் பெரியதுன்பமே. அம்மா, எந்த வரனுன்னை வரிக்கப்போகிறானோ எனக்குத் தெரியவில்லை. ஆகையால் நீ பிரமகுலத்தில் பிறந்த விச்ரவஸ் என்கிற மஹாரிஷியைப்பர்த்தாவாக நீயே வரித்துக்கொள். அப்படிச்செய்தால் குபேரனுக்குச் சமானமான புத்திரர்களுனக்குப் பிறப்பார்களென்பதில் சந்தேகமேகிடையாது" என்று சொன்னான். இவ்விதமாகத் தகப்பன் சொன்னதைக் கேட்ட கைகசி, தகப்பனாரிடத்தில் வைத்திருந்த மரியாதையினால் அப்படியே யாகட்டுமென்று சொல்லி விச்ரவஸ் என்பவருடைய பர்ணசாலைக்குட் புகுந்து அவருக்கெதிரில் வெட்கத்தோடு கூட நின்று கொண்டிருந்தாள். அந்தச் சமயத்தில் புலஸ்தியகுமாரனான விச்ரவஸ் என்பவர் சாயங்கால அக்கினி ஹோத்திரத்தைச் செய்துகொண்டு அக்கினிபோல ஜ்வலித்திருந்தார். தகப்பன் பேச்சைக் கேட்டுச் சந்தியாகால மென்றறியாமல் வந்து, வெட்கத்தால் தலை குனிந்து, பெருவிரல் நுனியால் பூமியைக்கீறிக்கொண்டு நின்ற, சந்திரன் போன்ற முகத்தையும், சிறந்த விடையையுமுடைய கைகசியைக்கண்டு விச்ரவஸ் புன்சிரிப்புக்கொண்டு, "அழகிய பெண்ணே! உன் தகப்பன்யார்? நீயென்னத்துக்காக இங்கேவந்தாய்? எங்கிருந்து வந்தாய்? உன் கருத்தென்ன? எல்லாவற்றையும் எனக்கு உண்மையாய்ச் சொல்லிவிடு" என்று கேட்டார். அப்பொழுது அந்தப் பெண்ணும் வணக்கத்தோடு கைகூப்பிக்கொண்டு "சுவாமீ! என்னுடைய அபிப்பிராயத்தை உமது தபோமகிமையினால் அறிந்து கொள்ளத் தேவரீர் வல்லவர். ஆனாலும், புலஸ்தீபம் போல விளங்குகின்ற பிராம்மணோத்தமா! என் வரலாற்றைச் சொல்லுகிறேன் கேளும். என் பேர் கைகசி. என் தந்தைபேர் சுமாலி. என் தகப்பனுடைய கட்டளைப்படி நான் தங்களிடம் வந்திருக்கிறேன். மற்றவைகளையெல்லாம் தங்களுடைய ஞானதிருஷ்டியால் அறிந்து கொள்வீர்களென்பதில் ஐயமே கிடையாது." என்று சொல்லி முடித்தாள். அப்பொழுது க்ஷணகாலந் தியானம் பண்ணி யந்தப் பெண்ணைப் பார்த்து அழகிய புருவமுடையவளே! உன் மனக்கருத்து எனக்குத் தெரிந்துவிட்டது. நீ பிள்ளையை அபேக்ஷித்து என்னிடம் வந்திருக்கிறாய். ஆனால் நீ யிந்தக்குரூரமான சாயங்காலத்தில் புத்திரரை அபேக்ஷித்து

ஈன்னிடத்தில் வந்தபடியால் உனக்குப் பிறக்கிற பிள்ளைகளெல்லாம் பயங்கரமான சரீரமுடையவர்களாயும், உன்னுடைய முன்னோர்களுக்குப் பிரியமாயும், கொடிய செய்கைகளைச் செய்கிறவர்களுமான இராட்சதர்களாயிருப்பார்கள்.'' என்று சொன்னதைக் கேட்ட கைகசி அவர் காலில்விழுந்து கைகூப்பிக்கொண்டு “ சுவாமீ தங்களாலெனக்குப் பிறக்கும் புத்திரர்களெல்லாரும் அவ்விதமாக இருப்பது தகாதே'' என்று சொல்ல, அந்த ரிஷியானவர் “ பெண்ணே ! உனக்குப் பிறக்கிற கடைசி புத்திரன்மட்டும் என் வம்சத்துக்குத் தகுந்தவனாகவும், தர்மம், சாஸ்திரமிவைகளை யறிந்தவனாகவும், சாந்தனாகவும், ராட்சதகிருத்திய மில்லாதவனாகவு மிருப்பான்'' என்று பதில் சொல்லி முடித்தார். கொஞ்சகாலஞ் சென்றபிறகு கைகசிக்குப் பத்து தலைகளும், இருபது கைகளும், செவந்த உதடும், கறுத்த முகமும், செவந்த மீசையும், செம்பட்ட மயிரும், பெரிய பல்லும், பிரமாண்ட சரீரமும்உடைய உலகங்களுக்கெல்லாம் பயத்தை உண்டாக்குகிற துஷ்டபுத்தியுள்ள இராவணனென்கிற பிள்ளை பிறந்தான். அவனுக்குப்பின் கும்பகர்ணனும், அவனுக்குப் பின் மஹா துஷ்டையான சூர்ப்பநகை என்கிற இராட்சதியும், அவளுக்குப்பின் புத்திசாலியாயும், தார்மிகனாயும், வேதசாஸ்திர மறிந்தவனுமாயிருந்த விபீஷணன் என்கிற பிள்ளையும் பிறந்தான். கேளுங்கள் ரிஷீசுவரர்களே ! இந்த மாதிரியாக இராவணன் முதலானவர்களெல்லாரும் விச்ரவஸ் என்கிற பிராமணனுடைய பிள்ளைகள். ஆகையால் இராவணனையும் கும்பகர்ணனையும் ஸம்ஹாரம் செய்ததனால் இராமருக்குப் பிரம்மஹத்தி தோஷம் சம்பவித்தது. இந்தப் பிரம்மஹத்தி நிவர்த்திக்காகத்தான் இராமர் இராமநாதலிங்கத்தை வேதவிதிப்படி ஸ்தாபித்தார். முனிவர்களே லோகப்பிரியரான ஸ்ரீராமமூர்த்திக்குப் பிரம்மஹத்தி வந்த வரலாற்றை ஹேதுவோடு சொன்னதுமல்லாமல், அந்தப் பிரம்மஹத்தி நிவர்த்திக்காக இராமநாத லிங்கத்தைப் பிரதிஷ்டை பண்ணினாரென்பதையும் எடுத்துரைத்து விட்டேன்.

இந்த மாதிரி லிங்கப் பிரதிஷ்டைபண்ணிக் கிருதார்த்தரான இராமசந்திர பரமாத்மாவுக்கு எங்கே பிரம்மஹத்தி நிவர்த்தியாயிற்றோ அங்கே பிரமஹத்தியா விமோசன மென்கிற ஒரு தீர்த்த முண்டாயிற்று. அதில் ஸ்நானம் பண்ணினால் பிரம்மஹத்தி நீங்கி மஹா புண்ணியமுண்டாகிறது. அங்கே இராவணன் இப்பொழுதுங்கூடச் சாயாரூபமாக இருக்கிறான். அந்தத் தீர்த்தத்துக்கெதிரில் பாதாள லோகத்துக்குப்போகிற பெரிய பிலமிருக்கிறது. இந்தப் பிலத்தில்

தசக்கிரீவனைக் கொன்றதனாலுண்டான கறுப்பான பிரம்மஹத்தி யைத் தள்ளிவிட்டு, அதின்பேரில் ஒரு பெரிய மண்டபத்தைக்கட்டி அதின்மேல் பைரவரை ஸ்தாபித்தார். அந்தப் பைரவருடைய பயத்தினால் பிரம்மஹத்தியானது கைகால்களை யடக்கிக்கொண்டு வெளி யில் வரச் சக்தியில்லாமல் அங்கேயே யிருக்கிறது.

இந்த ராமநாதருக்குத் தெட்சணபாகத்தில் பரமசிவனுடைய பாதிசரீரமாகிய பார்வதியும், இருபக்கங்களில் சூரிய சந்திரர்களும், எதிரில் அக்கினிபகவானும், கிழக்கு திக்கில் இந்திரனும், ஆக்னேய திக்கில் அக்கினியும், தென் திசையில் எமனும், நிருதி திக்கில் நிருதி யும், மேற்றிசையில் வருணனும், வாயு திக்கில் வாயுவும், வட திசை யில் குபேரனும், ஈசான திக்கில் ஈசானனும், மஹாதேவனுடைய குமாரர்களாகிய விநாயகர், சுப்பிரமணியர் இரண்டு பேர்களும், வீர பத்திரர் முதலான பிரமதகண நாயகர்களும், இராமநாதர் ஆலயத்தில் தங்களுக்குரிய இடங்களிலிருந்து கொண்டிருக்கிறார்கள். முனிவர்க ளும், பன்னகர்களும், சித்தர்களும், கந்தர்வர்களும், அப்ஸரஸ்களு ம், பக்தியோடு சேவிப்பதற்காக சந்தோஷத்தோடு இராமநாதர் சந் நிதியிலிருந்து கொண்டிருக்கிறார்கள். ஸ்ரீராமமூர்த்தியானவர் இராம நாதரைப் பூஜை செய்வதற்காக அநேக சுரோத்திரிய பிராமணர்களை இராமேசுவரத்திலேற்படுத்தி, அவர்களுக்கு அநேக கிராமங்களையும் கொடுத்து, இராமநாதருடைய நைவேத்தியத்துக்காக அநேக கிராமங் களையும், வெகு தனத்தையும் தேவஸ்தானத்துக்குக் கொடுத்து, இராமநாதருக்கு முத்து மாலை, கடகம், கேயூரம், மார்ப்பதக்கம்,முத லான ஆபரணங்களையும்,அநேகபட்டு வஸ்திரங்களையும் கொடுத்தார். இந்த இராமேசுவரத்தில் கங்கை, யமுனை, சரயு,ஸரஸ்வதியென்னும் நதிகள் தங்கள் தங்கள் பாப நிவர்த்திக்காக இராமநாதரைச் சேவித் துக்கொண்டு இருக்கின்றன.

கேளுங்கள் முனீசுவரர்களே! இந்த அத்தியாயத்தைப் படிப்ப வரும் கேட்பவரும் சமஸ்த பாபங்களினின்றும் விடுபட்டு விஷ்ணு ஸாயுஜ்யத்தை,யடை-வார்கள்.

## நாற்பத்தேழாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

நாற்பத்தெட்டாவது

# சங்கராஜன் பிரமஹத்தி ஸ்திரீஹத்திதோஷம் நீங்கின

அத்தியாயம்.

---

ஏ! ரிஷீசுவரர்களே! பாபத்தை நீக்கும்படியான இராமநாதரைப் பற்றிய ஒரு புண்ணிய கதையைச் சொல்லுகிறேன் கேளுங்கள். பூர்வ காலத்தில் சத்துரு பயங்கரனான சங்கரன் என்கிற பாண்டிய தேசத்தரச னொருவனிருந்தான். அவன் பிராம்மணரிடத்தில் விசுவாசமுடையவனும், சத்திய சந்தனும், அடிக்கடி யாகம் பண்ணுகிறவனும், தார்மிகனும்; வேத வேதங்களின் தத்துவங்களை யறிந்தவனும், புராணம், ஸ்மிருதி, இவைகளில் பாரங்கதனும், சிவன் விஷ்ணு இன்னம் மற்றுமுள்ள தேவதைகளைப் பூஜை பண்ணுகிறவனும், வைதீகாசாரத்தை யனுஷ்டிக்கிறவனும், மஹாத்மாக்களான பிராம்மணர்களுக்கு நித்தமும் மஹா தானம் பண்ணுகிறவனுமிருந்த இந்த அரசன் நாலு வருணங்களையும், ஆசிரமங்களையும் தருமமாகப் பரிபாலனஞ் செய்துகொண்டு வந்தான். இவனொரு சமயத்தில் காலில் பாதுகையணிந்து, சிவந்த தலைப்பாகை தரித்து, மஞ்சள் வஸ்திரத்தை யிடுப்பில் உடுத்துக், கையுறை பூண்டு, வில், அம்பு, கத்தி முதலான ஆயுதங்கள் தரித்து, வெள்ளைக் குதிரை மேலேறித், தன்னைப்போல வேஷந்தரித்த காலாள்களோடும், வேட்டைக்காரர்களோடும், சிங்கம், புலி, முதலிய மாம்சபட்சணிகளான மிருகங்கள் நிறைந்ததாயும், யானை, எருமை முதலான துஷ்டப் பிராணிகளால் பயங்கரமாயும், ஜில்லிகா என்கிற வண்டினுடைய பயங்கரமான சப்தத்தோடு கூடினதாயும், பாம்புகள் நிறைந்ததாயும், எரிகிற காட்டுத்தீயோடு கூடினதாயுமிருக்கிற காட்டில் புகுந்து, காட்டாறுகளைத் தாண்டி, மலைக்குகைகளிலே மிருகங்களைத்தேடி, “விடாதே விடாதே; இதோ வேகமாயோடுகிறது” என்று தன்னுடைய சைனியங்கள் சொல்லத், தான் கிளம்பி ஓடுகிற மானைக்கொன்றும், அடர்ந்த காட்டுக்குள் புகுந்து சிங்கம், வராகம், மகிஷம், யானை, சரபம் முதலான

காட்டு மிருகங்களைக் கொன்றும், வேட்டையாடி வந்தான். இப்படி வருகையில், புலித்தோலணிந்து அசையாமல் ஒரு குகையில் மத்தியிலுட்கார்ந்திருந்த ஒரு ரிஷியைப் புலியென்று நினைத்துக் கனுங் குறுகின பாணத்தால் அடித்து சம்ஹாரம்பண்ணி, அவர்கிட்டே உட்கார்ந்திருந்த அவருடைய பத்தினியையும் அடித்துக் கீழே சாய்த்துவிட்டான். அப்பொழுது அவர்களுடைய புத்திரனானவன் தன் தாய் தந்தையர் இறந்ததைக் கண்டு துக்கம் மேலிட்டு, "ஏ அப்பா! ஏ அம்மா! என்னை விட்டு நீங்கள் எங்கே போய்விட்டீர்கள்? நான் எங்கே போவேன்? யாரைச் சரணமடைவேன்? அப்பா! எனக்கார் வேதாத்தியயனஞ்செய்து வைப்பார்கள்? அம்மா! எனக்கார் ஊறு காயோடே அன்னம் போடுவார்கள்? அப்பா! நீர் இறந்த பிறகு எனக்கார் ஆசாரங்களைச் சொல்லிக் கொடுப்பார்கள்? அம்மா! நான் கோபித்துக்கொண்டால் என்னை யார் சீராட்டுவார்கள்? எனக்குப் பிராணனும் குருவாயுமிருந்த பிரபராதிகளான நீங்கள் என்ன பாபஞ்செய்து அம்புபட்டு மாண்டீர்கள்" என்று வாய்விட்டுக்கதறினான். அது கேட்டுச் சங்கரராஜனும் அந்தக் குகையை நோக்கியோடிவந்தான். அப்படியே அங்கிருந்த ரிஷிகளும் அந்த ஆச்சிரமத்துக்கோடிவந்து அம்பால் அடிபட்டிறந்த முனிவனையும், அவருடைய பத்னினியையும், கையில் வில்லையேந்தின அரசனையும், வாய் விட்டலறிக்கொண்டிருந்த ரிஷி புத்திரனையும் கண்டு, மிகவும் வருத்தங்கொண்டு, குழந்தையைப் பார்த்து "அப்பா! அழாதே" என்றுசொல்லிச் சமாதானப்படுத்த ஆரம்பித்தார்கள்:—"அப்பா! எமதருமராஜாவுக்கு பணக்காரனும் ஏழையும் சரியே; படித்தவனும் மூடனும் சரியே; வலுத்தவனும் இளைத்தவனும் சரியே? சமஸ்த பிராணிகளும் காட்டில் வசித்தாலுஞ் சரி, நாட்டில் வசித்தாலும்சரி, நகரத்தில் வசித்தாலும் சரி, கிராமத்தில் வசித்தாலும் சரி, பருவதத்தில் வசித்தாலும் சரி, மற்றுமுள்ள இடத்தில் வசித்தாலும் சரி, எமனிடம போய்த்தான் தீரவேண்டும். கர்ப்பத்திலிருந்தாலும் சரியே, பிறந்தாலும் சரியே, சிறுவனாயிருந்தாலும் சரியே, கிழவனாயிருந்தாலும் சரியே, எல்லாரும் எமபட்டணம் போய்த்தான் தீரவேண்டும். காலம் வந்துவிட்டால் பிரமசாரியும், கிருகஸ்தனும், வானப்பிரஸ்தனும், சந்நியாசியும் தேகத்தைவிட்டே தீரவேண்டும். குழந்தாய்! கேளு, தேவர்களும், முனிவர்களும், யட்சர்களும், கந்தர்வர்களும், உரகர்களும், இராட்சதர்களும், பிரம விஷ்ணு ருத்திரன் முதலானவர்களும், நாசத்தை யடைந்தே தீரவேண்டும்.

உபநிஷத்தில் சொல்லப்பட்ட சச்சிதானந்த சொரூபியான பிரம்ம மொன்றுக்குத்தான் இறப்புப் பிறப்பு விருத்தி என்கிற விகாரங்கள் கிடையாது. மலபாண்டமாயும், நவத்துவாரமுடையதாயும், இரத்தம், சீழ், ஊண், தண்ணீர் நிறைந்ததாயும், புழுக்கூட்டம் நிறைந்ததாயும், காமக்குரோதமதமாற்சரியம், பயம், துரோகமுதலியவைகள் குடிகொண்டதாயும், பரதாரம், பரக்ஷேத்திரம், பரதிரவிய மிவைகளில் ஆசைகொண்டதாயும், இம்சை, அசூயை, அசுசி யிவைகளால் பிராப்தமாயும், மூத்திரக் களஞ்சியமாயும், நீர்க்குமிழிக்கு ஒப்பாயுமிருக்கிற இந்தச் சரீரத்தை உயர்ந்ததென்று நினைக்கிறவன் பரமமூடன். துர்ப்புத்தியுடையவன், பல ஓட்டைபோடு கூடின கடத்துக்குச் சமானமான இந்த அசுசியான தேகத்தில் பிராணனென்கிற வாயுவானது வெகுகாலந் தங்கியிராது. ஆகையால் குழந்தாய்! தாய் தந்தையர் இறந்துபோனதைப் பற்றி நீ துக்கப்படாதே. அவர்களிருவரும் தங்களுடைய கர்மானுசாரத்தால் தேகத்தைவிட்டுப் போய் விட்டார்கள். நீயும் உன் கரும வசத்தால் இந்தப் பூமியில் தங்கியிருக்கிறாய். உன் பிராரப்த கருமக்ஷய மெப்பொழுதுண்டாகுமோ அப்பொழுது நீயும் மரிக்கப்போகிறாய். இறந்து போனவர்களைக் குறித்து நீ அழுவதானது செத்துப்போனபிணத்துக்குச் சாகப்போகிற பிணமானது அழுவதுக்குச் சமானமாயிருக்கிறது. எந்தக் காலத்தில் உன் தாய் தந்தையர்கள் ஜனித்தார்களோ அந்தக் காலத்தில் நீ ஜனிக்கவில்லை. ஆகையால் நீங்கள் போகும் காலமும் வேறுபட்டுத் தானிருக்கும். அவர்களோடு போகுங்காலமும் உனக்கும் ஏற்பட்டிருந்தால் அவர்கள் போயிருக்கு மிடத்துக்கு நீயும் போயிருப்பாய். பூதலத்தில் பந்துக்கள் விடுகிற கண்ணீரைச் செத்துப் பிரேதமா யிருக்கிறவர்கள் பரலோகத்தில் பானம்பண்ண நேரிடும். ஆகையால் நீ துக்கத்தை விட்டுத் தைரியத்தைக் கைக்கொண்டு அவ்விருவருக்கும் வேதத்தில் சொல்லப்பட்ட பிரேத காரியங்களைச் செய். உன் தாய் தந்தையர்கள் அம்படிபட்டு இறந்துபோன மோக்ஷ நிவர்த்திக்காக அவர்களுடைய அஸ்திகளை யெடுத்துக்கொண்டு இராமேசுவரம் போய் அங்கே புதைத்து ஸபிண்டீகரணாதி சிராத்தத்தையும் செய். அப்படிச் செய்தால்தான் அவரவர்களுக்குத் தோஷநிவர்த்தியாம். வேறுவிதத்தால் கிடையாது.'' என்று சமாதானம் செய்ததன்மேல்

ஜாங்கலன் என்கிற சாகல்ய ரிஷிகுமாரன் தன் தாய் தந்தையர்களுக்
குப் பிதுர்காரியத்தைச் செய்து முடித்தான். மறுநாள் அஸ்திகளை
யெடுத்துக்கொண்டு ஆலாசியம் போய் அங்கிருந்து உடனே இராமேசு
வரம் போய் முனிவர்சொன்ன மாதிரியாகத் தாய்தந்தையர்களுடைய
அஸ்திகளை அங்கே புதைத்து, ஒருவருஷம் தங்கியிருந்து மாசிகமுத
லான சிராத்தங்களையும், ஆப்திகசிராத்தத்தையும் செய்து முடித்
தான். அன்றையதினம் இராத்திரியில், சொப்பனத்தில் தன் தாய்
தந்தையர்கள் சங்கு சக்கிர கதாதாரிகளாயும், தாமரைமாலை, துளசி
மாலை, மகரகுண்டலம், கௌஸ்துப மிவைகளை யணிந்தவர்களாயும்,
அரையில் பீதாம்பரந் தரித்தவர்களாகவும், கருடாரூடர்களாகவும்
வரக்கண்டு, ஆனந்தம் பொங்கித் தன் ஆச்ரமம் திரும்பிவந்து தான்
சொப்பனத்தில் கண்ட சமாசாரத்தை அங்குள்ள ரிஷிகளுக்குத்தெரிவி
த்தான். ரிஷிகளும் அதுகேட்டுச் சந்தோஷ மடைந்தார்கள். பிறகு
அந்த ரிஷிகளெல்லோரும் சங்கரராஜனைக்கண்டு, அதிககோபங்கொ
ண்டு, மஹாமூடனை பாண்டியராஜனே! முரட்டுத்தனமாய் ஸ்திரீ
ஹத்தியையும், பிரமஹத்தியையுஞ்செய்த நீ அக்கினியில் விழுந்திறக்
காமல் பதினாயிரம் பிராயச்சித்தம் பண்ணிக்கொண்டாலு முனக்குச்
சுத்தியேகிடையாது. உன்னோடு பேசினதினாலேயே பதினாயிரம் பிரம
ஹத்தி யெங்களுக்கு வந்துவிடும். பாண்டியகுலத்தைக் கெடுத்த மஹா
பாபீ, நீ யெங்கள் முன் நில்லாதே; ஓடிப்போ." என்று கடூரமாய்ப்
பேசித்துரத்தினார்கள். அதுகேட்ட சங்கரராஜனும் "ஐயா! முனிவ
ர்களே! தங்களுக்கு முன்னாலே தாங்கள் சொன்னபடியே நெருப்பில்
விழுந்து சாகத்தயாராயிருக்கிறேன். அப்படி விழுந்த பிறகாவது என
க்குப் பிரமஹத்தி நீங்கும்படி நீங்களெல்லோரும் அனுக்கிரகம் பண்
ணவேண்டும்" என்று நயந்து சொல்லிப் பின்பு மந்திரிகளைப்பார்த்து
"ஓ மந்திரிகளே! நான் யோசியாமல் நரகத்தைக் கொடுக்கும்படியான
பிரமஹத்தியையும், ஸ்திரீஹத்தியையும் பண்ணிவிட்டேன். இந்தப்
பாதகங்கள் நீங்கும்படியாக இந்த ரிஷீசுவரர்கள் சொன்னபடியே
யெரிகிற அக்கினியில் என் சரீரத்தைப் போட்டு பிராணனைவிடப்
போகிறேன், ஆகையால் சீக்கிரத்தில் காஷ்டங் கொண்டுவந்து அக்
கினி மூட்டுங்கள். என்னுடைய புத்திரனாகிய சுருசி என்பவனு
க்குப் பட்டாபிஷேகஞ் செய்துவையுங்கள். நான் போகிறேனே
யென்று மனவருத்தப் படாதேயுங்கள். விதியை வெல்ல முடி
யுமா?" என்று சொன்னவுடனே மந்திரிக ளெல்லாருங்

கேட்டு மனம்நொந்து "34 சத்துருக்களிடத்திலும் பிரியமாயிருக்கிற பாண்டியநாட்டரசனே! இதுவரையில் எங்களைப்பரிபாலனம்பண்ணி வந்தீர். அப்பேர்ப்பட்ட உம்மைவிட்டு அமராபதிக்குச் சமானமான பட்டணத்துக்கு நாங்கள் தனிமையாகப் போகமாட்டோம். ஆகை யால் நாங்களும் உமக்காக வளர்த்ததீயில் விழுந்துபிராணனைவிட்டு விடு கிறோம்" என்று அழுது புலம்பினதைக்கேட்ட சங்கரராஜனும், "மந் திரிகளே! மஹாபாதகம் பண்ணின என்னால் உங்களுக்கென்ன பிர யோஜனம்? ஐயோ! சிம்மாசனமேறுவதற்குஅநருகனாய்விட்டேனே. இந்த நாலுசமுத்திரத்திற்குட்பட்ட பூமியைப் பரிபாலனம் பண்ணு வதற்கு என்பிள்ளையைச்சிம்மாசனமேற்றிவையுங்கள். மந்திரிகளே! தாமதம்பண்ணுவதில் பிரயோசனமில்லை. சீக்கிரம் அக்கினியை மூட் டுங்கள்" என்று சமாதானப்படுத்தினதின்பேரில், மந்திரிகளரசன் சொற்படி காஷ்டங்களைக் கொண்டுவந்து அக்கினி மூட்டினார்கள். உடனேபாண்டியராஜன் ஸ்நானம் பண்ணி, ஆசமனஞ்செய்து பரிசுத் தனாகி, அக்கினியையும், ரிஷீசுவரர்களையும் வலம் வந்து, அவர்களை நமஸ்கரித்து, உமாபதியாகிய பரமசிவனைத் தியானித்துத் தைரியத் தைவிடாமல் அக்கினியில் குதிக்க யத்தனம்பண்ணினான். அப்பொ ழுதுரிஷிகளெல்லாருங் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுதே, ஆகாசத் தில் ஒரு அசரீரிவாக்குத்.தோன்றி, "ஏ! சங்கரராஜனே! அக்கினியில் விழாதே! பிரமஹத்தி பயம் உனக்கு வேண்டியதில்லை. இரகசியமா யும், வேத சம்மதமாயுமிருக்கிற ஒரு உபாயஞ்சொல்லுகிறேன்; ஜாக் கிரதையாய்க்கேளு. தெட்சண சமுத்திரக்கரையில் கந்தமாதன பர்வ தத்தில் பாபவிநாசனமாயும், புண்ணியப் பிரதமாயுமிருக்கிற இராம சேதுவில் தசரதராமனால் பிரதிஷ்டை பண்ணப்பட்ட இராமலிங்க மென்கிற ஒரு சிவலிங்கமிருக்கிறது. நீ ஒரு வருஷகாலம் பக்தி பூர்வ மாக அந்தச் சிவலிங்கத்தைத் திரிகாலங்களிலும் பிரதட்சண நமஸ்கா ரம் செய். அந்த லிங்கத்துக்குத் தினம்தோறும் இரண்டு பாரம் பசு வின் நெய், இரண்டுபாரம் பசுவின் பால், பதக்குத்தேன் இவைகளால் மஹாபிஷேகஞ்செய்வித்து, சந்தன, அகிரு,கற்பூரங்களைச் சாத்தி, நல் லெண்ணெயால் தீபமேற்றி, பாயசம் முதலான நானாவித நைவேத்தி யங்கள் செய்தால் ஸ்திரீஹத்தி, பிரமஹத்தி யிவைகளிரண்டும் அந்த க்ஷணமே நசித்துப்போய் விடுகின்றன. இராமநாதரைக்கண்ட மாத் திரத்தில் நூறுபுரூணஹத்தியும், பதினாயிரம் பிரமஹத்தியும், பதினா யிரம் சுராபான தோஷமும், பதினாயிரம் சொர்ணஸ்தேய தோஷ

மும், பதினுயிரம்குருபத்தினி கமனதோஷமும், இவர்களோடு சோகததனுலுண்டான தோஷமும் இந்தப் பஞ்சமஹா பாதகங்களுக்குச் சமானமான இதரதோஷங்களும் உடனே பஸ்மமாய்ப்போய்விடுகின்றன. இராமநாதசேவை மனிதர்களுக்குக் கிடைக்குமானுல் கங்கை, கயை, பிரயாகைமுதலான தீர்த்தங்களில் ஸ்நானம்பண்ணுவானேன்? யாகங்கள் தான் செய்வானேன்? ஆகையால் அரசனே! உடனே புறப்பட்டு இராமசேதுவுக்குப்போய், இராமநாதரைச் சேவைசெய். தாமதம் பண்ணுதே. சீக்கிரம் புறப்படு" என்றுசொல்லி முடித்தது. அது கேட்ட ரிஷிகளெல்லாரும் இராஜனைப்பார்த்து "ஐயா! இராமநாதருடைய மகிமையை யறியாமல் நாங்கள் அக்கினிப் பிரவேசத்தைப் பிராயச்சித்தமாக விதித்தோம். இப்பொழுது அசரீரிவாக்கு விதித்தபடி நீர் இராமசேதுவுக்குப்போம்" என்று அரசனைத் துரிதப்படுத்தினுர்கள். உடனே அரசனும் தன்னுடைய சதுரங்க பலத்தையும் ஊருக்கு அனுப்பிவிட்டு, ரிஷிகளை நமஸ்கரித்துக் கொஞ்ச சைனியத்தோடும், ஏராளமானபணத்தை யெடுத்துக்கொண்டும், அதிக சந்தோஷத்தோடுங்கூடக் கந்தமாதனம் போய்ச்சேர்ந்து, முக்தியைக்கொடுக்கும்படியான இராமசேதுவில் ஒருவருஷந்தங்கி, ஏகவாரம் போஜனஞ் செய்து, கோபத்தையும் இந்திரியங்களையுமடக்கி, மூன்று காலமும் பக்தியோடுகூட இராமநாதரைச் சேவித்து, அசரீரிவாக்குச் சொன்னபடி தினந்தோறும், இராமநாதருக்கு மஹாபிஷேகஞ்செய்வித்து, தனுஷ்கோடியில் நித்தியமும் ஸ்நானஞ்செய்து, பிரதிதினமும் பிராமணர்களுக்கு அன்னம்போட்டு, இராமநாதருக்குப் பத்துப்பாரம் திரவியங் கொடுத்து ஆராதனைசெய்து வந்தான். இப்படி ஒருவருஷமான பின் இராஜனுக்குப் பாபம் நீங்கிப் பரிசுத்தமுண்டானதின் பேரில், அந்த அரசன் அதிக சந்தோஷப்பட்டு கிருபாநிதியான இராமநாதரை, அந்த அரசன் ஸ்தோத்திரம் பண்ண ஆரம்பித்தான்:—

"உமாபதியாயும், ஈசானராயும், ருத்திரராயுமிருக்கிற ராமநாதரே யுமக்கு நமஸ்காரம்! திரிபுரத்தை யெரித்தவராயும், காளகூடத்தைப் பானம்பண்ணினவராயுமிருக்கிற மஹாதேவா! என்பேரில் கிருபைகூர்ந்து என் பிரமஹத்தியை நீக்கி என்னைக்காத்தருளவேண்டும். ஏ! கங்காதரா! விரூபாட்சா! திரிநேத்திரா! கருணைக்கடலே! இராமநாதா! எனக்குவந்திருக்கிற ஸ்திரீஹத்தி தோஷத்தை நீக்கிக் காத்தருளும். காமாரீ! பக்தர்கள் கேட்டதை யெல்லாங்கொடுக்கும் இராமநாதா! என்னுடைய பாபத்தை யெல்லாம் நீக்கி யென்பேரில் தயவுவை

த்துக்காப்பாற்றும். தூர்ஜடீ! மார்க்கண்டேயருக்கு அபயங்கொடுத்து மிருத்தியுவை ஜயித்த பரமசிவா! என்னிடத்தில் கடாக்ஷம்வைத்து என்னைப் பரிசுத்தனுக்கும். ருத்திராட்சமாலை யணிந்தவராயும், சந்திரனைச் சிரசில் தரித்தவராயும், பார்வதிக்குப் பாதிசரீரத்தைக்கொடுத்தவராயுமிருக்கிற சங்கரா! உமக்கு வந்தனம். என்னை யெப்பொழுதும் பாபந்தீண்டாதவனாகச்செய்யும். வேதோக்தமான ஆசாரானுஷ்டானத்துக் கருகனாகச்செய்யும். சூரியனுடைய பல்லையுடைத்தவராயும், ஸரஸ்வதியினுடைய மூக்கை அறுத்தவராயுமிருக்கிற இராமேசுவரா! உமக்குநமஸ்காரம். சச்சிதாநந்தசொரூபராயும், ஆதியந்த மற்றவராயும, விருஷபதுவஜராயுமிருக்கிற உமக்கு அடிக்கடி வந்தனம்செய்கிறேன். என்னுடைய பாபங்களெல்லாம் நசித்துப்போகட்டும்" என்று பக்தியோடுகூட இராமநாத தேவனை ஸ்தோத்திரம் பண்ணினபொழுது, அரசனுடைய முகத்திலிருந்து கறுத்த வஸ்திர முடுத்ததாயும், மிகச சிவந்ததாயுமிருந்த பிரமஹத்தியானது வெளிப்பட்டது. அப்படி வந்த பிரமஹத்தியைப் பைரவரானவர் பரமசிவனுடைய உத்தரவினுல் தன் சூலத்தினல் அடித்துக்கொன்ருர். உடனே இராமநாதரானவர் ஸ்தோத்திரம் பண்ணின சங்கர ராஜாவைப் பார்த்து, "பாண்டியராஜனே! நீ செய்த ஸ்தோத்திரத்தினல் நானுனக்குப் பிரஸன்னமாய்விட்டேன். உனக்கு வந்திருந்த ஸ்திரீஹத்தி, பிரமஹத்தியாகிய இரண்டு தோஷங்களும் நீங்கிப் பரிசுத்தனய்விட்டாய். நீ முன்போல இராஜ்ய பரிபாலனம் செய்யலாம். எவர்கள இந்த க்ஷேத்திரத்தில் என்னைத் துதிக்கிருர்களோ அவர்கள் செய்த பதினயிரம் பிரமஹத்தி தோஷங்களையும் இதர தோஷங்களையும் நான் நாசம் பண்ணிவிடுவதில் ஆக்ஷேபனையில்லை. அரசனே கேள, என்னை யாராதிக்கிறவர்களுக்கு மறுபிறப்பே கிடையாது. என்னுடைய சாயுஜ்யத்தையே அடைவார்கள. நீ செய்த இந்த ஸ்தோத்திரங்களால் யார் என்னைத் துதிக்கிருர்களோ அவர்களுடைய மஹாபாதகக் கூட்டங்களை நான் நீக்கிவிடுவேன். மஹாராஜாவே! நீ செய்த பக்தியாலும் ஸ்தோஸ்திரங்களாலும் நான் திருப்தி யடைந்திருக்கிறபடியால் உனக்கு வேண்டிய வரங்களைக் கேள்" என்று சொன்ன இராமநாதரைப் பார்த்துச் சங்கரராஜனனவன் "மஹாபிரபோ! தங்களைக் கண்டமாத்திரத்திலேயே நான் கிருதார்த்தனய்விட்டேன். மிருகண்டு மஹாரிஷியின் பயத்தையும், துக்கத்தையும் நீக்கின உமது பாதாரவிந்தங்களை நான் கண்டதே பெரியபாக்கியம். எனக்கு வேறேவரங்கள்

வேண்டுவதில்லை. ஆனாலும் உம்முடைய பாதாரவிந்தங்களில் சலன மற்ற பக்தி கிடைக்கவேண்டும். மறுபடியும் நான் தாயார் வயிற்றில் பிறக்கப்படாது. நான்செய்த ஸ்தோத்திரத்தைப்படிப்பவர்களுக்குச் சகல பாபங்களும் நீங்கி, உம்மைச் சேவைசெய்த பலன் கிடைக்க வேண்டும். இந்த மூன்று வரங்களை யருளிக்காக்கவேண்டும்" என்று சொன்னான். அப்படியே ஆகட்டுமென்று அநுக்கிரகம்பண்ணி இராம நாதரானவர் லிங்கத்தில் அந்தர்த்தான மடைந்துவிட்டார். இராஜன் இராமநாதரிடத்தில் அநுக்கிரகம் பெற்றுக் கிருதார்த்தனுய்விட்டோ மென்று எண்ணிக்கொண்டு தன் சைனியத்தோடு கூடச் சந்தோஷத் தோடு புறப்பட்டுக், காட்டிலிருந்த மஹாரிஷிகளுக்குச் சமாசார மெல்லாஞ் சொல்லித் தன் பட்டணம் போய்ச்சேர்ந்து, அந்த ரிஷி களால் மறுபடியும் பட்டாபிஷேகம் பண்ணப்பட்டுத் தன் புத்திர களத்திராதிகளோடும் மந்திரிகளோடும் சத்துரு பயமற்று வெகுகா லம் இராஜ்யபரிபாலனம் பண்ணிக்கொண்டுவந்தான். பிறகு அந்திய காலத்தில் இராமநாதரைத் தியானித்துக்கொண்டு சரீரத்தைவிட்டு நீங்கி இராமநாதருடைய சாயுஜ்யத்தை யடைந்தான்.

கேளுங்கள் முனீசுவரர்களே! இப்படியாக இராமநாதருடைய வைபவத்தையும், சங்கரராஜனுடைய புண்ணிய சரித்திரத்தையும் சொல்லிவிட்டேன். இந்த அத்தியாயத்தைச் சிரத்தையோடு படிப்ப வரும், கேட்பவரும், சகல பாபங்களினின்றும் முக்தர்களாகி இராம நாதருடைய சாயுஜ்யத்தை யடைவார்.

## நாற்பத்தெட்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

நாற்பத்தொன்பதாவது

# இராமநாதர் ஸ்தோத்திரங்கூறின

## அத்தியாயம்.

---

கேளுங்கள் ரிஷீசுவரர்களே; மஹாபுண்ணியமான இராமநாதருடைய ஸ்தோத்திராத்தியாயத்தைச் சொல்லுகிறேன். ஸ்ரீராமன் தான் பிரதிஷ்டைபண்ணின இராமநாத லிங்கத்தை ஸ்தோத்திரம் பண்ணினார். அப்படியே லெட்சுமணன், சீதை, சுக்கிரீவன் முதலான வானரங்கள், பிரமா முதலான தேவர்கள், அகஸ்தியர் முதலான ரிஷிகள், இவர்களெல்லோருந் தனித்தனியே இராமநாதரைப் பக்தியுடன் ஸ்தோத்திரம் பண்ணினதைச் சொல்லுகிறேன். ஆதரவுடன் கேளுங்கள்.

இராமர் செய்த ஸ்தோத்திரம்:—"மஹாத்மாவாயும், மஹாமாயியாயும், சூலியாயும், தன்னுடைய பாதாம்புயங்களில் பக்திசெய்கிறவர்களுடைய துக்கங்களை நீக்குகிறவராயும், சர்வத்தையும் அழிக்கிறவராயும் இருக்கிற உமக்கு நமஸ்காரம். தேவாதிதேவராயும், சாட்சியாயும், வேதாந்தவேத்தியராயும், யோகிகளுக்குத்தத்துவத்தை யுபதேசிக்கின்றவராயும், சதாநந்த பரிபூரணராயும், உலகத்துக்கெல்லாம் நாதராயும், சம்புவாயுமிருக்கிற இராமநாதருக்கு நமஸ்காரம். பக்தர்களுடைய பயத்தைப் போக்குவதான பாதாம்புயத் தூளிகளோடு கூடினவராயும், எல்லாவற்றுக்கும் நாயகராயும், சாக்ஷாத்பரமாத்வாயுமிருக்கிறஉமக்குநமஸ்காரம். ஆச்சரியகரமான வீரியத்தோடு கூடினவராயும், மஹாபாதக நாசனராயும், காலகாலராயும், காலனாயும், காலாதீதராயுமிருக்கிற உமக்குவந்தனம். அவித்தையை நாசம் பண்ணுகிறவராயும், பாபத்தைச் சங்கரிக்கிறவராயும், சம்சார தாபத்தை யடைந்தவர்களுடைய துக்கத்தைப்போக்குகிறவராயுமிருக்கிற உமக்குவந்தனம். என்னுடைய பிரமஹத்தியை நாசம்பண்ணினவராயும், விஷபானம் பண்ணினவராயுமிருக்கிற உமக்கு வந்தனம். பார்வதீநாதா! கைலாசவாசா! அவ்யயா! உமக்கு வந்தனம். கங்காதரா! விருபட்சா! சகலமான ஆபத்துகளினின்றும் என்னைக் காத்தருளவேண்டும். பிநாகத்தைக் கையிலேந்தினவராயும், மன்மதனை யெரித்

தவராயுமிருக்கிற உமக்கு நான் எக்காலத்திலும், எந்தநிலைமையிலும் அடிக்கடி நமஸ்காரம் பண்ணுகிறேன்."

இலட்சுமணர்செய்த ஸ்தோத்திரம்:—"திரிபுரத்தை யெரித்தவராயும், பார்வதிக்குப் பிராணநாதராயும், கணேசர், ஸ்கந்தர் இவர்களைப் புத்திரர்களாகப் பெற்றவராயும், சூரியன், சந்திரன், அக்கினி இவர்களை நேத்திரமாகக் கொண்டவராயும், கபர்த்தியாயும், இராமநாதராயுமிருக்கிற உமக்கு வந்தனம், வந்தனம். ஸோமராயும், மார்க்கண்டேயருடையபயத்தைத் தீர்த்தவராயும், சகல பிரபஞ்ச சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரங்களுக்குக் காரணமாயும், சிவனுயுமிருக்கிற உமக்கு நமஸ்காரம். உக்கிரராயும், பீமராயும், மஹாதேவராயும், சாக்ஷியாயும் ஸர்வக்ஞராயும், வரேண்யராயும், வரமாயும், வரத்தைக் கொடுக்கிறவராயுமிருக்கிறஉமக்குநமஸ்காரம். ஸ்ரீகண்டராயும், பஞ்ச மஹாபாதகங்களைத் தொலைக்கிறவராயும், சச்சிதானந்த சொரூபராயுமிருக்கிற உமக்கு வந்தனம். ஸம்ஸார ரோகத்தை நிவர்த்தி பண்ணுகிறவரும், ஸ்தாயுக்களுக்கெல்லாம் பதியானவராயும், தஸ்காரர்களுக்கெல்லாம் பதியாயும், வனங்களுக்குப் பதியாயும், விசுவ சொரூபியாயும், விசுவ சாட்சியாயு மிருக்கிற உமக்கு நமஸ்காரம். சம்புவே! என்னுடைய கர்மவசத்தால் எந்த ஜன்மமெடுத்தாலும் அந்தந்த ஜன்மத்தில் உமது பாதார விந்தத்தில் எனக்குப் பக்தியிருக்கவேண்டும். உம்முடைய கிருபையால் என்மனது துன்மார்க்கத்தில் செல்லாமல், சன்மார்க்கத்திலேயே செல்லவேண்டும். உமக்கு நமஸ்காரம், நமஸ்காரம்."

சீதைசெய்த ஸ்தோத்திரம்—"பரமகாரணு! சங்கரா! தூர்ஜடி! பார்வதியினுடைய ஸ்தனகுங்குமத்தால் விளங்குகிறவரே! பரபுருஷரிடத்தில் என் புத்தி செல்லாமல் என்னுடைய நாயகனிடத்திலேயே என் சித்தமிருக்கும்படி அநுக்கிரகம் பண்ணவேண்டும். கங்காதரா! விருபாட்சா! நீலலோகிதா! சங்கரா! இராமநாதா! உமக்கு நமஸ்காரம்! கருணாமூர்த்தியே யென்னைக் காத்தருளவேண்டும். தேவதேவேசா! கருணைக்கடலே! சம்சாரத்தில் பயமடைந்தவர்களுக்குச் சம்சாரபயத்தை நீக்குகிறவரே! வந்தனம்; வந்தனம்; வந்தனம். நாதா! சம்பூ! ஜகத்பிரசித்தரான மார்க்கண்டேயரானவர் உம்முடையசரணாரவிந்த பக்திபண்ணின படியால் எமபயத்தை உதறி நித்தியத்துவத்தை யடைந்தார். பமேசா! உம்மை ஆச்ரயித்தால் எதுதான் கைகூடவராது? பரமானந்தா! சரணாகத பாலகா! பமேசா! எப்பொழுதுமென

க்குப் பதிவிரதாதர்மத்தைக்கொடுத்து இரட்சியும். உமக்குவந்தனம், வந்தனம்."

சுக்கிரீவன்பண்ணின ஸ்தோத்திரம்—"ஜன்மமிருத்திய ஜரைக ளாகிய பயத்தோடு கூடியதும், புத்திர தாரதன க்ஷேத்திரங்களாகிய அலைகள் மோதுகிறதும், பிரமாண்டமுழுதும் முழுகிக்கிடக்கிறதுமா கிய சம்சாரசாகரத்தில் விழுந்து கரையேற வழிதெரியாமல் அழுது கொண்டும், ஏழையாயும், விஷயங்களாகிற துஷ்டஜந்துக்களை கண்டு பயப்பட்டுக்கொண்டும், வியாதிகளாகிற மீன்களால் துன்பப்பட்டுக் கொண்டிருக்கிற என்னை இராமநாதா! நீர் காத்தருளவேண்டும். உமக்கு வந்தனம், வந்தனம்."

அநுமார் செய்த ஸ்தோத்திரம்—"தேவதேவா! ஜகந்நாதா! கிருபாநிதியே! இராமநாதா! உமக்கு வந்தனம். உம்முடைய பாதார விந்தங்களில் எனக்குச் சலனமற்ற பக்தியிருக்கவேண்டும். எவர் இல் லாமல் உலகம்கிடையாதோ, எவர் இல்லாமல் உலகத்துக்கும் பிரகாச மில்லையோ, அப்பேர்ப்பட்ட சத்தாயும், சித்தாயு மிருக்கிற இராம நாதரான உமக்கு நமஸ்காரம்."

அங்கதன் பண்ணின ஸ்தோத்திரம்—"எவருடைய பிரகாசத் தால் உலகம் விளங்குகிறதோ, எவருடைய பிரகாசமில்லாமல்உலகம் விளங்கவில்லையோ, அப்பேர்ப்பட்ட இராமநாதராயும், சம்புவாயு மிருக்கிற உமக்கு நமஸ்காரம்."

ஜாம்பவான் செய்த ஸ்தோத்திரம்—"எவருடைய ஆனந்தமா னது உண்மையாக ஸர்வானந்தமாய் விளங்குகிறதோ அந்தப் பரமா நந்த சொரூபராகிய இராமநாதருக்கு நமஸ்காரம்."

நீலன் பண்ணின ஸ்தோத்திரம்—"எந்த வஸ்துவானது தேச கால திக்குப்பேதங்களால் வேறுபடாமல், அத்துவைதமா யிருக்கிற தோ அந்த வஸ்துவான இராமநாதருக்கு நமஸ்காரம்."

நளன்செய்த ஸ்தோத்திரம்—"பிரம, விஷ்ணு, மஹேசன் முத லானவர்களெல்லோரும் எவருடைய மாயையால் தோன்றினார்களோ அந்த மாயைக் குட்படாதவரான இராமநாதராகிய உமக்கு நமஸ் காரம்."

குமுதன் செய்த ஸ்தோத்திரம்—"எவருடைய சொரூபத்தை யறியாமல் பிரதானத்தைக் காரணமென்று சொல்லுகிறார்களோ அந்தப் பிரதானத்துக்கும் காரணராயிருக்கிற இராமநாதா! உமக்கு நமஸ்காரம்."

பனசன் பண்ணின ஸ்தோத்திரம்—"எவருடைய அவித்தை யாலே ஜாக்கிர, சொற்பன, ஸுஷுப்தி முதலான அவஸ்தைகளுண் டாகின்றனவோ, எவருக்கு அந்த ஜாக்கிராதி அவஸ்தைகள் கிடை யாவோ, எவர் ஞானசொரூபியோ, அப்பேர்ப்பட்ட உமக்கு நமஸ் காரம்.

கஜன் செய்த ஸ்தோத்திரம்—"எவருடைய சொரூபத்தை யறி யாமல் ஈன தார்க்கிகர்களான வைசேஷிகர்கள் காரியங்களுக்கெல்லாம் பரமாணுவைக் காரணமாகக் கற்பித்துக்கொள்ளுகிறார்களோ அப்பே ர்ப்பட்ட பரமாணுக்களுக்கும் காரணபூதராய்ப், பரமாநந்த சொரூப ராய்ச் சர்வசாட்சியாய் விளங்காநின்ற இராமநாதா! உம்மை ஆத்ம சொரூபியாக நான் எப்பொழுதும் வணங்குகிறேன்."

கவாக்ஷன் செய்த ஸ்தோத்திரம்—"அஞ்ஞானபாசத்தால் கட் டுண்டிருக்கிற பசுக்களின் பாசமோசனம் செய்கிறவராயும், சாந்த ராயும், சிவனாயும், இராமநாதராயு மிருக்கிற உம்மைச் சரணமடை கிறேன்."

கவயன் பண்ணின ஸ்தோத்திரம்—"தன்னிடத்தில் ஆரோ பணம் பண்ணப்பட்ட ஜகத்துக்கு ஆதாரபூதராயும், சந்திரசூட ராயும், உமாபதியாயும், சம்சாரமாகிற ரோகத்துக்கு ஔஷதமாயு மிருக்கிற இராமநாதா! உம்மை வணங்குகிறேன்."

சரபன் செய்த ஸ்தோத்திரம்—"எதையறியாமல் அந்தக்கரண த்தை ஆத்மாவென்று மூடர்கள் சொல்லிக்கொண்டிருக்கிறார்களோ அப்பேர்ப்பட்ட ஆத்மாவாயிருக்கிற இராமநாதாஉமக்கு நமஸ்காரம் பண்ணுகிறேன்."

கந்தமாதனன்செய்த துதி—"உமாநாதராயும், கண நாதராயும், திரியம்பகராயும், ஜகதீசுவரராயுமிருக்கிற இராமநாதா! என்னுடைய சமஸ்தபாபங்களும் நீங்கி நான்பரிசுத்தனாவதற்காக உம்மை உபாசிக் கிறேன்."

வானரக்கூட்டங்கள் செய்த துதி—"பிரபுவே! இழிவும், உயர் வுமான யோனிகளில் ஜனித்துக், கும்பீபாகாதி நரகங்களில் விழுந்து, கர்மசேஷத்தால் மறுபடியும் ஈனயோனிகளிற் பிறந்து, இவ்விதமாகச் சம்சாரத்தில் விழுந்து கதியற்று, அலறித் தவிக்கின்ற எங்களை, தயா சிந்துவே! மஹேசுவரா! இராமநாதா! காத்தருளவேண்டும்."

விபீஷணர் பண்ணின ஸ்தோத்திரம்—“சம்புவே! ஜனங்கள் சஞ்சரிக்கும் வழியற்றதாயும், வியாதிகளாகிற திருடர்களும் சிங்கங்களும் நிறைந்ததும், ஜன்மமாகிற புலியோடு கூடினதும், லயம் என்கிற பாம்போடு கூடியதும், பால்யம், யௌவனம், வார்த்தகம் என்கிற இருண்ட கிணறுகளுள்ளதாயும், கோபம், பொறாமை, பேராசை ஆகிய காட்டுத்தீயை யுடையதாயும், இந்திரிய சுகங்களென்கிற குரூர பர்வதங்களுள்ளதாயும், பயம், துக்கமென்கிற முட்கள் நிறைந்ததாயுமிருக்கிற சம்சாரமாகிற காட்டின் நடுவில் அகப்பட்டுக் கதியில்லாமல் தியங்கிக்கொண்டிருக்கிற எனக்கு நல்லவழி காட்டியருளும்.”

விபீஷணன் மந்திரிகள் செய்த துதி—“வரதராயும், வரேண்யராயும், திரிநேத்திரராயும், திரிசூலியாயும், யோகிகளால் தியானம் பண்ணத்தக்கவராயும், நித்தியராயுமிருக்கிற இராமநாதா! உமக்கு வந்தனம்.”

பிரமா செய்த துதி—“லோகநாதராயும், சம்புவாயும், சருவேசருமாயிருக்கிற இராமநாதா! உமக்கு நமஸ்காரம். தயவுசெய்து என்னுடைய அவித்தையை நீக்கிவிடும்.”

இந்திரன் செய்த ஸ்துதி—“இராமநாதா! ஜகன்மாதாவாயும், வேதசொரூபியாயுமிருக்கிற உமாதேவியைச் சக்தியாகப்பெற்றிருக்கிற உமக்கு நமஸ்காரம்.”

யமதருமராஜன் செய்த ஸ்துதி—“கணேசரையும், ஸ்கந்தரையும், புத்திரர்களாகவும், விருஷபத்தை வாகனமாகவுங் கொண்ட இராமநாதா! என்னுடைய அஞ்ஞானமெல்லாம் நீங்குவதற்காக உம்மை நமஸ்கரிக்கிறேன்.”

வருணன் செய்த ஸ்துதி—“மிருகண்டு புத்திரரான மார்க்கண்டேயர் யாரைப்பூஜைசெய்து மிருத்தியுவை ஜயித்தாரோ அப்படிப்பட்ட மிருத்தியுஞ்செயரான இராமநாதா! உம்மை இருதயத்தில் தியானம் பண்ணி உபாசிக்கிறேன்.”

குபேரன் செய்த ஸ்துதி—“ஈசுவரராயும், கர்ணகுண்டலமணிந்தவராயும், செம்பஞ்சுக்குழம்புபோலச் செவந்த நிறமுடையவராயும் இருக்கிற இராமநாதா! உமக்கு வந்தனம்.”

சூரியன் செய்த ஸ்துதி—"திரியம்பகா! மஹாதேவா! இராமநாதா! தட்சயாகத்தை யழித்த உமக்கு நமஸ்காரம். என்னைக் காத்தருளும்."

சந்திரன் செய்த ஸ்துதி—"விபூதியணிந்தவராயும், கையில் சூலமேந்தினவராயும், சர்ப்பமாலை பூண்டவராயும், தயாநிதியாயும், மஹாமயானத்தில் வாசம் பண்ணுகிறவராயுமிருக்கிற இராமநாதா! உமக்கு நமஸ்காரம்."

அக்கினிதேவன் துதித்தது—"இந்திராதி சகல தேவர்களாலுஞ் சேவிக்கப்பட்ட பாதாம்புயத்தை யுடையவராயும், திக்குகளை வஸ்திரமாயுடையவராயும், சுத்தராயுமிருக்கிற இராமநாதா! உமக்கு நமஸ்காரம்."

வாயுதேவன் செய்த துதி—"ஹரராயும், ஹரிசொரூபராயும், புலித்தோலை வஸ்திரமாகத் தரித்தவராயுமிருக்கிற இராமநாதா! உமக்கு நமஸ்காரம்."

பிருஹஸ்பதி செய்த துதி—"அகங்காரத்துக்குச் சாட்சிபூதராயும், பிரத்தியக்ஷ அத்துவைத வஸ்துவாயுமிருக்கிற இராமநாதா! உமக்கு நமஸ்காரம். என்னுடைய அஞ்ஞானத்தை நீக்கிக் காத்தருளவேண்டும்."

சுக்கிரன் பண்ணின துதி—"வஞ்சர்களுக்கு எளிதிலகப்படாதவராயும், மஹா மந்திரார்த்த சொரூபியாயும், துவைதமற்றவராயும், சம்புவாயுமிருக்கிற இராமநாதா! உமக்கு நமஸ்காரம்."

அசுவனி தேவதைகள் செய்த துதி—"யோகிகளுடைய இருதயத்தில் ஆத்மசொரூபியாய் எப்பொழுதும் விளங்குகிறவராயும், இதர ஒளியால் அறியப்படாதவராயுமிருக்கிற இராமநாதா! உமக்கு வந்தனம்."

கந்தர்வர்கள் செய்த துதி—"இராமநாதா அபாரமான துக்கத்தால் நிறைந்த சம்சார சாகரத்தில் முழுகிக் கிடக்கிற எங்களுக்கு உம்மைத்தவிர வேறு கதிகிடையாது."

கின்னரர்கள் செய்த துதி "இராமநாதா! வியாதிகளாகிற புலிகளால் பயங்கரமான சம்சாரமாகிற காட்டில் உம்மைத்தவிர எங்களுக்கு வழிகாட்டுகிறவர் யார்?"

யக்ஷர் செய்த துதி—"எப்பொழுதும் இந்திரியங்களாகிற சத்துருக்கள் செய்கிற துன்பம் சகிக்கமுடியாது. தூர்ஜடீ! அந்த இந்திரியங்களை ஜெயிக்க நீர் எங்களுக்கு உதவி செய்தருளவேண்டும்."

நாகர் செய்த துதி—"அம்பிகாபதியான இராமநாதா! அற்ப புத்தியுள்ளி நாங்கள் அசிந்திய மகிமையுடைய உம்மை ஸ்தோத்திரம்பண்ண எப்படிச் சக்தியுள்ளவர்களா யிருக்கக்கூடும்?"

கிம்புருஷர் செய்த துதி—"இராமநாதா! உமக்கு வந்தனம் பண்ணுகிறோம். நானாயோனிகளில் பிறப்பதையும், எங்களுடைய அஞ்ஞானத்தையும் நீக்கிவிடவேண்டும்."

வித்தியாதரர் செய்த துதி—"விருஷபதுவஜராயும், அம்பிகாபதியாயும், மாயாசம்பந்தமற்றவராயும், மஹாத்மாவாயுமிருக்கிற இராமநாதா! உமக்கு வந்தனம். கருணைசெய்தருளும்."

வசுக்கள் செய்த துதி—"இராமநாதா! பிரமதகணங்களுக்கதிபதியாயும், பிரமதகணங்களால் பூஜிக்கப்பட்ட பாதாம்புயத்தையுடையவராயும், கங்காதரராயும், இரகசியமானவராயுமிருக்கிற உமக்கு வந்தனம். எங்களை எப்பொழுதுங் காத்தருளும்."

விசுவேதேவர்கள் செய்த துதி—"ஞானமொன்றையே பற்றியிருக்கிற யோகிகளுக்கு முக்தியைக் கொடுக்கிறவராயும், ஸாம்பராயும், சங்கரராயுமிருக்கிற இராமநாதா! உமக்கு நமஸ்காரம். எங்களைக் காத்தருளும்."

மருத்துக்கள் செய்த துதி—"தத்துவங்களெல்லாவற்றுக்கும் பரதத்துவமாயும், உண்மையான தத்துவமாயும், சுவயப்பிரகாசராயும், சம்புவாயுமிருக்கிற இராமநாதா! உமக்கு நமஸ்காரம்."

சாத்தியர்கள் செய்த துதி—"தன்னைத் தவிர வேறு இல்லாதவராயும், ஜகத்துக்குச் சத்தைக்கொடுத்தவராயும், மாயையை நீக்குகிறவராயுமிருக்கிற இராமநாதா! உமக்கு நமஸ்காரம்."

தேவர்களெல்லோரும் செய்த துதி—"சச்சிதானந்த சொரூபராயும், துவைத மற்றவராயும், சுவயம்பிரகாசராயும், ஆத்ம சொரூபராயும், ஆதிமத்தியாந்த வர்ஜிதராயும், விகாரமற்றவராயும், பற்றற்றவராயும், பரிசுத்தராயும், நித்தியராயும், ஆகாசாதி

பிரபஞ்சங்களுக்குச் சாட்சிபூதராயும், பரராயும், அமிர்தராயும், பிரமாதீதராயும், பிரமாணங்களுக்கு விளக்கத்தைத் தருபவராயும், தோற்றம், மறைவு, குறைவு முதலிய விகாரங்களில்லாதவராயும், தன்னிடத்தில் ஆரோபணம் பண்ணப்பட்ட இந்தப் பிரபஞ்சத்துக்குச் சாட்சியாயும், நிர்லேபராயும், பிரமானந்தராயும், பூமானந்தராயும், சித்ரூபியாயும், மஹாத்மாவாயும், பிரமசொரூபியாயும், இருக்கிற இராமநாதா! ஆத்மானந்தத்தை யநுபவிக்க விரும்புகிற நாங்களெல்லாரும், எங்களுடைய பாபபரிசுத்திக்காக உம்மைச் சதா சித்தத்தில் தியானிக்கிறோம். கருணைக்கடலான இராமநாதா! உம்மை வணங்குகிறோம், எங்களைக் காத்தருளும். ருத்திர சொரூபியாயும், சம்சார துக்கத்தை நாசம் பண்ணுகிறவராயும், தன்னுடைய மாயையாலே பிரம விஷ்ணுவாதி சொரூபபேதங்களை யடைந்தவராயுமிருக்கிற இராமநாதா! உமக்கு வந்தனம், வந்தனம்."

அகஸ்தியர் செய்த துதி—"ஆதிதேவா! மஹாதேவா! விசுவேசுவரா! சிவா! அவ்யயா! அம்பிகாநாதா! விருஷபதுவஜா! சந்திரசேகரா! இராமநாதா! கிருபைகூர்ந்து நான் செய்த அபராதங்களையெல்லாம் பொறுத்தருளும். புத்திராதிகளிடத்திலுள்ள எனதென்கிற அகங்காரத்தையும், நான் என்கிற அகங்காரத்தையும் நீக்கியருளும்."

சுதீக்ஷ்ணர் செய்த துதி—"க்ஷேத்திரங்கள், இரத்தினாதி தனங்கள், வஸ்திரங்கள், பசுக்கள், புத்திரமித்திரகளத்திராதிகள் இவைகளெல்லாம் ஆபத்துக்குதவாதவைகள். ஆகையால் இராமநாதா! இவைகளிடத்தில் எனக்கு விரக்தியுண்டாகும்படி கிருபை செய்தருள வேண்டும்."

விசுவாமித்திரர்—"இராமநாதா! ஈசுவரனாகிய உம்மிடத்தில் மனிதனுக்குப் பக்தியில்லாமல்போனால், அவன் குருமுகமாய்க்கேட்ட சாஸ்திரங்களும், அத்தியனம்பண்ணின மூன்று வேதங்களும் பலன் தராமல் வீணாய்ப்போகின்றன."

காலவர் செய்த துதி—"இராமநாதா! உம்மை நமஸ்கரியாதவர்கள் செய்த தானங்களும், யாகங்களும், விரதங்களும், தபசுகளும், கங்காதி தீர்த்தஸ்நானங்களும் வீண் என்பதற்குச் சந்தேகமேயில்லை."

வசிஷ்டர் செய்த துதி—"இராமநாதா! ஒருமனிதன் கோடீரமான எல்லாப் பாபங்களையும் செய்திருந்தபோதிலும். அவனும்மைப் பக்தியோடு வணங்கினானேயானால் அவனுடைய பாபங்களெல்லாம் சூரியனைக்கண்ட இருட்டைப்போல விலகிப்போய் விடுகின்றன."

அத்திரி செய்த துதி—"இராமநாதா! மனிதன் ஈசனாகிய உம்மை ஒருபொழுதாவது தரிசித்து, ஸ்பரிசித்து, நமஸ்கரித்தால் அவன் மறுஜென்மமடையாமல் உமது அத்துவைத சொரூபத்தையடைகிறான்."

அங்கிரஸ் செய்த துதி—"இராமநாதா! ஒருமனிதன் உம்மிடம் வந்து உம்மை நமஸ்காரம் பண்ணும்பொழுது தன்னுடைய பந்துக்களை நினைத்துக்கொண்டால் அந்தப் பந்துக்களும் சகல பாபங்களும் நீங்கிக் கரையேறுவார்களென்றால் நமஸ்காரம் பண்ணினவன் கிருதார்த்தனாவான் என்பதிலாச்சரியமென்ன விருக்கிறது!"

கௌதமர் செய்த துதி—"உத்தமமாயும், சோகமொழிப்பதாயுமிருக்கிற உம்முடைய பாதாரவிந்தத்தைப் பஜிக்கிறவர்களை யெவர்கள் வணங்குகிறார்களோ அவர்கள் கூடத் தன்னியர்களாய் விடுகிறார்கள். இராமநாதா! இது இரகசியமானது."

சதானந்தர் செய்த துதி—"இராமநாதா! வேதாந்த இரகசியங்களை யறிந்தவர்களாயும் முமுட்சுக்களாயுமிருக்கிறவர்கள் அறிந்துகொள்ளவேண்டியது என்னவென்றால் சகல சாஸ்திரங்களையும் விட்டுவிட்டு உம்மைப் பஜிப்பது ஒன்றையே கைக்கொள்ளவேண்டுமென்பதே."

பிருகு செய்த ஸ்தோத்திரம்—"இராமநாதா! உம்முடைய இரண்டு பாதகமலங்களையுந் தியானம்பண்ணிப் பாபங்களையுதறிவிட்ட மனிதன் பயரகிதமாயும், சத்தாயும், சுகசொரூபமாயும், அத்துவைதமாயும், சுயம்பிரகாசமாயும், மாயாரகிதமாயும், சித்கனசொரூபியாயுமிருக்கிற உம்மை யடைகிறான்."

குத்ஸர் செய்த ஸ்தோத்திரம்—"இராமநாதா! இரசத்தைக் கிரகிக்கிற எந்த மனிதன் தான் போகமோட்சங்களைக் கொடுக்கிறதா

யும்,ரௌரவாதி நரகங்களைப் போக்குகிறதாயுமிருக்கிற உமது பாதார விந்த சேவையைச் செய்யமாட்டான்."

காசியபர் செய்த ஸ்துதி—"இராமநாதா! உம்முடைய பாத சேவை பண்ணுகிறவர்கள் விரதமனுஷ்டிப்பானேன்? தபசுபுரிவானேன்? யாகங்கள் செய்வானேன்? வேதமோதுவானேன்? சாஸ்திரம் படிப்பானேன்? ஜபம் செய்வானேன்? ஆகாசத்திலிருந்து வந்த கங்கையில் ஸ்நானம் பண்ணுவானேன்?"

ஆங்கிரஸர் செய்த ஸ்தோத்திரம்—"இராமநாதா! சம்போ! என்னுடைய மரணகாலத்தில் நீர் பார்வதீ சமேதராய் வந்து சோக மோகங்களைப் போக்குகிறதும், ஞானனந்த சொரூபமாயுமிருக்கிற உமது பாதாரவிந்தத்தை நானடையும்படி அனுக்கிரகம் பண்ணவேண்டும்."

கேளுங்கள் முனீசுவரர்களே! இப்படியாக இராமாதிகளால் துதிக்கப்பட்ட ஸ்ரீ ராமநாதரானவர், "ஜானகி காந்தனான இராமா! இலட்சுமணா! ஜானகி! சுக்கிரீபன் முதலான வானரேசர்களே! பிரமாதி தேவர்களே! அகஸ்தியாதி ரிஷீசுவரர்களே! நீங்கள் எல்லாரும் நான் சொல்லுவதைக் கவனமாய்க் கேளுங்கள். நீங்களெல்லாரும் அன்போடு செய்த ஸ்தோத்திரங்களைப் படிப்பவரும், கேட்பவரும், பிறர் கேட்கும்படி சொல்லுகிறவர்களும், என்னை அர்ச்சனை பண்ணின பலனையும், இராமதனுஷ்கோடியில் ஸ்நானம் பண்ணின புண்ணிய பலனையும், இராமசேதுவில் ஒருவருஷம் வாசம் பண்ணுகிறதாலுண்டாகும் பலனையும், கந்தமாதன பருவதத்தின் நடுவிலிருக்கிற ஸர்வ தீர்த்தங்களிலும் ஸ்நானம் பண்ணின பலனையும் அடைந்து, ஜன்மதுக்கம், ஜராதுக்கம், மரணதுக்கமென்கிற மூவகைத்துக்களையும் ஒழித்து, என்னுடைய சாயுஜ்யத்தை யடைவார்களென்பதில் ஐயமேயில்லை; ஐயமேயில்லை." என்று சொல்லியருளினார்.

## நாற்பத்தொன்பதாவது அத்தியாயம்

### முற்றிற்று.

---

# ஐம்பதாவது
# ஸேதுமாதவன் இராமசேதுவில் வந்த கதை உரைத்த
## அத்தியாயம்.

---

பிராமணோத்தமர்களே! பாபஹரமாயும், புண்ணியமாயுமிருக்கிற ஸேதுமாதவன் வைபவத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

பூர்வகாலத்தில் சந்திரவம்சத்தில் பிறந்த புண்ணியநிதி என்கிற அரசன் ஆலாசியநாதர் விளங்கிக்கொண்டிருக்கிற மதுராபுரியை யாண்டு வருகையில், ஒருநாள் இராமசேதுவில் ஸ்நானம் பண்ண வேண்டுமென்கிற எண்ணங்கொண்டு, தன் புத்திரனை மதுராபுரியைப் பரிபாலிக்க நியமித்துவிட்டுத், தன்னுடைய பத்தினியை யழைத்துக்கொண்டு, சதுரங்க பல சேனைகளோடு இராமசேது வந்துசேர்ந்து, தனுஷ்கோடியிலும், கந்தமானத்திலுள்ள வேறு பல தீர்த்தங்களிலும் சங்கற்ப பூர்வமாக ஸ்நானம் பண்ணிப் பக்தியோடு இராமநாதரை யாராதித்து, வெகுகாலம் இராமேசுவரத்தில் சுகமாய் வசித்துக்கொண்டிருந்தான். அப்படி யிருக்கையில் ஒருநாள் விஷ்ணுவுக்குப் பிரியமான ஒரு யாகத்தைச் செய்து, யாகமுடிவில் பத்தினி பரிவாரம் சகிதமாய்த் தனுஷ்கோடியில் அவபிருதஸ்நானம் செய்து முடித்து, இராமநாதரைத் தரிசனம் பண்ணிக்கொண்டு தன் வீடு போய்ச் சுகமாய் வசித்துக்கொண்டிருந்தான்.

இப்படி யரசன் வசித்துவரும் நாளையில் ஒருநாள், வைகுண்டத்தில் மஹாலட்சுமிக்கும், மஹாவிஷ்ணுவுக்கும் இவ்வரசனுடைய பக்தியைப்பற்றி விளையாட்டாக விவாதமுண்டாக, மஹாலட்சுமியானவள் பந்தயம் போட்டுக்கொண்டு, மஹாவிஷ்ணுவின் உத்தரவு பெற்று, அரசனுடைய பக்தியைப் பரிசோதிக்கும் பொருட்டு, எட்டு வயது பெண்வடிவங்கொண்டு வைகுண்டத்தைவிட்டுக் கந்தமாதனத்திலிருக்கிற தனுஷ்கோடியில் வந்து நின்றாள். அந்தச் சமையத்தில் புண்ணியநிதி ராஜன் தனுஷ்கோடியில் தன் பத்தினியோடும், பரிவாரத்தோடும்நியமமாகஸ்நானம்பண்ணித் துலாபுருஷதான முதலான எல்லாத் தானங்களையும் செய்து, வீட்டுக்குத் திரும்பிப்போக ஆயத்தனாக இருந்தான். அப்பொழுது அதிரூப சௌந்தரியமுள்ள

வளாயும், கொவ்வைப் பழம்போலச் செவந்த உதட்டை உடையவ ளாயும், சிறுத்த இடுப்பை யுடையவளாயும், அழகிய கண்களை யுடை யவளாயும், அழாமல் சிரித்தமுகமுடையவளாயுமிருந்த எட்டு வய துள்ள ஒரு கன்னிகையைக்கண்டு, "குழந்தாய்! நீ யார்? யாருடைய கன்னிகை? நீ யெங்கேயிருந்து வந்தாய்? எதற்காக வந்தாய்?" என்று வினவினன். உற்பலம்போலக் கண்ணையுடைய அந்தப்பெண் "மஹாராஜனே! எனக்குத் தாய்தந்தையர்கள் கிடையாது; பந்துக் களுமில்லை. நான் அநாதை; உமக்கு நான் புத்திரியாகி உமது வீட்டி லேயே வசிக்கப் பிரியமுடையவளாக இருக்கிறேன். என்னைப் பலாத் காரம் பண்ணுகிறவனைத் தண்டிக்கிறேனென்று வாக்குக்கொடுத்தீ ராஞல் உம்மைத் தகப்பனுராகப் பாவித்து உமது வீட்டில் வாசம் பண்ணுவதற்கு ஆக்ஷேபனை யில்லை" என்று உத்தரஞ் சொன்னுள். அதுகேட்ட குணநிதியான அந்த அரசன் "நீ சொன்னபடியே செய் கிறேன். எனக்குப் புத்திரியில்லை. ஒரே புத்திரனிருக்கிறுன். நீ என் வீட்டுக்கு வந்து அந்தப்புரத்தில் வசித்துக்கொண்டிரு. என் பாரியை யும் உன்னைப் புத்திரிபோலப் பாவித்து நடத்துவாள். நீ யார்பேரில் விருப்பம் வைக்கிறுயோ அவனுக்கு விவாகஞ்செய்து கொடுக்கி றேன்." என்று சொன்னதின்பேரில் அந்தப்பெண்ணுமப்படியே நல்லதென்று அரசனேடு கூட வீடுபோய்ச் சேர்ந்தாள். இராஜனும் தன் பாரியையான விந்தியாவளி என்பவளைப்பார்த்துப், "பிராணநா யகி! நமக்கு ஒரு கன்னிகை யில்லாமலிருக்கிறது, ஆகையால் இந்த அழகான பெண்ணை நீ வளர்த்து, இதர புருஷர்களாலிந்தப் பெண் ணுக்குத் துன்பமுண்டாகாதபடி இரட்சித்துக்கொண்டுவா" என்று சொல்லி அந்தப் பெண்ணை யவளிட மொப்புவித்தான். விந்தியாவளி அப்படியே யாகட்டுமென்று அந்தப்பெண்ணைக் கைப்பிடித்தழைத் துக்கொண்டுபோய் அந்தப்புரத்தில் வைத்துக்கொண்டாள். அந்தக் கன்னிகையும் அரசனுல் தன் பெண்போலப் போஷித்து வளர்த் துச் சீராட்டப்பட்டுச் சுகமாய் வாழ்ந்து வந்தாள். அந்தச்சமையத் தில் ஜகந்நாதரான மஹாவிஷ்ணுவானவர்கருடவாகனத்திலேறிக்கொ ண்டு, இலட்சுமிதேவியைத் தேடும்பொருட்டு, வைகுண்டத்தை விட்டுப்புறப்பட்டு, ஆகாசமார்க்கத்தைக் கடந்து, பலதேசங்களிலுஞ் சுற்றித்திரிந்தும் இலட்சுமியைக் காணுமல் கடைசியாகக் கந்தமாத னம் வந்து, அங்கே நாலாபுறத்திலும் தேடித்திரிந்து கொண்டிருக் கையில், அரசன் வீட்டில் வளர்ந்துவந்த அந்தப்பெண்ணும், அரண்

மனையை யடுத்த பூஞ்சோலையில் புஷ்பம் பறிக்கும்படி சகிகளோடு வந்து, அங்கே பூக்கொய்து கொண்டிருந்தாள். அந்த வேளையில், ஸர்வாங்கமும் விபூதி உத்தூளனஞ்செய்துகொண்டு, நெற்றியில் திரிபுண்டரம் விளங்க, ருத்திராட்சமாலை யணிந்து, சிவநாமங்களை ஜபித்துக்கொண்டு வலது கையில் பவித்திரம் தரித்துத், தோளில் உத்தரீயம் அணிந்து, கங்காஜலக்காவடி தாங்கிக், காசியாத்திரை போய்வந்த பிராமணனைப்போல வேஷந்தரித்து, மஹாபரிசுத்தரா யெதிரில் வந்து நின்ற மஹாவிஷ்ணுவைக்கண்டு புஷ்பங்கொய்து கொண்டிருந்த அந்தப்பெண் திடுக்கிட்டு நின்றாள். அந்தப் பிராமணன் காதுக்கினிமையாகப் பேசின அழகான பெண்ணைப் பலாத்காரமாகப் பிடித்திழுக்க, அவளும் சகிமார்களும் கூச்சலிட்டழுதார்கள். அழுகைச் சத்தங்கேட்டுச், சபையிலிருந்த புண்ணியநிதி யரசன் சில சேவகரோடு தோட்டத்தை நோக்கி யோடிவந்து, "பெண்களா! நீங்களேன் அழுதீர்கள்? உங்களைப் பலாத்காரம் பண்ணினவன் யார்?" என்று கேட்டான். அந்தப்பெண் பயங்கொண்டு, மனம்நொந்து, கண்ணீர்பெருக "அப்பா! இந்த மரத்தடியில் பயமில்லாமலுட்கார்ந்திருக்கிற பிராமணன் தான் என் கையைப் பிடித்திழுத்தான்" என்று கோபத்தோடு சொன்னாள். அதுகேட்ட குணநிதியான புண்ணியநிதிராஜன். அந்தப் பிராமணனுடைய பலத்தை யறியாமல் அவனைக்கைப்பிடியாகப் பிடித்து, இராமநாதர் கோவிலுக்குக்கொண்டு போய்ச் சிக்ஷித்துக், காலில் விலங்கிட்டுக், கயிற்றால் கட்டி மண்டபத்தில் கொண்டுபோய்ச் சிறையாக வைத்துவிட்டுத், தன் பெண்ணைச் சமாதானப்படுத்தி, அந்தப்புரத்துக் கனுப்பிவிட்டுத், தானும் தன்னுடைய அழகான அரண்மனை போய்ச்சேர்ந்தான். அன்றிரவு அரசன் தூங்கிக்கொண்டிருக்கும்பொழுது அவனுடை சொற்பனத்தில் அந்தப் பிராமணன் சங்குசக்கர கதாதாரியாயும், தாமரைமாலை, துளசிமாலை, கௌஸ்துபமணி, யிவைகளை மார்பிலணிந்தவராயும், பீதாம்பரமணிந்தவராயும், நீலமேக சாமளராயும், கருடாரூடராயும், அழகிய பற்களையுடையவராயும், சிரித்தமுகமுடையவராயும்; மகர குண்டலங்களைக் காதிலணிந்தவராயும், விஷ்வக்ஸேனர் முதலான கிங்கரர்கள் சேவிக்க, நாரதாதிமுனிவர்கள் துதிக்க, ஆதிசேஷசயனத்தில் பள்ளிகொண்டிருக்கிற ஸ்ரீமஹாவிஷ்ணு சொரூபமாயும், அவருடைய திருமார்பில், கறுத்துச்சுருண்ட அளகத்தையும், உயர்ந்த ஸ்தனங்களையும், சொர்ணத் தாமரைமாலையால் கட்டிய கூந்தலையும், திவ்யாபர

ணங்களையும், முத்துமாலையையும், விலைபெற்ற இரத்தினமிழைத்த புலாக்கையும், தங்கக்காசுமாலையையும், மேகலையையும், பாதசரத்தையும், பீதாம்பரத்தையு முடைவளாய், மலர்ந்த பத்மாசனத்தின் மேலே கையிலே தாமரைமலரை யேந்திக்கொண்டு, திக்குயானைகள் நீர் சொரிய, இலட்சுமி சொரூபமாகவீற்றிருந்த தன்பெண்ணையுங்கண்டு உடனே படுக்கையை விட்டெழுந்திருந்து அந்தப்புரத்துக்குப்போய்த் தன் பெண்ணைத்தான் சொற்பனத்தில் கண்டபடியே யிருக்கப் பார்த்துச், சூரியோதயமானவுடன் தன் பெண்ணை யழைத்துக்கொண்டு, இராமநாதர் கோவிலிலிருந்த மண்டபத்துக்குப்போய், அந்தப் பிராமணனையும் தான் சொற்பனத்தில் பார்த்தபடி வனமாலாதி அலங்காரமுடைய விஷ்ணு சொரூபமாகப் பார்த்து, அவரை விஷ்ணுவென்று அறிந்து துதிக்க ஆரம்பித்தான்:—கமலாகாந்தா! கருடத்துவஜா! சாரங்கபாணீ! புண்டரீகாட்சா! சக்கிரபாணீ! ஸ்ரீபதீ! உமக்கு வந்தனம். என்பேரில் தயவுகூர்ந்து நான் செய்த குற்றத்தைப்பொறுத்துக்காத்தருளும். கௌஸ்துபமணிந்தவராயும், ஸ்ரீவத்ஸமென்னும் மறுவையுடையவராயும், பிரமாவைப்பிள்ளையாகவுடையவராயும், அசுரகூட்டங்களைச் சம்ஹாரம் பண்ணுகிறவராயும், எல்லாவுலகங்களும் வசிக்கும்படியான நாபிகமலத்தை யுடையவராயும், மதுகைடவரென்கிற அசுரர்களையும், இராவணனையும் சங்கரித்தவராயும், பிரகலாதனைக்காத்தவராயும், பூதேவிக்குப்பதியாயும், நிற்குணராயும், அப்பிரமேயராயும, புத்திசாட்சியாயும், ஸ்ரீநிவாசராயும், ஜகத்தை இரட்சிக்கிறவராயும், பரமாத்வாயும், நாராயணராயும், கிருஷ்ணராயும், மதுசூதனராயுமிருக்கிற உமக்கு நமஸ்காரம. தாமரைபோன்ற கண்ணையுடையவராயும், தாமரை மலரைக்கையிலேந்தின இலட்சுமிக்குப் பதியாயும, தாமரைபோன்றிருக்கிற திருவடிகளையுடையவராயும், தாமரைமாலையை யணிந்தவராயுமிருக்கிற ஜகந்நாதா! கருணாமூர்த்தியே! உமக்கு அடிக்கடி நமஸ்காரம் பண்ணுகிறேன். மதுசூதனா! நானும்மை விலங்குபூட்டிப் பாசத்தால் கட்டி வருத்தின குற்றத்தைப் பொறுத்துக் கொள்ளும். உமக்கு அபராதம் பண்ணின தைத்தியர்களெல்லாரையும் உமது சாயுஜ்யங்கொடுத்துக் காப்பாற்றியிருக்கிறபடியால், நான்செய்த அபராதத்தையும் பொறுத்துக்கொள்ளும்." என்று ஸ்தோத்திரம்பண்ணினபின் சர்வலோக ஜனனியாகிய இலட்சுமியைஸ்தோத்திரஞ்செய்ய ஆரம்பித்தான்:—"ஜகன்மாதா! விஷ்ணு

வின் வக்ஷஸ்தலத்தில் வாசம்பண்ணுகிறவளே! சமுத்திரத்தில் பிற ந்தவளே! மஹாலட்சுமீ! உன்னை நமஸ்கரிக்கிறேன். புஷ்டிசொ ரூபியாயும், சித்திசொரூபியாயும், ஸ்வதாசொரூபியாயும், ஸ்வாஹா சொரூபியாயும், சந்தியாசொரூபியாயும், பிரபாசொரூபியாயும், மாத்ர்சொரூபியாயும், ஐசுவரியசொரூபியாயும், ச்ரத்தாசொரூபியா யும், மேதாசொரூபியாயும், ஸரஸ்வதிசொரூபியாயுமிருக்கிற உன்னை நமஸ்கரிக்கிறேன். யக்ஞவித்யாசொரூபியாயும், மஹாவித்யாசொரூ பியாயும், குஹ்யவித்யா சொரூபியாயும், ஆத்மவித்தியாசொரூபி யும், மூன்றுவேத சொரூபியாயும், ஜகன்மாதவாயும், ஜகத்தை இர ட்சிக்கிறவளாயும், சமஸ்த பிராணிகளுக்கும் முக்தியை யளிக்கிறவ ளாயும், ஈசுவரியாயுமிருக்கிற தேவீ! உனக்கு வந்தனம். சிரு ஷ்டி ஸ்திதி ஸம்ஹாரமென்கிற முத்தொழிலைச் செய்கிறவளா யும், பிரமதேவனுக்குத் தாயாராயுமிருக்கிற மஹேசுவரீ! உன க்கு அடிக்கடி நமஸ்காரம் பண்ணுகிறேன். என்னைக்காத்தருள வேண்டும்" என்று மஹாலட்சுமியை ஸ்தோத்திரம் பண்ணினன். பிறகு மஹாவிஷ்ணுவைப் பார்த்துச், "சுவாமீ! நான் அஞ்ஞா னத்தினல் உமது காலில் விலங்குபோட்டு உமக்குப் பண்ணின துரோகத்தை நீர் பொறுத்தருளவேண்டும். உலகங்களெல்லாம் குழந்தைகளாகவும், நீர் உலகங்களுக்கெல்லாம் தந்தயாகவுமிருக் கிறபடியால், பிள்ளைகள் செய்த குற்றத்தைப் பொறுத்துக்கொ ள்ளவேண்டுவது நியாயந்தானே. அப்ராதம்பண்ணின தைத்திய ரைக்கூடச் சாயுஜ்யங்கொடுத்துக் காத்தீரே! நான்செய்த அப ராதத்தைப் பொறுக்கப்படாதா? உம்மைக்கொல்ல வந்த பூதனை யைக்கூட உம்முடைய பாதாரவிந்தஞ் சேர்த்தீரே! சுவாமீ! கருணைக்கடலே! இலட்சுமீகாந்தா! கேசவா! என்பேரில் கிரு பாதிருஷ்டிவைத்து என்னைக் காத்தருளவேண்டும்" என்று பிரா ர்த்தித்தான். அப்பொழுது ஸ்ரீ மஹாவிஷ்ணுவானவர் புண்ணிய நிதி ராஜனைப்பார்த்து "ராஜனே! நீர் என்னைக் கட்டினீரேயெ ன்று நீர் பயப்படவேண்டாம்; நான் பக்தர்களெல்லாருக்கும் வசி யனுக இருக்கிறேன் என்பதை உமக்குத் தெரிவித்தேன். அர சனே! எனக்குப் பிரியமான யாகத்தைச் செய்தபடியால் நீர் எனக்கும் பக்தனுய்விட்டீர். ஆகையால் உமக்கு நான் வசியப்ப ட்டு உம்முடைய பக்திபாசத்தால் கட்டுண்டேன். சத்துருநாசனு! பக்தர்கள் பண்ணின அபராதங்களை யெல்லாம் பொருத்துக் கொ

ள்வது வழக்கம். உம்முடைய பக்தியைச் சோதிப்பதற்காகவே என்னுடைய பாரியையான இலட்சுமியை உம்மிட மனுப்பினேன். அவளை நீர் அன்போடு பரிபாலனம்பண்ணி வந்தீர். ஆகையால் உம்மிடத்தில் நான் பிரியமுள்ளவனாயிருக்கிறேன். எனக்கு வேறாகாத இந்த இலட்சுமியினிடத்தில் பக்தியுடையவன் என் பக்தன்; உலகத்திலிவளைத் துவேஷிக்கிறவன் எனக்குத்துவேஷி. இது நிச்சயம். நீ யிவளைப் பக்தியோடு பூஜைபண்ணினது என்னைப்பூஜை பண்ணினதாகும். ஏனென்றால் இவளுக்கும் எனக்கும் பேதங்கிடையாது. ஆகையால் அரசனே நீரெனக்கு அபராதம் பண்ணவில்லை. நீர் உன் பத்தினிக்கு வாக்குக்கொடுத்திருந்த வாக்குத்தத்தத்தை நிறைவேற்றும்படி யென்னைக்கட்டி விலங்கிட்டு, இலட்சுமியைக் காப்பாப்பாற்றினபடியால் உம்மிடத்தில் நான் பிரியமாயிருக்கிறேன். நீர் என்னைக் கட்டினதற்காக மனஸ்தாபப் படவேண்டாம். இலட்சுமியானவள் உம்முடைய புத்திரியென்பதில் சந்தேகமே கிடையாது" என்று சமாதானப்படுத்தினார். இலட்சுமியும், "மஹாராஜாவே நீர் உமதுவீட்டில் என்னை வைத்துக் காப்பாற்றினபடியால் உம்மிடத்தில் நான் பிரசன்னையாய்விட்டேன். உம்முடைய பக்தியைச் சோதிப்பதற்காக நான் விஷ்ணுவோடு விளையாட்டுக் கலகம் பண்ணிக்கொண்டு இங்கே வந்தேன். நீர் பண்ணின யாகத்தாலும், பக்தியாலும் நாங்களிருவரும் திருப்தியடைந்துவிட்டோம். எங்களுடைய கிருபையினால் உமக்கு எப்பொழுதும் சுகமும், சமஸ்த பூமண்டலாதிபத்தியமும், எங்களுடைய பாதகமலத்தில் அசஞ்சலமான பக்தியும், தேகாந்தத்தில் புனர் ஜனனமில்லாத என்னுடைய சாயுஜ்ய முக்தியும் உமக்குண்டாகக் கடவது. அரசனேயுமக்கு ஒருபொழுதும் பாபத்தில் புத்திசெல்லாமல், புண்ணியத்திலும் விஷ்ணுபக்தியிலும் புத்திசொல்லக்கடவது" என்று சொல்லி விஷ்ணுவினுடைய வக்ஷஸ்தலம்போய்விட்டாள். உடனே மஹாவிஷ்ணுவும் மஹாராஜாவைப்பார்த்து, "அரசனே நீர் என்னை விலங்கிட்டுக் கட்டிவைத்தமாதிரியாகவே நான் சேதுமாதவனென்கிற பெயரோடுங்கூட இங்கே வாசம் பண்ணுகிறேன். நான்கட்டிவைத்த சேதுவைக் காக்கிறதற்காகவும், பூதப்பிரேதப்பிசாசாதி உபத்திரவங்களை நீக்குகிறதற்காகவும், எல்லாருடைய இஷ்டங்களையும் பூர்த்திசெய்வதற்காகவும், சகல பாபங்களையும் ஒழிப்பதற்காகவும்,

னான், பிரமதேவன், இராமநாதரென்கிற சிவன், இந்திராதி திக்குப்பாலர்கள், எல்லாரும் வசிக்கிறோம். உன்னால் விலங்கிடப்பட்ட என்னைத் தரிசிக்கிறவர்களெல்லோரும் சர்வாபீஷ்டங்களையும், என்னுடைய சாயுஜ்யத்தையுமடைகிறார்கள். அரசனே! இந்தப்புண்ணியகதையைப் படிக்கிறவர்கள் தாரித்திரத்தை யடையவேமாட்டார்கள். சகலஐசுவரியத்தையுமடைவார்கள். நீர்பண்ணின என்னுடைய ஸ்தோத்திரத்தையும், இலட்சுமிஸ்தோத்திரத்தையும், படிப்பவரும் கேட்பவரும், எழுதினவர்களும் வைகுண்டத்தை விட்டுத் திரும்பி வரவேமாட்டார்கள்" என்று சொல்லித் தன்னுடைய பூரணரூபத்தோடு அங்கேயே வாசமாயிருந்துவிட்டார். உடனே புண்ணியநிதி ராஜனும், சேதுமாதவரூபியான விஷ்ணுவைப் பக்தியோடு பிரதட்சிண நமஸ்காரஞ்செய்து, மஹாபூஜைபண்ணி, இராமநாதரையும் சேவித்துக்கொண்டு தன்னரண்மனை போய்ச் சேர்ந்தான். மதுராபுரியில் தன் புத்திரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்துத் தான் அந்த உத்தமமான இராமேசுவரத்தில் தன்பத்தினியோடு ஆயுசுபரியந்தம் வசித்துத் தேகாந்தத்தில் விஷ்ணு சாயுஜ்ய மடைந்தான். பதிவிரதா சிரோமணியான விந்தியாவளி என்கிற அவனுடைய பத்தினியும் அநுமரணம் பண்ணி சத்கதியடைந்தாள்.

கேளுங்கள் பிராமணோத்தமர்களே! சேதுமாதவனைச் சேவிக்கிறவர்கள் கைலாசத்தைவிட்டுத் திரும்பிவரமாட்டார்கள். இந்தச் சேதுமாதவனைச் சேவிக்காதவர்களுக்கு இராமநாதர் சேவை பலனை யளிக்கார். கங்கைக்குப் போகவேண்டுமென்று சேதுமாதவன் சன்னிதியில் சங்கற்பம் பண்ணிக்கொண்டு, கங்கைக்குப் புறப்பட்டுப் போனால் கங்காயாத்திரையானது சபலமாகும். பிராமணர்களே, இந்தப்படியாகச் சேதுமாதவன் வைபவத்தை யுங்களுக் கெடுத்துச் சொல்லிவிட்டேன். இந்த அத்தியாயத்தைப் படிப்பவரும், கேட்பவரும் வைகுண்டத்தை யடைவார்கள்.

## ஐம்பதாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

ஐம்பத்தொன்றாவது

# ஸேது யாத்திரை செய்யும் முறையும் ஸ்நானவிதியும் கூறின அத்தியாயம்.

---

பிராமணோத்தமர்களே ! இப்பொழுது ஸேதுயாத்திரைசெய்யும் முறையை உங்களுக்குச் சொல்லுகிறேன் கேளுங்கள். இதைக் கேட்ட மாத்திரத்தில் மனிதர்கள் பாபங்களினின்றும் விடுபடுகிறார்கள்.

ஸேதுயாத்திரைபோய் ஸ்ரீராமநாதருடையவும், ஸ்ரீராகவனுடையவும் பிரீதியைப்பெற விரும்புகிறவன் ஸ்நானம்பண்ணி யாசமனஞ்செய்து, நித்தியகருமங்களை முடித்து, வேதப்பிராமணர்களைச் சக்தியுள்ளபடி போஜனஞ்செய்வித்துச் சரீரமுழுவதும் விபூதி உத்தூளனஞ்செய்து, நெற்றியில் திரிபுண்டரமாகத் தரித்து, அல்லது கோபிசந்தனத்தை நெற்றியில் ஊர்த்துவபுண்டரமாக வணிந்து, கழுத்தில் ருத்திராட்சமாலை பூண்டு, பவித்திரத்தை விரலில் போட்டுக்கொண்டு, ஸேது யாத்திரை பண்ணப்போகிறேனென்று பக்தியுடன் சங்கற்பம் பண்ணி, பஞ்சாட்சரத்தையாவது, அஷ்டாக்ஷரத்தையாவது, இராமமந்திரத்தையாவது ஜபித்துக்கொண்டு, மௌனமாய் வீட்டைவிட்டுப் புறப்படவேண்டும். போகும்போது காலில் பாதரட்சையும், தலைக்குக் குடையுமில்லாமல், பாதசாரியாய் நடந்து போகவேண்டும். ஏகவாரம் அவிசுமட்டும் புஜித்து, கோபத்தை யடக்கி, இந்திரியங்களை ஜயித்துத், தாம்பூலம்தரித்தல், எண்ணெய்தேய்த்துக்கொள்ளுதல், ஸ்திரீ சங்கமம் முதலியவற்றை ஒழித்து, சௌசாதியாசாரமுடையவனாய், முக்காலமும் காயத்திரி யோபாசனை செய்து, இராமனைத் தியானம் பண்ணிக்கொண்டும், ஸேதுபுராணத்தையாவது, இராமாயணத்தையாவது, அல்லது வேறு புராணங்களையாவது பாராயணஞ் செய்துகொண்டும், வீண்பேச்சுப்பேசாமல், பிரதிக்கிரகம் வாங்காமல், சக்தியுள்ளமட்டில் சிவவிஷ்ணுவாதி தேவர்களைப் பூஜை செய்துகொண்டும், வைசுவதேவம் முதலிய பஞ்சமஹா யக்ஞங்களையும், அக்கினி காரியங்களையும் தவறாமல் அநுஷ்

டித்துக்கொண்டும், அதிதிகளுக்கும், யதிகளுக்கும் வஞ்சனையில்லாமல் அன்னங்கொடுத்துச், சிவவிஷ்ணுவாதி தேவநாமங்களையும், ஸ்தோத்திரங்களையும் படித்துக்கொண்டும், நிஷித்தமான காரியங்களைச்செய்யாமலும் ஸேதுமூலம்போய்ச் சேரவேண்டும்.

அந்த ஸேது மூலத்தில், ஒரு கல்லையாவது, ஏழுகல்லையாவது "பிப்பிலாதரிடத்திலிருந்துண்டானவளாயும், உலகத்துக்குப் பயங்காரியாயுமிருக்கிற கிருத்யே உனக்கு ஆகாரமாக ஏற்பட்டிருக்கிற பாஷாணமானது என்னால் கொடுக்கப்பட்டது" என்கிற மந்திரத்தைச்சொல்லிப் போட்டுப், பிறகு "ஏ தேவா ! இந்த லவணசமுத்திரத்தில் என்னிமித்தம் சாந்நித்தியம் செய்யும்" என்கிற மந்திரத்தினால் சமுத்திரத்தை யாவாகனம்பண்ணி, "விசுவகுப்தனுயும், விஷ்ணுவாயும், அபாம்பதியாயும், ஹிரண்ய சிருங்கனுயும், நதீபதியாயும், வருணனுயுமிருக்கிற சமுத்திரமே ! உமக்கு நமஸ்காரம்" என்ற மந்திரத்தைச் சொல்லிச் சமுத்திரத்தை நமஸ்காரம்பண்ணி, "ஸர்வரத்னமயா ! ஸர்வரத்நாகரா ! ஸ்ரீமந் ஸர்வர்த்நப்ரதாறு ! மஹோநததியே ! நீர் அர்க்கியத்தைப் பெற்றுக்கொள்ளு" மென்ற மந்திரத்தால் அவனுக்கு அர்க்கியம் கொடுத்து, கிழக்கு திக்கில் சுக்கிரீவனையும், தெட்சண திக்கில் நளனையும், மேற்குதிக்கில் மயிந்தனையும், வடதிக்கில் துவிதனையும், நடுவில் ஸ்ரீராமர், இலட்சுமணர், சீதை, அங்கதன், அநுமான், விபீஷணன் இவர்களை யிருக்கும்படியாகப் பிரார்த்தனை செய்துகொண்டு, "ஸமஸ்த ஜகத்துக்கு ஆதாரபூதமானவனே ! சங்குசக்கர கதாதாரியே ! உம்முடைய தீர்த்த ஸ்நான விஷயத்தில் எனக்கு அநுக்ஞைகொடும்" என்ற மந்திரத்தைச் சொல்லி அநுக்ஞைபெற்றுக்கொண்டு, "மஹோததியே ! உமயிடத்தில் ஸ்நானம் பண்ணுகிற எனக்கு, ஸமஸ்தபாபங்களையும் போக்கி, உம்மிடத்தில் வந்து அடைகிற ஸர்வ தீர்த்தபலனையுங் கொடுத்தருளும்" என்கிற மந்திரத்தைச் சொல்லிச் சமுத்திரத்தில் ஸ்நானம்செய்து, ஸ்நானம் பண்ணுகிறபொழுதெல்லாந் தியானிக்கத் தக்கவராயும், அப்படித் தியானிக்கிறவர்களுக்கு ஸமஸ்த பாபங்களையும் நீக்கிப் புனர்ஜன்மமில்லாத மோட்சத்தைக் கொடுக்கிறவராயுமிருக்கிற நாராயணனை "ஹிரண்யசிருங்கம்" என்கிற இரண்டு மந்திரங்களால் தியானித்துப் பின் பிரகலாதர், நாரதர், வியாசர், அம்பரீஷர், சுகர், இன்னுமுள்ள பகவத்பக்தர்களையும் பக்தியோடு தியானித்து "சாகரமே ! நீ வே

தாதிகள்; வேதவிசிஷ்டயோனி; ஸரித்பதி; இரத்னயோனி; நீ அக்நி; நீ தேஜஸ்; நீ பூமி; நீ பிரமா; நீ விஷ்ணு; நீ அமிருதத்துக்கு இருப்பிடம், நதிகளிலேல்வந்து விழுகிற ஜலங்களுக்கு மேலானதான உன்னுடைய ஜலத்தை நான் இந்தச்சரீரத்தோடு வந்தடைந்து, சர்ப்பமானது சட்டையுரிப்பதுபோல என்னுடைய சரீரத்தில் ஒட்டியிருக்கிற பாபங்களை யெல்லாம் விட்டுவிடுகிறேன்" என்கிற ஸ்நான மந்திரத்தைச் சொல்லி, "சமுத்திராயவயுநாய:" என்கிற சுருதி வாக்கியத்தைச்சொல்லி நதீபதியாகியும், ஸர்வ தீர்த்தமயனும், சுத்தனுமிருக்கிற சமுத்திரத்தை நமஸ்காரம் பண்ணி "த்வெள சமுத்ரௌ" என்கிற வேதவாக்கியத்தைச் சொல்லி யிரண்டாந்தரம் ஸ்நானம் செய்யவேண்டும். பிறகு, "ஏ! சூரியனே! பிரமாண்டத்தின் மத்தியிலிருக்கிற ஸர்வதீர்த்தங்களையும் நீர் தொடுகிறவரானபடியால் எனக்கு ஜலத்தைக் கொடுத்தருளு" மென்கிற மந்திரத்தைச் சொல்லி, பின்பு, முன் சொன்னதுபோல் கிழக்குத்திசை முதலிய திசைகளில் சுக்கிரீவன் முதலானவர்களை யிருக்கும்படி தியானித்து மூன்றுந்தடவை சமுத்திரத்தில் ஸ்நானம் பண்ணவேண்டும். தேவீ பட்டணமார்க்கமாகப்போகிற யாத்திரிகனுக்கு இந்த விதிகளைச்சொன்னோம். தர்ப்பசயனத்தின் வழியாகச் சேதுயாத்திரை போகிறவன் ஸேதுமூலத்தில் ஸ்நானம் பண்ண விதித்திருக்கிற முறைப்படி தர்ப்பசயனத்தில ஸ்நானம் பண்ணவேண்டும்.

இந்த மாதிரியாகத் தேவி பட்டணத்திலாவது, தர்ப்பசயனத்திலாவது சமுத்திர ஸ்நானம் பண்ணிவிட்டு, கையில் பவித்திரத்தோடு பிப்பலாதர், கபி, கண்வர், கிருதாந்தர், ஜீவிதேசுவரர், மன்யு, காளராத்திரி, வித்யை, அகஸ்தியர், கணேசுவரர், வஸிஷ்டர், வாயுதேவர், பராசரர், உமாபதி, வால்மீகி, நாரதர், வாலகில்யர்கள், நளன், நீலன், கவாட்சன், கவயன், கந்தமாதனன், மயிந்தன், துவிதன், சரபன், விருஷபன், சுக்கிரீவன், அநுமன், வேததர்சீ, இராமன், இலட்சுமணன், சீதை, இவர்களையுத்தேசித்துக் கிரமப்படி மும்மூன்றுதரம் தர்ப்பணஞ் செய்துவிட்டு, தேவர்கள், ரிஷிகள், பிதுர்க்கள், இவர்களை யுத்தேசித்துத் தில தர்ப்பணஞ்செய்து முடிக்கவேண்டும். எந்தத்தீர்த்தத்திலும தர்ப்பணஞ் செய்தால்தான் ஸ்நானபலன் சித்திக்கும். இவ்விதம் தர்ப்பணம் பண்ணிவிட்டு, நமஸ்காரஞ்செய்து, பின்பு ஈரவஸ்திரத்தை விழுத்து, உலர்ந்த வஸ்திரத்தைத் தரித்து, ஆசமனம் பண்ணி,

மறுபடியும் பவித்திரம் போட்டுக்கொண்டு, பிதுர்த்தேவதைகளுக்கு முறைப்படி பிண்டம் போடவேண்டியது. இந்தப் பிண்டசிராத்தஞ்செய்வது அசக்தனைக்குறித்த விதி; பணமுள்ளவன் அறுவகைச் சுவையோடுகூடிய அன்னசிராத்தஞ் செய்யவேண்டும். கோ, பூ, திலம் முதலான தானங்களையும் செய்யவேண்டும். ஸேதுமூலத்தில் செய்யும்படி விதித்த பாஷாணதானம் முதலாகத் தர்ப்பணாந்தமான கிரியைகளை இராமதனுஷ்கோடியிலும் செய்யவேண்டும்.

தேவிபட்டண மார்க்கமாகப் போகிறவன் சக்கிர தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணிவிட்டு ஸேதுபதியாகிய ஸ்ரீமந்நாராயணனைத் தரிசிக்கவேண்டும்; மேற்கு வழியாகப் போகிறவன் அங்கேயிருக்கிற சக்கிரதீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணிவிட்டுத் தர்ப்பத்தில் சயனித்துக்கொண்டிருக்கிற நாராயணனைத் தரிசிக்கவேண்டும். பின் கபி தீர்த்தம், சீதாகுண்டம், ரிணமோசன தீர்த்தம், இவைகளில் முறைப்படி ஸ்நானம் செய்துவிட்டு ரிணமோசன தீர்த்தக்கரையிலிருக்கிற ஜானகிபதியாகிய ஸ்ரீராமமூர்த்தியைத் தரிசிக்கவேண்டும். பின்பு இலட்சுமண தீர்த்தம்போய்க் கண்டபரியந்தம் க்ஷெளரம் பண்ணிக்கொண்டு ஸ்நானம் பண்ணிப் பின்பு இராமதீர்த்தம் போய் ஸ்நானம்பண்ணித் தேவாலயம் போய்ச் சுவாமிதரிசனம் பண்ணவேண்டும். பிறகு பாபநாசனதீர்த்தம், கங்காதீர்த்தம், யமுனாதீர்த்தம், சாவித்திரீ தீர்த்தம், ஸரஸ்வதீ தீர்த்தம், காயத்திரீ தீர்த்தம், அநுமத்குண்டம், பிரமகுண்டம், ஸமஸ்த பாபங்களையும் நிவாரணம்பண்ணி நரகத்தைப் போக்குகிற நாககுண்டம் இவைகளில் முறையே ஸ்நானம் பண்ணவேண்டும். இந்த நாககுண்டத்தில் கங்காதி ஸர்வதீர்த்தங்களும் தங்களுடைய பாபநிவிர்த்திக்காக வசித்துக்கொண்டிருக்கின்றன. இந்த உத்தமமான நாககுண்டத்தை அனந்தன்முதலான அஷ்டமஹாநாகங்களும் முக்தியைக் கொடுப்பதற்காக உண்டாக்கிவைத்தன. இந்த நாககுண்டத்தில் ஸ்நானம் பண்ணினபின் அகஸ்தியகுண்டம், ஸமஸ்தமான துஷ்கருமங்களைநீக்குகிற அக்கினிதீர்த்தம் இவைகளில் முறையே ஸ்நானம் பண்ணி, அக்கினிதீர்த்தக்கரையில் பிதுர்ச்சிராத்தம்பண்ணிக் கோ, பூ, ஹிரண்யம் முதலானவைகளைப் பிராமணர்களுக்குத் தானங்கொடுத்துப் பாபங்களை நிவர்த்திசெய்துகொள்ளவேண்டும். சக்கிர முதலாகச் சொல்லப்பட்ட சகலமான தீர்த்தங்களிலும் வரிசைக்கிரமமாகவாவது, அல்லது தன்னிஷ்டப்படியாகவாவது ஸ்நானம்

பண்ணிச் சிராத்தாதிகளை முடிக்கவேண்டும். பிறகு இராமேசுவரம் போய்ப் பரமேசுவரனைத் தரிசித்துச் சேதுமாதவரையும், இராமர், இலட்சுமணர், சீதை, அநுமான், மற்றுமுள்ள வானரர்கள், இவர்களையும் தரிசித்து, அங்கேயிருக்கிற ஸர்வதீர்த்தங்களிலும் ஸ்நானம் பண்ணி, இராமநாதரையும், மற்றவர்களையுந் தரிசித்துத், தநுஷ்கோடிக்கு ஸ்நானஞ்செய்யப் போகவேண்டும். அங்கே பாஷாணதான முதலானவைகளைச் செய்து முடித்து, பூதானம், கோதானம், கன்னிகாதானம், வஸ்திரதானம் முதலான தானங்களைச் சக்திக்குத் தக்கபடி வேதவித்துக்களான பிராமணர்களுக்குக் கொடுத்துப் பிறகு கோடிதீர்த்தம்போய் ஸ்நானம்செய்து இராமநாதரைத் தரிசித்துத் தன் சக்திக்குத்தக்கபடி சொர்ணதானம், திலதானம், தானியதானம், கோதானம், பூதானம், வஸ்திரதானம், தண்டுலதானம் முதலான தானங்களைக் கொடுத்து, இராமநாதருக்குத் தூபதீப நைவேத்தியம் முதலான பூஜோபகரணங்களைக் கொடுத்து மறுபடியும் ஸ்நானம்பண்ணி இராமநாதரைத்தரிசித்து அநுக்ஞை பெற்றுக்கொண்டு ஸேதுமாதவன் சந்நிதிக்குப்போய் அவருக்குத் தூபதீபாதி பூஜோபகரணங்களைக்கொடுத்து அவரிடத்தில் அநுக்ஞைபெற்றுக்கொண்டு, நியமத்தோடு வீடுவந்துசேர்ந்து பிராமணர்களுக்கு ஷட்ரஸோபேதமாய் அன்னம்போட்டுத்திருப்தி செய்விக்கவேண்டும் இப்படிச்செய்தால்தான் இராமநாதர் யாத்திரிகனிடத்தில் திருப்தியாயிருப்பார். இவனுக்குத் தரித்திரமில்லை, நரகம் கிடையாது, சந்ததி விர்த்தியடையும், சம்சார துக்கத்தையொழித்து மோக்ஷத்தையடைகிறான். ஸேதுயாத்திரை செய்யச் சக்தியில்லாத அந்தன், பங்கு முதலானவர்கள், சுருதி, ஸ்மிருதி, ஆகமங்களில் ஸேதுமஹாத்மியவிஷயமாய்ச்சொல்லப்பட்ட மஹா புண்ணியமான கதைகளையாவது அல்லது இந்தச் சேது மஹாத்மியத்தையாவது பக்தியோடு படித்தாலும், கேட்டாலும் ஸேது ஸ்நானம்பண்ணின புண்ணியத்தையடைவார்கள் என்பதில் ஐயமே கிடையாது.

கேளுங்கள் ரிஷீசுவரர்களே! இந்தப்பிரகாரம் ஸேதுயாத்திரை செய்கிற முறைமையையும் அங்கே ஸ்நானஞ் செய்கிற விதியையும் உங்களுக்கெடுத்துச் சொல்லிவிட்டேன். இந்த அத்தியாயத்தைப் படிப்பவரும், கேட்பவரும் ஸமஸ்த துக்கங்களினின்றும் விடுபடுகிறார்கள்.

## ஐம்பத்தோராவது அத்தியாயம்

முற்றிற்று.

---

ஐம்பத்திரண்டாவது

# ஸேது மகிமை யுரைத்த

அத்தியாயம்.

---

ரிஷீசுவரர்களே! ஸேதுவின் மகிமையை உங்களுக்கு மறுபடியும் சொல்லுகிறேன்; ஆதரவுடன் கேளுங்கள். இந்தச் சேதுவானது எல்லா க்ஷேத்திரங்களைக்காட்டிலும் அதிக உத்தமமானது:— இங்கே ஜபிக்கப்பட்ட ஜபமும், பண்ணப்பட்ட ஹோமமும் செய்யப்பட்ட தபசும், கொடுக்கப்பட்ட தானமும் அக்ஷயபலமாகும். இந்த இடத்திலிருக்கிற தநுஷ்கோடியில் ஸ்நானம்பண்ணுகிறதினாலுண்டாகும் பலமானது காசியில் பத்து வருஷம் வாசம் பண்ணப்பட்ட பலத்துக்குச் சமானமாகும். இங்கேயிருக்கிற தநுஷ்கோடியில் ஸ்நானம் பண்ணி, இராமநாதரைத் தரிசித்துப் பக்தியோடு கூட மூன்றுநாள் வாசம்பண்ணினால் புண்டரீகபுரத்தில் பத்துவருஷம்வாசம்பண்ணின பலனையடைவான். இவ்விடத்தில் ஷடாக்ஷரத்தைப் பக்தியோடு ஆயிரத்தெட்டுத்தடவை ஜபித்தால் சிவசாயுஜ்யத்தையடைவான். இந்தத் தநுஷ்கோடியில் மாகமாசத்தில் சந்தோஷத்தோடுகூட ஸ்நானம் பண்ணுகிறவன், கும்பகோணம், மத்தியார்ஜுனம், மாயூரம், சுவேதாரணியம், ஆலாசியம், கஜாரணியம் (திருவானைக்காவல்), வேதாரணியம், நைமிசாரணியம், ஸ்ரீபர்வதம், ஸ்ரீரங்கம், விருத்தாசலம், சிதம்பரம், வல்மீகக்ஷேத்திரம் (திருவாரூர்), சேஷாத்திரி (திருப்பதி), அருணாசலம், தக்ஷணகைலாசம் (காளஹஸ்தி), வேங்கடகிரி, காஞ்சீபுரம், பிரமபுரம் (சீர்காழி), வைத்தீசுவரபுரம் (வைத்தீசுவரன்கோவில்), இன்னம் மற்றுமுண்டான சிவஸ்தல விஷ்ணுஸ்தலங்களில் ஒருவருஷம் வாசம்பண்ணின பலத்தை அடைவான். "த்வௌஸமுத்ரௌ——" "அதோயக்தாரு——" "விஷ்ணோர்கர்மாணிபச்யதா——" "தத்விஷ்ணோ: பரமம்பதம்——" என்கிற நான்கு சுருதிவாக்கியங்களும், இதிகாசங்களும், புராணங்களும், ஸ்மிருதிகளும், ஏகவாக்கியமாய்ச் சேதுமஹாத்மியத்தைக் கொண்டாடுகின்றன. சந்திரகிரகண சூரியகிரகண காலங்களில் ஸேது ஸ்நானம் பண்ணுகிறவன் அவிமுக்தக்ஷேத்திரத்தில் (காசியில்) பத்துவருஷம் கங்காஸ்நானம் பண்ணின பலனையும், ஆயிரம் அசுவமேதம் பண்ணின பலனையும், கோடி ஜன்மங்களிற்செய்த பாபக்ஷயத்தையும் அடைகிறான்.

விஷுபுண்யகாலம், தக்ஷிணாயன உத்தராயண புண்ணியகாலங்கள், சோமவாரம், பர்வகாலங்கள் இவைகளில் சேதுவைக் கண்டமாத்திரத்தில் ஏழு ஜன்மங்களில் செய்த பாபங்களையொழித்துச் சொர்க்கலோகம் போய்விடுகிறான். சூரியன் மகரத்திலிருந்து கும்பத்தில் பிரவேசித்தபின் மூன்றுநாள் தநுஷ்கோடியில் ஸ்நானம் பண்ணுகிறவன் ஸமஸ்த பாபங்களினின்றும் நீங்கிக் கங்காதி தீர்த்தங்களில் ஸ்நானம்பண்ணின பலன்களையும் அடைவான். தநுஷ்கோடியில் ஐந்துநாள் ஸ்நானம் பண்ணினவன் அசுவமேதாதிகள் பண்ணின பலனையும், சாந்திராயணாதி கிருச்சிரங்கள் பண்ணின பலனையும், சதுர்வேதங்களையும் பாராயணம்பண்ணின பலனையும் அடைகிறான். மாகமாசத்தில் பத்துநாள் தநுஷ்கோடியில் ஸ்நானம் பண்ணுகிறவன் பிரமலோகத்தையும், பதினைந்துநாள் ஸ்நானம் பண்ணுகிறவன் வைகுண்டத்தையும், இருபதுநாள் ஸ்நானம் பண்ணுகிறவன் சிவசாமீப்பியத்தையும், இருபத்தைந்துநாள் ஸ்நானம்பண்ணுகிறவன் சிவசாரூப்பியத்தையும், முப்பதுநாள் ஸ்நானம் பண்ணுகிறவன் சிவசாயுஜ்யத்தையும் அடைவான். இதில் சந்தேகமேயில்லை. ஆகையால் பிராமணர்களே! புத்திசாலியானவன் மாகமாசத்தில் இராமஸேதுவில் ஸ்நானம் பண்ணவேண்டியது. சந்திரகிரகணம், சூரியகிரகணம், அர்த்தோதயம், மஹோதயமென்கிற புண்ணிய காலங்களில் சேது ஸ்நானம் பண்ணுகிறவன் அநேக துக்கங்கள் நிறைந்த கர்ப்பவாசத்தைப் பார்க்கிறதேயில்லை. பிரமஹத்தியாதி பாபங்களையொழிந்து, ஸமஸ்த சம்பத்துக்களையும் இகத்தில் பெற்று, நரகங்களைப் பாராமல், இந்திராதி புவனபோகங்களையும் அநுபவித்து, அந்தத்தில் சாலோக்கியாதிமுக்திகளையும்அடைகிறான். ஆகையால் ரிஷீசுவரர்களே! கீழே சொல்லிய புண்ணியகாலங்களில் சேதுஸ்நானம் அவசியம். இராவணனைச் சம்ஹாரம் பண்ணுவதற்காக ராமனால் நிர்மாணம் பண்ணப்பட்டதும், இப்பொழுது சித்த சாரண கின்னர உரகர்களாலும், பிரமரிஷி, ராஜரிஷி, தேவரிஷி, பிதுர்க்கூட்டங்கள், பிரமாதிதேவர்கள் இவர்களாலும் வாசம்பண்ணப்பட்ட ஸேதுவை நினைத்துக்கொண்டு எங்கேயாவதிருக்கிற குளம் குட்டைகளில் ஒருவன் ஸ்நானம் பண்ணினால் அவனைப் பாபமே அணுகாது. ஸேதுவினுடைய மத்தியிலிருக்கிற புண்ய தீர்த்தக்கரையில் ஒரு பிடி அன்னங் கொடுக்கிறவனுக்குச் சகல ரோகங்களும், புருஷஹத்தியாதி பாபங்களும் நீங்கிவிடும். இரா

ரன் தன்னுடைய வில்லால் செய்த புண்ணியமான கோடாகிய தநுஷ்கோடியைப் பார்க்கிறவன் வைகுண்டத்திலிருந்து திரும்பி வரவேமாட்டான். உலகத்திலிருக்கிற பாபங்களையெல்லாம் போக்கடிக்கிறதும், விபீஷணனுடைய வேண்டுகோளால் ஸ்ரீராமனால் செய்யப்பட்ட புண்யமான தநுஷ்கோடி தீர்த்தத்தில் பக்தியோடு ஸ்நானம் பண்ணிப் பணத்தையும், க்ஷேத்திரத்தையும், பசுவையும், திலத்தையும், அரிசியையும், தானியத்தையும், பாலையும், வஸ்திரத்தையும், ஆபரணத்தையும், அன்னத்தையும், தயிரையும், நெய்யையும், ஜலத்தையும், சாகத்தையும், சுத்தமான மோரையும், சர்க்கரையையும், கனிகளையும், தேனையும், மோதகத்தையும், அப்பத்தையும்; மற்றுமுள்ள வஸ்துக்களையும் தானம் பண்ணுகிறவனுக்கு ஸர்வாபீஷ்டசித்தி உண்டாகிறது. ஆகையால் ரிஷீசுவரர்களே! இராமதநுஷ்கோடியில் கிருபணத்வமில்லாமல் தானம் கொடுத்தால் அது அநந்தகோடி பலத்தைத் தருவதாகும். மேலும் அவ்விடத்தில் தேவர்களும், ரிஷிகளும், பிதுர்க்களும், பிரம விஷ்ணு ருத்திரர்களும், நாகர்களும், கிம்புருஷர்களும், யக்ஷர்களும் எல்லாரும் திருப்தியடைகிறார்கள். சந்தேகமே கிடையாது. இந்தத் தநுஷ்கோடியை ஒருவன் கண்ணாலே பார்த்தால் அவன் அநேக துக்கம் நிறைந்த கர்ப்பவாசத்தைப் பார்க்கிறதில்லை. தான் பரிசுத்தமாகிறது மல்லாமல் தன்னுடைய முன்னோர்களையும், தன் சந்ததிகளையும் கரையேற்றிவிடுகிறான். இந்த இராமதநுஷ்கோடியில் ஸ்நானம் பண்ணுகிறவனுக்குக் கோடி பஞ்சமஹா பாதகங்களும் உடனே போய்விடுகின்றன. சீதை அக்கினிப்பிரவேசஞ் செய்த சீதாகுண்டத்தில் ஸ்நானம் பண்ணினால் நூறு புரூணஹத்திபாபம் க்ஷணமாத்திரத்தில் போய்விடுகின்றன. இராமனுக்கும், இராம சேதுவுக்கும், விஷ்ணுவுக்கும், கங்கைக்கும் பேதமில்லாதபடியால் கங்கையையாவது ஹரியையாவது, இராமனையாவது இராமஸேதுவையாவது உச்சரித்துக்கொண்டு எந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினாலும் பரமகதி கிடைக்கிறது.

கந்தமாதன பர்வதத்திலிருக்கிற ஸேதுவில் அர்த்தோதய புண்யகாலத்தில் ஸ்நானம் பண்ணிப் பிதுர்க்களை உத்தேசித்து கடுகளவு பிண்டங்கொடுத்தால் அவனுடைய பிதுர்க்களெல்லாரும் சூரியசந்திரர்கள் உள்ளவரைக்குந் திருப்தியடைந்திருக்கிறார்கள். வன்னியிலையளவு பிண்டம் பிதுர்க்களையுத்தேசித்துக் கொடுத்தால்

அவனுடைய பிதுர்க்கள் சர்வபாபங்களினின்றும் முக்தர்களாகி நரகத்திலிருந்தால் சொர்க்கத்துக்கும், சொர்க்கத்திலிருந்தால் மோக்ஷத்துக்கும் போகிறார்கள். சேதுவிலும், பத்மநாபபுரம் (அநந்தசயனம்), கோகருணம், புருஷோத்தமம் இந்த ஸ்தலங்களிலும் எப்பொழுதும் சமுத்திரஸ்நானம் பண்ணலாம். சந்தான காமியாயிருக்கிறவன் வெள்ளிக்கிழமை, செவ்வாய்க்கிழமை, ஞாயிற்றுக்கிழமைகளாகிய மூன்று தினங்களிலும் சேதுவைத்தவிர மற்ற இடங்களில் சமுத்திரஸ்நானம் செய்யக்கூடாது. பிரேதகாரியஞ் செய்யாதவனும், கர்ப்பவதியான மனைவியுள்ளவனும் சேதுவைத் தவிர மற்ற இடங்களில் சமுத்திரஸ்நானம் பண்ணப்படாது. சேது ஒழிந்த மற்றைய சமுத்திரஸ்நானத்துக்குத்தான் திதிவார நட்சத்திர நியமங்களுண்டு. சேதுவில் காலவரையறையில்லாமல் எப்பொழுதும் ஸ்நானம் பண்ணலாம். உயிரோடிருக்கிறவனைக்குறித்துச் சேதுவில் ஸ்நானம் பண்ணலாமேதவிர இறந்துபோனவனை உத்தேசித்து ஸ்நானம் பண்ணக்கூடாது. தர்ப்பத்தால் கூர்ச்சம் செய்து, பூர்வம் விஷ்ணுவினால் தரிக்கப்பட்டுப், "பவித்திரமாயிருக்கிற கூர்சமே! நீ ஸ்நானம் பண்ணினவுடனே யாருக்காக நீ உத்தேசிக்கப்பட்டிருக்கிறாயோ அவனும் ஸ்நானம் பண்ணினவனாய் விடுகிறான்" என்கிற மந்திரத்தைச்சொல்லி யந்தக்கூர்சத்தை ஸ்நானம் பண்ணிவைக்கவேண்டியது. பருவகாலந்தோறும் எவ்விடத்திலும் சமுத்திரமானது ஸ்நானத்துக்கு யோக்கியமானதாயிருக்கிறது. ஸேதுவிலும், ஸிந்துநதியும் சமுத்திரமும் சேருகிற இடத்திலும், கங்காநதி சங்கமமாகிற இடத்திலேயும், கோகருணத்திலேயும், புருஷோத்தமத்திலேயும், நித்தியம் சமுத்திரஸ்நானம் பண்ணலாம். பருவகாலமல்லாத காலங்களில் ஸேதுவைத்தவிர மற்ற இடங்களில் சமுத்திரத்தைத் தொடவுங்கூடாது. பூர்வகாலத்தில் சீதாலட்சுமண சமேதரான ஸ்ரீராமர், பிதுர்த்தேவதைகளும் முனிவர்களும், சகல தேவர்களும் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுது "நானிவ்விடத்தில் செய்த இந்தச்சேதுவில் ஸ்நானம் பண்ணுகிறவர்கள் என்னுடைய பிரசாதத்தினாலே சமஸ்த பாபங்களுமற்று மறுபிறப்பை யடையமாட்டார்கள். இதைக் கண்ணாலே பார்த்தாலும் சமஸ்த பாபங்களும் நீங்கிப்போகின்றன. இராமநாதருடையவும், ஸேதுவினுடையவும் வைபவத்தைக் கோடிவருஷம் முயன்றாலும் என்னாலே வர்ணிக்க முடியாது" என்று உறுதியா

கச் சொன்னதைக் கேட்டுத் தேவர்கள், ரிஷிகள், பிதுர்க்களெல்லா ரும் நேர்த்தி நேர்த்தி யென்று சொல்லி யானந்தப்பட்டார்கள். அப்பேர்ப்பட்ட இந்தச் சேதுமத்தியில் நாலுமுகப் பிரமாவானவர் சமஸ்தமான தேவர்களோடும் ஈசுவரனுடைய ஆக்ஞையின்படி சேதுவைக் காப்பதற்காக இங்கே வாசமாயிருக்கிறார். விஷ்ணு வும் காலில் விலங்கிடப்பட்டுச் சேதுமாதவன் என்கிற பெயரோ டும் வசித்துக்கொண்டிருக்கிறார். பிதுர்தேவதைகளும், ஸ்மிருதி கர்த்தர்களாகிய ரிஷிகளும், தேவர்களும், கந்தர்வர்களும், கின்ன ரர்களும், கிம்புருஷர்களும், உரகர்களும், வித்யாதரர்களும், சார ணர்களும், யக்ஷர்களும், மற்றவர்களு மிவ்விடத்தில் இரவும், பக லும் வசித்துக்கொண்டிருக்கிறார்கள். அப்படிப்பட்ட இந்தச் சேதுவைப் பார்த்தாலும், கேட்டாலும், ஸ்மரித்தாலும், தொட் டாலும், அதில் முழுகினாலும் சமஸ்த பாபங்களும் பஞ்சாய்ப் பற ந்துவிடுகின்றன. தைமாதத்தில் ஞாயிற்றுக்கிழமை, அமாவாசை, திருவோணநட்சத்திரம், வியதீபாதம், சதுஷ்பாதகரணம், இவை கூடிய தினம் அர்த்தோதய புண்ணியகாலமாம்; இந்த அர்த்தோ தய புண்ணியகாலத்தில் சேதுஸ்நானம் பண்ணினால் சாயுஜ்யமுக்தி நிச்சயமாய்க் கிடைக்கும். ஆயிரம் வியதீபாத புண்ணியகாலத் துக்கு ஒரு அமாவாசை சமமாகிறது. பதினாயிரம் அமாவாசை புண்ணியத்துக்குச் சமானம் ஒரு பானுவார அமாவாசை; பானு வாரத்தில் சிரவண நட்சத்திரத்தோடு கூடிவந்தால் அது மகாபுண் ணியமானது. மேற்சொல்லிய ஒவ்வொன்றிலும் ஸ்நானமாவது, தானமாவது, ஜபமாவது, அர்ச்சனையாவது செய்தால் முக்தி கை கூடிவருகிறது. இவ்வைந்தும் கூடிய புண்ணியகாலத்தில் ஸ்நானாதி களை யொருவன் செய்தால் அவனுடைய பலனை நம்மால் சொல்ல முடியாது. சிரவணமோ நட்சத்திரங்களெல்லாவற்றிலும் சிரேஷ்ட மானது. திதிகளில் அமாவாசை சிறந்தது. வியதீபாதம் யோகங் களில் முக்கியமானது. ஞாயிற்றுக்கிழமை வாரங்களில் சிறந்தது. இந்த நாலும் கூடிவருகிற தைமாதத்தில் இராமசேதுவில் ஒருவன் ஸ்நானம் பண்ணினால் அவனுக்குக் கர்ப்பவாசமேயில்லாமல் சாயுஜ யம் கைகூடி வருகிறது. அர்த்தோதயத்துக்குச் சமமான புண்ணிய காலம் இல்லவேயில்லை. இதேமாதிரி மஹோதயமும் மஹா புண் ணிய காலமாம். இந்தப் புண்ணிய காலங்களில் சேதுவில் தானங் கொடுப்பது விசேஷமாகும்.

ஆசாரம், தபசு, வேதாத்தியனம், வேதாந்தசிரவணம், சிவ விஷ்ணுவாதி தேவதார்ச்சனே, புராணார்த்த ஆராய்ச்சி இவைக ளோடு கூடிய பிராமணன் தானம் வாங்கத்தகுந்தவனாவான். அப் படிப்பட்ட பிராமணனுக்குத்தான் சேதுவில் தானம் கொடுக்க வேண்டியது. அப்படிப்பட்ட பிராமணன் சேதுவில் அகப்படா மல்போனால், தானயோக்கியமான பிராமணனே உத்தேசித்து அங் கே தானஞ்செய்துவிட்டு, ஊருக்கு வந்தபின் உத்தேசித்த பிராம ணனிடம் தானம்செய்த பொருள்களைச் சேர்த்துவிடவேண்டியது. பூர்வத்தில் தானர்களை யறியவேண்டுமென்ற பிரியமுள்ள திலீப மஹாராஜனுக்கு வசிஷ்டர் சொன்னதைச் சொல்லுகிறேன் :— "பிரமபுத்திரரான புரோகிதரே! யாருக்குத் தானம் செய்யவேண் டியது? சிஷ்யனாகிய என்னிடத்தில் தயவுகூர்ந்து இதனுண்மை யைச் சொல்லியருளவேண்டும்" என்று பிரார்த்தித்த திலீபனைப் பார்த்து.வசிஷ்டர்சொல்லத்தொடங்கினார்:—'வேதோக்த ஆசாரங் களையுடைய பிராமணன் பாத்திரங்களில உத்தமமான பாத்திரம்; அவனைக்காட்டிலும் உத்தமமானவன் சூத்திரான்னம் புஜியாத பிராமணன். வேதம், புராணம், மந்திரம் இவைகளையறிந்து வரு ணாச்ரமாசாரம் தவறாமல், சிவவிஷ்ணுவாதி தேவதாபூஜை செய்து கொண்டு, தரித்திரததால் வருந்தி, குடும்பியாயிருக்கிற பிராமணன் எல்லாரிலும் மேலான உத்தமபாத்திரம்; அப்பேர்ப்பட்ட பாத்தி ரத்தில் கொடுத்த தானந்தான் தர்மார்த்த காமமோக்ஷ மென்கிற சதுர்வித புருஷார்த்தங்களையும் கொடுக்கும். விசேஷமாய்ப் புண் ணியஸ்தலங்களில் அப்பேர்ப்பட்ட பாத்திரத்திலேயே தானங்கொ டுக்கவேண்டும். அப்படி பாத்திரமறிந்து கொடாத தாதாவானவன் பத்துஜன்மம் ஓணானாகவும், மூன்று ஜன்மங் கழுதையாகவும், இர ண்டுஜன்மந் தவளையாகவும், ஒருஜன்மம் சண்டாளனாகவும், பிறகு சூத்திரனாகவும், வைசியனாகவும், க்ஷத்திரியனாகவும், பிராமணனாக வும் முறையேபிறந்து தரித்திரத்தையடைந்து, ரோகங்களால்பீடிக் கப்பட்டுத் துன்பமடைவான். மஹாராஜனே! துர்ப்பாத்திர தான மானது இவ்வகையான துன்பங்களை யுண்டாக்குகிறபடியால் சற் பாத்திரத்தையறிந்தே தானஞ்செய்யவேண்டும். அப்படிப்பட்ட சற்பாத்திரன் அகப்படாதபட்சத்தில் ஒரு சற்பாத்திரத்தை யுத் தேசித்துச் சங்கற்பஞ்செய்து தானம்பண்ணித் தானஜலத்தைக்

டுமேழுவிட்டு அவனிடம் சேர்ப்பிக்கவேண்டியது. உத்தேசிக்கப்பட்டவன் இறந்துபோய்விட்டால் அவனுடைய பிள்ளைக்கு அந்தத் தானப்பொருளைச் சேர்ப்பிக்கவேண்டியது. அவனு மிறந்துவிட்டால் மஹாதேவனுக் கர்ப்பணஞ்செய்துவிடவேண்டியது. கேளும் மஹாராஜனே! அதமமான பாத்திரத்தில் ஒருபோதும் தானஞ் செய்யலாகாது. விசேஷமாய்ப் புண்ணியதீர்த்தக்கரையில் சற்பாத்ரத்திலேயே தானம் கொடுக்கவேண்டியது" என்று வசிஷ்டர் சொன்னதைக் கேட்டதிலீப ராஜன் சற்பாத்திரத்திலேயே தானஞ் செய்துகொண்டுவந்தான். ஆகையால் புண்ணியஸ்தலமாகிய ஸேதுவில் சற்பாத்திரம் கிடையாதபட்சத்தில் சற்பாத்திரத்தை யுத்தேசித்துச் சங்கற்பம்பண்ணித் தானம்செய்து தானஜலத்தைப் பூமியில்விட்டு, ஊருக்குத்திரும்பிவந்த பிறகு உத்தேசித்த பிராமணனுக்கு அந்தப் பொருள்களைச் சேர்த்துவிட வேண்டியது. சேர்த்த அந்த தாதாவானவன் ஒருவிதமான துக்கத்தையு மனுபவியாமல் சாலோக்கியாதி நாலுவித முக்திகளையும் அடைவான். அப்படிக் கொடாமல்போனால் தாதாவுக்குத் தானபலன் கிடையாது.

கும்பகோணம், சேதுமூலம், கோகருணம், நைமிசாரணியம், அயோத்தி, தண்டகாரணியம், விருபாட்சம், வேங்கடம், சாளக்கிராமம், பிரயாகை, காஞ்சி, துவாரகை, மதுரை, பத்மநாபம், காசி, ஸமஸ்தநதிகள், ஸமஸ்தமான சமுத்திரங்கள், பாஸ்கர பருவதம், இவ்விடங்களில் உபவாசம் இருக்கவும் வேண்டும், க்ஷௌரமும் செய்துகொள்ள வேண்டும். உலோபத்தாலாவது, அஞ்ஞானத்தாலாவது உபவாசமிருத்தலும், க்ஷௌரஞ் செய்துகொள்வது மில்லாமல் ஒருவன் வீட்டுக்குத் திரும்பிப்போனால் அவனுடைய பாதகம் அவனைப் பின்தொடர்ந்து போகிறது. கந்தமாதன பர்வதத்திலிருக்கிற இருபத்துநாலு தீர்த்தங்களுக்குள் இலட்சுமண தீர்த்தக்கரையில் தலை க்ஷௌரம்மாத்திரம் செய்துகொண்டு தட்சணை கொடுத்து ஸ்நானம்பண்ணி, இலட்சுமணசங்கரரைத் தரிசித்தவன் சமஸ்த பாபமுமொழிந்து சங்கரபதத்தையடைகிறான். அர்த்தோதய புண்ணியகாலத்தில் இந்தமாதிரி ஸ்நானம்செய்யவேண்டியது. சேதுவுக்குச்சமானமானபுண்ணியமாவது, தீர்த்தமாவது, தபசாவது, கதியாவது, கிடையாது. அர்த்தோதய புண்ணியகாலமானது ஆயிரம் கிரஹணத்துக்குச் சமானமானது. அர்த்தோதய புண்ணியகாலத்தைவிடச் சமுசார துக்கத்தை நீக்

குகிற வேறு புண்ணியகாலம் கிடையாது. அந்தப் புண்ணியகாலத்திலே ஸேது ஸ்நானத்தாலுண்டாகிற புண்ணியத்துக்குச் சமானமாகச் சாஸ்திரங்களில் புண்ணியங்கள் சொல்லப்படவில்லை. ப்ரகிருதியில் அறுபதினாயிர வருஷகாலம ஸ்நானம்பண்ணின புண்ணியமானது ஸேதுவில் அர்த்தோதயத்திலும், மஹோதயத்திலும் ஒருவேளை ஸ்நானஞ்செய்வதால வந்துவிடும். மாகமாசத்தில் சூரியன் மகரத்திலிருக்கும்பொழுது பாபமோசன பிரயாகையில் ஆயிரமாக ஸ்நானஞ்செய்த பலனும், மூன்று லோகங்களிலிருக்கிற தீர்த்தங்களில் ஸ்நானம்பண்ணுகிறபலனும், இராமஸேதுவில அர்த்தோதய புண்ணியகாலத்தில் செய்கிற ஒருபலனால் கிடைத்து விடுகிறது. பிரமஞானமில்லாதவன், செய்த நன்றி மறந்தவன், துஷ்டசுபாவமுடையவன், மஹாபாதகஞ்செய்தவன், இந்தப் பாபிகளெல்லாருக்கும் ஸேதுவில் அர்த்தோதயத்தில் ஸ்நானஞ் செய்வதால் பரிசுத்திவந்துவிடுகிறது. செய்த நன்றி மறந்தவனுக்கு வேறெங்கும் பிராயச்சித்தம் கிடையாது. அப்பேர்ப்பட்ட பாபிகளுக்கும் ஸேதுவில் அர்த்தோதய ஸ்நானம் பிராயச்சித்தமாக விதிக்கப்பட்டிருக்கிறது. ஸேதுவில் அர்த்தோதயகாலத்தில் அஞ்ஞானத்தால் ஸ்நானம்பண்ணாதவர்கள் சமுசாரத்தில் முழுகி அந்தகர்களைப்போல அதோகதியடைகிறார்கள். அர்த்தோதயத்தில் ஸ்நானம் பண்ணினால் அவன் சூரியமண்டலத்தைப் பிளந்துகொண்டு பிரமலோகம் போகிறான் என்பதில் சந்தேகமில்லை.

அர்த்தோதய புண்ணியகாலத்தில் சேதுவில்ஸ்நானம் பண்ணி ஜகந்நாதரான இராமனையும், சீதையையும் தியானம்பண்ணி, இராமநாதரையும், சுக்கிரீவன் முதலானவர்களையுந் தியானித்து, தேவர்களுக்கும், ரிஷிகளுக்கும், பிதுர்க்களுக்கும் தர்ப்பணம்பண்ணி அர்த்தோதயகாலத்தில் ஸேதுவிலிருக்கிற அர்த்தோதயரென்கிற பரிசுத்தரான ஜகந்நாதரைப்பூஜைபண்ணி, "திவாகரா! தேஜோராசியே! ஜகத்பதியே! உமக்கு வந்தனம். தேவேசா! நீர் அர்க்கியத்தைப் பெற்றுக்கொண்டு என்னிடத்தில் எப்பொழுதும் பிரசன்னராயிரும். அத்திரிகோத்திரத்திலுண்டான இலட்சுமிதேவிக்குச் சகோதரராயும், அமிர்தகலசராயுமிருக்கிற பகவானே உமக்கு வந்தனம். நீர் அர்க்கியத்தைப்பெற்றுக்கொள்ளும்; வியதீபாதா! மஹாயோகா! மஹாபாதகநாசனா! ஸஹஸ்ரபாகுவே! ஸர்வாத்மாவே! உமக்கு வந்தனம்; அர்க்கியத்தைப் பெற்றுக்கொள்ளும். திதிவாரநட்சத்திர

ங்களுக்கு அதீசனையும், பரமேசுவரனையும், மாசரூபியாயும், காலரூபியாயுமிருக்கிற உமக்குவந்தனம்; அர்க்கியத்தைப் பெற்றுக்கொள்ளும்" என்கிற நாலுமந்திரங்களைச் சொல்லி, அர்க்கியங்கொடுத்து ப்பதினாலு, பனிரண்டு, எட்டு, ஏழு, ஆறு, அல்லது ஐந்துபிராமணாளுக்குச் சக்திமட்டில் அன்னங்கொடுத்து அலங்காரம் பண்ணி, "ஜகந்நாதரான கேசவா! உம்முடைய ஜன்ம நட்சத்திரமாகிய சிரவணநட்சத்திரத்தில் நான்பிராமணர்களுக்குச்செய்த தானமானது உமக்கு அக்ஷயமாயிருக்கட்டும்." "நட்சத்திரங்களுக் கெல்லாம் அதிபதியாயும், தேவர்களுக்கு அமிர்தத்தைக் கொடுக்கிறவனையும், கலாசேஷனையும், ரோகணீபதியுமாகிய சந்திரா! உமக்குநமஸ்காரம், என்னைக்காப்பாற்றும்," "தீனநாதா! ஜகந்நாதா! கலாநாதா! கிருபாமூர்த்தியே உம்முடைய இரண்டு பாதாரவிந்தங்களில் எனக்கு அசஞ்சலமான பக்தியிருக்கட்டும்," "சோம சூரியபுத்திரா! பிரபுவே! வியதிபாதா! உமக்கு நமஸ்காரம். ஏதோ நான்செய்கிறதானமானது உமக்கு அக்ஷயமாக இருக்கட்டும்." "ஜநார்த்தனா! வாசுதேவா! மாசம், ரிது, அயனம், காலம் இவைகளுக்கீசனாகிய ஹரியே! யாசகர்களுக்குக் கற்பகவிருட்சமாயிருக்கிற நீர் என்னுடைய பாபத்தைச் சமனம்பண்ணும்." என்னும் இந்த மந்திரங்களைச்சொல்லி அர்ச்சனைபண்ணி; வெண்கலப்பாத்திரம், கன்று இவைகளோடு கறவைப்பசுவையும், பழத்தையும், வெல்லத்தையும், நெய்யையும், யக்ஞோபவீதத்தையும் தாம்பூலம் தட்சணையோடு அவர்களுக்குத் தானம் பண்ணி, ஹிரண்யசிராத்தத்தையாவது, ஆமசிராத்தத்தையாவது, அன்னசிராத்தமாகிய பார்வணசிராத்தத்தையாவது குறைவில்லாமல் செய்து, பின் ஆசாரியருக்கு வஸ்திரம், பூஷணம், குண்டலம், பதுமை, பசுமாடு, குடை, ஒருஜோடிப்பாதரக்ஷை இவ்வகைகளைக் கொடுத்து அவரைப் பூஜிக்கவேண்டியது. இந்தமாதிரி அர்த்தோதய புண்ணியகாலத்தில் சேதுவிலும், மற்றையபுண்ய க்ஷேத்திரங்களிலும் விரதாநுஷ்டானஞ் செய்யவேண்டியது. இப்படிச் செய்தால்தான் அவன் கிருதார்த்தனாவான். அவன் வேறு ஒரு தர்மமுஞ் செய்யவேண்டியதில்லை.

கந்தமாதனத்தில் சமுத்திரத்திலே ஸ்ரீராமனால் கட்டப்பட்ட சேதுவை ஸ்நானகாலத்தில் தியானித்துக்கொண்டு ஸ்நானஞ்செய்தால் அநேககோடிபாபங்களுந் தொலைந்து, அவன் விஷ்ணுபதவியை யடைகிறான். சேதுவில் ஒருநிமிஷமாவது, அரைநிமிஷமாவது

தங்கியிருக்கிறவனுடைய கண்ணுக்கெதிரில் யமகிங்கரர்கள் வரப்ப
யப்படுகிறார்கள். இராமஸேது, தனுஷ்கோடி, இராமன், சீதை இல
ட்சுமணன், அநுமான், சுக்ரீவன் முதலான கபீசுவரர்கள், விபீஷ
ணன், நாரதர், விசுவாமித்திரர், அகஸ்தியர், வசிஷ்டர், வாமதே
வர், ஜாபாலி, காசியபர், இராமனுடைய இதரபக்தர்கள், ஸ்ரீராம
நாதர் இவர்களெல்லாரையும் சதாமனதினால் தியானம்பண்ணினால்
சமஸ்தபாபங்களையு மொழித்துப்பரமபதவியை யடையலாம். ஸத்
தியக்ஷேத்திரம், ஹரிக்ஷேத்திரம், கிருஷ்ணக்ஷேத்திரம், நைமிசார
ணியம், சாளக்கிராமம், பதரிகாசிரமம், அஸ்திசைலம், விருஷாசல
ம், சேஷாத்திரி, சித்திரகூடம், இலட்சுமீக்ஷேத்திரம், துரங்ககம்,
காஞ்சீ, கும்பகோணம், மோகினிபுரம், சுவேதாசலம்,
பத்மநாபம், புல்லம், கடிகாத்திரி, ஸாரக்ஷேத்திரம், ஸ்ரீநிவாசக்ஷே
த்திரம், நாதக்ஷேத்திரம், அனிதக்ஷேத்திரம், சுகக்ஷேத்திரம்,
வாருணக்ஷேத்திரம், மதுரை, ஸ்ரீகோஷ்டி, புருஷோத்தமம், ஸ்ரீரங்
கம், புண்டரீகாட்சம், முதலான ஹரிக்ஷேத்திரங்களில் ஸ்நானம்
பண்ணி நீங்காத பாபங்களெல்லாம் ஸேது ஸ்நானத்தினால் நீங்கி
விடுகிறது; சந்தேகமில்லை. இராமனால் கட்டப்பட்டு ரிஷிகளெல்லா
ரும் வசிக்கிற ஸேதுவில் ஸ்நானம் பண்ணாதவர்களுக்கு ஒருநாளும்
துக்கமொழியாது. "நமசிவாய" என்கிற ஸ்ரீபஞ்சாட்சரத்தை
யாவது, "ஓம் நமோநாராயணாய" என்கிற அஷ்டாட்சரத்தையா
வது, ராமஷடக்ஷரத்தையாவது ஜபிக்காமலும், காதாலே கேட்கா
மலும், ஸ்மரிக்காமலுமிருக்கிறவர்கள், சுபமான ஹரிதினத்தில், உப
வாசம் பண்ணாதவர்கள், ஜாபாலோபநிஷத்தில் சொல்லப்பட்ட எழு
மந்திரங்களை யுச்சரித்துச் சிரசு முதலான இடங்களில் விபூதியை
உத்தூளனம் செய்துகொண்டு திரிபுண்டரமாய் அணியாதவர்கள்,
சிவன் விஷ்ணுமுதலான தேவர்களை வேதோக்தவிதிப்படி பூஜை
பண்ணாதவர்கள், சிவவிஷ்ணுவாதி தேவர்களுக்குப் பக்தியோடு
கூடத் தூபம், தீபம், சந்தனம், புஷ்பமிவைகளைக் கொடாதவர்
கள், ஸ்ரீருத்திரம், சமகம், புருஷசூக்தம், பாவமான்யாதி ஸூக்
தம், திரிஸுபர்ணம், பஞ்சசாந்தி முதலிய மந்திரங்களைச்
சொல்லிச் சிவவிஷ்ணுக்களை யபிஷேகஞ் செய்யாதவர்கள், சிவ
விஷ்ணுவாதி தேவர்களைப் பக்தியோடு பிரதட்சண நமஸ்காரஞ்
செய்யாதவர்கள், தனுர்மாசத்தில் உஷக்காலத்தில் மஹா நைவே
த்தியத்தை வைத்துச் சிவவிஷ்ணுவாதிகளை யாராதிக்காதவர்கள்,

விஷ்ணு நாமங்களையாவது, சிவநாமங்களையாவது கீர்த்தனம் பண்ணாதவர்கள், சாளக்கிராம சிலையையாவது, கண்டகீநதியில் உற்பத்தியாகிற சிவநாபமென்கிற சிலையையாவது, துவாரகா சக்கிரமென்கிற வெளுப்பான சிலையையாவது அஞ்ஞானத்தினால் பூஜை பண்ணாதவர்கள், கங்காமிருத்திகை, துளசிமிருத்திகை, கோபிசந்தனமிவைகளை நெற்றி, மார்பு, இரண்டு கைகள், கழுத்து முதலான இடங்களில் தரித்துக் கொள்ளாதவர்கள், ருத்திராட்சம், துளசிகாஷ்டமிவைகளைத் தாரணம் பண்ணிக்கொள்ளாதவர்கள், பிராம்மமுகூர்த்தத்தில் எழுந்திருந்து கலக்கமில்லாமல் ஹரிஹர நாமங்களையாவது, ஸ்தோத்திரங்களையாவது வேறு விசேஷமான மந்திரங்களையாவது சிந்திக்காதவர்கள், விடியற்காலத்தில் ஆறுகுளங்களுக்குப்போய் ஸ்நானம்பண்ணி, ஆசமனம்பண்ணிச் சந்தியோபாஸ்திபண்ணி வேதமாதாவாகிய காயத்திரியை உபாசிக்காதவர்கள், விடியற்காலத்திலும், சாயங்காலத்திலும் ஔபாசனம், அக்கினிஹோத்திரங்களைச் செய்யாதவர்கள், மத்தியானத்தில் மாத்யானிகம், பிரமயக்ஞம், வைசுவதேவம், யதிபூஜை, அதிதிபூஜை செய்யாத பாபிகள், சாயங்காலத்தில் அதிதிபூஜை பண்ணாதவர்கள், அத்தியயனம்பண்ணின வேதத்தைமறந்த மூடர்கள், வேதங்களையும், வேதாங்கங்களையும் படியாதவர்கள், பிரதிவருஷமும் மாதுர்சிராத்தம், பிதுர்சிராத்தம், மஹாளயசிராத்தம், அஷ்டகாசிராத்தம், இதரநைமித்திக சிராத்தங்களைச் செய்யாத லோபிகள், சித்திரைமாசம் பௌர்ணமியில் சித்திரகுப்தனை யுத்தேசித்துப், பானகம், கனிந்தவாழைப்பழம், பாயசம், சர்க்கரை, வெல்லம், மாம்பழம், பலாப்பழம், பாதரட்சை, குடை, வஸ்திரம், புஷ்பம், சந்தனம், இவைகளைப் பிராமணர்களுக்குக் கொடாத பாபிகள், இவர்களுடைய பாபங்களெல்லாம் சேதுவில் ஸ்நானம்பண்ணினமாத்திரத்தில் பஞ்சாய்ப்பறந்துபோகின்றன. நல்ல நடக்கையுடையவனானாலும், கெட்ட நடக்கையுடையவனானாலும், தனுஷ்கோடியில் ஸ்நானம்பண்ணினமாத்திரத்தில் சம்சார துக்கமொழிந்து புனர்ஜன்மத்தை யடைகிறதில்லை. சம்சாரசாகரத்தைத்தாண்டப் பிரியமுடையவன் உடனே இராமதனுஷ்கோடிக்குப் புறப்படவேண்டியது. தனுஷ்கோடியில் ஸ்நானம்பண்ணுவதைத் தவிர முக்திக்கு வேறு உபாயமில்லை. தனுஷ்கோடியில் ஸ்நானம்பண்ணுகிறவர்களுக்குச் சம்சாரபயநாசனமாயும், ஸத்தியமாயும், ஞானமாயும், அநந்

தமாயும், பூர்ணமாயும், நித்தியமாயுமிருக்கிற பிரமமானது வெகு சுலபமாய்க் கிடைக்கிறது. ஆகையால் ரிஷீசுவரர்களே ! நீங்கள் முக்தியடையவேண்டுமானால் தனுஷ்கோடிக்கு உடனே புறப்பட்டுப்போங்கள். சத்தியத்தைச் சொன்னேன் ; இதத்தைச்சொன்னேன் ; ஸாரத்தைச்சொன்னேன் ; பலதரமும் சொன்னேன்.

ரிஷீசுவரர்களே ! கேளுங்கள். இந்தப்பிரகாம் உத்தமமான ஸேதுவினுடைய மஹாத்மியத்தை உங்களுக்கெடுத்துச் சொல்லிவிட்டேன். இந்த மஹாத்மியமானது கேட்பவர்களுக்கும், படிக்கிறவர்களுக்கும், மஹாதுக்கங்களையும், மஹாரோகங்களையும், துர்ச்சொற்பனங்களையும, அபமிருத்தியுக்களையும் போக்கிச், சாந்தியைக்கொடுத்துச் சகல தீர்த்தபலன்களையும், அக்கினிஷ்டோமாதியாகங்களின் பூரணபலத்தையும், ஸாங்கமாக நாலுவேதங்களையும் நூறுதடவை பாராயணஞ்செய்த பலனையும் அளித்துச், சொர்க்காதி புவனபோகங்களையும் தந்து, அந்தத்தில் மோட்சத்தையும் கொடுத்துவிடும். இந்தச் ஸேதுமாகான்மியத்தில் ஒரு அத்தியாயத்தைப்படிக்கிறவனும் கேட்கிறவனும், அசுவமேதபலனை யடைகிறான். இரண்டத்தியாயங்களைப் படிப்பவரும், கேட்பவரும், கோமேதயாகபலனை யடைகிறார்கள். பத்து அத்தியாயங்களைப் பக்தியுடன் படிப்பவரும், கேட்பவரும் சொர்க்கலோகம்போய் இந்திரனோடு சந்தோஷமாயிருக்கிறார்கள். இருபதத்தியாயங்களைப் படிப்பவரும், கேட்பவரும் சத்தியலோகம்போய் பிரம்மாவோடு வாழ்ந்திருப்பார்கள் முப்பதத்தியாயம் படிப்பவரும், கேட்பவரும் விஷ்ணுலோகத்துக்குப் போய் விஷ்ணுவோடு சுகமாயிருக்கிறார்கள். நாற்பது அத்தியாயம் படிப்பவரும், கேட்பவரும், ருத்திரலோகம்போய் ருத்திரரோடு வாழ்ந்திருக்கிறார்கள் ஐம்பது அத்தியாயம் படிப்பவரும், கேட்பவரும், சந்திரசேகரரான ஸாம்பபரமேசுவரரை யடைகிறார்கள். இந்த மஹாத்மியத்தை ஒருதடவை முற்றிலும், படிப்பவரும், கேட்பவரும் சிவசாலோகத்தையும், இரண்டுதரம் படிப்பவரும், கேட்பவரும் சிவசாமீப்பியத்தையும், மூன்றுதரம் படிப்பவரும் கேட்பவரும் சிவசாரூப்பியத்தையும், நாலுதரம் படிப்போரும் கேட்போரும் சிவசாயுஜ்யத்தையும் அடைவார்கள். தினந்தோறும் ஒரு சுலோகத்தையாவது, கால் சுலோகத்தையாவது, ஒரு பதத்தையாவது, இரண்டு அக்ஷரத்தையாவது, ஒரு அக்ஷரத்தையாவது சொன்னால் அன்றன்றுபண்

ணின் பாபம் அப்பொழுதே தொலைந்துபோய் விடுகிறது. இந்த ஸேது புராணத்தை முற்றிலும் ஒருதடவை படித்தாலும், கேட்டாலும் அந்தப்புஸ்தகத்தில் எவ்வளவு அக்ஷரங்களிருக்கின்றனவோ அவ்வளவு பிரமஹத்தியாதிபாபங்களும், சுராபானபாபங்களும், சொர்ணஸ்தேயாதிபாபங்களும், குருபத்னிகமனாதிபாபங்களும், இந்த நால்வரோடுகூடினதினாலுண்டாகிற ஸம்ஸர்க்க தோஷங்களும் உடனே நசித்துப்போகின்றன. இதுவுமல்லாமல் கந்தமாதனபருவதத்திலிருக்கிற இருப்பத்துநாலு தீர்த்தங்களிலும், அங்குள்ள மற்றைய தீர்த்தங்களிலும், அவ்வளவுதடவை ஸ்நானம் பண்ணின பலனும் வருகிறது. இந்தப் புராணத்தைப் பக்தியோடு எழுதுகிறவன் அஞ்ஞானகூட்டங்களினின்றும் விடுபட்டுச் சிவசாயுஜ்யத்தை யடைகிறான். எழுதப்பட்ட இந்தப் புஸ்தகம் எந்த வீட்டிலிருக்கிறதோ அந்த வீட்டில் பூதவேதாளாதிகளால் பயமும், வியாதி, பீடையும், சோரபயமும், சனி, அங்காரகாதி நவக்கிரகபீடையும், எட்டிக்கூடப் பார்க்காது. ரிஷீசுவரர்களே! அந்த வீட்டை, இராமஸேதுவாக அறிந்துகொள்ளுங்கள். அந்த வீட்டில் இருபத்துநாலு தீர்த்தங்களும், புண்ணியமான கந்தமாதன பர்வதமும், பிரமவிஷ்ணு ருத்திரர்களும் வசிக்கிறார்கள். அதிகமாய்ச் சொல்வானேன். அந்த வீட்டில் மூன்றுலோகங்களும் குடிகொண்டிருக்கின்றன. சிராத்தகாலத்தில் இந்தப் புராணத்தில் ஒரு அத்தியாயத்தைப் படித்தால் சிராத்தத்திலுண்டான குறைவு நீங்கிப்போம். பிதுர்த்தேவதைகளும் திருப்தியடைகிறார்கள். பருவகாலத்தில் இதில் ஒரு அத்தியாயத்தையாவது, ஒரு சுலோகத்தையாவது பிராமணர்களுக்கெடுத்துச் சொல்கிறவனுடைய பசுமாடுகளும், எருமைகளும் ரோகமற்றுப் பால்பெருகிக் கன்றுகளுடன் வாழ்ந்திருக்கும். இந்தப் புராணத்தை மடத்திலும், தேவாலயத்திலும், நதிதீரங்களிலும், தடாகதீரங்களிலும், புண்ணியமான காடுகளிலும், அல்லது வேதந்தெரிந்த பிராம்மணர்களுடைய வீடுகளிலும் வாசிக்கவேண்டியதே தவிர வேறிடங்கும் வாசிக்கத்தகாது. விஷுபுண்யகாலத்திலும், அயனபுண்ணிய காலங்களிலும், புண்ணியமான ஹரிதினங்களிலும், அஷ்டமி, சதுர்த்தசியாகிய இரண்டு திதிகளிலும், சிராவணமாசத்திலும், புரட்டாசிமாசத்திலும், தநுர் மாசத்திலும் நியதமாய்ப் படிக்கவேண்டும்; படிப்பிக்கவும் வேண்டும். இதைக்கேட்கிறவர்களும் நியமத்தோடு கேட்கவும்வேண்டும்.

இந்தப் புராணத்தில் அநேக புண்யதீர்த்தங்களும், புண்ணியவான்களான அநேக இராஜரிஷிகளும், மஹாரிஷிகளும், தர்மாநுஷ்டானங்களும், பிரமவிஷ்ணு ருத்திரர்களென்கிற மும்மூர்த்திகளும் சொல்லப்படுகிறார்கள். பாபத்தைப்போக்கடித்துப் பரிசுத்தியைக் கொடுக்கிற இந்தப் புராணமானது வேதார்த்தங்களைக்கொண்டு நிரூபிக்கப்பட்டிருக்கிறபடியாலும், ஸ்மிருதி கர்த்தர்களுக்கும், வியாச முனிவருக்கும் சம்மதமாயிருக்கிற படியாலும், க்ஷேமத்தை யடையக்கோருகிறவன் இதைப் படிக்கவுமவேண்டும்; கேட்கவும்வேண்டும். இந்தப் புராணத்தை வாசிக்கிறவருக்குக் கேட்பவர்கள் லோபித்தனமில்லாமல் தங்களுடைய சக்திக்குத் தக்கப்படி சொர்ணம், தானியம், பூமி, பசுமாடு வஸ்திரமிவைகளைக் கொடுத்து மரியாதை செய்யவேண்டியது. வாசிக்கிறவருக்கு மரியாதை பண்ணினால் திரிமூர்த்திகளுக்கும் மரியாதை பண்ணினதாகும்; திரிமூர்த்திகளுக்கும் மரியாதை பண்ணினால் திரிலோகங்களுக்கும் மரியாதை பண்ணினதாகும் இப்படி மரியாதை பண்ணினவர்களுக்கும், மரியாதை பண்ணப்பட்டவருக்கும், விஷ்ணுவாயிருந்து மனுஷாவதாரம்பண்ணின சீதா இலட்சுமண சமேதரான ஸ்ரீராமர்பூலோகத்தில் போகபோக்கியங்களைக் கொடுத்து, அந்தத்தில் முக்தியையும் கொடுக்கிறார். வியாசரிஷியினுடைய முகாரவிந்தத்திலிருந்து பெருகின சுபமான இந்தச் சேதுபுராணத்தை யுதிஷ்டிரராஜாவானவர் பீமசேனன் முதலான தம்பிகளோடும், பரிவாரத்தோடும், ஆசார சீலராயுள்ள தமது புரோகிதராகிய தௌமியரிடத்திலிருந்து பிரதிதினமும் கேட்டுக்கொண்டிருக்கிறார்.

நைமிசாரணியவாசிகளான முனீசுவரர்களே! இந்த இரகசியமாயும், வேதசம்மதமாயும் நீங்கள் சிரத்தையோடு என்னிடத்தில் கேட்டதாயுமிருக்கிற இந்தப்புராணத்தைப் பக்தியுடன் நித்தியமும்படித்துச் சிரத்தையுடைய உங்கள் சிஷ்யர்களுக்கும் சொல்லிவாருங்கள் என்று சொல்லி ஆனந்தபரவசராய்ச், சரீரம்புளகித்துக், கண்ணீர் பெருகத் தமது குருவான வியாச மஹாமுனிவரை ஸ்மரித்து ஆனந்தக் கூத்தாடினார்.

இச்சமயத்தில் மஹாவித்துவானாகியும், பராசரபுத்திரராயுமிருக்கிற வியாச முனிவர் தமது சிஷ்யனுக்கு அநுக்கிரகம் பண்ணும்பொருட்டு எதிரில்தோன்றினார். அப்படிவந்த சத்தியவதிசுதரான வியாசரைக்கண்டு சூதமுனிவர் நைமிசாரண்ய வாசிகளான

ரிஷிகளோடுகூட எதிர்கொண்டழைத்து, ஆனந்தக்கண்ணீர்பெருக அவருடைய சரணாரவிந்தங்களில் தண்டம்போலவிழுந்து பணிந்திருந்தார். அப்படிப்பணிந்த தமது பிரியசிஷ்யரான சூதனை இரண்டு கைகளாலும் வாரியெடுத்து, ஆசீர்வதித்து அடிக்கடி கட்டிக்கொண்டு, நைமிசாரணிய வாசிகள் போட்ட பரமாசனத்தில் வீற்றிருந்து, தம்முடைய ஆக்ஞையின்படி சூதரும், ரிஷிகளெல்லாரும் உட்கார்ந்தபின், நைமிசாரணிய வாசிகளான சௌனகாதியர்களைப்பார்த்துச் சொல்லத்தொடங்கினார்:—"ஓ நைமிசாரணிய வாசிகளே! என்னுடைய சிஷ்யனை இந்தச்சூதன் சுருதி, ஸ்மிருதி, புராண இதிகாச சாஸ்திரங்களின் முடிவானபொருளை விளக்குகிறதாயும், எல்லாப்புராணங்களாலும் புகழப்பட்டதாயும், மஹாபாதகநாசனமாயுமிருக்கிற இந்தஸேது புராணத்தை உங்களுக்கு இப்பொழுது சொல்லிமுடித்தானென்பதை நான் அறிவேன். தர்மராஜாவானவர் தௌமியரிடத்தில் என்னுடைய ஆக்ஞையின்படி தினந்தோறும் கேட்டுக்கொண்டு வருகிறார். ஆகையால் நீங்களுமிந்தப் புராணத்தைப் படித்தும், கேட்டும், உங்களுடைய சிஷ்யர்களுக்கு உபதேசித்தும் வாருங்கள்" என்று சொன்னதைக் கேட்ட சௌனகாதிரிஷிகளும் அப்படியே ஆகட்டும் என்றுசொன்னார்கள். பிறகு வியாசமுனிவர் தமது சிஷ்யராகிய சூதரோடு, முனிவர்களிடத்தில் விடைபெற்றுக்கொண்டு ஸ்ரீகைலாசம்போய்ச் சேர்ந்தார். சௌனகாதி ரிஷீசுவரர்களும் பரமானந்த பரிதர்களாய்த் தினந்தோறும் ஸேதுபுராணத்தைப் படித்துக்கொண்டும், கேட்டுக்கொண்டும் வருகிறார்கள்.

## ஐம்பத்திரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.

---

## ஸம்பூரணம்.

